بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

1. அவன் இருக்கிறான்

2. அழிக்கப்பட்ட நாகரிகங்கள்

3. திருக்குர்ஆனின் 30 ஜுஸ்வுகளின் சிறப்புகள்

4. கலங்காதிரு மனமே

5. மருத்துவ டைரி குறிப்புகள்

6. இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்
(INDEX CHAPTER ↓↓↓↓)

மரணத்திற்குப் பின் ஆன்மாக்களின் நிலை "

கபறுக்குள்ளே

அலாமத்துல் கியாமா (இறுதி நாளின் அடையாளங்கள் ),

கியாமா (இறுதி நாள்)

ஹஷ்று (எல்லா படைப்புகளையும் ஒன்றிணைத்தல் )

மௌகிபு ( விசாரணை )

கிஸாஸு (குற்றத்தை உறுதிப்படுத்தல் )

ஹிஸாபு ( நன்மை தீமை கணக்கு வழக்கு விசாரணை )

மீஸான் ( நன்மை ,தீமை நிறுக்கும் தராசு )



## அவன் இருக்கிறான் .

இறைவா ! நீ இருக்கிறாயா .? இந்த எண்ணம் எங்களில் சிலருக்கு சில சமயம் மேலோங்கி விடுகிறது . அவன் இருக்கிறானா ? இருந்தால் அவனை பார்க்க முடியுமா ? இறைவனை பார்க்க முடியவில்லை . பார்க்க வேண்டும் என்று அடம் பிடித்த யூதர்கள் நபி மூஸா (அலை) அவர்களிடம் வற்புறுத்த அவர்களைக் கூட்டிக் கொண்டு ,
"மூஸா, நாம் குறித்த நேரத்தி(ல் "தூர்" என்னும் மலைக்குத் தம்முடன் வருவத)ற்காக தம் மக்களில் எழுபது ஆண்களைத் தேர்ந்தெடுத்தார். அவர்களை பூகம்பம் பிடித்(து மூர்ச்சையாகி விழுந்)ததும் அவர் (தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! (எங்களை அழித்துவிட வேண்டுமென்று) நீ கருதியிருந்தால் இதற்கு முன்னதாகவே என்னையும் இவர்களையும் நீ அழித்திருக்கலாமே. (அல்குர்ஆன் : 7:155)

உன்னைப் பார்க்க முடியவில்லை .உன்னைப் பார்பதற்குரிய எங்கள் கண்களில் ஊனம் இருக்கிறதா ?
"பார்வைகள் அவனை அடைய முடியாது. அவனோ பார்வைகள் அனைத்தையும் அறிந்து கொள்கின்றான். அவன் (எவரின் பார்வைக்கும் அகப்படாத) மிக நுட்பமானவன்; மிக்க அறிந்தவன்" .
(அல்குர்ஆன் : 6:103)

சரி நீ இருப்பது நிஜம் .காரணம் நீ அருளிய வேதம் அதை பறைசாற்றிக் கொண்டிருக்கிறது .அதுவும் உன் வல்லமையை எடுத்துரைக்க பல சவால்களை அது விட்டுக் கொண்டே நவீன கணிப்பொறி காலத்தையும் அது கடந்து சென்று கொண்டே இருக்கிறது.
" நாம் (நமது தூதர் முஹம்மது என்னும்) நமது அடியாருக்கு இறக்கிய இ(வ்வேதத்)தில் நீங்கள் சந்தேகப்பட்டு இது அல்லாஹ்வினால் அருளப்பட்டதல்ல என்று கூறுகின்ற நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அல்லாஹ்வைத் தவிர உங்களை ஆமோதிப்பவர்களையும் (திறமையாளர்களையும் உதவியாளர் களையும்) நீங்கள் அழைத்து(ச் சேர்த்து)க்கொண்டு இதைப் போன்ற ஒரு அத்தியாயத்தை (அமைத்து)க் கொண்டு வாருங்கள்
(அல்குர்ஆன் : 2:23)

இந்த சவாலை ஏற்க மனித இனம் தாண்டி நெருப்பு இன ஜின்களையும் கூட்டிக் கொண்டு வந்தாலும் ...
(நபியே!) நீங்கள் கூறுங்கள்: மனிதர்களும் ஜின்களும் ஒன்று சேர்ந்து, சிலர் சிலருக்கு உதவியாக இருந்து இதைப்போன்ற ஒரு குர்ஆனைக் கொண்டுவர முயற்சித்தபோதிலும் இதைப்போல் கொண்டுவர அவர்களால் (முடியவே) முடியாது.
(அல்குர்ஆன் : 17:88)

அப்படி என்னதான் உன் வேதத்தில் வைத்திருக்கிறாய் ?
" பூமியிலுள்ள மரங்கள் (செடிகள்) அனைத்தும் எழுது கோல்களாகவும், கடல் நீரை மையாகவும் வைத்து (அது தீர்ந்து) பின்னும் ஏழு கடல் நீரையும் மையாக வைத்து எழுதியபோதிலும் அல்லாஹ்வுடைய வசனங்கள் (எழுதி) முடிவு பெறாது. நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) மிகைத்தவனும் ஞானமுடைய வனாகவும் இருக்கின்றான் " .
(அல்குர்ஆன் : 31:27)

யா ரசூல்லாஹ் ! உங்களுக்கு அவன் அருளிய வேதத்தில் உள்ளதையெல்லாம் உலகம் முடிவு வரை விளக்கம் எழுதிக் கொண்டே இருந்தாலும் முடிவுறாதா ?
(நபியே!) நீங்கள் கூறுங்கள்: கடல் நீர் அனைத்தும் மையாக இருந்து என் இறைவனின் வாக்கியங்களை எழுத ஆரம்பித்தால், என் இறைவனின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்னதாகவே இந்தக் கடல் மை அனைத்தும் செலவாகிவிடும். அதைப் போல் இன்னொரு பங்கு (கடலைச்) சேர்த்துக் கொண்டபோதிலும் கூட!
(அல்குர்ஆன் : 18:109)

குர்ஆனை ஓதிக் கொண்டே இருக்கிறேன் . அவன் என்னோடு பேசிக் கொண்டேயிருக்கிறான் .
அவன் இருப்பு வெறும் வார்த்தைகளால் மட்டும் அல்ல . இயங்கிக் கொண்டே இருக்கிறான் . உலகம் சுற்றிக் கொண்டே இன்னும் இருக்கிறது . என் ஆத்மா உயிரோடும் , உடலோடும் ஒட்டிக் கொண்டுதான் இன்னும் இருக்கிறது .
அவன் இருக்கிறான் .

ரஹ்மத் ராஜகுமாரன்



காணாமல் போன காடு

காட்டைப் பற்றி
என் மகள் பேரனிடம்
வீட்டில் கதையாய்
சொல்லச் சொன்னான்
இருட்டிய வீட்டில்
மெழுகுவர்த்தி வெளிச்சத்தில்
என் இருகரத்தில்
காட்டுயிரினங்கள்
வீட்டிற்குள் வந்தன
வாயைத் திறந்து
ஊளையிடும் ஒநாயை
பேரன் கொஞ்சம்
நடுக்கத்துடனே
பார்த்தான்
தும்பிக்கை யானையும்
தலையைத் திருப்பும் ஒட்டகமும்
துள்ளிக் குதிக்கும் மானும்
பறந்து வரும் கழுகும்
நிழலின் வழியே
வீட்டிற்குள் வந்து போயின
பேரனுக்கு
பயமோ என்னமோ
மெழுகுவர்த்தியை
ஊதி அணைத்தான்
வீட்டிற்குள்ளே இருந்த
காடும் காணாமல் போனது
நாட்டிற்குள்ள இருந்த
காடும் காணாமல் போனது

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 **/// +919360181033**

அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 01
22-04-2019






**கடந்த 2017** செப் முதல் அக்டோபர் வரை "சபிக்கப்பட்ட சமுதாயங்கள்" என்று குர்ஆன் கூறும் நாகரிகங்கள் தொடர் பதிவுகளாக 20 பதிவுகள் வரை வெளியிட்டிருந்தேன் .
குர்ஆனில் பெயர் சொல்லி குறிக்கப்பட்ட சமுதாய நாகரிகங்கள் , அந்த சமுதாய நலனுக்காக வந்த நபிமார்கள் குறித்தும் உதாரணமாக ...

ஆது சமுதாயம் ( நபி ஹூது அலை )
தமூது சமுதாயம் (நபி ஸாலிஹ் அலை)

மற்றும் ஜோர்டான் நதிகரையில் வாழ்ந்த நபி லூத் மக்களுடைய சமுதாயம் என்று பெயர் சொல்லி அவர்கள் வாழ்ந்த செழிப்பான வாழ்வு குறித்தும் , அவர்கள் செய்த பாவத்தையும் அதனால் அம்மக்கள் அழித்த விதத்தையும் தெளிவாக குர்ஆன் குறிப்பிட்டதை வரலாற்று ஆய்வோடு தொடர் ஆய்வாக எழுதி இருக்கிறேன். பார்வையிடவும் .
அந்த தருணத்தில் நண்பர்கள் சிந்து சமவெளி நாகரிகம் , மொஹஞ்சதாரோ நாகரிகம் , ஹாரப்பா நாகரிகம் , சீன நாகரிகம் , மாயன் நாகரிகம் , கிரேக்க நாகரிகம் , ரோம நாகரிகம் குறித்து எழுதச் சொன்னார்கள் .
இந்த அழிந்து போன நாகரிகங்களின் பெயர்களை வரலாற்று ஆய்வாளர்கள்தான் சூட்டிக் கொண்டார்களேத் தவிர குர்ஆனில் அந்நாகரிகங்களின் பெயர்கள் குறிப்பிடாவிட்டாலும் , அம்மக்கள் வாழ்ந்த வாழ்வும் , அவர்களின் அழிவும் குறித்தும் குர்ஆனில் பேசப்படுகிறது .
குர்ஆனிலும் .....
وَكَمْ قَصَمْنَا مِنْ قَرْيَةٍ كَانَتْ ظَالِمَةً وَّاَنْشَاْنَا بَعْدَهَا قَوْمًا اٰخَرِيْنَ
அநியாயக்காரர்கள் வசித்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்து நாசமாக்கி விட்டோம். அவர்களுக்குப் பின்னர் (அவ்விடத்தில்) வேறு மக்களை உற்பத்தி செய்தோம்.
(அல்குர்ஆன் : 21:11)
فَكَاَيِّنْ مِّنْ قَرْيَةٍ اَهْلَكْنٰهَا وَهِىَ ظَالِمَةٌ فَهِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا وَبِئْرٍ مُّعَطَّلَةٍ وَّقَصْرٍ مَّشِيْدٍ
அநியாயக்காரர்கள் வசித்திருந்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்திருக்கிறோம். அவற்றுடைய முகடுகள் இடிந்து குட்டிச் சுவராகிக் கிடக்கின்றன. அவற்றின் (எத்தனையோ) கிணறுகள் பாழடைந்து கிடக்கின்றன. அவற்றின் மாட மாளிகைகள் (மக்கள் வசிக்காது) பாழாய் கிடக்கின்றன.
(அல்குர்ஆன் : 22:45)
وَكَاَيِّنْ مِّنْ قَرْيَةٍ عَتَتْ عَنْ اَمْرِ رَبِّهَا وَرُسُلِهٖ فَحَاسَبْنٰهَا حِسَابًا شَدِيْدًاۙ وَّعَذَّبْنٰهَا عَذَابًا نُّكْرًا
எத்தனையோ ஊர்வாசிகள் தங்கள் இறைவனின் கட்டளைக்கும், அவனுடைய தூதர்களுக்கும் மாறுசெய்தனர். ஆதலால், அவர்களை நாம் வெகு கடினமாகவே கேள்வி கணக்குக் கேட்டு, அவர்களை மிகக் கடினமான வேதனையை கொண்டு வேதனை செய்தோம்.
(அல்குர்ஆன் : 65:8)
மேற்கண்ட குர்ஆன் வசனங்கள் எந்த நாகரிகத்தோடு பொருந்தி போகிறது என்பதை ஆய்வு செய்து கீழ்க்கண்ட நாகரிகங்களைப் பற்றி எழுத உள்ளேன் .
சிந்து சமவெளி நாகரிகம் , மொஹஞ்சதாரோ நாகரிகம் ,
ஹாரப்பா நாகரிகம் ,
சீன நாகரிகம் ,
மாயன் நாகரிகம் ,
கிரேக்க நாகரிகம் ,
ரோம நாகரிகம்
மேற்கண்ட நாகரிக மக்களின் கலாச்சாரம் , பண்பாடு குறித்தும் அந் நாகரிகம் அழிவதற்குரிய காரணம் குறித்தும் வரலாற்று ஆதாரத்தோடு தொடர் பதிவுகளாக இன்ஷா அல்லாஹ் எழுத உள்ளேன் .
ர.ரா

அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 02
(இது வரலாற்று ஆய்வு அறிவியல் கூறுபவை.. )




காலத்தில் வேகமாக கரைந்து போய்விட்ட இந்தப் பூமிப்பந்தின் பழைய டைரி மிக சுவாரஸ்யமானது.

சுமார் **650** கோடி வருடங்களுக்கு முன்பு பூமி இல்லை ! பூமிக்குப் பதிலாக நிறையத் தூசுகளும் ஏதோதோ வாயுக்களும் மட்டுமே இந்த இடத்தில் மிதந்து கொண்டிருந்தன. இவை இறுக இறுக... மெள்ள நமது பூமி ஒரு பந்தின் வடிவத்தை எடுத்தது !
இதெல்லாம் நடந்து **450** கோடி ஆண்டுகள் ஆகின்றன. அப்போது இங்கே ஒரு புல்பூண்டு கூடக் கிடையாது. ஏன் .... பிராண வாயு கூட இல்லை !

பல லட்சம் ஆண்டுகளாகப் பெய்த இடி மழை ... வெடித்த எரிமலைகள் , வீசிய புயல்கள் இதெல்லாம் பிராணவாயுவை உண்டு பண்ணின . அதன் பிறகு கடலில் பாசி உருவானது ! இதை அடுத்து நிலத்தில் புழு பூச்சிகள் தோன்றின. இவை உருவாவதற்கு கொஞ்சம் முன்பே. அவற்றுக்கு உணவு .... அதாவது தாவரங்கள் முளைத்தன. பின்னர் கடலில் மீன் தோன்றியது . இதன் மற்ற ஜீவராசிகள் உருவெடுத்தன.

பின்பு ஒரு கோடி வருடங்களுக்குப் பிறகு ஹோமோ எரக்டஸ் **(Homo Erectus)** என்ற பெயரில் மனிதன் பரிணாம வளர்ச்சியை எட்டினான் ! பிறகு தற்கால மனிதனைப் போல முழு உடல் அமைப்பு பெற்ற மனிதன் தோன்றினான்.
உணவுக்காக விலங்குகளை மட்டும் வேட்டையாடி வந்த ஹோமோஸேபியன் **( Homo Sapiens )** என்ற இந்த மனிதன்தான் முதன்முதலில் நிலத்தில் விவசாயம் செய்ய ஆரம்பித்தவன் .இவனது காலம் நேற்றிலிருந்து சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு !
நதிகளின் பக்கம் மனிதன் நகர ஆரம்பித்ததும் நாகரிகம் சூடுபிடிக்க ஆநம்பித்தது . மெஸபடோமியாவில் (தற்போதைய ஈராக்) டைகிரீஸ் மற்றும் யூப்ரடீஸ் என்ற இரண்டு நதிகளுக்கு நடுவில் மணிதர்கள் குடி அமர .... அங்கே முதன்முதலாகச் சக்கரம் கண்டுபிடிக்கப்பட்டது !

மெஸபடோமியா என்ற கிரேக்க வார்த்தைக்கு " இரண்டு நதிகளுக்கு இடைப்பட்ட நிலம் " என்று பொருள் .

மெஸபடோமியாவைத் தொடர்ந்து நாகரிகம் சிந்து நதிக்கரையிலும் , சீனாவின் மஞ்சள் நதிப் படுகையிலும் வெவ்வேறு நாகரிகங்கள் வேர் விட்டு வளர ஆரம்பித்தன. பல சாம்ராஜ்யங்கள் தோன்றின. பல ராஜாக்கள் தோன்றினார்கள் . அந்தந்த அரசாட்சிக்கு தக்கவாறு சட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டு வெவ்வேறு நாகரிகங்கள் தோன்றின .
சட்டதிட்டங்களை மீறி இயற்கைக்கு மாற்றமான , பாவகரமான செயல்களை அவர்கள் செய்ய ஆரம்பித்ததும், இயற்கையின் பேரழிவுகள் ஆரம்பமாயின . அந்த பேரழிவுகளால் அவர்கள் வசித்த பூமியின் பாகம் அழிக்கப்பட்டது .
وَمَاۤ اَهۡلَكۡنَا مِنۡ قَرۡيَةٍ اِلَّا وَلَهَا كِتَابٌ مَّعۡلُوۡمٌ
(பாவத்தில் மூழ்கிய) எவ்வூராரையும் அவர்களுக்குக் குறிப்பிட்ட தவணையிலன்றி நாம் அவர்களை அழித்துவிடவில்லை.
(அல்குர்ஆன் : 15:4)

مَا تَسْبِقُ مِنْ اُمَّةٍ اَجَلَهَا وَمَا يَسْتَاْخِرُوْنَ
ஒவ்வொரு கூட்டத்தாரும் தங்கள் தவணையை முந்தவும் மாட்டார்கள்; பிந்தவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 15:5)
......இப்படியாக அநேக மனித நாகரிகங்கள் தோன்றின . ஆயிரக்கணக்கான வருடங்கள் வாழ்ந்த சமுதாயமும் உண்டு . நீர்க்குமிழ்கள் போல அற்ப சொற்ப வாழ்வில் மாண்ட மனித சமுதாயமும் உண்டு.
ர.ரா

**Rahmath Rajakumaran**
ஹோமோஸேபியன் முதன் முதலில் தோன்றிய மனித இனம் ஆப்பிரிக்காவின் நடுப்பகுதியில்தான் ! ஆப்பிரிக்க கண்ட மேப்பைப் பாருங்கள் மொத்த மனித சமுதாயத்தின் இதயம் போல அது அமைந்திருப்பதைக் கவனிக்கும் போது நீங்கள் வியப்படைவீர்கள் !
" ஹோமோஸேபியன் " ஹோமோ என்றால் ' மனித ' _'ஸேபியன்ஸ்' என்றால் 'புத்திசாலித்தனமான '
நமக்கு நாமே வைத்துக் கொண்ட பெயர் .

மெஸபடோமியா அல்லது சுமேரிய நாகரிகங்கள் - நபி இத்ரீஸ் (அலை)
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 03 )




## Mesopotamian Achievement # 6



- **Astrology** was developed during the Sumerian period. It had a religious meaning.
- It was believed that every good and bad happened for the reason.
- The astrologers observed the movement of the planet and advised the people with high social or political levels.
- The constellations were also used in day to day activities.
- It was heavily used to mark the seasons for harvesting or sowing crops.
- They also mapped the movement of sky, sun, stars, and moon, and predicted celestial events like eclipses.

**TECHNOLOGY**

The Sumerians invented several tools and devices that made daily life easier and more productive. They developed the wagon wheel, for example, to help transport people and goods from place to place.

The potter's wheel to shape containers, the sundial to keep time, and the arch used in construction are other examples of Sumerian technology.

The Sumerians were the first to make bronze out of copper and tin, creating finely crafted metalwork.




சுமேரிய நாகரிகம் தெற்கு மெஸபடோமியா , இன்றைய தென் ஈராக்கை மைய கொண்டு சிரியா , துருக்கி , ஈரான் ஆகிய நாடுகளின் பகுதிகளை இணைந்த பெரிய நிலப்பரப்பே மெஸபடோமியா என்றழைக்கப்படுகிறது . இது ஒரு மிகப் பழைய நாகரிகமாகும். இது **கிமு 4000** முதல் **கிமு 3000** வது பாபிலோனிய ராஜ்யத்தின் எழுச்சிவரை நீடித்தது என்றாலும் இதன் துவக்கம் **கிமு 7000** லிருந்தே அதாவது சுமேரியர்களுக்கு முந்திய மக்களான உபைதியன்கள் என்றழைக்கப்படும் மக்களில் இருந்தே ஆரம்பிக்கிறது .

சுமேரிய நாகரிகம் உலகில் தோன்றிய நாகரிகங்களில் அதற்கு வேண்டிய சகல கூறுகளையும் கொண்ட முதலாவது நாகரிகமாக கருதப்படுகிறது. எனவே இதனை நாகரிகத்தின் தொட்டில் **(cradle of civilization )** என்றழைக்கிறார்கள் .

சுமேரியர்கள் யூப்பிரட்டீஸ், டைகிரி
என்னும் இரு ஆறுகளுக்கும் இடைப்பட்ட பகுதியே மெஸபடோமியாவை
என அழைக்கப்படுகிறது.

“மெசொ” என்றால் நடுவே என்று பொருள்.“பட்டோமே” என்றால் ஆறுகள். ஆறுகளின் நடுவே தோன்றிய நாகரிகம்தான் மெஸபடோமியா என்பது.
வற்றாத நதிகள் , வளமான பூமி, செழிப்பான விவசாயம். அட , மண் கூட இவர்கள் இஸ்டத்திற்கு வளைந்து கொடுத்திருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன் .
தொங்கு தோட்டம் உலகில் முதலில் அமைத்தவர்கள் சுமேரியர்களே .இது போன்று தொங்கும் தோட்டம் உலகில் எங்குமே இன்று வரை அமைத்ததே இல்லை இதன் மூலம் கட்டிட கலையின் உலகின் முன்னோடி இவர்களே .

நவீன ஈராக்கில் ஒரு பண்டைய வரலாற்று பகுதியில் சுமேரியா இருந்தது. இது "நாகரீக அரசர்களின் நிலம்" அல்லது "சொந்த நிலம்" என்றும் அழைக்கப்பட்டது.
இங்கு வேளாண்மையும், பாசனமும் சிறந்து விளங்கின. கி.மு 4000 முதல் கி.மு. 3000 வரை இந்த நாகரிகம் எழுச்சியுடன் காணப்பட்டதாக வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன.
தொங்கு தோட்டத்தை வடிவமைத்தவர்கள் சுமேரியர்களே .இதனால் கட்டிட கலையிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர்

இந்த இரண்டு ஆறுகளையும் ஆண்டு முழுவதும் நீர்பாசனத்திற்காக பயன்படுத்தினர்கள் . வடக்கில் உழவுத்தொழிலில் தேர்ச்சி பெற்றிருந்தனர். இந்நிலப்பகுதி ஆண்டுக்கு ஏறக்குறைய 130 மி.மீ. மழைவீழ்ச்சியே பெறுகின்றது. எனவே யூபிரிடிஸ், டைகிரிஸ் ஆறுகளை ஆண்டு முழுவதுக்குமான
நீர்ப்பாசனத்துக்கு பயன்படுத்துவது முக்கியமாகும். சுமேரிய மொழியில் நீர்ப்பாசனத்துடன் தொடர்புடைய பல சொற்கள் அவர்களின் ஏடுகளில் காணக்கிடக்கின்றன.
முதன் முதலில் கருத்து வடிவான எழுத்து முறையை உலகுக்கு அளித்த பெருமை சுமேரியர்களைச் சாரும்.

சுழலும் சக்கரத்தைக் கண்டறிந்து, பத்திரங்களை வட்ட வடிவமாக ஏராளமாக தயாரிக்க அவர்களால் முடிந்தது . மேலும்,செம்மைப்படுத்தப்பட்ட எழுத்து முறையையும், களிமண்ணால் ஆன நூல்களைக் கொண்ட நூல் நிலையங்களையும் உருவாக்கினார்கள் .
ஈரமான களிமண் பலகைகளின் மீது கூரிய கருவிகளான மிருகங்களின் எலும்புகள் உதவியால் ஆப்பெழுத்துகள் அமைத்தனர். இவ்வெழுத்து முறைக்கு **“கியூனிபார்ம்”** என்று பெயர். கியூனிபார்ம் என்றால் உளி வடிவ எழுத்துக்கள் என்று பெயர் .

சிறிதும் பெரிதுமான 30 ஆயிரம் களிமண் பலகைகளை தொல்பொருள் ஆய்வாளகர்கள் தோண்டி எடுத்துள்ளனர். இவர்களது மொழியை அக்காத் மொழி என்கிறார்கள். லத்தீன் உட்பட 15 மொழிகள் அக்காத் மொழியிலிருந்தே உருவாகி இருக்கிறது என்பதை மொழியியல் வல்லுனர்கள் நிரூபித்துள்ளார்கள் .

தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கருத்துப்படி சுமேரியர்களின் எழுத்து வடிவம் தான் உலகின் முதல் எழுத்து வடிவமாகும். சித்திரங்கள் வடிவில் தோன்றி பின்பு எழுத்துக்கள் வடிவத்தை சுமேரியர்களால் கண்டுபிடிக்கபட்டு, தங்கள் வர்த்தக கணக்கிற்காக அவர்கள் பயன்படுத்திகொண்டார்கள். உலகம் அறிந்த முதல் இலக்கியம் அங்கு தான் தொடங்கியது. தன் கைவிரல்கள் பயன்படுத்தி பத்து பத்தாக கணக்கு வடிவம் மேற்கொண்டவர்கள் சுமேரியர்கள்.

சூரிய வருடத்தை காலகட்டமாக எடுத்துக்கொண்டு சுமேரிய மதகுருக்கள் 12 சந்திர மாதங்களும் 3 வருடங்களுக்கு ஒரு முறை 1 லீப் வருடத்தையும் வகுத்து நாள்காட்டியை வடிவைமைத்தார்கள். இதனை அடிப்படையாக கொண்டுதான் தற்போது நாம் பின்பற்றும் வான் சாஸ்த்திரம், நிமிடங்கள், நொடிகள், மணி என்று கால அளவுகள் தோன்றின.
காலத்தை 60 நொடிகளாகப் பிரித்ததும் சுமேரியர்களே .இது ரொம்பவும் ஆச்சர்யமான விஷயம் .

சட்டமும் , நீதிமுறைகளும் சுமேரியர்களால்தான் உலகில் முதன்முதலில் கண்டுபிடிக்கப்பட்டது. இதன் அடிப்படையில் தான் பிற்காலத்தின் வந்த பாபிலோனிய சட்டங்கள் இயற்றப்பட்டன.

நட்சத்திரங்கள், கோள்களைப் பற்றி தெளிவாக அறிந்திருக்கிறர்கள்.வீனஸ் கிரகத்தின் ஒவ்வொரு காலத்தின் அதன் நிலையை குறித்து வரைந்துள்ளார்கள் .
லித்தோவிலிருந்து 7 வது இடத்தில் நம் பூமி உள்ளது என்கிறார்கள் .
97 வருடம் 9 வது மாதம் 13 ஆம் நாளில் சந்திரக் கிரணம் பற்றி துல்லியமாக முன்னறிவிப்பு செய்திருக்கிறார்கள் .

162 வருஷம் 7 ஆம் மாதம் இந்த பூமியை மேகம் சூழும் .கிழக்கே வேகமான காற்று வீசும். தெற்கே இடிகளின் தாக்கம் இருக்கும் ; அன்று இரவு சந்திரன் இரு நட்சத்திரங்களுக்கு இடையில் தோன்றும் என்று வான சாஸ்திர ஆருடம் சொல்கிறார்கள். இதெல்லாம் எப்படி ?
நாம் தேடிய கண்டுபிடித்த கிரகத்திற்கு இன்னும் பெயரே வைக்காமல் Plant X பற்றி மிக தெளிவாக அவர்கள் தெரிந்து அதன் சுற்றுவட்டப் பாதையெல்லாம் துல்லியமாக குறிப்பிட்டிருக்கிறார்கள் .

இத்தனை வான இயல் அறிவு அதுவும் எந்த உபகரணங்கள் இல்லாத காலத்தில் ஏதோ வானத்திற்கு போய் பார்த்த மாதிரி எப்படி இவர்களால் சொல்ல முடிகிறது .... என்பதுதான் வரலாற்றாசிரியர்களை வியக்க வைக்கிறது. இருந்தாலும் வேற்றுகிரக வாசிகள் இப்பூமியில் தங்கி இருந்து விவசாயம் முதல் சட்ட திட்டங்கள் வரை மண்பாண்டங்களிலிருந்து விண்ணுலக தகவல் வரை சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும் என்கிறார்கள் .
சுமேரியர்களின் இத்தகைய தொழில் நுட்பத்திற்கு மூல காரணமாக அவர்களுக்காக வந்த நபி இத்ரீஸ் (அலை) அவர்களாக இருக்கலாம்.

நபி இத்ரீஸ் (அலை) அவர்கள் ஆதம் (அலை) மகன் காபீலின் வழி வந்தவர்கள் .அம் மக்களை நேர்வழிப் படுத்த நபியாக இறைவன் உலகிற்கு அனுப்பினான் .இவர்கள்தான் உலகத்திற்கு முதன்முதலாக எழுத்துக்களைஅறிமுகப்படுத்தினார்கள்.

நபியவர்கள் வானவர்கள் மெச்சும் அளவிற்கு வணக்க வழிபாடு செய்தார்கள் . " யாவாஹிதுல் பாக்கீ அவ்வல குல்லி ஷையின்வ ஆகிரஹு " என்ற இஸ்முல் அஃலத்தை அதிகமதிமாக ஓதுவார்கள் .இது வான லோகம் சம்பந்தப்பட்ட திக்ரியாத். எனவே உயிரை வாங்கும் வானவர் இஸ்ராயீல் (அலை) அவர்களுக்கு நபியவர்களை காண ஆசை வந்தது . நேரில் சந்தித்து "ஸிர்ருல் மலக்கூத் " என்ற கிதாபைக் கொடுத்ததாக அறிய முடிகிறது .

நபி இத்ரீஸ் (அலை) அவர்கள் அந்தக் கிதாபைப் பெற்ற பிறகு வானலோகத்தில் தாம் சனிக் கிரகத்துடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்தாகவும் அது சமயம் விண்ணின் அற்புத இரகசியங்களை தெரிந்து கொண்டதாகவும் , முதன் முதலாக வான இயலை ஆராய்ந்து கிரகங்களுக்கு பெயர் சூட்டியதையும் ஒரு முறை தம் மக்களிடம் கூறியுள்ளார்கள்.
நபியவர்கள் வான இயல், கணிதம் , அறிவியல் , மருத்துவம் போன்ற துறைகளில் தேர்ச்சி பெற்றிருந்தார்கள் .

பிரளயம் ஏற்படும் போது அவற்றிலிருந்து பாதுகாப்பு பெற "குன்புஸஹ்ரான் " என்ற பிரமிட் கோபுரத்தை கட்டியெழுப்பியவர்களும் நபி இத்ரீஸ் (அலை) அவர்களே.
பறக்கும் போது வானவர்கள் சூரிய வெப்பத்தால் ரொம்பவும் கஷ்டப்படுவார்கள் என்று அதன் வெப்பத்தை கட்டுப்படுத்த இறைவனிடம் மன்றாடி பெற்றதன் காரணமாக மலக்குமார்களின் நன்மதிப்பை பெற்றார்கள் .இதனால் நபியவர்களை மலக்குமார்கள் சுவனத்திற்கு கூட்டிச் சென்றார்கள் என்பதாக கஸ்ஸாஸ் ஜஹானி என்ற கிதாபில் எழுதப்பட்டிருக்கிறது .
நபியவர்களின் காலம் கிமு 7000 அதாவது உபைதியன்கள் என்ற சுமேரியர்களுக்கு முந்தைய நாகரிகத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம் என்கிறார்கள் .

وَاذْكُرْ فِى الْكِتٰبِ اِدْرِيْسَ اِنَّهٗ كَانَ صِدِّيْقًا نَّبِيًّا ۙ
(நபியே!) இத்ரீஸைப் பற்றியும் இவ்வேதத்தில் (சிறிது) கூறுங்கள்: நிச்சயமாக அவர் மிக்க சத்தியவானாகவும் (நம்முடைய) நபியாகவும் இருந்தார்.
(அல்குர்ஆன் : 19:56)
وَّرَفَعْنٰهُ مَكَانًا عَلِيًّا
அவரை மிக்க மேலான இடத்திற்கு உயர்த்தி விட்டோம்.
(அல்குர்ஆன் : 19:57)
நபி இத்ரீஸ் (அலை) சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் விண்வெளியோடு தொடர்பு கொண்டிருப்பதை அறிய முடிகிறது .
ர.ரா

- **Rahmath Rajakumaran**
  நபி (ஸல்) அவர்கள் காலத்திற்கு முன்பே வான லோகத்து புராக் மாதிரி ஒரு வாகனத்தை சிற்பமாக செதுக்கி இருக்கிறார்கள் என்றால் இவர்களுக்கும் வானலோகத்திற்கும் எவ்வளவு தொடர்பு இருந்திருக்கும் .
  **Rahmath Rajakumaran**
  அரசியல், சக மனிதனுடன் எப்படிப் பழகுவது, எதைச் செய்யலாம் , எதைச் செய்யக் கூடாது என்று சகலத்துக்கும் விதிமுறைகள் வகுத்திருக்கிறார்கள் .
  **Rahmath Rajakumaran**
  சக்கரத்தை கண்டுபிடித்ததால் , வட்டத்தின் பரிதியான " பை "யின் மதிப்பீடு 22/7 = 3 .14 பற்றியும் , ஜியாமெட்ரிக் கணக்குகளை மிக சர்வ சாதாரணமாக பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பது அவர்களின் பொருட்களின் நேர்த்தியில் தெரிய வருகிறது
  **Rahmath Rajakumaran**
  கிமு 2600 ல் நல்ல அரசராக இருந்த கில்காமேஷ் ( Gilgamesh ) யின் வாழ்க்கை வரலாற்றை " "கில்காமேஷ் காவியம் " எழுதியுள்ளார்கள்
  **Rahmath Rajakumaran**
  கி.மு 1792 ல் தன் 18 வயதில் சாம்ராஜ்ய சக்கரவர்த்தியான ஹமுராபி , எது நியாயம் , எது தவறு எந்தக் குற்றத்திற்கு என்ன தண்டனை , என்பது பற்றி வரையறுத்து சட்டம் ஏற்றியவர் ஹமுராபி என்ற மன்னர்.
  இவர் எழுதிய சட்டத்திற்கு **Hammurabi code )** என்று பெயர்
  **Rahmath Rajakumaran**
  நெபுகாட்நேஸர் கி.மு 605 முதல் நாற்பது
  ஆண்டுகள் ஆண்டு பாபிலோன் தொங்கும் தோட்டத்தை அமைத்தவர் (Chain pump ) என்ற அமைப்பின் மூலமாக யூப்ரடீஸ் நதிநீரை தொங்கும் தோட்டத்திற்கு உச்சிக்குக் கொண்டு போனார் .
  **Rahmath Rajakumaran**
  மனிதத் தலையும் மிருக உடலும் , இன்னொரு படத்தில் இறக்கை முளைத்த விலங்கும் மிஹ்ராக் வாகனமான புராக்கை ஞாபகப்படுத்துகிறது

சிந்து சமவெளி நாகரிகம்
(இறந்தவர்களின் மேடு )
( அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 4)




1921 ம் ஆண்டு இந்தியாவை ஆங்கிலேயர் ஆண்ட காலம். ராக்கல் தாஸ் பானர்ஜி என்ற தொல்லியல் துறை ஆய்வாளர் ,கி.பி 2 ம் நூற்றாண்டைச் சேர்ந்த பௌத்த மத ஸ்தூபியை ஆராயும் போது , சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட படிக்கட்டுகள் மண்ணுக்குள் புதைந்து கிடந்தன. அதைச் சுற்றி தோண்டத் தோண்ட படிக்கட்டுகளும் அதையொட்டிய சுவர்களும் நீண்டு கொண்டே போயின.

மேலும் தோண்ட தோண்ட இந்தியாவின் வரலாற்றைப் புரட்டிப் போட்ட புதிய சரித்திர சுவடுகள் பூமிக்குள் புதைந்து கிடந்த ஒரு பெரிய ஊரையே பானர்ஜியின் கூட்டம் தோண்டி எடுத்தது.

முன்பு 1826 ல் ராணுவ அதிகாரி சார்லஸ் மேஸன் , ' இந்தப் பகுதியில் பூமிக்கடியில் பெரிய கோட்டைகள் இருப்பதாக தெரிகிறது ' என்ற குறிப்பெழுதியதை ஆங்கில அரசு அப்போதுதான் தூசி தட்டி புரட்டிப் பார்த்தது.

பானர்ஜி கண்டு பிடித்த அந்தப் பகுதியை அங்கு வாழ்ந்த கிராமத்தினர்
" மொகஞ்சதாரோ " என்று அழைத்தனர் அதற்கு என்ன அர்த்தம் என்று பானர்ஜி கேட்டதற்கு , " இறந்தவர்கள் மேடு " என்றனர்
1956 -ல் கராச்சிக்கும் , லாகூருக்கும் இடையே ரயில் பாதை போடும் பணியில் ஈடுபட்டிருந்த இங்கிலாந்தைச் சேர்ந்த ஜான் பிரன்டன் , வில்லியம் பிரன்டன் என்கிற சகோதர எஞ்ஜினியர்கள் கட்டுமான வேலைக்குச் செங்கற்கள் தேவைப்பட்டதால் , பூமியை தோண்ட தோண்ட கிடைத்த செங்கற்களை எடுத்தனர் . அந்த இடத்திற்கு
பிராமினாபாத் என்று பெயர். அந்தச் செங்கற்கள் தொன்மையான மிகப் பெரிய நாகரிகத்தின் அடையாளங்களை சிதைத்கிறோம் என்பதை தெரியாமலேயே இந்தக் காரியத்தை செய்து விட்டனர்.

1954 -ல் இந்திய தொல்லியல் துறை ஆய்வாளர் S.R ராவ் " லோதால்" என்ற இடத்திலும் பெரிய நகரம் பூமியில் ஆழ்ந்திருப்பதைக் கண்டு பிடித்தார் .குஜராத்தி மொழியில் "லோதால் " என்றால் **"இறந்தவர்கள் மேடு"**
இந்த பிரம்மாண்ட பண்டை நாகரிகம் **கி.மு 2500 முதல் கி.மு 1700** வரை செழிப்பில் இருந்தது ஆய்வில் கண்டனர். இந்த நாகரிகம் சிந்து நதிக்கரை யோரங்களில் தொடங்கி ஹாரப்பா , உபி , குஜராத் , ராஜஸ்தான் வரை பரந்து விரிந்திருந்தது. வடமேற்கே பாகிஸ்தான் தாண்டி , பலுசிஸ்தான்.ஆப்கானிஸ்தான் இமயமலையை ஒட்டிய ஜம்மு - காஷ்மீரின் மாண்டா வரை அதன் வீச்சின் பரப்பளவு இருந்தது

மொத்தம் சுமார் பதின்மூன்று லட்சம் சதுர மைல் பரப்பளவு இருந்தது.
இங்கிலாந்து நாட்டை விட ஐந்து மடங்கு பெரியது .
இதுவரை கிடைத்த ஆதாரங்களாக உலையில் சுடப்பட்ட களி மண்பாண்டங்கள் , அவற்றில் இருக்கும் வேலைப்பாடுகள் .உருவச் சின்னங்கள், இலச்சினைக் கொண்ட எழுத்துகள் ,
ஒரு பங்கு உயரம் (7 செ.மீ ), இரண்டு பங்கு அகலம் (14 செ.மீ ) நான்கு பங்கு நீளம் (31 செ.மீ) என்று சீராகச் செய்யப்பட்ட செங்கற்கள் . சிமிண்ட்டாக சுண்ணாம்பும் ,செம்மண்ணும் கலந்து பூசி இருக்கிறார்கள் .
தானியங்களின் அளவை சரிபார்க்கும் எடைக் கற்கள் .சீரான சாலைகள்,
நகரங்களையொட்டி உயர்ந்த சுவர்களுடன் கோட்டைகள் ,
எல்லா வீடுகளிலும் ஆழமான கிணறுகள் , பொதுக் குளியல் அறைகள், கழிப்பிடங்கள் , மூடப்பட்ட சாக்கடைகள்
ஒன்று அல்லது இரண்டு மாடிக் கட்டடங்கள் வீடுகளைச் சுற்றி
தோட்டங்கள் ,ஊருக்கு வெளியே அமைக்கப்பட்டிருக்கும் இடுகாடுகள் .

فَكَاَيِّنْ مِّنْ قَرْيَةٍ اَهْلَكْنٰهَا وَهِىَ ظَالِمَةٌ فَهِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا وَبِئْرٍ مُّعَطَّلَةٍ وَّقَصْرٍ مَّشِيْدٍ
அநியாயக்காரர்கள் வசித்திருந்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்திருக்கிறோம். அவற்றுடைய முகடுகள் இடிந்து குட்டிச் சுவராகிக் கிடக்கின்றன. அவற்றின் (எத்தனையோ) கிணறுகள் பாழடைந்து கிடக்கின்றன. அவற்றின் மாட மாளிகைகள் (மக்கள் வசிக்காது) பாழாய் கிடக்கின்றன.
(அல்குர்ஆன் : 22:45)

இம் மக்கள் அழிந்து போக அவர்கள் செய்த பாவம்தான் என்ன ? காலம்தான் பதில் சொல்ல வேண்டும் .
ஆடு, எருது , ஒட்டகம், நாய் , பன்றி கழுதைகள் வீட்டு மிருகங்களாக இருந்தன. சிந்து நதியில் படகு விட்டிருக்கிறார்கள் . மீன் பிடித்திருக்கிறார்கள் .
சணல் ஆடைகளை பெரும்பாலோர் அணிந்தார்கள் . பணக்காரர்கள் பருத்தி ஆடைகள் அணிந்தார்கள் . விவசாயம் முக்கிய முக்கிய தொழிலாக இருந்தது. விவசாயிகள் நகரங்களுக்குச் சென்று விவசாயப் பொருட்களை விற்று , அங்கிருந்து ஆடை அணிகலன்களை வாங்கி வந்து மனவிக்கு கொடுத்து அசத்தியிருக்கிறார்கள் . இதுவரை பணக்காசுகள் எதுவும் கிடைக்கவில்லை. எனவே பண்டமாற்று முறை இருந்திருக்கலாம்.
சித்திர வடிவ எழுத்துக்கள் முதல் வரி வலமிருந்து இடமாகவும் , அடுத்தவரி இடமிருந்து வலமாகவும் படிக்கும் வகையில் சுழல் வடிவில் இருந்தன. இதுவரையில் எந்த மொழியும் இது மாதிரி இல்லை .

வெண்கலத்தை பளபளப்பாக்கி அதில் முகம் பார்த்து , போலியாக சிரித்து தங்களை அழகுப் படுத்திக் கொண்டனர். என்ன மொழியில் பேசிக் கொண்டனர் என்று இதுவரை தெரியவில்லை. பிற நாகரிங்களுடன் தொடர்புகள் இருந்த போதும் வேற்று மொழிக்கலப்பு இல்லாமல் தனித் தன்மையுடன் எழுத்துக்களை எழுதியுள்ளார்கள் இதுவரை சுமார் 4000 குறிப்புகள்கிடைத்திருக்கின்றன.
எல்லாம் சித்திரவடிவில் எழுதியிருக்கிறார்கள்
அவர்கள் திராவிடர்களா ? ஆரியர்களாக ? இதுவரை தெரியவில்லை . முதுமக்கள் தாழியில் பிணத்தை வைத்து முகமும் ,முதுகும்
வடக்குத் தெற்காக வைத்து அடக்கம் செய்திருக்கிறார்கள் . குழிகளையும் வடக்குத் தெற்காகவே தோண்டியிருக்கிறார்கள் .(சிந்து சமாவெளி நாகரிகம் - அ . குமரேசன் )
பிணத்திற்கு ஈமக்கிரிகள் செய்து இருக்கிறார்கள்
சிந்து சமவெளியின் எல்லாப் பகுதிகளிலும் ஒரே மாதிரியான வழிப் பாட்டு முறைகள் இருந்திருக்கிறது. மதம் இருந்ததா என்பது தெரியவில்லை .
கி.மு 1700 வாக்கில் ஏற்பட்ட மிகப் பெரிய பூகம்பம் அத்தனை பெரிய நாகரிகத்தை முடிவுக்கு கொண்டு வந்ததாக (கி.மு - கி.பி யில் மதன் குறிப்பிடுகிறார் )
ர.ரா

மச்சு பிச்சு (Machu Picchu)
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 05 )






1911 ஆம் ஆண்டு அமெரிக்காவின் யேல் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஹிராம் பிங்காம் தன்னுடைய ஆய்வுக் குழுவினருடன் ,தென் அமெரிக்க நாடுகளில் ஒன்றான பெரு நாட்டின் பயங்கரமான அடர்ந்த காட்டிற்குள் நுழைந்தார் .
புதர்கள் மண்டிக் கிடக்கும் மலைச்சரிவு
கடல் மட்டத்தில் இருந்து 8 ஆயிரம் அடி
உயரத்தில் அமைந்திருக்கும் இடத்தில் நன்கு செதுக்கப்பட்ட தளங்கள் , பெரிய கற்களால் கட்டப்பட்ட கனமான சுவர்கள் , நில நடுக்கத்தை , 'வாடா வாடா வந்து மோதிப் பாரடா ' என்று சவால் விடுகின்ற அளவிற்கு பல நூற்றாண்டுக்கும் முன்னால் கட்டப்பட்ட பெரிய பெரிய கட்டிடங்கள் தென்பட்டன. பெருவில் அடிக்கடி பூகம்பம் ஏற்படும் .

நில நடுக்கம் ஏதாவது ஏற்பட்டால் சுவர் நொறுங்கி விழாமல் அசைந்து மட்டுமே கொடுக்கும் பின்னர் பழைய நிலைக்கே திரும்பி விடும் தன்மையில் அமைக்கப்பட்டிருந்தது. இரண்டு கற்களுக்கு நடுவே மெல்லிய பிளேடு கூட நுழைய முடியாதபடி கனக் கச்சிதமாக நெருக்கமாக அமைக்கப்ட்டிருந்தது .

புதர்களையெல்லாம் அகற்றியபோது கட்டிடத்தினுள் ஏராளமான மனித எலும்புக்கூடுகள். அத்தனையும் பெண்களுடைய எலும்பு கூடுகள் . பெண்கள் கூட்டம் கூட்டமாக கொலையோ , தற்கொலையோ செய்யப் பட்டிருக்கலாம் .

அடர்ந்த காட்டு மலைப்பிரதேசத்தில் மனித சந்தடியே இல்லாத இடத்தில், இவ்வளவு பிரம்மாண்டமான நகரத்தை யார் உருவாக்கினார்கள் ?
நீண்ட ஆயுவுக்குப் பிறகு இது மச்சு பிச்சு நகரம் என்பதை பிங்காம் உறுதி செய்தார்.
13ம் நூற்றாண்டில் இன்கா மிகப் பெரிய பேரரசாகத் திகழ்ந்தது. அதாவது கொலம்பியா காலத்திற்கும் முற்பட்டது. 1438 முதல் 1533 ம் ஆண்டு வரை தென் அமெரிக்காவின் மேற்குப் பகுதிகள் , ஆன்டீய மலைத்தொடரைச் சார்ந்த பகுதிகள், ஈக்குவேடார் , பெரு, பொலீவியா , அர்ஜென்டினா , கொலம்பியா , சிலி ஆகிய நாடுகளின் பெரும் பகுதிகளை உள்ளடக்கிய மிகப்பெரும் பேரரசு இன்கா .தலை நகரம் கஸ்கோ.
இவர்கள் தங்கள் மன்னரை **'சூரியனின் மகன் °** என்றே அழைத்தனர். மேலும் மன்னரை மகிமை மிகுந்த அந்த மகேசனுக்கு நிகராக வணங்கவும் செய்தனர் .
செழிப்பான நாடு, பரந்த நிலப்பரப்பு கொண்ட இன்கா பேரரசுக்கு மிகப் பெரிய திடீர் தாக்குதலை ஸ்பானிஷ் படையினர் நடத்தினார்கள் . தலைநகர் காஸ்கோ ஸ்பானியர்களின் வசமானது.

மகேசனுக்கு ஈடான மன்னனால் ஒன்றுமே செய்ய முடிவில்லை.
وَاِذَاۤ اَرَدْنَاۤ اَنْ نُّهْلِكَ قَرْيَةً اَمَرْنَا مُتْرَفِيْهَا فَفَسَقُوْا فِيْهَا فَحَقَّ عَلَيْهَا الْقَوْلُ فَدَمَّرْنٰهَا تَدْمِيْرًا
யாதொரு ஊரை (அவ்வூராரின் தீய செயலின் காரணமாக) நாம் அழித்துவிடக் கருதினால், அதில் சுகமாக வாழ்பவர்களைக் கொண்டு நாம் அவர்கள் மீது ஏவுகிறோம். அவர்கள் அதில் விஷமம் செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். பின்னர், அவர்கள் மீது நம்முடைய வாக்கு ஏற்பட்டு அவ்வூரை நாம் அடியோடு அழித்து விடுகிறோம்.
(அல்குர்ஆன் : 17:16)
இதனால் இன்கா சமூகத்தினர் உயிர் தப்பிக்க 80 கி.மீ தொலைவில் அடர்ந்த காட்டிக்குள் நுழைந்தனர் . அங்கே உருவாக்கிய நகரம்தான் மச்சு பிச்சு !
இந்நகரின் மூன்று புறமும் அகழியைப் போல் ' உருபாமா நதி ' இதனால் மச்சு பிச்சுவை ஸ்பானியர்களால் இன்காவினரை நெருங்கி அடியோடு அழிக்க முடியவில்லை.
இன்காவினரும் தங்கள் நாட்டை ஆக்கிரமித்த ஸ்பானியர்களை விரட்டியடிக்க தொடர்ந்து 36 வருடம் விட்டு விட்டு அடிக்கடி படையெடுப்பு செய்தனர். முடியவில்லை .
1572 ஆம் ஸ்பானியர்கள் பெரும் படையுடன் மிகக் கொடூர தாக்குதல் நடத்தி இன்கா பேரரசின் கடைசி மன்னன் துபாக் அமாரு மிகக் கொடூரமாக கொலை செய்யப்பட்டான். பெண்கள் , குழந்தைகள், வயதானவர்கள் என்று தயவுகாட்டாமல் இன்கா இனத்தவர்கள் ஒருவர் கூட மிஞ்சாமல் கொலை செய்யப்பட்டனர் .

இன்கா சாம்ராஜ்யத்தின் மச்சு பிச்சு வைக் கண்டு பிடிப்பதற்காக ஸ்பானிஷ் படையினர் அந்த அடர்ந்த மலைப் பகுதி எங்கும் சுற்றி அலைந்தனர். கடைசி வரை அவர்களால் கண்டுபிடிக்கவே முடியவில்லை.
மச்சு பிச்சு வில் விலை உயர்ந்த தங்கத்தாலான ஆபரணங்கள் தங்கத்தினாலான தட்டு முட்டுச் சாமான்கள் ,கோப்பைகள், தட்டுகள் , வெள்ளியிலான தங்களின் முன்னோர்களின் சிலைகள் என்று விலை மதிப்பற்ற பெரும் கருவூலத்தை யேல் பல்கலைக்கழத்தில் சேர்த்தார்
பேராசிரியர் ஹிராம் பிங்காம் .
وَكَمْ اَهْلَـكْنَا قَبْلَهُمْ مِّنْ قَرْنٍ هُمْ اَحْسَنُ اَثَاثًا وَّرِءْيًا
இவர்களைவிட அழகான தோற்றத்தையும், தட்டு முட்டு சாமான்களையும் கொண்ட எத்தனையோ கூட்டத்தாரை நாம் அழித்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 19:74)
அவற்றை பெரு நாடு திருப்பித் தருமாறு கேட்டும் யேல் பல்கலைக்கழகம் மறுத்து விட்டது .
வரலாற்று ஆய்வாளர்களின் சந்தேகம்
எப்படி 8 ஆயிரம் அடி உயரத்திற்கு மிகப் பிரமாண்டமான கற்களை மலை உச்சிக்கு எங்கிருந்து கொண்டு வந்தனர் ?
அப்போவே நில நடுக்கத்தால் பாதிக்கப்படாத கட்டடங்களை உருவாக்கும் யுக்தி எங்கிருந்து அவர்களுக்கு கிடைத்தது ?

மச்சு பிச்சுக்குள் ஸ்பானிஷ் படைகள் வராத போது இத்தனை பெண்கள் கூட்டம் கூட்டமாக ஒரே இடத்தில் எப்படி செத்துப் போயினர் ?
இன்று காலை வரை தெரியவில்லை .
யுனெஸ்கோ அமைப்பு 2007-ல் ஏழு உலக அதிசயங்களில் ஒன்றாக மச்சு பிச்சு அறிவிக்கப்பட்டது .
இருந்தாலும் மேற்சொன்ன விடை தெரியாத வினாக்கள் அந்த அடர்ந்த காட்டின் உயர்ந்த மலை உச்சியில் படிந்திருக்கும் வெண்பனிபோல் இன்னும் மௌனமாக இருந்து கொண்டே இருக்கிறது !
ர.ரா

கடலுக்குள் மூழ்கிய அட்லாண்டிஸ் நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 06)




கி.மு 428 முதல் 348 வரையில் வாழ்ந்த தத்துவ அறிஞரான பிளட்டோ , சாக்ரடீஸிடம் கல்வியைக் கற்றவர் .
பிளட்டோ தமது திமேயஸ் மற்றும் கிரேட்டஸ் எனும் உரையாடலில் அட்லாண்டிஸ் நகரம் குறித்துப் பேசுகிறார் .

" அட்லாண்டிஸ் என்பது பல தீவுகளைக் கொண்டது . நடு மையத்திலுள்ள தீவைச் சுற்றி மோதிர வளையம் போன்ற நீர் வட்டம் இருந்தது. இந்த நீர் வளையத்தை அடுத்து மோதிர வட்டத்தில் நிலம் . அதை அடுத்து நீர் .அதை அடுத்து நிலம் . இப்படியாக ஒன்பது நில வட்டமும் , ஒன்பது நீர் வட்டமுமாக அட்லாண்டிஸ் நகரம் அமைந்திருந்தது " .
புவியியல் ரீதியாக அட்லாண்டிஸ் எங்கே இருந்தது என்பதைப் பற்றி பிளேட்டோ தெளிவாக குறிப்பிடவில்லை .

அட்லாண்டிஸ் நகரத்தின் வீடுகளின் கூரைகள் தாமிர வண்ணத்தில் அமைக்கப்பட்டிருந்ததால் , அவை சூரிய ஒளியில் தகதகத்தன. நகரின் மையப்பகுதியில் சுற்றுச் சுவரோடு மூன்று கால்வாய்கள் அமைந்திருந்தாகவும், யானைகளின் மூதாதையராகக் கருதப்படும் மமோத் இந்நகரில்தான் இருந்தது. வன விலங்காக இருந்த குதிரைகள் வீட்டு விலங்காகப் பயன்படுத்தப்பட்ட நாகரிகம் இந்த அட்லாண்டிஸ் நாகரிகத்தில்தான் .
அட்லாண்டிஸ் பத்து லட்சத்திற்கும் மேற்பட்ட வீரர்கள் இருந்தனர் .

அந்த நாகரிகத்தில் முதிர்ச்சி அடைந்த மக்கள் வாழ்ந்ததாகவும் , அவர்கள் பல நாடுகளை தமது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்ததாகவும், செல்வச் செழிப்பு மற்றும் மிகப்பெரிய அதிகாரம் ஆகியவற்றால் சிறந்து விளங்கினர் .
அட்லாண்டிஸ் மக்கள் அழகிலும் , அறிவிலும் சிறந்து விளங்கினார்கள் இதனால் இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக அவர்கள் இருந்ததாகவும் ,அளவுக்கு அதிகமாக அவர்கள் சேர்த்த செல்வம் , ஆட்சி அதிகாரம் , வான் பொய்த்து போகாமல் பெய்த மழை இவைகளின் மமதையில் மிதக்க ஆரம்பித்து இறைநம்பிக்கை குறைந்து போய் அழிவின் எல்லைக்கு வந்தனர் .
இதனால் தொடர் நிலநடுக்கம் , வெள்ளம் , எரிமலைச் சீற்றம் என இயற்கையின் பேரழிவு இப்பேரரசின் மீது தாக்க தொடங்கி , அட்லாண்டிஸ் நகரம் நீரில் முழ்கியது என்பதாக பிளட்டோ கூறுகிறார் .

اَلَمْ يَرَوْا كَمْ اَهْلَـكْنَا مِنْ قَبْلِهِمْ مِّنْ قَرْنٍ مَّكَّنّٰهُمْ فِى الْاَرْضِ مَا لَمْ نُمَكِّنْ لَّـكُمْ وَاَرْسَلْنَا السَّمَآءَ عَلَيْهِمْ مِّدْرَارًا وَّجَعَلْنَا الْاَنْهٰرَ تَجْرِىْ مِنْ تَحْتِهِمْ فَاَهْلَكْنٰهُمْ بِذُنُوْبِهِمْ وَاَنْشَاْنَا مِنْ بَعْدِهِمْ قَرْنًا اٰخَرِيْنَ
அவர்களுக்கு முன்னர் எத்தனையோ கூட்டத்தினரை நாம் அழித்திருக்கின்றோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? பூமியில் உங்களுக்கு நாம் செய்து தராத வசதிகளையெல்லாம் அவர்களுக்கு நாம் செய்து தந்திருந்தோம். வானத்திலிருந்து தாரை தாரையாக மழை பெய்யும்படிச் செய்து அவர்களின் (ஆதிக்கத்தின்) கீழ் நீரருவிகளும் தொடர்ந்து ஓடிக்கொண்டிருக்கும்படி செய்தோம். (எனினும் அவர்கள் பாவத்திலேயே ஆழ்ந்துவிட்டனர்.) ஆகவே, அவர்களுடைய பாவங்களின் காரணமாக அவர்களை அழித்து விட்டோம். அவர்களுக்குப் பின்னர் மற்றொரு கூட்டத்தாரை நாம் உற்பத்தி செய்தோம். (அல்குர்ஆன் : 6:6)

அட்லாண்டிஸ் நகரின் அழிவில் இருந்து யாருமே தப்பிக்கவில்லை என்றே கூறப்பட்டது .ஆனால் எட்கர் கெய்ஸி என்பவர் நம்ப முடியாத தகவலை தெரிவிக்கிறார் .
இவர் திடீரென்று ஒரு விதமான மயக்கத்தில் ஆழ்ந்து விடுவார். அப்போது எத்தகைய கேள்விகளை அவரிடம் கேட்டாலும் அதற்கான சரியான பதிலைக் கூறும் வித்தியாசமான சக்தி இவருக்கு உண்டு.
இவரை **"தூங்கும் தீர்க்கதரிசி "** என்கிறார்கள் .ஒரு முறை அழிந்து போன அட்லாண்டிஸ் நகரைப் பற்றி இவரிடம் கேட்டபோது ,
அப்போது நகரம் நீரில் மெது மெதுவாக முழ்கிக் கொண்டிருந்த போது அங்கிருந்த பறக்கும் இயந்திரம் மூலமாக சிலர் தப்பித்து வெளியேறினார்கள் என்றும் , இவர்கள் தான் மாயன் நாகரிகத்தை உருவாக்கினார்கள் என்றும் , தானும் அட்லாண்டிஸ் தேசத்தைச் சேர்ந்தவன் என்றும் , தனது தீர்க்க தரிசனத்திற்குக் காரணம் அட்லாண்டிஸ் தெய்வங்களும், ஆவிகளும்தான் என்று இன்னொரு குண்டையும் தூக்கிப் போட்டார் .

اَوَلَمْ يَهْدِ لِلَّذِيْنَ يَرِثُوْنَ الْاَرْضَ مِنْ بَعْدِ اَهْلِهَاۤ اَنْ لَّوْ نَشَآءُ اَصَبْنٰهُمْ بِذُنُوْبِهِمْ وَنَطْبَعُ عَلٰى قُلُوْبِهِمْ فَهُمْ لَا يَسْمَعُوْنَ
பூமியில் (அழிந்துபோன) முன்னிருந்தவர்களுக்குப் பின்னர் அதற்கு வாரிசான இவர்களையும் நாம் நாடினால் இவர்களுடைய பாவங்களின் காரணமாக (அவ்வாறே அழித்து) தண்டிப்போம் என்ற விஷயம் இவர்களுக்கு நல்லறிவைத் தரவில்லையா? நாம் இவர்களுடைய உள்ளங்களின் மீது முத்திரையிட்டு விட்டோம். ஆகவே, இவர்கள் (நல்லுபதேசங்களைச்) செவியுற மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 7:100)

تِلْكَ الْقُرٰى نَقُصُّ عَلَيْكَ مِنْ اَنْۢبَآٮِٕهَا وَلَقَدْ جَآءَتْهُمْ رُسُلُهُمْ بِالْبَيِّنٰتِ فَمَا كَانُوْا لِيُؤْمِنُوْا بِمَا كَذَّبُوْا مِنْ قَبْلُ كَذٰلِكَ يَطْبَعُ اللّٰهُ عَلٰى قُلُوْبِ الْكٰفِرِيْنَ
(நபியே!) இவ்வூர்களின் சரித்திரத்தை நாம் உங்களுக்குக் கூறுகின்றோம். (அவற்றில் வசித்திருந்த) அவர்களுக்கு (இறைவனால்) அனுப்பப்பட்ட தூதர்கள் நிச்சயமாகத் தெளிவான வசனங்களையே கொண்டு வந்தனர். எனினும், அவர்களோ முன்னர் ஏதாவது ஒன்றை பொய்யாக்கி விட்டால் (பின்னர் அதனை) ஒருக்காலத்திலும் நம்பிக்கை கொள்ளாதவர்களாகவே இருந்தனர். இவ்வாறே, நிராகரிப்பவர்களின் உள்ளங்களில் அல்லாஹ் முத்திரையிட்டு விடுகின்றான்.(அல்குர்ஆன் : 7:101)

அமெரிக்க ஆய்வாளர்கள் தென் ஸ்பெயினில் அந்த நகரத்தின் எச்சங்களை தற்போது கண்டுபிடித்துள்ளார்கள் .
ஸ்பெயின் நாட்டின் காடிஸ் நகருக்கு வடக்கே கடலுக்குள் இந்நகரத்தை கண்டுபிடித்துள்ளனர் .
நீருக்கு அடியில் பயன்படுத்தப்படும் தொழில் நுட்பங்கள் , டிஜிட்டல் மேப்பிங் முறைகள் , ஆழ்நிலை ஆய்வு போன்றவற்றின் உதவியுடன்
ஹார்ட்போர்ட் பல்கலைக்கழகப் பேராசிரியர் ரிச்சர்டு ப்ரிஹண்ட் கிராக் தெரிவித்துள்ளார் .
கிரேக்க காலத்தில் கடலில் மூழ்கியதாக கருதப்படும் அட்லான்டிஸ் என்னும் நகரை கூகுல் ஓஷன் சாப்ட்வேர் சேவை மூலம் பொறியியல் வல்லுநர் ஒருவர் கண்டுபிடித்திருக்கிறார்.
வடமேற்கு ஆப்பிரிக்கா அருகே உள்ள கேனரி என்னும் தீவுக்கு பக்கத்தில் அட்லாண்டிக் பெருங்கடலில் இந்த நகரம் புதைந்து கிடப்பதாக அவர் கூறியுள்ளார்.

செயற்கை கோள் புகைப்படங்களின் மூலம் பூமியின் மேற்பரப்பை அலசி ஆராய கைகொடுக்கும் கூகுல் எர்த் சாப்ட்வேரின் விரிவாக்கமாக கூகுல் ஓஷன் சாப்ட்வேரை கூகுல், கடந்த மாதம் அறிமுகம் செய்தது.
இந்த சாப்ட்வேர் சேவையின் மூலம் ஆழ்கடலுக்கு அடியில் உலா வர முடியும். அங்குள்ள காட்சிகளை தேடிப்பார்க்க முடியும். பலர் இந்த சேவையை பயன்படுத்தி தேடலில் ஈடுபட்டு வருகின்றனர்.
இவ்வாறு தேடலில் ஈடுபட்ட பெர்னி பாம்போர்டு என்னும் பொறியியல் வல்லுநர் கேனரி தீவுகள் அருகே புராதான நகரம் ஒன்றை கண்டுபிடித்திருக்கிறார். சுமார் 620 மைல்கள் சுற்றுப்பரப்பில் நகரத்தை உணர்த்தக்கூடிய செவ்வகக்கோடுகளை கொண்டதாக இந்த நகரம் இருப்பதாக அவர் கூறியுள்ளார். கிரேக்க காலத்தில் கடலில் மூழ்கியதாக கருதப்படும் அட்லான்டிஸ் நகரமாக இது இருக்கலாம் என்று ஆய்வாலர்கள் கருதுகின்றனர்.
ஏதென்சை கைப்பற்ற முயன்ற போது இந்த நகரம் கடலில் மூழ்கியதாக கிரேக்க தத்துவ ஞானி பிளாட்டோ தனது புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.
ர.ரா

## மாயன் நாகரிகம்
## (அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 07 )






0 1 2 3 4 5 6 7 8 9
10 11 12 13 14 15 16 17 18 19

Example:
28 = (1 x 20) + 8 =
433 = (1 x 400) + (1 x 20) + 13 =

மாயன் நாகரிகம் உலகின் பழமையான நாகரிகங்களில் ஒன்று, கி.மு 2600-ல் தொடங்கி ,கி.பி 900 வரை நீடித்த நாகரிகம் . இந் நாகரிகம் மத்திய அமெரிக்காவில் ஐந்து நாடுகளான மெக்ஸிகோ, கௌதமாலா, பெலீஸ், ஹோண்டுராஸ், எல் சால்வடார் ஆகியவற்றில் வசித்த செவ்விந்தியர்களிடையே நிலவிய நாகரிகம்.

மாயன்கள் சோளம் , கோக்கோ (சாக்லெட் தயாரிப்பிற்குரிய மூலப்பொருள்) உப்பு முக்கியமான உணவுப் பொருள்
போப்பல் வூ **(Popol vuh )** என்கிற புத்தகம் சமுதாயத்தின் புனித புத்தமாக கருதப்படுகிறது . இந்த புத்தகத்தின் மூலம் மாயர்களின் வாழ்க்கை முறை , மத நம்பிக்கை போன்றவற்றை தெளிவாக எழுதப்பட்டுள்ளது.

தான் படைத்த உலகம் என்றும் செழிப்பாக இருப்பதற்காகக் கடவுள் உலக மரம் (World Tree ) நட்டார். இதன் கிளைகள் சொர்க்கத்தில் ,வேர்கள் பாதாளத்தில் இருந்தது. இந்த மரம்தான் மூன்று உலகங்களையும் தாங்கிப் பிடிக்கிறது என்பது மாயர்களின் நம்பிக்கை .இதை போப்பல் வூ புத்தகத்தில் எழுதியுள்ளார்கள்
اَلَمْ تَرَ كَيْفَ ضَرَبَ اللّٰهُ مَثَلًا كَلِمَةً طَيِّبَةً كَشَجَرَةٍ طَيِّبَةٍ اَصْلُهَا ثَابِتٌ وَّفَرْعُهَا فِى السَّمَآءِۙ
(நபியே! "தவ்ஹீத் கலிமா" என்னும்) நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு (மிக்க மேலான) உதாரணத்தைக் கூறுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? (அவ்வாக்கியம்) வானளாவிய கிளைகளையும் (பூமியில்) ஆழப்பாய்ந்த வேரையும் உடைய ஒரு நல்ல மரத்திற்கு ஒப்பாக இருக்கிறது.
(அல்குர்ஆன் : 14:24)

மாயர்கள் 166 தெய்வங்களை வழிப்பட்டாலும், இறக்கைகள் கொண்ட பாம்பு உருவமான கேட்ஸால்கோயோட்டெல் **(Quetzalcoatl )** என்ற கடவுள் முதன்மையானவர் .
இந்த கடவுள் நினைவாக 6 -ம் நூற்றாண்டில் மெக்ஸிகோவில் கட்டப்பட்ட பிரமிடு சீசென் யீட்ஸா **(Chichen itza )** நகரத்தில் இருக்கிறது.

மார்ச் 21 , செப்டம்பர் 23 ஆகிய இரண்டு நாட்களில் மட்டும்தான் பகல் பொழுதும் , இரவுப் பொழுதும் சம அளவாக இருக்கும் . இந்த இரண்டு நாட்களில் பிரமிடின் நிழல் இறக்கைகள் கொண்ட பாம்பு வடிவான கடவுள்
கேட்ஸால்கோயோட்டெல் வடிவில் விழுகிறது ! இது ரொம்பவும் வியப்பான விஷயம் .
சமபங்கு நாட்களைப் பற்றி எப்படி மாயன்களுக்குத் தெரியும் ? பிரமிடின் நிழல் இறக்கை முளைத்த பாம்பாக எப்படி தெரியும் ? அதற்கு தக்கவாறு பிரமிட்டின் கட்டிட அமைப்பை எப்படி தேர்வு செய்தனர் ?
மாயன்கள் வானியல் தொடர்பான அறிவு வியக்கத்தக்கது .சூரிய ,சந்திர இயக்கங்களைப் பதிவு செய்ய மாயன் மக்கள் வான் ஆய்வுகூடங்களை அமைத்திருந்தனர்.இவற்றில் தொலைநோக்குகள் போன்ற கருவிகளும் இருந்தன .

1945க்குப் பின்னர்தான் விஞ்ஞானிகளால் "பால் வீதி **"(Milkway )**பற்றித் தெரிந்துகொள்ள முடிந்தது.ஆனால்,அதற்கும் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மாயன் மக்கள் பால்வீதி பற்றி அறிந்திருந்தார்கள் .
ஓரியன் நட்சத்திர மண்டலம் **(Orion Constellation )** மிகவும் பிரகாசமானது. இது பார்ப்பதற்கு வேடன் போல் கையில் வாள் போல் ஒரு பகுதி தெரியும். இந்தப் பகுதியின் பெயர் ஓரியன் நெபுலா எனப்படும் .

17ம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான், ஓரியன் நெபுலா வானியல் ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டது இதன் புகைப்படம் 1980 ல் தான் முதன்முதலாக எடுக்கப்பட்டது.
ஆனால் மாய நாகரிகப் பழங்கதைகளில் ஓரியன் நட்சத்திர மண்டலத்தின் வர்ணனைகள் அப்படியே சொல்லப்படுகிறது.

மேலும் அந்த நட்சத்திரத்தின் ஒரு கிரகத்தில் இருந்து விருந்தாளிகள் வந்து போனதாக இன்னொரு கதையில் வர்ணயிக்கப்படுகிறது. எனவே வேற்று கிரக வாசிகளின் தொடர்பு இம் மாயன் மக்களுக்கு இருந்திருக்க வேண்டும் .
மாயன்கள் இரண்டு வகைக் காலண்டர்களைப் பயன்படுத்தி இருக்கிறார்கள் .
365 நாட்கள் வருடத்திற்கு 18 மாதங்கள் மாதத்திற்கு 20 நாட்கள் . இது ஹாப் காலண்டர் . வருடத்திற்கு 360 நாட்கள் எஞ்சிய 5 நாட்கள் அதிர்ஷ்டம் கெட்ட நாட்கள் .
அடுத்த காலண்டர் வருடத்திற்கு 260 நாட்கள். 13 மாதங்கள் .மாதத்திற்கு 20 நாட்கள் .இது இஸால்கின் காலண்டர்
ஹாப், இஸால்கின் இரண்டு காலண்டர்களும் 52 வருடங்களுக்கு ஒரு முறை இணையும் . அப்போது உலகில் மாபெரும் மாற்றங்கள் ஏற்படும் என்பதையும் குறித்துள்ளார்கள் .
கி.மு. 700 - மாயங்களின் எழுத்துக்கள் தொடங்கின. இவை சித்திர எழுத்து என்ற வகை. அதாவது வாசிக்கும் முறையில் இல்லாமல் படம் வரைந்து விளக்கும் முறை.

நம்முடைய கணிதம் பத்து அடிப்படையாகக் கொண்டு தசாம்ச முறை (Decimal System ) மாயன்களின் கணித எண் முறைமை 20 அடிமான (base-20) எண் முறையை மாயன்கள் பயன்படுத்தினர்.

மாயன்களின் கணிதத் திறமைக்கு சான்று அவர்களின் பூஜ்ஜியம் பயன்பாட்டு முறையாகும். மிக வளர்ச்சியடைந்ததாகக் கருதப்படும் கிரேக்க நாகரிகங்கள் கூட பூஜ்ஜியம் பயன்பாட்டுமுறையை அராபியர்களிடம் இருந்தே அறிந்து கொண்டார்கள்.
மாயன்கள் எண்களை குறிப்பிட மிக எளிமையான அதே சமயத்தில் மிகப் பெரிய எண்களைக் கூட எழுதவல்ல ஒரு குறியீட்டு முறையைக் கையாண்டார்கள். இக்குறியீட்டு முறை ஒரு "_" மாதிரியான கோடு ஒரு புள்ளி ஒரு நீள்வட்டக் குறி ஆகியவற்றை மட்டுமே உள்ளடக்கியது படத்தை கவனிக்கவும் .

எகிப்தியப் பிரமிடுகளை அடுத்து இந்நகரில் காணப்படும் பிரமிடுகளே பிரசித்தி பெற்று விளங்குகிறன.
இப்பிரமிடுகளை சுற்றிலும் 4 பெரிய படிகட்டுகளும் அவற்றுள் அடங்கிய 365 படிக்கட்டுகளும் காணபடுகிறது. இவையாவும் ஒரு ஆண்டிற்கான 4 காலங்களையும் 365 நாட்களையும் குறிப்பதாக கூறப்படுகிறது.

அவர்கள் **சூரியன், சந்திரன், புதன், சுக்கிரன்** போன்றவற்றின் சுழற்சி முறைகளை வெகுவாக அவதானித்து ஆவணப்படுத்தியிருந்தனர். சந்திர மற்றும் சூரிய கிரகணங்களை முன்கூட்டியே கணக்கீட்டுத் தீர்மனிக்கும் அளவிற்கு திறன் பெற்றிருந்தனர்.
சடங்குகளில் அதீத நம்பிக்கை பெற்றிருந்த மாயன்கள் வானியல் நிகழ்ச்சிகளை அடியோட்டியே சடங்குகளை நடத்தினர்.ட்ரெடெக்ஸ் எனப்படும் மாயன் பஞ்சாங்கக் குறிப்பேட்டிலிருந்து இதற்கான ஆதாரங்கள் பெறப்பட்டுள்ளன.
15 ஆம் நூற்றாண்டில் படையெடுத்த ஸ்பானியர்கள் 90 % மாயன் மக்களை கொன்றொழித்தனர் .எஞ்சியவர்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு தொலைவிலுள்ள பெரு நாட்டுக்கு உயிர் தப்பிச் சென்றனர்.

மாயன் மக்களை அடையாளப படுத்தும் நூற்கள் , அறிவியல் சாதனங்கள் போன்றவற்றை தீயிட்டு அழிந்ததனாலும் , சொந்த இடத்தைவிட்டு ஓடியதன் காரணமாகவும் மாயன் நாகரிகமும் கலாச்சாரமும் காலப்போக்கில் மறைந்து போயின .

وَاِذَاۤ اَرَدْنَاۤ اَنْ نُّهْلِكَ قَرْيَةً اَمَرْنَا مُتْرَفِيْهَا فَفَسَقُوْا فِيْهَا فَحَقَّ عَلَيْهَا الْقَوْلُ فَدَمَّرْنٰهَا تَدْمِيْرًا
யாதொரு ஊரை (அவ்வூராரின் தீய செயலின் காரணமாக) நாம் அழித்துவிடக் கருதினால், அதில் சுகமாக வாழ்பவர்களை நாம் ஏவுகிறோம். அவர்கள் அதில் விஷமம் செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். பின்னர், அவர்கள் மீது நம்முடைய வாக்கு ஏற்பட்டு அவ்வூரை நாம் அடியோடு அழித்து விடுகிறோம்.
(அல்குர்ஆன் : 17:16)

மிகச் சிறந்த நாகரிகமாகவும் , அறிவாற்றல் , வான சாஸ்திரம் , காலண்டர் , நாட்காட்டி என்று வான இயல் பற்றியெல்லாம் நன்கு தெரிந்த சமுதாயம் பக்கத்து நாட்டு ஸ்பானியர்கள்
தங்களை தாக்குவார்கள் என்பதை நினைத்துக் கூடாப் பார்க்காத மாயன்கள் வலையில் சிக்கிய மானாய் மாண்டொழிந்தனர் .

وَكَمْ اَهْلَكْنَا قَبْلَهُمْ مِّنْ قَرْنٍ هَلْ تُحِسُّ مِنْهُمْ مِّنْ اَحَدٍ اَوْ تَسْمَعُ لَهُمْ رِكْزًا
இதற்கு முன்னர் எத்தனையோ கூட்டத்தினரை நாம் அழித்திருக்கின்றோம். அவர்களில் ஒருவரையேனும் நீங்கள் காண்கின்றீர்களா? அல்லது அவர்களுடைய சிறிய சப்தத்தை யேனும் நீங்கள் கேட்கின்றீர்களா?
(அல்குர்ஆன் : 19:98)
ர. ரா

**Rahmath Rajakumaran**

மெக்சிகோ: தண்ணீருக்கடியில் மாயன் காலத்து நீளமான குகை கண்டுபிடிப்பு
கி.மு.2600-ம் ஆண்டுகளில் வாழ்ந்த கணிதம் மற்றும் கட்டிடக்கலைக்கு புகழ்பெற்றவர்களான மாயன்கள் என்று உலகம் முழுவதும் நம்பப்படும் நிலையில் மாயன்கள் காலத்தில் கட்டப்பட்ட உலகின் மிக நீளமான குகை ஒன்றை மெக்சிகோ நாட்டில் நீருக்கடியில் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.
இந்த குகையின் நீளம் 216 மைல்கல் ஆகும். மெக்சிகோ நாட்டின் யுகாடா தீபகற்பத்தில் அமைந்துள்ள ஒரு கடற்கரையை ஆராய்ச்சி செய்த விஞ்ஞானிகள் தற்செயலாக இந்த அதிசய குகையை கண்டுபிடித்துள்ளனர்.
ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆன பின்னரும் நீருக்கடியில் உள்ள இந்த குகை புத்தம் புதியதாக இருப்பதால் , இது இன்றும் வேற்றுகிரக வாசிகளின் பயன்பாட்டில் இருக்கலாம் எனவும் நம்பப்படுகிறது . இதில் மர்மங்கள் இருக்கும் என்றும் , மெக்சிகோ அரசின் அனுமதி கிடைத்தால் இந்த குகை முழுவதையும் ஆராய்ச்சி செய்ய தயார் எனவும் ஆராய்ச்சியாளர்கள் தெரிவித்துள்ளனர். இந்த குகையை ஆராய்ந்தால் மாயன் நாகரித்தின் பல மர்மங்கள் மிக விரைவில் வெளியாகும் என்று கூறப்படுகிறது. **#Mexico #UnderwaterMayancave**

மினோயனிய (நாஸஸ்) நாகரிகம்
( அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 08 )







மினோயன் கிரீட் நகரை ஆதாரமாக கொண்டு மினோயனிய மக்கள் முதன்மையான மெடிட்டெரேனிய நாகரிங்களில் ஒன்றினை உருவாக்கினர். அது இராக்லியன் என்னும் இடத்தில் இருந்து சுமார் 7 கி.மீ தொலைவில் அமைந்திருக்கும் **நாஸஸ் (Knossos )**
அந்த நாகரிகம் கி.மு.3000 முதல் கி.மு.1450 வரை வளமை பெற்றது.

கி.மு 1900 -ல் கிரைரேட்டோஸ் நதிக்கரையில் நாஸஸ் நகரை உருவாக்கும் விதமாக அழகிய அரண்மனை சுமார் இரண்டு லட்ச சதுர அடி பரப்பளவில் மன்னர் மினோஸ் மற்றும் இளவரசன் இகாரோஸ் என்பவர்களால் கட்டப்பட்து.

நாஸஸின் அரண்மனையை பிரிட்டனின் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் ஆர்தர் இவன்ஸ் 1900ம் ஆண்டில் தோண்டி எடுப்பதில் ஈடுபட்டார். இந்த இடத்தில் கி.மு.1900- 1750 காலத்தில் முதல் அரண்மனை கட்டப்பட்டது. அது மிகப் பெரிய எரிமலை வெடிப்பினால் நாஸஸ் நகரமும், அரண்மனையும் மிகப் பெரிய பாதிப்பை அடைந்தது.

இந்த இயற்கை சீற்றத்தால் நாஸஸின் மன்னர் சோர்ந்து விடவில்லை. முந்தைய அரண்மனையைக் காட்டிலும் மிகப் சிறப்பான அரண்மனையாக , "புதிய அரண்மனை' கி.மு.1600ம் ஆண்டிற்கு பிறகு 200 ஆண்டுகள் கழித்து கட்டப்பட்டது. இந்த அரண்மனை தட்டையான கூரையுடன் கூடிய 1300 அறைகள் கொண்டு இருந்தன. இதனை சுற்றிய டவுனில் 10ஆயிரம் மக்கள் வசித்தனர்.

அரண்மனைகள் அற்புதமான சுவர் ஓவியங்களை கொண்டு இருந்தன. அதோடு அலங்கார வேலைபாடு களும் சுவர்களை நிறைத்தன. ஓவிய காட்சிகள் மனித மற்றும் விலங்கின உருவங்களை கொண்டு இருந்தன. விலங்குகளில் எருதுகள் மற்றும் டால்பின்கள் இருந்தன. சமமாக வண்ணம் பிரத்யேகமான ஸ்டைலுடன் பூசப்பட்டு இருந்தது.

ஓவியங்கள் அரசர்களையோ, கடவுள் தன்மையையோ பிரதிபலிக்காததால் எகிப்து அல்லது மெஸபடோமிய கலைக்கு கொஞ்சம் கூட தொடர்பு இல்லாத தனித்தன்மையை பெற்றுள்ளது.
சான்டோரினி சுவர் ஓவியம் பறவைகள் நிறைந்த நிலப்பகுதியை காட்டுகிறது. இதுதான் உலகின் முதன்மையான தூய்மையான நிலப்பகுதி.
பெரும்பாலானவை பானைகள், விலங்குகள் அல்லது தாவர ஓவியங்களால் அலங்கரிக்கப்பட்டன. அதோடு பானை செய்யும் கலை அவர்களின் பெண் கடவுள் என கருதப்படும் பெண் உருவம், பாம்புகள் சூழ இருப்பது போல செய்தது அதுவும் அரை நிர்வாணத்தில் மிகச் சிறப்பாக இருப்பதாக கூறப்படுகிறது.
எருது புனித விலங்காக மதிக்கப்பட்டது .
எருதைப் போற்றும் வகையில் பல வகையான விளையாட்டு போட்டிகளை நடத்தினார்கள். அது ஜல்லிக்கட்டா என்று கேட்க வேண்டாம் .

கிரேக்க ஆய்வாளர்கள் , இந்த அரண்மனையை அன்றைய காலக்கட்டத்தில் புகழ் பெற்ற கட்டிடக்கலை நிபுணர் டெடலோஸ் என்பவரால் கட்டப்பட்டிருக்கிறது .
இந்த அரண்மனையின் மிக முக்கிய சிறப்பு என்னவென்றால் புதிதாக யாரும் இதனுள் நுழைந்து விட்டால் வெளியே வரும் வழியை அவர்களால் கண்டுபிடிக்கவே முடியாது.
இவ்வளவு பெரிய அரண்மனையை நடந்து சென்று பார்ப்பது என்பது இயலாத காரியம் .சில நாட்கள் பிடிக்கும்
எனவே மன்னன் மினோஸ் மற்றும் அவனது மகன் இகாரோஸ் ஆகியோர் அரண்மனையைச் சுற்றிப் பார்ப்பதற்காக பிரத்யேகமாக பறவைகள் போன்று இரண்டு இறக்கைகள் உடைய ஒரு கருவியையும் கண்டுபிடித்தார் கட்டிடக்கலை நிபுணர் டெடலோஸ் .
இக் கருவியைப் பயன்படுத்தி மன்னனும் அவரது மகனும் அடிக்கடி அரண்மனைக்குள் பறந்து சென்று பார்வையிட்டு வந்தனர் . இதோடு டெடலோஸ் ஒரு எச்சரிக்கையும் செய்தார் .
அதாவது எக்காரணம் கொண்டும் சூரியக்கதிர்கள் அதிகமாக விழுகிற மாதிரி பறக்கக் கூடாது என்றும் , ஏனென்றால் இறக்கைகளில் உள்ள மெழுகு உருகி விபத்தை சந்திக்க நேரிடும் என்றும் எச்சரித்தார் .

மகன் இகாரோஸ் இதனை அலட்சியபடுத்தி சூரியனை நோக்கி பறக்க ஆரம்பிக்க, இறக்கையின் மெழுகு உருகி ஏஜியான் கடலில் விழுந்தது இகாரோஸ் பரிதாபமாக மரணத்தைத் தழுவினான்.
நாஸஸ் அரண்மனையின் பிரம்மாண்டமான கட்டடம் மினோயின் அழிவின் மிச்சம். இந்த கிரீட் தீவு கட்டடத்தை தோண்டி எடுக்க 30 ஆண்டுகள் ஆயின.
1870ம் ஆண்டுகளில் நடந்த அகழ்வாராய்ச்சிகள் வலிமையான கட்டடங்கள் மற்றும் விரிவான ஸ்தூபிகளை எடுத்து காட்டின.
ஆளும் அரசர்கள் புதைக்கப்படும்போது ஏராளமான மதிப்புடனான தங்க பொருள்களுடன் புதைக்கப் பட்டனர்.
மினோடார் கிரேக்க புராண கதையின்படி மினாஸ் அரசன் எருது-தலை மற்றும் மனித-உடல் கொண்ட ராட்சத உருவத்தினை தனது அரண்மனையின் அடியில் மறைவாக புதைத்து வைத்து இருந்தாராம். அந்த ராட்சத உருவை மினோடார் என்பர் ஆங்கிலத்தில். கிரேக்க மாவீரன் தீஸஸ்ஸால் அது பின் அழிக்கப் பட்டது
ஆனால் இதுவும் சுட்டுக் கதை என்று ஒதுக்கிவிட முடியாது என்றும் இதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது என்றும் வரலாற்று ஆய்வாளர்கள் நம்புகின்றனர் .
ஒன்றுக்கு இரண்டு மிகப் பெரிய அரண்மனைகள் கட்டி சொகுசு வாழ்வு வாழ்ந்த நாகரிகம் , அடிக்கடி இயற்கையின் சீற்றங்களால் பாதிக்கப்படுவது இறைவனின் தண்டனை என்று பாராமல் வாழ்ந்த நாகரிகத்தின் சரித்திரத்தை அவன் தோண்டிப் பார்க்கும்படி ஆக்கி விட்டான்

فَكَاَيِّنْ مِّنْ قَرْيَةٍ اَهْلَكْنٰهَا وَهِىَ ظَالِمَةٌ فَهِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا وَبِئْرٍ مُّعَطَّلَةٍ وَّقَصْرٍ مَّشِيْدٍ
அநியாயக்காரர்கள் வசித்திருந்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்திருக்கிறோம். அவற்றுடைய முகடுகள் இடிந்து குட்டிச் சுவராகிக் கிடக்கின்றன.
அவற்றின் (எத்தனையோ) கிணறுகள் பாழடைந்து கிடக்கின்றன. அவற்றின் மாட மாளிகைகள் (மக்கள் வசிக்காது) பாழாய் கிடக்கின்றன.
(அல்குர்ஆன் : 22:45)
ர.ரா

டிராய் நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 09)



'இலியட் 'காவியமும் , 'ஒடிசி' காவியமும்
கற்பனை காவியங்களாக எழுதப்பட்ட கிரேக்க வரலாறு அல்ல ; அவைகள் உண்மையிலேயே நடந்த வரலாற்று சம்பவங்கள் என்கிறார்கள் வரலாற்றாசிரியர்கள்.
கிரேக்கக் காப்பியங்களாக விளங்கி வரும் 'இலியட் 'காவியமும் , 'ஒடிசி' காவியமும் ஹோமரால் கிமு 900 - ஆம் ஆண்டுகளில் எழுதப்பட்டவை .

இலியட் காப்பியத்தில் டிராஜான் போரைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது . சுமார் பத்து ஆண்டுகளாக நீடித்த இந்தப் போரின் கடைசி ஐம்பது நாட்களைப் பற்றி விவரிக்கிறது இலியட் காப்பியம் .
ஒடிசி காப்பியம் டிராஜான் போரில் பங்கேற்ற கிரேக்க தீவின் மன்னன்
ஒடிசஸ் , போருக்குப் பின்னர் இத்தாக்காவில் உள்ள தன் அரண்மனைக்குப் பயணப்படுகிறான்.
இந்த பயணத்தின் போது ஏற்பட்ட துன்ப துயரங்களை வர்ணிக்கிறது ஒடிசி காப்பியம் .
ஆக இலியட்டின் தொடராக ஒடிசி.
டிராஜான் போரைச் சார்ந்தே எழுதப்பட்டுள்ளது.

டிராஜான் போர் ஹெலன் என்ற மிக அழகான ஒரு பெண்ணுக்காக நடந்த யுத்தம்.
கிரேக்கத்தில் ஸ்பார்ட்டா என்றொரு மிகப்பெரிய நகரம் . அதனை ஆட்சி செய்தவர் டின்டேரியஸ் . இவரது
மகள்தான் ஹெலன். அழகி என்றால் அப்படியொரு பேரழகி . ( சுண்டினால் இரத்தம் வரும் ..இந்த மாதிரியான வர்ணனைக்காக இரண்டு பாராவை
மிஞ்சப்படுத்தப்படுத்தி அவரவர் கற்பனை கனவுக்கன்னியை நினைத்துக் கொள்ளவும்)
உலகில் முதல் சுயவரம் என்ற நிகழ்வைப் பற்றி ஒடிசி டின்டேரியஸ்க்கு ஐடியா கொடுக்கிறான்

பல நாட்டு இளவரசர்கள் சுயம்வரத்திற்கு வருகை தர , ஹெலன் ஒவ்வொரு இளவராகப் பார்த்துக் கொண்டே வர இளவரசர் மெனலெஸ் யை தேர்ந்தெடுத்தாள். திருமணமும் நடந்தேறியது .
ஒரு சமயம் டிராய் நாட்டு இளவரசன் பாரிஸ் என்பவன் ஸ்பார்ட்டாவிற்கு விருந்தாளியாக வருகை தந்தான் . அரண்மனையில் ஹெலனைப் பார்த்தான் . பிறன்மனை நோக்கினான் இல்லை இல்லை பிறன் அரண்மனை நோக்கினான் . அன்பாய் மிக அன்பாய் பழக , ஹெலன் மனதை மிக எளிதாய் கைப்பற்றி , கணவர் மென்லெஸ் வெளிநாடு செல்லும் சமயம் , ஹெலனை
தன் டிராய் நாட்டிற்கு கொண்டு செல்கிறான் .
வெளிநாட்டிலிருந்து திரும்பியதும் மெனலெஸ் விபரம் அறிகிறான்.

டிராய் மீது போர் தொடுக்க தன் தம்பி அகமெம்னை துணைக்கு அழைக்கிறான்
டிராய் மீது போர் தொடுத்ததை
டிராஜான் போர் என்கிறார்கள் .
சர்வ சக்தியாக யுத்த யுக்தியாக விளங்கும் அக்கிலாஸும் போரில் மெனலெஸ்க்கு உதவுகிறான்.

போர் 9 வருடங்களாகியும் முடிவதாக இல்லை. காரணம் வலுவான மிக உயரமான மதில் சுவரும் , பலம் பொருந்திய அதன் வாயில் கதவுகளும் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை.
யுத்த யுக்தியாக பெரிய மரக் குதிரை தயாரிக்கப்பட்டு அதன் வயிற்றுப் பகுதியில் பலமிக்க வீரர்களை அமரச் செய்து இருளில் குதிரை இழுத்து வந்து வாயிற் கதவு பக்கம் நிறுத்தி வைக்க பொழுது புலர்ந்ததும் வழக்கம் போல் கதவைச் சிறிதளவு திறந்து அரண்மனை வீரர்கள் வெளியே வந்து நோட்டமிட ,
எதிரியின் கண்களுக்கு தெரியாமல் கிரேக்க கடவுள் தமக்காக நிறுத்திய குதிரை என்று நம்பி , டிராய் மன்னன் பாரிஸ் உள்ளே கொண்டு வர உத்தரவிடுகிறான் .

மரக் குதிரை உள்ளே வந்ததும் வெற்றிக் களிப்பில் மன்னன் உட்பட போர் வீரர்கள் மது அருந்தி கொண்டாட , நடுநிசியில் குதிரைக்குள் இருந்த வீரர்கள் வெளிப்பட்டு வாயிற்கதவை திறந்து விட , வெளியிலிருந்த படைகள் டிராய் நகருக்குள் அதிரடியாக நுழைந்தது.
இது போன்ற சூழ்ச்சி திட்டத்தை அறியாத பாரிஸ் கொலை செய்யப்பட்டான்.
தன்னை ஏமாற்றி விட்டு பாரிசுடன் ஓடிப்போன ஹெலனை கொல்ல மெனலெஸ் தேடிய போது, உயிர் பிச்சைக் கேட்டு , அவன் காலடியில் கிடந்தாள் ஹெலன் .
அப்போதும் கூட அடடே , அவள் அழகு மெனலெஸ் வசீகரித்தது .என்ன செய்ய.. சும்மா சொல்லக் கூடாது அவளின் கடைக் கண்ணின் பார்வையும் , இதழோர அந்த புன்முறுவலும் துரோகத்தின் வலியை மெனலெஸ்க்கு மறக்கடித்தது . "உனக்காக எத்தனை துரோகத்தையும் தாங்குவேன் " . சேர்ந்தாள் அவனுடன் எல்லா வகையிலும் சேர்ந்தாள் .
இப்போது கூட டிரேஜான் குதிரை என்பது எதிரி நாட்டுப் படையை ஊடுருவி ரகசியமாக அழிக்கும் யுக்தியின் சொல்லாடலாகி போனது.

1865 ஆம் ஆண்டு ஆங்கிலேயே தொல்பொருள் ஆய்வாளர் ஃப்ராங்க் கல்வார்ட் துருக்கியின் அனத்தோலியா நகருக்கு வடமேற்கே கற்பனை நகரமான டிராய் தெரிய ஆரம்பித்தது.
இதனிடையே 1868 ல் பெரும் பணக்காரும் , தொல்பொருள் ஆய்வாளருமான ஹென்ரிச் ஷ்லீமன் களத்தில் குதித்தார் .

துருக்கியின் ஹிசர்லிக் என்னுமிடத்தில் பல காலமாக சுற்பனை காவியத்தில் சொல்லப்பட்ட நிஜ நகரமான டிராய் கண்டுப்பிடித்த பெருமை இவரையேச் சேரும் .
ஆய்வுக்காக தோண்டியபோதுதான் இன்னுமொரு ஆச்சரியம் அங்கே காத்திருந்தது.
அதாவது டிராய் என்ற ஒரேயொரு நகரம் மட்டும் அங்கே புதைந்து கிடக்கவில்லை. ஒன்பது நகரங்கள் மண்ணுக்குள் ஒன்றன் மேல் ஒன்றாக புதைந்து மறைந்து கிடந்தன.
இயற்கையின் பேரழிவு காரணமாக ஒரு நகரம் புதைந்து போய் பின்னர் அதே இடத்தில் இன்னொரு நகரம் உருவாக்கப்பட்டு , பின்னர் அதுவும் புதைந்து போகவே , அதற்கு மேலாக மற்றொரு நகரம் , மற்றொரு நகரம் .. என்று 5 ஆயிரம் ஆண்டுகளில் ஒன்றன் மேல் ஒன்றாக மொத்தம் ஒன்பது நகரங்கள் புதைந்து கிடந்த வரலாற்று உண்மை வெளிப்பட்ட போது ஆகழ்வாராய்ச்சியாளர்கள் மத்தியில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது .

وَكَمْ قَصَمْنَا مِنْ قَرْيَةٍ كَانَتْ ظَالِمَةً وَّاَنْشَاْنَا بَعْدَهَا قَوْمًا اٰخَرِيْنَ
அநியாயக்காரர்கள் வசித்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்து நாசமாக்கி விட்டோம். அவர்களுக்குப் பின்னர் அவ்விடத்தின் ( மேல் ) வேறு மக்களை உற்பத்தி செய்தோம்.
(அல்குர்ஆன் : 21:11)

1998 -ல் யுனெஸ்கோ உலகப் பாரம்பரிய சின்னங்களில் ஒன்றாக டிராயும் சேர்க்கப்பட்டது ,
சரி , உங்கள் காலுக்குக் கீழே எத்தனை நகரங்கள் புதையுண்டு இருக்கிறதோ .. ?
ர.ரா

பொம்பெயி நகரம் ( Pompeii)
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 10)







இத்தாலியின் மேற்குக் கடற்கரையில் அமைத்துள்ள துறைமுக நகரம் நேப்பிள்ஸ். சுமார் 2800 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாக கருதப்படும் இதனருகே அமைந்திருந்த நகரம்தான் பொம்பெயி ( Pompeyi ) .

பொம்பெயி யில் சுமார் 20 ஆயிரம் பேர்கள் வாழ்ந்தார்கள். வீடுகள் அனைத்தும் மிக நேர்த்தியாகவும், தனித்தனியாகவும் அழகாகவும் அமைத்திருந்தனர் .
கி.பி 63 -ல் இந்தப் பகுதி மிகப்பெரிய நிலநடுக்கம் ஒன்று பொம்பெயி யைத் தாக்கியது . இதனால் பயந்து போய் அங்குள்ள நீண்ட கடற்கரையில் மக்கள் தஞ்சம் அடைந்து தங்களை காப்பாற்றிக் கொண்டனர் 'அப்பாடா ... தப்பித்தோம் '
வந்த பூகம்பம் , " இரு..அப்புறமா வேறே உருவில் வரேன்" என்று சொல்லி விட்டு போனது.
வெசுவியஸ் எரிமலை பொம்பெயிலிருந்து 8 கி.மீ தூரத்தில் உள்ளது .

எத்தனையோ வருடங்கள் அமைதியாக இருந்த வெசுவியஸ் எரிமலை கி.பி 79 ல் ஒரு மாலைப் பொழுதில் , அன்றைக்கு பார்த்து உக்கிரமாக வெடித்து சிதறியது. அதன் தீப்பிழம்பு 1300 டிகிரி ஃபாரன் ஹீட்டில் சுமார் 100 கி.மீ வேகத்தில் வெள்ளமாய் அதன் குழம்புகள் கொதித்து வர வழித்தடமெல்லாம் நெருப்பு .பொம்பெயி நகரை முற்றிலும் எரித்து அழித்தது . பூகம்பம் வந்த போது தப்பியோடி மாதிரி , இப்போ ஓடுவதற்குள்,எரிமலையில் வெளியான குழம்பு மற்றும் சாம்பல் பொம்பெயி மக்களை வாரி அணைத்துக் கொண்டது. சுமார் 6 மீ ( 20 அடி) அளவிற்குப் பொம்பெயி சாம்பலில் புதைந்து போனது.

இதன் காரணமாக ஊரில் இருந்த அதிகமானோர் மற்றும் பிராணிகள் உட்பட எரிமலை குழம்பில் சிக்குண்டு எந்நிலையில் இருந்தார்களோ , அந் நிலையிலேயே கற்சிலையாகி போகினர்.
பொம்பெயி யில் இரண்டு ரோமானிய எழுத்தாளர்கள் மற்றும் தத்துவஞானிகள் வசித்து வந்தனர்.
இதில் 'கையஸ் பிளினியஸ் செக் குண்டாய் ' (கி.பி 23 முதல் கி.பி 79 ) இவர் ரோமப் பேரரசர் வெஸ்பாசியானின் நண்பராக இருந்தார். மேலும் ரோமப் பேரரசின் கடற்படை மற்றும் இராணுவத் தளபதியாகவும் பதவி வகித்தார் .
இளைய பிளினி எழுத்தாளர் (கிபி 61 முதல் கிபி 112) இவர் ரோம் நகரில் நீதிபதியாகப் பதவி வகித்தார் .நிறைய புத்தகங்கள் எழுதியுள்ளார் .
இளைய பிளினி வெசுவியஸ் எரிமலை வெடித்த போது அதனைக் கண்ணுற்று தனது புத்தகத்தில் அவர் பதிவு செய்தார்

" மிகக் கரிய மேகம் வழக்கத்திற்கு மாற்றமான தோற்றத்தில் வானில் வேகமெடுத்து வந்தது. இது மழையை கொடுக்கும் கரு மேகமாக இருக்கும் என எண்ணினேன். சற்று நேரத்தில் அது பல கிளைகளாகப் பிரிந்து அந்தப் பகுதியைக் கரிய இருளுக்குள் ஆழ்த்தியது ! என்று அவர் நேரில் பார்த்த நிகழ்வுகளை பதற்றத்துடன் விவரித்துள்ளார்.

இந்த மோசமான வர்ணனை குர்ஆனில் கீழ்க்கண்ட வசனம்தான் என் நினைவுக்கு வந்தது.
فَلَمَّا رَاَوْهُ عَارِضًا مُّسْتَقْبِلَ اَوْدِيَتِهِمْ ۙ قَالُوْا هٰذَا عَارِضٌ مُّمْطِرُنَا بَلْ هُوَ مَا اسْتَعْجَلْتُمْ بِهٖ  رِيْحٌ فِيْهَا عَذَابٌ اَ لِيْمٌ
பின்னர், (வேதனைக்கு அறிகுறியாக வந்த) மேகம் அவர்கள் இருந்த பள்ளத்தாக்குகளை நோக்கி வருவதை அவர்கள் காணவே, "இது எங்களுக்கு மழை பெய்ய வரும் மேகம்தான்" என்று கூறினார்கள்.
(அதற்கு அவர்களை நோக்கி) "அல்ல! இது நீங்கள் அவசரப்பட்ட வேதனைதான் என்றும், இது ஒரு காற்று; இதில் துன்புறுத்தும் வேதனை இருக்கின்றது" (என்றும் கூறப்பட்டது).
(அல்குர்ஆன் : 46:24)

இளைய பிளினி தன் புத்தகத்தில் தொடர்ந்து ... 'நகரில் இருந்த மிகப் பெரிய கோபுரம் நொடிப்பொழுதில் இடிந்து விழுந்தது .மக்கள் பயந்துடன் உறவுகளை விட்டு விட்டு தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள எங்கே எங்கேயோ ஓடினர் . நேரம் செல்லச் செல்ல கரிய புகையின் மாசுகள் கலந்ததால் மக்கள் மூச்சு விடுவதற்குச் சிரமப் பட்டு மயங்கி விழுந்தனர் .
அடுத்த நாள் எரிமலை குழம்பு அனைத்தையும் வாரி அணைத்துக் கொண்டது. பொம்பெயி நரகம் லட்சக்கணக்கான டன் எடையுடைய சாம்பலால் மூடப்பட்டு விட்டது.
நகரை விட்டு தப்பித்தோடிய சிலர் மறுநாள் அங்கே வந்து தங்கள் உறவினர்களையும், தங்கள் பிராணிகளையும் , தங்கள் குடியிருப்புகளையும் தேடினர் அப்படி நகரம் ஒன்று இருந்ததற்கான தடயம் துளிக் கூட இல்லாமல் வெறும் குழம்பும் சாம்பலுமாய் இருந்தது.
பொம்பெயி மட்டுமல்லாமல் அதன் அருகே இருந்த ஸ்டாபியி , ஹெர்குலானியம் போன்ற சிற்றூர்களும் காணாமல் போனது.
அதன் பின் கொஞ்ச காலத்திற்கு மக்கள் அங்கு வந்து பொம்பெயி யில் வாழ்ந்தவர்களைப் பற்றி கவலைப்பட்டுக் கொண்டிருந்தனர் .பிறகு எல்லாவற்றையும் விட்டு அவரவர் வேலையைப் போய் பார்த்தனர் . பொம்பெயி யைப் பற்றி மறந்தே போயினர்.
இன்னும் சொல்லப்போனால் உலக வரைபடத்தில் இருந்தே பொம்பெயியை காணாமல் போய்விட்டது .

கி.பி 18 -ல் அதாவது 1748-ல் கம்பேனியாவில் இருந்து இந்தப் பகுதிக்கு வந்த ஒரு குழுவினர் தரையைத் தோண்டினர் .
தோண்ட தோண்ட கற்சிலையாய் அப்படி அப்படியே மனிதர்கள் எந்நிலையில் உயிருடன் இருக்கும் போது இருந்தார்களே அதே வடிவில் குவியல் குவியலாக இருந்தனர் . இந்நிலையில் இவர்களைப் பார்க்கும் போது குர்ஆனில்.. .....

وَقَالُوْۤا ءَاِذَا كُنَّا عِظَامًا وَّرُفَاتًا ءَاِنَّا لَمَبْعُوْثُوْنَ خَلْقًا جَدِيْدًا
"நாம் (இறந்து) எலும்பாகி, உக்கி, மக்கிப்போனதன் பின்னர் புதிய ஒரு படைப்பாக உயிர்ப்பிக்கப்படுவோமா?" என்று அவர்கள் கேட்கிறார்கள்.
(அல்குர்ஆன் : 17:49)
قُلْ كُوْنُوْا حِجَارَةً اَوْ حَدِيْدًا
(அதற்கு நபியே!) நீங்கள் கூறுங்கள்: நீங்கள் (உக்கி, மக்கி, மண்ணாவது என்ன?) கல்லாகவோ இரும்பாகவோ ஆகிவிடுங்கள்.
(அல்குர்ஆன் : 17:50)

இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பாக நேர்த்தியாக அமைக்கப்பட்ட வீதிகளும் . வீடுகளும் ,மூடப்பட்டிருந்த ஜாடிகளில் பழங்கள் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருப்பதைக் கண்டும் வியந்து போயினர் .
பொம்பெயியை தொல்பொருள் ஆய்வாளர்கள் தோண்டி தாங்கள் ஆய்வுகளை மேற்கொண்டு வந்தாலும், காணாமல் போன பொம்பெயி நகர் கண்டுபிடித்த அதிசயத்தை காண்பதற்காக இதுவரை 25 லட்சம் சுற்றுலாப் பயணிகள் வருகை தந்துள்ளனர் .
பொம்பெயி யுனெஸ்கோவின் பாரம்பரியச் சின்னமாக அறிவிக்கப்பட்டுள்ளது
" பொம்பெயி ,...பொம்பெயி .. கற்சிலையாக ஆக.. நீ செய்த குற்றம்தான் என்ன பொம்பெயி.....?
ர.ரா

**Rahmath Rajakumaran**

பொம்பெயி என்றால் ஒஸ்கன் மொழியில் ஐந்து என்று அர்த்தமாம். ஐந்து கிராமங்கள் உள்ளடக்கியது அல்லது ஐந்து குடும்பங்கள் குடியேறிய பகுதி என்ற ரீதியில் இந்த பெயர் வைக்கப்பட்டிருக்கலாம் என்று தியோடர் க்ரெளஸ் என்ற ஆராய்ச்சியாளர் கூறியிருக்கிறார்

**Rahmath Rajakumaran**

நகரின் சுற்றுபகுதியில் உள்ள கிராமப்பகுதிகள் மற்றும் வயல்வெளிகளில் இருந்து பார்லி,கோதுமை மற்றும் பல தானியங்கள் விளைவிக்கப்பட்டு நகருக்கு அனுப்பப்பட்டுள்ளது. முறையான தெருக்களையும், சாலையின் இருமருங்கிலும் பலவித கடைகளையும் கொண்டு பொம்பெயி சிறந்த இளைப்பாற்றும் நகரமாக இருந்துள்ளது . ஒயின் தயாரிப்பில் மிக்க தேர்ச்சிபெற்ற நகரமாக இருந்த பொம்பெயி தனது வருமானத்தின் முக்கிய பங்கை ஒயின் ஏற்றுமதியின் மூலமாக பெற்றுள்ளது.

கிமு 79 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 24 ஆம் தேதி வெசுவியஸ் தனது எரிமலைக் குழம்பை கொட்டி பொம்பெயி நகரை சாம்பல் மேடாக்கியது.

இதற்கு ஒரு நாள் முன்பு தான் அந்நகர மக்கள் நெருப்பு கடவுளுக்கு விழா எடுத்து கொண்டாடியுள்ளனர். கிட்டத்தட்ட 250 டிகிரி செல்சியஸ் வெப்பம் சுமார் ஆறு மைல் சுற்றளவுள்ள பகுதியை கபளீகரம் செய்துகொண்டது. அங்கிருந்த மக்களை காப்பாற்ற முயன்று இறந்து போன ஒரு ராணுவ அதிகாரியான மூத்த பிளினி என்பவரது உறவினரான இளைய பிளினி இந்நிகழ்வை தூரத்தில் இருந்து பார்த்து எழுதிய கடிதங்கள் அந்நகருக்கு சாட்சியாக விளங்குகின்றன.

**Rahmath Rajakumaran**

பொம்பெயி இலக்குமி சிற்பம்
(Pompeii Lakshmi)
இந்தியாவில் யானைத் தந்தத்தால் செதுக்கப்பட்ட 24.5 செண்டி மீட்டர் உயரம கொண்ட இலக்குமியின் நிர்வாணச் சிற்பம் ஆகும்.
தற்போது இச்சிற்பம் இத்தாலி நாட்டின்
பொம்பெயி நகரத்தின்இடிபாடுகளில் இருந்து 1930ல் கண்டெடுக்கப்பட்டது.
யானையின் தந்தத்திலான இலக்குயின் சிற்பம் தற்போது இத்தாலி நாட்டின்
நேப்பிள்ஸ் தேசிய தொல்லியல் அருங்காட்சியகத்தின் ஒரு பிரிவான
இரகசிய அருங்காட்சியகத்தில்
பொது மக்களின் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.
கிபி முதல் நூற்றாண்டின்
இலக்குமியின் நிர்வாண தந்தச் சிற்பம் (கிபி 79ல் வெசூவியஸ் எரிமலைச் சீற்றத்தால் சேதமடைந்தது.)
செய்பொருள்தந்தம்உயரம்24.5 செ மீதற்போதைய இடம்ரகசிய அருங்காட்சியகம், நேப்பிள்ஸ், இத்தாலிஅடையாளம்149425

**Rahmath Rajakumaran**

அழிக்கப்பட்ட நாகரிகங்களைப் பற்றி இரவெல்லாம் ஆய்வு செய்து குறிப்பெடுத்து விட்டு தூங்கினால் அழிக்கப்பட்ட அக்கால மக்கள் நிறைய பேர் வந்து போகிறார்கள் அது கனவாக நினைவா என்று தெரியாமலே புரண்டு புரண்டு படுக்கிறேன்.
தூக்கம் வரவில்லை .
இன்னும் பத்து பதிவோடு நிறைவு செய்யலாம் என நினைக்கிறேன்.
தூத்துக்குடி போகிற வழியில் அதிச்ச நல்லூர் முன்னமே போய் அழிந்த இடங்களைப் பார்த்திருக்கிறேன்.
கீழடி க்கு நேரில் போய் பார்த்த பிறகு எழுதலாமா ன்னு யோசிக்கிறேன்.
நண்பர் **Meeran Sahib** வேண்டுகோளுக்கு இணங்க தமிழகத்திற்கு பதிவு திரும்ப இருக்கிறது

சாடல் ஹோயுக் Çatalhöyük நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 11 )




CATAL HUYUK

•Largest cosmopolitan city of its time.
Occupied between 6300 BC to 5400 BC
• Supported a population of up to 6000 people
• Largest and most cosmopolitan city of its time
• Had extensive economy based on specialized craft and commerce
• The city was a trading centre
• The size of the city and its wealth are a product of its status as a trading centre.



Settlement in catalhuyuk

Catal Huyuk - Çatalhöyük
- Remains of a Neolithic town
- 9,000 years ago, one of the world's largest settlements.




LOCATION

•Neolithic monument in present day Turkey.
•Aged between 6300BC to 5400BC.
•32 acre Neolithic site in South-Central Turkey near modern city of Konya.



Position of catal huyuk in Turkey

துருக்கி, கோன்யாவின் தென்கிழக்கில் தென்கிழக்காக சுமார் 60 கிலோமீட்டர் (37 மைல்கள்) தொலைவில் உள்ளது சாடல் ஹோயுக் **Çatalhöyük** .அதன் பெயர் துருக்கியில் "ஃபோர்க் மவுண்ட்" என்று பொருள்படும், இந்த நகரம், நகரம் என்று சொல்ல முடியாதபடியான பெரிய கிராமம் .
மேலும் இது பலவகையான உச்சரிப்புகளில் சொல்லப்படுகிறது , இதில் **Catalhoyuk, Catal Huyuk, Catal Hoyuk:** இவை அனைத்தும் சாட்டல்-HowYUK என உச்சரிக்கப்படுகின்றன.
24 ஏக்கர் பரப்பளவு , 8000 மக்கள், 2000 வீடுகள் , ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு துருக்கியில் இந்த நகரம் இருந்திருக்கிறது .

இந்நகரம் செர்சம்பா ஆற்றின் இரு பக்கத்திலும் அமைந்துள்ளது, சராசரி கடல் மட்டத்திலிருந்து 1,000 மீட்டர் (3,280 அடி) உயரத்தில் அமைந்துள்ளது இப்பகுதி அரை வறண்ட நிலப்பகுதியாகும்.

இரும்பு போன்ற எந்த உலோகங்கள் ஏதும் இல்லாமல் கற்களைக் கொண்டே கற்களை தேய்த்து தேய்த்து கருவிகள் செய்து , அதிலேயே கற்சிலைகள் செய்திருக்கிறார்கள். கற்சிலைகளில் அவர்களின் கற்பனையை என்ன சொல்வது ? நல்ல வாட்டசாட்டமான நடுத்தர வயது பெண் இம்மாசனத்தில் உட்கார்ந்திருப்பது போல் காணப்படும் சிலை . இந்தப் பெண் கடவுளா ? கட்டி ஆளும் பெண்ணா ? ஏன் அரை நிர்வாணம் ? அதுவும் 7000 ஆண்டுகளுக்கு முன் நினைத்துக் கூட பார்க்க முடியாது . இருந்தாலும் இம் மக்களை புதிய கற்கால மனிதர்கள் என்கிறார்கள்.
கல்லெல்லாம் மாணிக்க கல்லாகுமா
கலையெல்லாம் கண்கள் சொல்லும் கலையாகுமா....
கண்கள் அச்சிலைகளைப் பார்த்த பிறகு என்னென்னவொல்லாம் சேதி சொல்கிறது.

இரண்டு பிரதான அகழ் ஆராய்ச்சியாளர்களான ஜேம்ஸ் மெல்லார்ட் (1925-2012) மற்றும் இயன் ஹோட்டர் இருவரும் இந்நகரை கண்டுபிடித்துள்ளனர் . இந்த அகழ்வைப் பற்றி பெரிய ஆய்வு புத்தகம் எழுதி இருக்கிறார் . மக்கள் படையெடுக்கிறார்கள் .கிட்டத்தட்ட 2000 ஆண்டுகளாகத் தொடர்ந்து ஒரே இடத்தில் இம்மனிதர்கள் அங்கே வாழ்ந்து வந்திருக்கிறார்கள் என்பதற்குரிய ஆதாரங்கள் கிடைத்துள்ளது

இங்குள்ள விநோதம் என்னவென்றால், இக்கிராமத்திலுள்ள வீடுகளுக்குச் செல்ல தெருக்கள் கிடையாது. பெரிய பெரிய அட்டைப் பெட்டிகளை நெருக்கமாக இடைவிடாமல் பக்கம் பக்கமாக அடுக்கியது போல வீடுகள் உள்ளன.
வீட்டின் கூரைகள் காரையால் கட்டப்பட்ட தட்டையான கூரை . அதில் ஆள் உள்ளே இறங்க சதுரமான துளை வழியாக ஏணி போட்டுத்தான் வீட்டுக்குள்ளேயே செல்ல முடியும் . வீட்டுக்குள் வெளிச்சம் , காற்றோட்டம் எப்படி ஏற்படுத்திக் கொண்டார்கள் அதுவும் வறண்ட நிலப்பகுதியில் ? தெரியவில்லை . இது தொல்லியல் ஆய்வாளர்களை ரொம்ப சிந்திக்க வைக்கிறது .

எல்லா வீட்டு கூரைகளின் மீதுதான் மக்கள் நடந்து சென்றிருக்கிறார்கள். நடந்து செல்ல தெரு விட்டு வீடு கட்டுவது அவர்களுக்குத் தெரியாதா ? அல்லது பிடிக்காதா ? தெரியவில்லை.
இறந்த சொந்தங்களை வீட்டிற்குள்ளே ஆழமாக புதைத்து அதன் அருகிலேயே இன்னொரு அறையைக் கட்டி வாழ்ந்திருக்கிறார்கள் . ஈமச் சடங்குகள் குறித்து விபரம் இல்லை . படுக்கையறையில் வண்ண வண்ண ஓவியங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இதனால்தான் அந்தக் கிராமமே பெட்டிகள் அடுக்கியபடி வளர்ந்து விட்டது.

சாடல் ஹோயுக் என்பது அங்கு வாழ்ந்த மக்களின் பெயர். அம்மக்கள் வாழ்ந்த இந்த இடம் பூகம்பத்தாலோ , நிலநடுத்தாலோ பாதிக்கப்பட்டிருக்கலாம் என்கிறார்கள் தொல்லியல் ஆய்வாளர்கள் .

புதைக்கப்பட்ட நகரமாக வெறும் மணல்மேடுதான் அங்கு தென்படுகிறது . தோண்டிப் பார்த்ததில் ஒன்றன் மீது ஒன்றாக 18 அடுக்குகளில் மக்கள் வாழ்ந்த கிராமங்களின் அடையாளம் தெரிகிறது .
லண்டன் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஜேம்ஸ் மெல்லார்ட் தம்பதியர் 1965 -1981 வாக்கில் முதன் முதலில்
அகழ்ந்தாராய்ந்தனர்.

எகிப்திய பிரமிடுகள் , ஏன் நமது தமிழ் சங்ககாலம் ஆகியவற்றிற்கெல்லாம் மூத்த குடியிருப்பு இந்த சாடல் ஹோயுக் இன மக்கள் .
இங்கு கண்டுபிடிக்கப்பட்ட பொருட்களில் கை அகலமேயான பெண் சிலைகள் ஏராளம் . அதுவும் அரை நிர்வாணத்திலும் பெருத்த மார்பையும் கொண்ட தலை இல்லாத சிலைகள் ஏராளம் . பெரும்பாலான மனிதர்களின் சிலைகள் ஏன் தலைகள் இல்லாமல் சித்தரிக்கப்படுகின்றனர் ? தெரியவில்லை.
ஆந்த்ரோபாலஜி எனப்படும் மானுடவியல் ஆராய்ச்சியாளர்கள், முதலில் ஆண் ஆதிக்க சமுதாயமா ? பெண் ஆதிக்க சமுதாயமா ? என்று சோதிப்பார்கள் .இது தாய் வழி ஆதிக்கம் என்று முடிவு செய்தனர் .
பல் தேய்மானம், எலும்புகளின் தேய்மானம் பற்றி ஆராய்ந்ததில் ஆண் பெண் இருபாலரும் சமமாகவே உழைத்துள்ளனர். சமமாகவே சாப்பிட்டுள்ளனர். எனவே ஆண் பெண் சம அந்தஸ்துடன் வாழ்ந்திருக்கின்றனர்
என்பது தெரிய வருகிறது .

சாடல் ஹோயுக் மொத்த பரப்பளவில் இதுவரை வெறும் 4 சதவீதம் மட்டுமே தோண்டியெடுத்து அகழ்ந்தாராய்ந்திருக்கிறார்கள். முழுமையாக ஆராயும் போது இம்மக்களின் வாழ்வு குறித்து இன்னும் விளக்கம் கிடைக்கும்.
اَوَلَمْ يَهْدِ لَهُمْ كَمْ اَهْلَكْنَا مِنْ قَبْلِهِمْ مِّنَ الْقُرُوْنِ يَمْشُوْنَ فِىْ مَسٰكِنِهِمْ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ اَفَلَا يَسْمَعُوْنَ
இவர்களுக்கு முன்னர் எத்தனையோ வகுப்பினரை நாம் அழித்திருக்கின்றோம். அவர்கள் வசித்திருந்த இடங்களின் மீதே இவர்கள் போய் வந்து கொண்டிருப்பதும் இவர்களுக்கு நேரான வழியைக் காட்டவில்லையா? நிச்சயமாக இதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (இதற்கும்) அவர்கள் செவிசாய்க்கமாட்டார்களா?
(அல்குர்ஆன் : 32:26)
ர ரா

" உர் " நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 12 )













ஈராக் தலைநகர் பாக்தாத்தில் இருந்து 365 கி.மீ தொலைவில் உள்ளது உர் நகரம்.
நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் கி.மு 1996 ஆம் ஆண்டு உர் நகரில் பிறந்தார்கள் .
இந்நகரம் வர்த்தகத்திற்கும் , தொழில் வளர்ச்சிக்கும் மிக முக்கியமான நகரமாக விளங்கியது என்பதற்குரிய ஆதாரங்களை கண்டறிந்துள்ளனர் .

ஈராக் என்பது பண்டைய மெசபடோமியா என்பது வரலாறு கூறும் உண்மை. அங்கு வாழ்ந்த சுமேரியர்கள் " **ஜிகுரட்** '' களைக் கட்டினார்கள் .
ஜிகுரட் என்றால் செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட கோயில் . இதன் அடித்தளத்தில் இருந்து பலப் படிக்கட்டுகளைக் கடந்தே உச்சியில் இருக்கும் கோயிலை அடைய முடியும். படிக்கட்டுகள் இறைவனை அடைய உங்கள் முன் வைக்கப்பட்டுள்ள தடைகளாக பாவிக்க வேண்டும் என்ற விளக்கத்தையும் போதித்துள்ளனர் .

கி.பி 1920 ஆம் ஆண்டு பாக்தாத் நகருக்குத் தெற்கே உர் நகரம் தோண்டி எடுக்கப்பட்டது . இங்குள்ள " ஜிகுரட் " நட்சத்திரங்களையும் , சூரியனையும், சந்திரனையும் கடவுளாகக் கொண்ட "நான்னா " விக்காக அமைக்கப்பட்டது என்கின்றனர் வரலாற்று ஆய்வாளர்கள் .

மேலும் அக்கால உர் மக்கள் வான சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றிருந்தனர் . நட்சத்திரங்களின் உதிப்பு மற்றும் மறைவு குறித்தும் , இந்நிகழ்வுகளால் பூமியில் தங்களுக்கு நேரும் இன்ப துன்பங்களோடு ஒப்பிட்டுள்ளனர். இதனால்தான் நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் , ஒரு முறை அம்மக்களிடம் ,

فَنَظَرَ نَظْرَةً فِى النُّجُوْمِۙ
"பின்னர், நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து,
(அல்குர்ஆன் : 37:88)
فَقَالَ اِنِّىْ سَقِيْمٌ
நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது" என்று கூறவே,
(அல்குர்ஆன் : 37:89)
فَتَوَلَّوْا عَنْهُ مُدْبِرِيْنَ
அவர்கள் அவரை விட்டுவிட்டு (திருநாள் கொண்டாடச்) சென்றுவிட்டனர்.
(அல்குர்ஆன் : 37:90)

நபி இப்ராஹீம் (அலை) பிறப்பதற்கு முன் நம்ரூத் ஓர் இரவு கனவு கண்டான் . கனவில் உச்சி வானில் ஒரு நட்சத்திரம் உதித்து அதன் ஒளிவெள்ளம் பூமியெங்கும் பரவுவது குறித்து தன் அரண்மனை வான சாஸ்திர்களிடம் , விசாரித்த போது , "அது அவதார புருஷர் பிறப்பதற்குரிய அடையாளமான ஜென்ம நட்சத்திரம் , அது நிதர்சனமாக வானில் பிறந்ததும் உங்களுக்கும் , உங்கள் அரசாட்சிக்கும் கெடுதல்கள் வரும் என்பதை துல்லியமாக கணித்தார்கள்.
மேலும் நட்சத்திரங்களையும் , சூரியனையும் , சந்திரனையும் கடவுளாகவே பாவித்து அவைகளுக்கு சிலை செய்து வணங்கினர் அதனால்தான் நபி இப்ராஹீம் (அலை)

فَلَمَّا جَنَّ عَلَيْهِ الَّيْلُ رَاٰ كَوْكَبًا‌ قَالَ هٰذَا رَبِّىْ‌ فَلَمَّاۤ اَفَلَ قَالَ لَاۤ اُحِبُّ الْاٰفِلِيْنَ
(ஒரு நாள்) இருள் சூழ்ந்த இரவில் அவர் (மின்னிக் கொண்டிருந்த) ஒரு நட்சத்திரத்தைக் கண்டு "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" என (தம் மக்களைக்) கேட்டு அது மறையவே, "மறையக்கூடியவற்றை (இறைவனாக எடுத்துக்கொள்ள) நான் விரும்பமாட்டேன்" எனக் கூறிவிட்டார்.
(அல்குர்ஆன் : 6:76)
فَلَمَّا رَاَ الْقَمَرَ بَازِغًا قَالَ هٰذَا رَبِّىْ‌ فَلَمَّاۤ اَفَلَ قَالَ لَٮِٕنْ لَّمْ يَهْدِنِىْ رَبِّىْ لَاَ كُوْنَنَّ مِنَ الْقَوْمِ الضَّاۤلِّيْنَ
பின்னர் உதயமான சந்திரனைக் காணவே "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே (அதனையும் நிராகரித்துவிட்டு) "எனது இறைவன் எனக்கு நேரான வழியை அறிவிக்காவிட்டால் வழி தவறிய மக்களில் நிச்சயமாக நானும் ஒருவனாகிவிடுவேன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 6:77)
فَلَمَّا رَاَ الشَّمْسَ بَازِغَةً قَالَ هٰذَا رَبِّىْ هٰذَاۤ اَكْبَرُ‌ فَلَمَّاۤ اَفَلَتْ قَالَ يٰقَوْمِ اِنِّىْ بَرِىْٓءٌ مِّمَّا تُشْرِكُوْنَ
பின்னர் உதயமான (பளிச்சென்று நன்கு ஒளிரும்) சூரியனைக் கண்டபொழுது "இது மிகப்பெரியதாயிருக்கிறது. இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே அவர் (தம் மக்களை நோக்கி) "என் மக்களே! நீங்கள் (இறைவனுக்கு) இணையாக்கும் (இவை) ஒவ்வொன்றிலிருந்தும் நிச்சயமாக நான் விலகிக்கொண்டேன்" என்று கூறிவிட்டு,
(அல்குர்ஆன் : 6:78)

உர் நகரை அப்போது ஆட்சி செய்த நம்ரூது மற்றும் அவரது மகன் கல்கி ஆகியோரால் கி.மு 2100 -ல் கட்டப்பட்டது.
மேலும் அண்டை நகரங்களின் மீது உர் நகரின் அதிகார ஆதிக்கத்தை
நிலைநிறுத்துவதை வெளிப்படுத்துவதாகவும் இந்த ஜிகுரட் கட்டப்பட்டதாக கி.பி 1900 ஆம் ஆண்டில் தொல்லியல் ஆய்வாளர்கள் நடத்திய ஆய்வில் கண்டறியப்பட்டதுள்ளது.
ஜிகுரட்டில் மன்னர்களின் கல்லறைகளையும் , அதில் பழமை வாய்ந்த நிறைய பொக்கிஷங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவைகள் பிரிட்டீஷ் அருங்காட்சியகத்தில் பொதுமக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.
மெசபடோமியாவில் மிகவும் பழமையான நகரம் உர் தான். இங்கு கண்டெடுக்கப்பட்ட சிதிலமடைந்த அரண்மனை அன்றைய நாட்களில் அவர்கள் மிகுந்த நாகரீகத்துடன் சிறந்து விளங்கியதை தெளிப்படுத்துகிறது.

கி.மு 2100 ஆம் ஆண்டு எழுதப்பட்ட "கில்காமேஷ் காவியம் " உர் நகரின் ஒவ்வொரு அம்சமும் எவ்வாறு திட்டமிட்டு உருவாக்கப்பட்டது என்பதையும் , அத்தனை செழிப்பால் ,மன்னர்கள் தங்களை இறைவனுக்கு நிகரானவர்களாகவும் மதிக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள்.

இதனால்தான் மிகப் பெரிய அரசாட்சியைப் பெற்ற நம்ரூது , நபி இப்ராஹீம் (அலை) அவர்களிடம் தன்னை இறைவனாகவே பாவித்து , உங்கள் இறைவன் என்னவெல்லாம் செய்வானோ அதை தானும் செய்ய முடியும் என்பதாக கூறியதை குர்ஆனில் அல்லாஹ் ,

اَلَمْ تَرَ اِلَى الَّذِىْ حَآجَّ اِبْرٰهٖمَ فِىْ رَبِّهٖۤ اَنْ اٰتٰٮهُ اللّٰهُ الْمُلْكَ‌ۘ اِذْ قَالَ اِبْرٰهٖمُ رَبِّىَ الَّذِىْ يُحْىٖ وَيُمِيْتُۙ قَالَ اَنَا اُحْىٖ وَاُمِيْتُ‌ؕ قَالَ اِبْرٰهٖمُ فَاِنَّ اللّٰهَ يَاْتِىْ بِالشَّمْسِ مِنَ الْمَشْرِقِ فَاْتِ بِهَا مِنَ الْمَغْرِبِ فَبُهِتَ الَّذِىْ كَفَرَ‌ؕ وَاللّٰهُ لَا يَهْدِى الْقَوْمَ الظّٰلِمِيْنَ‌ۚ
(நபியே!) நீங்கள் ஒருவனை கவனித்தீர்களா? அவனுக்கு அல்லாஹ் அரசாட்சி கொடுத்ததற்காக அவன் (கர்வம் கொண்டு) இப்ராஹீமிடம் அவருடைய இறைவனைப் பற்றித் தர்க்கம் செய்தான்.

இப்ராஹீம் "எவன் உயிர்ப்பிக்கவும் மரணிக்கவும் செய்கின்றானோ அவன்தான் என்னுடைய இறைவன்" என்று கூறியதற்கு,
அவன் "நானும் உயிர்ப்பிப்பேன், மரணிக்கவும் செய்வேன்" என்று கூறினான்.
(அதற்கு) இப்ராஹீம் "(அவ்வாறாயின்) நிச்சயமாக அல்லாஹ் சூரியனை கிழக்குத் திசையில் உதயமாக்குகின்றான். நீ அதை மேற்குத் திசையில் உதயமாக்கு" எனக் கூறினார்.
ஆகவே, (அல்லாஹ்வை) நிராகரித்த அவன் (எவ்வித விடையுமளிக்க முடியாமல் திகைத்து) வாயடைப்பட்டான். அல்லாஹ் அநியாயக்கார கூட்டத்திற்கு நேர்வழி காட்டுவதில்லை.
(அல்குர்ஆன் : 2:258)

நவீன காலத்தில் தொல்லியல் ஆய்வாளர்கள் நடத்திய ஆய்வில் நம்ரூதும் , அவன் மனைவியும் புதைத்த கிடைத்த தோண்டிய போது , தங்க ஆபரணங்களும் , நவரத்தினங்களும் பெரும் குவியலாக அவ்விருவருக்கும் அணிவிக்கப்பட்டதையும் அவற்றின் மதிப்பு மட்டும் 35 மில்லியன் அமெரிக்க டாலர்கள் என்பதையும் கண்டு வியப்பில் ஆழ்ந்து போயினர் .
ர.ரா

சாங்கான் நகரம் (சீனா )
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 13)






The Fall of The Qin Dynasty

- Harsh taxes and repressive government made the Qin dynasty unpopular.
- Scholars hated Shi Huangdi for his book burning.
- Poor people hated Shi Huangdi for establishing forced labor.
- The Qin Dynasty had made great social advances and unified China, but all the advances were made at the expense of human freedom.
- Peasants rebelled 3 years after the second Qin emperor took office.
- By 202 B. C. the Qin Dynasty gave way to the Han Dynasty.

法

Geography
The Qin Dynasty

Qin

- The Qin Dynasty stayed to the north of the Yellow Sea
- Its ruler at the time, Shi Huangdi had his armies attack the invaders to the north of the Yellow River.
- His victories increased the size of China.
- The Great Wall expanded 1,400 miles west to the empire causing any invaders to galoop halfway to Tibet in order to get around the wall.
- Wall expanded from east of Yellow Sea to West of Gobi Desert.

சாங்கான் சீனாவின் மிகப் பழமை வாய்ந்த நகரமாகும். தற்போது சியான் என்ற பெயரில் இந்நகரம் அழைக்கப்படுகிறது .

கி.மு 221 முதல் கி.மு 207 வரை சாங்கன் நகரை குவின் பேரரசு ஆட்சி செய்தது.
கிமு 209 ஆண்டு சீனத் தலைநகரமாக விளங்கிய சாங்கானில் மன்னராகப் பதவி வகித்தவர் சின் ஷி ஹுவாங்,
கிமு 247 முதல் கிமு 221 வரை சீனாவிலிருந்த நாடுகளில் ஒன்றான சின் (Qin)என்பதன் அரசராக இருந்தார். இவர் கிமு 221 ஆம் ஆண்டில் ஒருங்கிணைந்த சீனாவின் முதல் பேரரசர் ஆனார். கிமு 210 இல் இறக்கும் வரை அவர் ஆட்சி புரிந்தார்.

இவர் சீனாவை ஒன்றாக இணைத்ததற்காகவும், "சட்டத்தின் ஆட்சி" என்னும் கொள்கையை அறிமுகம் செய்ததற்காகவும் பெயர் பெற்றார்.
சின் ஷி ஹுவாங், சீன வரலாற்றில் ஒரு சர்ச்சைக்கு உரியவராகவே இருந்து வருகிறார். சீனாவை ஒன்றிணைத்த பின் இவரும் இவரது தலைமை ஆலோசகர் லி சியும், ஒன்றிணைப்பைப் பாதுகாக்குமுகமாக தொடர்ச்சியான பல சீர்திருத்தங்களைச்

செயற்படுத்தியதுடன், சீனப் பெருஞ்சுவரின் முதல் அமைப்பு உட்பட மிகப் பெரிய திட்டங்களையும் நடைமுறைப்படுத்தினர். தேசிய அளவிலான பெருஞ் சாலை
அமைப்புக்கள் என்பனவும்

இத் திட்டங்களுள் அடங்கியிருந்தன. இவ்வமைப்பு வேலைகளின்போது பலர் உயிரிழந்தனர்.
பேரரசில் உறுதிப்பாட்டை ஏற்படுத்துவதற்காக இவர்
கன்பூசியனியத்தைத் தடை செய்ததுடன், அதன் அறிஞர்கள் பலரையும் உயிருடன் புதைத்ததாகவும் கூறப்படுகிறது. அரசால் அனுமதிக்கப்பட்டவை தவிர்த்த ஏனைய நூல்கள் யாவும் மலைபோல் குவித்து வைத்து எரிக்கப்பட்டன.
இவருடைய ஆட்சியில் இத்தகைய கொடுங்கோன்மையும், எதேச்சாதிகாரமும் நிலவியபோதும்,
சின் ஷி ஹுவாங் சீன வரலாற்றில் முக்கியமானவராகக் கருதப்படுகிறார். இவர் சீனாவை ஒன்றிணைத்தது 2000 ஆண்டுகளாக நிலைத்திருந்தது.

சின் ஷி ஹுவாங் கிற்கு விபரிதமான ஆசை இருந்தது. அதாவது இறந்ததும் தனது உடலுடன் , தனது படை வீரர்களின் உருவம் கொண்ட சிலைகள், தன் தளபதி, ஆலோசகர் , மந்திரிகள் என அத்தனை பேரையும் சிலைகளாக செய்து தன்னுடன் புதைக்கப்பட வேண்டும் என்று விரும்பினார் .அதற்காக ஒவ்வொரு வீரரின் சிலையும் , அப்படியே கலை நயத்துடன் செதுக்கப்பட்டன .

1974 -ல் இந்த இடத்தில் கிணறு தோண்டுகிற போது, தற்செயலாகப் படை வீரர்களின் சிலைகளைக் கண்டெடுத்தனர் . முழுவதும் தோண்டிய போது, அதிர்ந்து போயினர் .
புதைக்குழியில் 800 படைவீரர்கள், 520 குதிரைகள் கொண்ட 130 தேர்வண்டிகள், 150 குதிரைப்படை வீரர்கள் என எங்கு தோண்டினும் சிலைகள் , சிலைகள் .
இது பற்றிய ஆராய்ச்சியில் சுமார்
7 லட்சம் மனிதர்களைக் கொண்டு இந்த இடம் உருவாக்கப்பட்டது .

சாங்கான் என்னும் சியான் நகரம் எப்படி அழிந்தது ?
கி.பி 843 ல் இந்நகரில் மிகப் பெரிய அளவில் தீ விபத்து ஏற்பட்டது .இந்த தீ அணைக்கவே முடியாமல் தொடர்ந்து எரிந்து கொண்டே இருந்தது. அதுவும் ஒரு விதமான பேரிறைச்சலோடு எரிந்தது. இதனால் 4000 வீடுகள் , நூற்றுக்கணக்கான சரக்கு கிட்டங்கிகள் ஏராளமான கட்டடங்கள் என பெரும் நாசத்தை ஏற்படுத்தியது .நாடு மிகுந்த இழப்புக்குள்ளானது.
அடுத்து சில ஆண்டுகள் கன மழைவிடாது பெய்தது . வீடுகள் வெள்ளத்தில் அடித்து இழுத்து செல்லப்பட்டது . ஏராளமான மக்கள் பலியாயினர் .

அதனைத் தொடர்ந்து தொற்று வியாதிகள் பரவின . இதனால் மக்கள் நிறைய பேர் மாண்டார்கள் .
பலமுறை நிலநடுக்கம் கோரத்தாண்டம் ஆடி மக்களை கொத்துக் கொத்தாக கொன்று சின்னாபின்னமாக்கியது.
اَفَلَمْ يَرَوْا اِلٰى مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ مِّنَ السَّمَآءِ وَالْاَرْضِ اِنْ نَّشَاْ نَخْسِفْ بِهِمُ الْاَرْضَ اَوْ نُسْقِطْ عَلَيْهِمْ كِسَفًا مِّنَ السَّمَآءِ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيَةً لِّكُلِّ عَبْدٍ مُّنِيْبٍ
வானத்திலும் பூமியிலும் அவர்களுக்கு முன்னும் பின்னும் இருப்பவைகளை அவர்கள் கவனிக்கவில்லையா? நாம் விரும்பினால் அவர்களைப் பூமிக்குள் சொருகிவிடுவோம் அல்லது வானத்திலிருந்து சில துண்டுகளை அவர்கள் மேல் எறிந்து (அவர்களை அழித்து) விடுவோம். (அல்லாஹ்வையே) நோக்கி நிற்கும் ஒவ்வொரு அடியானுக்கும் நிச்சயமாக இதில் ஓர் அத்தாட்சி இருக்கின்றது.
(அல்குர்ஆன் : 34:9)

இவ்வாறான இயற்கையின் சீரழிவால் மன்னர் மனம் சோர்ந்து போனார் .நிர்வாகம் கேடினால் சீரழிந்தது . லஞ்சம் தலைவிரித்தாடியது . கடத்தல் , கறுப்புச் சந்தை கொடி கட்டிப் பறந்தது . மக்கள் மத்தியில் கோபம் எழுந்து கலவரம் ஏற்பட்டது . கூடவே பூகம்பமும் சேர்ந்து கொள்ள சாங்கான் நகரம் அழிந்து போனது .
அதன் பின் இப்போது சுமார் எட்டரைக் கோடி மக்கள் கொண்ட சியான் என்ற பெயரில் பெருநகரமாக விளங்குகிறது .800 க்கும் மேற்பட்ட தகவல் தொழில் மைய நிறுவனங்கள் காணப்படுகிறது .
இன்னும் அந்த பழமை வாய்ந்த பழைய கட்டடங்கள் பழைய சாங்கான் நகரத்தை ஞாபகப்படுத்திக் கொண்டே இருக்கிறது .
ர.ரா

டன்விச் ( Dunwich ) துறைமுக நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 14 )







11 ஆம் நூற்றாண்டில் டன்விச் பெரிய துறைமுக நகரமாக இங்கிலாந்தில் விளங்கியது . லண்டனில் இருந்து சுமார் 200 கி.மீ தொலைவில் கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ளது.
பல நூற்றாண்டுகளுக்கு முன்பு இது ரோமானியர்களின் கட்டுப்பாட்டுக்குள் இத்துறைமுகம் இருந்தது .

பெரிய பெரிய தேவாலயங்கள் , மடங்கள் , மருத்துவமனைகள் , வணிக வளாகங்கள் போன்றவை ஏராளமாக நிறைந்திருந்தது . மக்கள் செல்வ செழிப்புடன் மீன்பிடித் தொழில் செய்து வாழ்ந்ததாக வரலாறு குறிப்பிடுகிறது.

70 க்கும் மேற்பட்ட கடற்படைத் தளங்கள் இங்கு இருந்தன. கிபி 1250 ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி சுமார் 4000 மக்கள் தொகை கொண்டதாக டன்விச் இருந்தது.
ஜனவரி 1, 1286 இல், ஒரு புயல் எழுச்சி அடைந்து நகரின் கிழக்கு விளிம்பை தாக்கி அதில் கட்டிடங்கள் அழிக்கப்பட்டன. , டன்விச்க்கு அதிகமான சேதங்கள் அடைந்தன மற்றும் துறைமுகத்திற்கு பெருத்த சேதத்தை
ஏற்படுத்தியது.

அடுத்த ஆண்டு பிப்ரவரி 1287_ல் தெற்கு இங்கிலாந்தின் வெள்ளம் அதற்கு அடுத்த டிசம்பர் மாதம் செயின்ட் லூசியாவின் வெள்ளப்பெருக்கு.
1328 ஆம் ஆண்டில் கடுமையான புயல் கடற்கரையிலிருந்து ஒரு சில மைல் தூரத்தில் உள்ள நியூட்டனின் முழு கிராமத்தையும் கைப்பற்றியது.மரணம் அங்கு இருந்த அத்தனை பேர்களையும் காவு வாங்கியது .
மற்றொரு பெரிய புயல் 1347 இல் கிட்டத்தட்ட 400 வீடுகளை கடலில் மூழ்கடித்தது. ஏராளமானோர் இறந்து போயினர் .அவர்களின் வாகனங்கள் கூட எதுவும் மிஞ்சவில்லை .
1750 ஆம் ஆண்டு ஏற்பட்ட மிகப் பெரிய சூறாவளியோடு சுனாமி சேர்ந்து வர டன்விச் கடலுக்குள் புதைந்து போனது.
وَلَقَدْ اَهْلَكْنَا مَا حَوْلَـكُمْ مِّنَ الْقُرٰى وَصَرَّفْنَا الْاٰيٰتِ لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ
உங்களைச் சூழ்ந்து (வசித்து) இருந்த ஊரார்களையும் நிச்சயமாக நாம் அழித்துவிட்டோம். அவர்கள் (பாவத்திலிருந்து விலகி நம்மிடம்) திரும்பி வரும் பொருட்டுப் பல அத்தாட்சிகளை (ஒன்றன்பின் ஒன்றாக) நாம் காண்பித்து வந்தோம். (எனினும், அவைகளை அவர்கள் பொருட்படுத்தவே இல்லை. ஆதலால், நாம் அவர்களை அழித்துவிட்டோம்.)
(அல்குர்ஆன் : 46:27)

தற்போதைய ஒலிவடிவ தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி நிலவடிவ ஆய்வாளர்கள் நடத்திய ஆய்வில் இரண்டு தேவாலயங்கள் கடலுக்குள் மூழ்கிக் கிடப்பது கண்டறியப்பட்டுள்ளது.
கடலுக்குள் புதைந்து போக மீதி இடத்தில் தற்போது 100 பேர்கள் மட்டுமே வசிக்கின்றனர் . ஐம்பது பேர்தான் இந்நகரின் நிரந்தரக் குடியுரிமை பெற்றவர்களாக இருப்பதாக இங்கிலாந்து நாட்டின் மக்கள் தொகை குறிப்பேடு தெரிவிக்கிறது .
50 பேரில் இரண்டு பேர் இங்கிலாந்து நாடாளுமன்றத்தில் உறுப்பினராக அங்கம் வகிக்கும் தகுதியைப் பெற்றுள்ளனர் .
Dunwich Horror என்று அநேக எழுத்தாளர்கள் பல நாவல்கள் நிறைய பயம் பயமாக எழுதி இன்னும் சம்பாதிக்கொண்டிருக்கிறார்கள் என்பது டிப்ஸான மற்றொரு சேதி !
ர ரா

பூம்புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினம் (அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 15 )




நாகப்பட்டினம் மாவட்டம் சீர்காழி அருகே அமைந்துள்ள காவிரிப்பூம்பட்டினம் என்னும் பூம்புகார் இன்று ஒரு சிறிய மீனவ கிராமாகக் காட்சி அளிக்கிறது .
காவிரியின் வடக்குக் கரையோரமாக அமைந்துள்ள இந்த நகரம் "காவிரி புகும் பட்டினம் " _ காவிரிப்பூம்பட்டினம் ஆக மாறியது .
இந்த கிராமத்தில் சாதாரண டீ கடையும் பன்னும் உள்ள இதே கிராமம் 11,500 வருடத்திறகு முன்...
கடல் வழியாக உயர் ரக குதிரைகள் , வடக்கு மலையில் இருந்து கொண்டு வரப்பட்ட அரிய வைரக்கற்கள் , கிலோ கணக்கில் தங்கம் , சந்தனம் , ஜவ்வாது , தென்கடல் வழியே முத்துக்கள், கீழைக்கடல் வழியே பவளம் , ஈழத்தில் இருந்து விதவிதமான உணவு வகைகள் ... இது பற்றி பெரிய பட்டியல் இடுகிறது பட்டினப்பாலை .
இது சோழர்களின் தலைநகரம் . வணிகம் செய்வதற்காக யவனர்கள் (ரோமர்கள் ) வந்து போயிருக்கிறார்கள் .இவர்கள் தங்கியிருந்த இடத்தை " யவன இருக்கை" என்றழைத்தாக **சிலப்பதிகாரம்** கூறுகிறது

நாம வெளிநாடு போய் வேலை செய்வது மாதிரி ரோமர்கள் பூம்புகார் வந்து வேலை செய்திருக்கிறார்கள் .இவர்களை
**"யவனத் தச்சர் "** என்றழைத்தாக மணிமேகலை கூறுகிறது .

11,500 வருடத்திற்கு முன்பாக இயற்கை ஒரு கச்சேரி நடத்தியது .
கடல் மட்டம் 75 அடி உயர கடல் அலை .அதற்கு அப்போது சுனாமி என்று பெயர் வைக்கவில்லையாம் . வந்த அலை பெரிய நகரத்தையே குட்டி கிராமமாக உருமாற்றி விட்டு போய் விட்டது. அந்த பெரிய நகரத்தின் பெரும் பகுதி கடல் ஆக்கிரமித்துக் கொண்டது .
வலது புறம் நோக்கியும், முன் காலைத் தூக்கியும் , வாயை ஆ வென திறந்தும் கன கம்பீரமான புலி செம்பு முத்திரை கிடைத்துள்ளது .
ஒரு புறம் புலி உருவமும் , மறுபுறம் யானை உருவமும் பொறித்த செப்புக் காசு கிடைத்துள்ளது .
1998 ஆம் ஆண்டு தொல்லியல் துறையினர் அம்பொரா மண் ஜாடிகளின் உடைந்த சில்லுகள் , மற்றும் பிராமி எழுத்துக்களில் **" அபிமகததோ "** என்று பொறிக்கப்பட்டுள்ளது . யார் இந்த அபிமகததோ ? தெரியவில்லை .

1993 -ல் பூம்புகார் மற்றும் தரங்கம்பாடிக்கு இடையே உள்ள கடல் பகுதியில் **சோனோகிராப்** என்னும் கருவியை பயன்படுத்தப்பட்டது. இது கடலுக்கு அடியில் கட்டடம் இருந்தால் ஒலி எழுப்பும் .
கருவியை கடலில் பயன்படுத்த ஒலி எழுப்பியது .பார்த்தால் வட்ட வடிவமான கிணறுகள் பல இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. கடலுக்குள் குதிரை குளம்பு வடிவில் கட்டுமானம் , இதன் இரு முனைகளுக்கும் இடையே 20 மீட்டர் (65 அடி) தூர இடைவெளி . இதே கடலில் கப்பல் ஒன்றும் மூழ்கி இருக்க கண்டுபிடிக்கப்பட்டது .

فَكَاَيِّنْ مِّنْ قَرْيَةٍ اَهْلَكْنٰهَا وَهِىَ ظَالِمَةٌ فَهِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا وَبِئْرٍ مُّعَطَّلَةٍ وَّقَصْرٍ مَّشِيْدٍ
அநியாயக்காரர்கள் வசித்திருந்த எத்தனையோ ஊர்களை நாம் அழித்திருக்கிறோம். அவற்றுடைய முகடுகள் இடிந்து குட்டிச் சுவராகிக் கிடக்கின்றன. அவற்றின் (எத்தனையோ) கிணறுகள் பாழடைந்து கிடக்கின்றன. அவற்றின் மாட மாளிகைகள் (மக்கள் வசிக்காது) பாழாய் கிடக்கின்றன.
(அல்குர்ஆன் : 22:45)

குறுக்கும் நெடுக்குமாக நீண்ட அகலமான பல வீதிகள் , வீதியில் பெரிய கட்டடங்கள் இடிபாடுகளுடன் சுமார் 75 அடி ஆழத்தில் முழ்கி கிடக்கிறது .
கோவலன் - கண்ணகி வாழ்ந்த பூம்புகார் இதுதானா ? ஆம் என்கிறது அகழ் ஆராய்ச்சி .
இங்கிலாந்து மற்றும் அமெரிக்கவில் " "அண்டர் வோல்ட் " என்னும் தொலைக்காட்சி தொடரில் பூம்புகார் ஒலிபரப்பப்பட்டது .பின்னர் உலகம் இந்த சின்ன கிராமத்திற்கு டீ , பன்னும் சாப்பிட படையெடுக்கிறது .
ர.ரா

ஆதிச்சநல்லூர்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 16 )

THE HINDU

MADURAI

Adichanallur site belongs to a period between 905 and 696 BC



The excavated site at Adichanallur in Srivaikuntam taluk in Tuticorin district.




தூத்துக்குடி மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றின் கரையில் ஆதிச்சநல்லூர் அமைந்துள்ளது. இது திருநெல்வேலியில் இருந்து 24 கிமீ தொலைவில் ஸ்ரீவைகுண்டம் செல்லும் சாலையில் உள்ளது.

ஆதிச்சநல்லூர் வரலாற்றுத் துவக்ககாலத் தொல்லியல் இடமாகும்.
இம்மக்கள் இரும்புக்காலத்தில் வாழ்ந்தவர்கள் . இறந்தவர்களைத் தாழிகளில் வைத்துப் புதைக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். ஆதிச்சநல்லூரில் இறந்தவர்களைப் புதைத்த தாழிகள் ஆயிரக்கணக்கில் காணப்படுகின்றன.
தமிழகத்தில் உள்ள பெருங்கற்கால இடங்களில் மிகப்பெரிய இடம் இதுவாகும். இது சுமார் 116 ஏக்கர் நிலப்பரப்பில் காணப்படுகின்றது

ஆதிச்சநல்லூர் இரும்புக்கருவிகள்
அலெக்ஸண்டர் ரேயின் அகழாய்வில் கிடைத்தவை இங்கு நடந்த அகழாய்வுகளில் பல அரிய இரும்புக்காலத்தைச் சேர்ந்த தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன.
இந்த இடத்தில் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த ஜாகோர் 1876ல் அகழாய்வுகள் நடத்தினார். பின்னர் அலெக்ஸாண்டர் ரீ அகழாய்வுகள் செய்து பல தொல்லியல் பொருட்களைக் கண்டுபிடித்தார். இவை சென்னை அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

2004ல் இந்திய அரசின் தொல்லியல் துறை சத்தியமூர்த்தி அவர்கள் அகழாய்வுகள் நடத்தி உள்ளார். இந்த அகழாய்வில் 150க்கும் மேற்பட்ட தாழிகள் அகழாய்வு செய்யப்பட்டன.
இந்த இடம் பல நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஈமக்காடாகப் பயன்படுத்தப்பட்டது. இங்கு மூன்று அடுக்குகளில் தாழிகள் மண்ணில் புதைக்கப்பட்டுக் காணப்படுகின்றன. ஆனால் இந்த இடத்துடன் தொடர்புடைய வாழ்விடம் எங்கு இருந்தது என்பது கண்டுபிடிக்கப்படவில்லை.
இங்கு பல்லயிரக்கணக்கான தாழிகள் காணப்படுகின்றன. இவை சிவப்பு நிறத்தில் உள்ளன. சில தாழிகள் கருப்பு-சிவப்பு நிறத்திலும் உள்ளன.

இங்கு கிடைத்த தாழி ஒன்றில் தமிழ் பிராமி எழுத்துக்கள் இருந்ததாகக் கருதப்பட்டு, அது குறித்த செய்திகள் செய்தித்தாள்களில் வெளியாகி உள்ளன. தற்போது அவை பிராமி எழுத்துக்கள் அல்ல என்று கருதப்படுகின்றது.

மனித எலும்புக்கூடுகள் இங்கு கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால் எல்லா தாழிகளிலும் மனித எலும்புகள் அதிக அளவில் காணப்படவில்லை. எனவே இறந்தவர்களின் உடல் சில சடங்குகளுக்கு உட்படுத்தப்பட்டு, பிறகு எல்லா எலும்புகளுமோ அல்லது சில எலும்புகள் மட்டுமோ எடுக்கப்பட்டுப் புதைக்கப்பட்டுள்ளன. இது ஏன் என்பது தெரியவில்லை .
ஒருபானையில் மீது ஒரு பெண்ணுருவம், நெற்கதிர்கள், ஒரு மான் மற்றும் ஒரு பல்லி ஆகியவற்றின் உருவங்கள் ஒட்டுருவமாகக் **(applique)**காணப்படுகின்றன.

தங்கத்திலான நெற்றிப்பட்டம், கத்தி மற்றும் வாள் போன்ற இரும்புப் பொருட்கள் மற்றும் வெண்கலப் பொருட்கள் கிடைத்துள்ளன.
ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த இரண்டு பொருள்களை, அமெரிக்காவில் உள்ள தொல்லியல் ஆய்வகத்திற்கு அனுப்பி அங்கு கார்பன் பரிசோதனை செய்யப்பட்டது. அதில் ஒரு பொருளின் வயது கி.மு. 905, மற்றொன்றின் வயது கி.மு. 791 என தெரிய வந்துள்ளது.
வெப்ப உமிழ் காலக்கணிப்பு **(Thermoluniscence dating)** வழியாக கணக்கிட்ட போது அதாவது இன்றிலிருந்து 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனலாம்.

ஆனால் சுமார் நான்காயிரம் வருடங்களுக்கு முந்தைய நாகரீகமாக , இந்த ஆதிச்ச நல்லூர் நாகரீகம் கருதப்படுகிறது. அதற்கு உறுதியாக, 2004-2005 ஆண்டுகளில் இங்கு அகழ்வாய்வு நடந்தபோது கிடைத்த எலும்புக்கூடுகள், மண்டை ஓடுகளை ஆய்வு செய்த அறிவியலாளர்கள் இவை சுமார் கிமு 1,700 ஆண்டுகளுக்கு முந்தியவை, அதாவது இன்றைக்கு 3,700 ஆண்டுகளுக்கு முந்தியவை என்று கருத்து தெரிவித்துள்ளனர் என்றார் சாந்த லிங்கம்.
இப்பொழுது , புளோரிடாவிற்கு அனுப்பபட்ட ஆதிச்ச நல்லூரில் கிடைத்த இரண்டு மாதிரிகளை ஆய்வு செய்த அறிக்கைகளை, மத்திய அரசின் தொல்லியல் துறை மதுரை உயர் நீதிமன்றத்தில் தாக்கல் செய்துள்ளனர்

மூன்றாம் தமிழ் சங்க காலத்தினை சார்ந்த சங்க இலக்கியங்களில் , ஆதிச்ச நல்லூர் பற்றிய குறிப்புகள் இல்லை.
ஆனால், கொற்கையினை பற்றி உள்ளது. திருசெந்தூர், பொதிகை மலையினைப் பற்றியெல்லாம் குறிப்புகள் உள்ளன. இதை வைத்து பார்க்கும்போது மூன்றாம்தமிழ் சங்கம் தோன்றி, மதுரையில் பாண்டியர்கள் ஆட்சி அமைப்பதற்கு முன்பாகவே இந்த நாகரிகம் அழிந்திருக்கலாம்.

اَوَلَمْ يَهْدِ لِلَّذِيْنَ يَرِثُوْنَ الْاَرْضَ مِنْۢ بَعْدِ اَهْلِهَاۤ اَنْ لَّوْ نَشَآءُ اَصَبْنٰهُمْ بِذُنُوْبِهِمْ‌ ۚ وَنَطْبَعُ عَلٰى قُلُوْبِهِمْ فَهُمْ لَا يَسْمَعُوْنَ
பூமியில் (அழிந்துபோன) முன்னிருந்தவர்களுக்குப் பின்னர் அதற்கு வாரிசான இவர்களையும் நாம் நாடினால் இவர்களுடைய பாவங்களின் காரணமாக (அவ்வாறே அழித்து) தண்டிப்போம் என்ற விஷயம் இவர்களுக்கு நல்லறிவைத் தரவில்லையா? நாம் இவர்களுடைய உள்ளங்களின் மீது முத்திரையிட்டு விட்டோம். ஆகவே, இவர்கள் (நல்லுபதேசங்களைச்)
செவியுற மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 7:100)
ஈமக் காடாகத்தான் ஆதிச்சநல்லூர் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் ; கடைசி வரை இம்மக்களின் வாழ்விடம் எங்கு இருந்தது என்று இன்று வரை தொல்லியல் துறையினரால் கண்டுபிடிக்கப்படவில்லை .
ர ரா

"கெவெனெங்" (Kweneng)
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 17 )






தென் ஆப்பிரிக்காவில் உள்ள தற்போதைய **Suikerbosrand Nature Reserve** (தென் ஆப்பிரிக்காவின் பாதுகாக்கப்பட்ட வனப்பகுதி) ன் கீழே பலவித மண் அடுக்குகளுக்கு அடியில் மாண்டுபோன "**கெவெனெங்" (Kweneng)** என்ற பழைமை வாய்ந்த நகரம் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**"கெவெனெங் "** அகழ்வாராய்ச்சியில் முற்காலத்தில் நாம் தொலைத்த வாழ்க்கை முறையையும் தற்போது அனுபவித்து வரும் அறிவியல் பயன்பாடுகளின் இன்றியமையாமையையும் நமக்கு உணர்த்துகிறது. அதனைக் கொண்டே நம்முடைய சராசரி ஆயுட்காலம் உத்தேசமாக கணிக்கப்படுகிறது.
தென் ஆப்பிரிக்காவில் வாழும் **"Tswana"** இன மக்களின் (தற்போது **Botswana** வில் வசிப்பவர்கள்) பூர்விகம் இந்த கெவெனாங்.

ஏறத்தாழ 500 ஆண்டுகள் ஆயுட்காலம் கொண்டிருந்த (1400- 1900) இந்நகரம் வரலாற்று வழக்கம்போல போரால் தான் புதையுண்டு போய் இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது . அதற்குரிய தெளிவான ஆதாரங்கள் ஏதும் சிக்கவில்லை . ஆனாலும் பூகம்பத்தால் ஒட்டுமொத்தமாக ஒரே நாளில் அழிந்திருக்கலாம். அத்தருணத்தில் அவர்களுக்கு உதவ பக்கத்து ஊர் என்று யாரும் இல்லாமல்இருந்திருக்கிறது. இதனால் அவர்களின் அழிவு குறித்து எந்த விபரமும் தெரியாமல் போனதாக இன்னொரு தொல்லியல் குழு கருதுகிறது .
இங்கே வாழ்ந்த மக்களுக்களின் எழுத்தில் வரிவடிவம் இல்லை.
அதனால் எவ்வித குறிப்பேடுகளும் கிடைக்கவில்லை. அவர்கள் வாழ்ந்த சுவடுகளும் தற்போது இல்லை.

1500 களில்தான் இங்கே வீடுகள் உருவாயிருக்க வேண்டும்.1800 களில்தான் இவை நகரமாக மாறியிருக்க வேண்டும். ஆனால் தற்போதுவரை சில இடிபாடுகளே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சில பொருட்கள் 1000 ஆண்டில் உருவாக்கப்பட்டிருப்பதையும் காட்டுகிறது .

1960 வரை பேசியே தோண்டிக் கொண்டிருந்தவர்கள் அதற்கு எட்டாண்டுகள் பிறகே திட்டத்தை வகுத்தார்கள். 2012 வாக்கில் கூகுள் உதவியால் கண்காணித்தபோதுதான் இந்நகரம் முன்னமே கணிக்கப்பட்டதை விட இருமடங்கு பரப்பளவு கொண்டதாக இருப்பது தெரியவந்துள்ளது.
இந்நகரைப் பற்றி முன்னரே ஆராய்ச்சியாளர்கள் அறிந்திருந்தாலும் அதைப்பற்றி அறிய பாதுகாக்கப்பட்ட வனப்பகுதியை சுரண்டி எழுப்ப முடியாது. எனவேதான் உதவிக்கு தொழில்நுட்பத்தை "ஒரு கை போடப்பா " என அழைத்துள்ளனர்.

**LiDAR – Light Detection And Ranging.** நவீன ரேடார் கருவிகளின் மேம்படுத்தப்பட்ட பரிமாணம். ரேடாரானது ரேடியோ அலைகளைக் கொண்டு செயல்படுகிறது.

**LiDAR** ஆனது அதிவேக லேசர் துடிப்புகளைக் கொண்டு செயல்படுகிறது.
லட்சக்கணக்கான லேசர் துடிப்புகளை (**1,50,000 pulses per second**) சிறிய விமானங்களிலிருந்து பூமியை நோக்கித் துளைப்பார்கள். லேசர் துடிப்புகள் தரையில் மோதி திருப்பிச் செல்லும் கால இடைவெளிதான் தரைத் தளத்தில் உள்ள பொருட்களின் உயரமாகும்.
இவற்றின் உதவியால் மண்ணில் உள்ள சிறு கற்களின் முழுப் படத்தைக் கூட வரையமுடியும் இதே தொழில் நுட்பம்தான் நமது தெலுங்கானா மாநிலத்தின் கட்டப்பட்டு வரும் “பொலாவரம் அணையில்” பயன்படுத்தப்பட்டது

இந்த **LiDAR** தொழில்நுட்பம் மூலம் ஒட்டுமொத்த ஊரையும் கணினியில் முப்பரிமாணத்தில் உயிரூட்டியுள்ளனர்.
இதன்மூலம் சுமார் 800 முதல் 900 காலனிகள் வரை இங்கே இருந்திருக்கலாம் எனத் தெரியவருகிறது. நகரின் இறுதிக் காலங்களில் சராசரியாக 5000 முதல் 10,000 குடும்பங்கள் இருந்திருக்கலாம் என கருதப்படுகிறது.
அடுத்தடுத்த ஆய்வுகளைக் கொண்டே இப்பெரிய மக்கள்தொகை வரலாற்றில் இருந்து ஒதுங்கியதற்கான காரணம் தெரிய வரும். ஏனெனில் போரால்தான் இந்நகரத்திற்கு அழிவு நேர்ந்ததற்கான ஆதாரங்கள் தெளிவில்லாமல் உள்ளது.
மேலும் சுகாதாரத்தில் சுமாரான நாடுகளான ஆப்பிரிக்க நாடுகள், புதுப்புது நோய்களுக்கு திறவுகோலாக இருந்துள்ளது. சிகா தொடங்கி எயிட்ஸ், எபோலா என பல சிக்கலான நோய்த்தொற்று ஆரம்பமானது ஆப்பிரிக்க நாடுகள்தான். எனவே நோய்த் தொற்றும் இந்நகரம் அழியக் காரணமாயிருந்திருக்கக் கூடும் எனவும் கருதப்படுகிறது. அதில் யாரேனும் தப்பி வெளியேறி வாழ்ந்து தங்களின் இப்போதுள்ள சந்ததிகளிடம் இந்த நகரத்தைப் பற்றி ஏதேனும் சொல்லி இருக்கிறார்களா ..? என்பது மாதிரியான ஆய்வும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதுவரையிலும் எந்த ஜீவனும் தப்பித்ததாக தெரியவில்லை . இன்னும் சில வருடங்களில் இந்த நகரத்தின் மொத்த ஜாதகமும் வெளிவந்துவிடும். அப்போது அழிவின் காரணம் என்ன என்பதை உங்களுக்குத் தெரிய வரலாம் .

وَ حَرٰمٌ عَلٰى قَرْيَةٍ اَهْلَكْنٰهَاۤ اَنَّهُمْ لَا يَرْجِعُوْنَ
நாம் எவ்வூரார்களை அழித்துவிட்டோமோ அவர்கள் நிச்சயமாக (உலகிற்கு) திரும்பவே மாட்டார்கள் என விதிக்கப் பட்டுள்ளது.
(அல்குர்ஆன் : 21:95)
ர.ரா

1000 ஆண்டுகள் பழமையான குரங்கு கடவுள் நகரம் கண்டுபிடிப்பு
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 18)




1000 ஆண்டுகளுக்கு முன்னர் புதைந்து போன நகரம் ஒன்று ஹோண்டுராஸ் நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.
1927 ஆம் ஆண்டில், விமானி சார்லஸ் லிண்ட்பெர்க் கிழக்கு ஹோண்டுராஸ் மீது பறக்கும் போது "வெள்ளை நகரம்" பார்த்ததாகக் கூறினார். **Ciudad Blanca (White City )** ஹோண்டுராஸ் நாட்டில் உள்ள மஸ்கியூடியா பகுதியின் அடர்ந்த வனப்பகுதியில், மண்ணுக்குள் புதைந்த பழங்கால நகரம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

‘**லிடார்**’ என்ற அதிநவீன முறையில் விண்ணில் இருந்து கதிர்வீச்சுகளை பாய்ச்சி அந்த நகரத்தை கண்டுபிடித்துள்ளனர். இது கி.பி. 1000 ஆவது ஆண்டு முதல் 1400 ஆண்டு வரை இருந்திருக்க வேண்டும் என கணக்கிடப்பட்டுள்ளது.

இங்கு மண்ணுக்குள் புதைந்த பிரமிடுகளும், அதில் புதைக்கப்பட்டவர்களின் மண்டை ஓடுகள் மற்றும் எலும்புகூடுகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.
எனவே இந்த நகரத்தில் மனிதர்கள் நாகரீகத்துடன் வாழ்ந்திருக்கின்றனர் என நிபுணர்கள் தெரிவிக்கின்றனர். இந்த நகரத்துக்கு வெள்ளை நகரம் அல்லது குரங்கு கடவுள் நகரம் என பெயரிடப்பட்டுள்ளது. புதிதாக கண்டுபிடிக்கப்பட்ட புதையுண்ட நகரத்தை பாதுகாக்கும் நடவடிக்கையில் ஹோண்டுராஸ் அரசு ஈடுபட்டுள்ளது.
தொல்லியல் துறை ஆராய்ச்சி ஆய்வுகள் செய்து சமர்ப்பிப்பதற்கு முன்பே இந்த நாகரிகங்களைப் பற்றி பல புத்தகங்கள் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன .
சற்று சுவராசியமாக !
ர.ரா

கீழடி நாகரிகம்
( அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 19 )




கீழடி தொல்லியல்களம் என்பது
இந்தியத் தொல்லியல் ஆய்வு நிறுவனத்தால் அகழாய்வு செய்யப்பட்டு வரும் ஒரு சங்க கால வசிப்பிடம் ஆகும். இந்த அகழாய்வு மையம் தமிழ்நாட்டில் மதுரைக்குத் தென்கிழக்கில் 12 கி.மீ தொலைவில், சிவகங்கை மாவட்டம், திருப்புவனம் வட்டம் திருப்புவனம் ஊராட்சி ஒன்றியம், கீழடி ஊராட்சியில் உள்ள கீழடி கிராமத்தின்
பள்ளிச்சந்தை திடல் மேட்டுப்பகுதியில் உள்ளது.

வைகை நதிக் கரையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வளமார்ந்த நகர நாகரிகம் இருந்ததற்கான தொல்பொருள் சான்றுகள் கீழடி அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன.
இது வைகைகரையில் உருவான தமிழர்கலாச்சாரத்தைவெளிக் கொணர்கிறது.இது சுமார் 3000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானது என அங்கு கண்டுபிடிக்கப்பட்ட ஆபரணங்கள் மூலம் காணலாம்.இது பாண்டிய சாம்ராஜ்ஜியத்தின் எச்சங்கள் ஆகும்.இந்த அகழ்வாய்வு சிந்து வெளி நாகரிகத்திற்கும் முந்தையது.

மதுரையிலிருந்து இராமநாதபுரத்தின் -அழகன்குளம் துறைமுகத்துக்குச் செல்லும் பண்டைய வணிகப் பாதையில், சிவகங்கை மாவட்டத்தில் உள்ள கீழடி என்ற ஊரின் கிழக்கே சுமார் ஒரு கி.மீ தொலைவில் மணலூர் கண்மாயின் மேற்கரையில் உள்ள பள்ளிச்சந்தைத் திடல் என்ற பெயரிலான மண்மேட்டில் தோண்டி தோண்டி இந்த அகழ் ஆய்வு தொடங்கப்பட்டது.

இவ்விடத்தைச் சுற்றி நிலத்தை உழும்போது பல்வேறு தொல்லியல் எச்சங்கள் கிடைத்துவந்த நிலையில், தரைமட்டத்திலிருந்து இரண்டரை மீட்டர் 7 அடி உயரத்தில் அவ்வளவாக பாதிப்புக்குள்ளாகாது இருந்த இம்மேடு ஆய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது
தற்பொழுது அகழாய்வு செய்யப்பட்டுவரும் இடம் 3.5 கி.மீ சுற்றளவுடன் 80 ஏக்கர் பரப்பளவில் விரிந்துள்ளது. தொன்மையான ஊர்களான கொந்தகை, மணலூர் ஆகியவையும் இப்பகுதியோடு தொடர்ச்சியுற அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது

சங்க இலக்கியங்களின் மதுரை நகர் பற்றிய கற்பனைகள் அல்ல, உண்மைகளே என்பதை அந்தச் சான்றுகள் நிறுவுகின்றன. மேற்கொண்டு ஆய்வுகள் தொடரப்பட்டால் வைகைக்கரை நாகரிகம் பற்றி தொடர்ந்து பல வரலாற்று உண்மைகள் வெளிச்சத்துக்கு வரலாம். ஆனால், தொல்பொருள் ஆய்வுகளை நடத்த வேண்டிய மத்திய அரசுக்கோ அதில் அக்கறை இல்லாமல் போய்விட்டது.

கிட்டத்தட்ட 48 சதுரக் குழிகள் வெட்டப்பட்டு உறைகிணறுகள், செங்கற் சுவர்கள், கூரை ஓடுகள், மண்பாண்டங்கள், மிளிர்கல் அணிகலன்கள், எலும்புக் கருவிகள், இரும்பு வேல், தமிழி எழுத்து பொறிக்கப்பட்ட பானையோடுகள் எனப் பல்வேறு தொல்லெச்சங்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

வரலாற்றின் தொடக்க காலத்திய செங்கல் கட்டிடச் சான்றுகள் கிடைப்பது மிகவும் அரிதாகக் கருதப்படும் நிலையில் இங்கு பெருமளவில் செங்கல் கட்டிடங்கள் உள்ளது ஆய்வாளர்களின் ஆர்வத்தைத் தூண்டியுள்ளது
ரோமப் பேரரசுடன் கொண்டிருந்த வணிகத் தொடர்பை மெய்ப்பிக்கும் படியான, வணிகர்களால் கொண்டு வரப்பட்ட ரௌலட் (rouletted), அரிட்டைன் (arretine) வகை மண்பாண்டங்கள் கிடைத்துள்ளன.

அழகங்குளத்திலும் இத்தகைய பாண்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. மேலும் வரலாற்றின் தொடக்ககாலத்தைச் சேர்ந்தவையான கருப்பு, சிவப்பு மண்பாண்டத் துண்டுகள், வெள்ளை வண்ணம் பூசப்பட்ட கருப்பு, சிவப்பு மண்பாண்டத் துண்டுகள், செம்பழுப்பு நிற கலவை பூசப்பட்ட மண்பாண்டத் துண்டுகள் ஆகியவையும் கிடைத்துள்ளன.
தமிழகத்தில் செம்பழுப்பு நிற ரசட் **(russet)** கலவை பூசப்பட்ட பாண்டங்கள் இதுவரை கொங்குப் பகுதியிலேயே கிடைத்திருப்பதைக் கொண்டு இப்பகுதி கொங்குப் பகுதியுடனும் வாணிபத் தொடர்பிலிருந்ததாகக் கருதப்படுகிறது

**'ஆதன்', 'உதிரன்', 'திசன்'** போன்ற தனிநபர்களின் பெயர்களைக் குறிப்பிடும் தமிழ்எழுத்துக்கள்
பொறிக்கப்பட்ட மண்பாண்ட ஓடுகளும் கிடைக்கப்பெற்றுள்ளன
இங்கு சூது பவளம், பளிங்கு, அகேட் மணிகள், பச்சை, மஞ்சள், நீல நிறக் கண்ணாடி மணிகள் ஆகியவையும் கிடைத்துள்ளன

யானைத் தந்தத்தினாலான தாயக்கட்டைகள், தாமிரத்தாலான கண் மை தீட்டும் கம்பி இரும்பாலான அம்பு முனைகள், எழுத்தாணி, சுடுமண் முத்திரை கட்டைகள், சுடுமண் பொம்மைகள் உட்பட்ட பல்வேறு அரிய தொல்பொருட்கள் கிடைத்துள்ளன.
اَفَلَمْ يَهْدِ لَهُمْ كَمْ اَهْلَكْنَا قَبْلَهُمْ مِّنَ الْقُرُوْنِ يَمْشُوْنَ فِىْ مَسٰكِنِهِمْ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّاُولِى النُّهٰى
இவர்களுக்கு முன் இருந்த எத்தனையோ வகுப்பாரை நாம் அழித்து விட்டோம் என்ற விஷயம் இவர்களை நேரான வழியில் செலுத்தவில்லையா? (அழிந்துபோன) அவர்கள் வசித்திருந்த இடங்களுக்குச் சமீபமாகவே இவர்கள் செல்கின்றனர். அறிவுடையவர்களுக்கு நிச்சயமாக அதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 20:128)

இலக்கியத்தில் குறிப்பிடப்படும் பாண்டியர்களின் **தொல்நகரான "பெருமணலூர்"** இதுவாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது
கீழடியில் 10 க்கும் மேற்பட்ட கட்டிடங்கள் கண்டறியப்பட்டுள்ளன. ஒரு வளர்ச்சியடைந்த நகரமாக இது திகழ்ந்ததற்கு இது வலுவான சான்றாக உள்ளது. "சங்க காலத்தில் கட்டிடங்களே இல்லை என்ற கூற்றை இந்த அகழ்வாய்வு மாற்றியமைத்துள்ளது.
நீர் வழங்கலும், கழிவுநீர் அகற்றலும் நாகரிக வளர்ச்சியின் முக்கிய மைல்கல்களாகக் கருதப்படுவன. கீழடியில் "சுடுமண் குழாய் மூலம் உருவாக்கப்பட்ட கழிவுநீர் கால்வாய் வசதியுடன் கட்டிடங்கள் இருந்தது கண்டறியப் பட்டுள்ளன.

இங்கு பழங்கால சுடுமண் உறைகிணறுகள் கண்டறியப்பட்டுள்ளனஇவை பட்டினப்பாலை கூறும் 'உறைகிணற்றுப் புறச்சேரி' என்ற தொடருக்குச் சான்று பகர்வனவாகவும், ஆற்றங்கரைகளிலும், பெரிய குளக்கரைகளிலும் இவ்வாறு உறைகிணறுகள் அமைத்து நீரெடுக்கும் தமிழரின் பண்டைய வழக்கத்தை எடுத்துக்காட்டுவனவாகவும் உள்ளதாகத் **தொல்லியல் அறிஞர் வெ. வேதாச்சலம்** குறிப்பிடுகிறார்

இந்தியத் தொல்பொருள் ஆய்வுகளில் தென்னகம் எப்போதுமே கண்டுகொள்ளப்படுவதில்லை. 2001-ல்தான் தென்னிந்தியாவுக்கு என்று தனியாக ஓர் அகழ்வாய்வுப் பிரிவு தொடங்கப்பட்டது. தென்னிந்தியப் பிரிவின் கண்காணிப்பாளராக
**2013-ல் கே.அமர்நாத் ராமகிருஷ்ணா** பொறுப்பேற்றுக்கொண்ட பிறகே கீழடி ஆய்வுகள் தொடங்கின.
இதுவரை மூன்று கட்ட அகழ்வாய்வுப் பணிகள் நடந்து முடிந்துள்ளன. 6,000-க்கும் மேற்பட்ட தொல்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. எனினும் நான்காம் கட்ட அகழ்வாய்வுக்கும் மத்திய அரசு நிதி ஒதுக்கவில்லை. தமிழக அரசே நிதி ஒதுக்கி, பணியைத் தொடரும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளது மேலும் மத்திய அரசிடம் கூடுதல் நிதி கேட்க வேண்டிய சூழலும் உருவாகியிருக்கிறது.

கீழடி அகழ்வாய்வுகள், கடந்த சில ஆண்டுகளில் தமிழ் அறிவுலகின் முக்கியமான பேசுபொருள்களில் ஒன்றாக இருந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் என்று அறிவுத் துறை சார்ந்த பலரும் கீழடி ஆய்வுகளின் முக்கியத்துவம் குறித்த நூல்களைத் தொடர்ந்து எழுதிவருகிறார்கள். ஒவ்வொரு நூலும், கீழடி ஆய்வுகளைக் குறித்து அணுகும் முறையாலும் அதை வெளிப்படுத்தியுள்ள முறையாலும் தனிச்சிறப்பு கொண்டதாக அமைந்துள்ளன.

தமிழகம் முழுவதும் மலைப் பகுதிகளில் உள்ள பாறை ஓவியங்களையும், கல்வெட்டுகளையும் தேடித் தேடி ஆய்வுப் பயணம் செய்துகொண்டிருப்பவர் காந்திராஜன். கீழடி குறித்து அவர் எழுதியுள்ள 'கீழடி- மதுரை: சங்ககால தமிழர் நாகரிகம், ஓர் அறிமுகம்' நூல், கீழடியில் கண்டெடுக்கப்பட்டுள்ள சுடுமண் பொருட்களில் உள்ள எழுத்துகளுக்கும் மதுரையைச் சுற்றி அமைந்துள்ள குகைகளின் தமிழி கல்வெட்டுகளுக்கும் உள்ள ஒற்றுமையை ஒப்பிட்டுப் பேசுகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழ் எழுத்து வடிவம்தான் தமிழி. இந்த எழுத்துகளில் அமைந்துள்ள கல்வெட்டுச் செய்திகளுடன் தொடர்புடைய சங்க இலக்கிய வரிகளையும் தொகுத்து அளித்திருக்கிறார். சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற செய்திகள் கல்வெட்டுகளாலும் கல்வெட்டுச் செய்திகள் தொல்பொருள் சான்றுகளாலும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது என்பதை காந்திராஜன் எடுத்துக் காட்டியிருக்கிறார்.
தமிழகத்தின் பண்பாட்டு வரலாறு குறித்த முக்கியமான ஆய்வுநூல்களைத் தொடர்ந்து எழுதிக்கொண்டிருப்பவர் சி.இளங்கோ. அவரது 'தமிழகத் தொல்லியல் ஆய்வுகள்- கீழடி வரை...' நூல், தமிழகத்தில் இதுவரை மேற்கொள்ளப்பட்டுள்ள அரிக்கமேடு, கொடுமணல், ஆதிச்சநல்லூர் முதலான தொல்லியல் ஆய்வுகளையும், கீழடியைப் போலவே ஆய்வுசெய்யப்பட வேண்டிய முக்கியமான தொல்பொருள் களங்களையும் பட்டியலிட்டிருக்கிறது.

பாறை ஓவியங்கள், கல்வெட்டுகள், அகழ்வாய்வில் கிடைக்கும் மட்பாண்டப் பொருட்கள், ஈமப் பேழைகள், நாணயங்கள் என்று வரலாற்றுச் சான்றாதாரங்களின் முக்கியத்துவத்தையும் எடுத்துரைக்கிறது.

நாயக்கர் ஆட்சிக் காலத்து மதுரை நகரை தனது 'காவல்கோட்டம்' நாவலால் இலக்கியவெளிக்குக் கொண்டுவந்தவர் சு.வெங்கடேசன். அவர் எழுதியிருக்கும் நூல் 'வைகை நதி நாகரிகம்.' இந்நூலில் பாண்டிய மன்னர்களின் தலைநகராகவும் வணிகப் பெருநகராகவும் விளங்கிய மதுரையைச் சுற்றி ஏற்கெனவே மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளையும் கீழடியையும் இணைத்து வைகை நதி நாகரிகம் எப்படி இருந்திருக்கும் என்ற தோற்றத்தை வாசகர் மனதில் உருவாக்கியிருக்கிறார் **வெங்கடேசன்.**

கீழடி ஆய்வுகள் மூன்றாம் கட்டத்தோடு முடித்துவைக்கப்பட்டதைக் கண்டித்தும் தொடர்ந்து ஆய்வுகள் நடத்தப்பட வேண்டும் என்றும் அவர் 'தி இந்து'வில் எழுதிய கட்டுரைகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

**நீ.சு.பெருமாள் எழுதியுள்ள 'கீழடி: தமிழ் இனத்தின்முதல் காலடி' நூல்**, இந்திய வரலாறு என்னும் பெரும்பரப்பில் கீழடியின் இடம் என்னவென்று விவரிக்கும் முயற்சி. அமர்நாத் ராமகிருஷ்ணாவுடன் உரையாடி அதையும் இந்நூலின் ஒரு பகுதியாக்கியிருக்கிறார் பெருமாள். அகழ்வாய்வுத் துறையில் அதிகாரிகள்
இடமாற்ற நடைமுறைகள் 2016-ல் கொண்டுவரப்பட்டன என்று குறிப்பிடும் அமர்நாத், 110 ஏக்கர் பரப்பளவில் விரிந்துள்ள கீழடி ஆய்வுக் களத்தில் வெறும் ஒரு ஏக்கர் அளவுக்கே ஆய்வுகள் நடந்துள்ளன என்பதையும் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

கமல்ஹாசன் தனது அரசியல் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்பு, தமிழகத்தின் மூத்த அரசியல் தலைவர் ஆர்.நல்லகண்ணுவைச் சந்திக்கச் சென்றபோது, அவரால் கமலுக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்ட புத்தகம் இது. அதையொட்டி இந்தப் புத்தகத்துக்கு ஒரு புதுவெளிச்சமும் கிடைத்திருக்கிறது.
மூத்த பத்திரிகையாளர் எம்.தனசேகரன்(அமுதன்) எழுதிய 'மண் மூடிய மகத்தான நாகரிகம்' நூல், ஆதிச்சநல்லூரில் நடந்த அகழ்வாயிலிருந்து தொடங்கி கீழடி ஆய்வுடன் முடிவடைகிறது. வைகை நதிக்கரையில் வாழ்ந்த மக்கள், இன்றைய நகர வாழ்க்கையின் குடியிருப்பு வசதிகள் அனைத்தையும் முயன்று பார்த்திருக்கிறார்கள்.

செங்கற் சுவர்கள், சுடுமண் பொருட்கள், உறைகிணறுகள், கழிவுநீர்ப் பாதைகள் என அகழ்வாய்வில் கிடைத்துள்ள சான்றுகள் அதை நிரூபிக்கின்றன என்பதை மிகவும் எளிமையான தமிழில் விளக்கியிருக்கிறது தனசேகரனின் புத்தகம்.

கீழடி அகழ்வாய்வின் மிகவும் முக்கியமான ஒரு அம்சம், இதுவரை கண்டெடுக்கப்பட்டுள்ள தொல்பொருட்களில், மதங்களுடன் தொடர்புடைய எந்தச் சின்னங்களும் குறியீடுகளும் காணப்படவில்லை என்பதுதான். முன்னோர் வழிபாட்டைக் குறிக்கும் நடுகற்களைத் தவிர்த்து, இறைவழிபாட்டுடன் தொடர்புடைய பொருட்கள் இதுவரை கிடைக்கவில்லை. இது ஆய்வின் தொடக்கநிலைக் கருத்துதான். எனினும், ஆய்வுகள் முழுவதும் நிறைவடைந்த நிலையில் இக்கருத்து நிலைபெறுமாயின், மதங்கள் இல்லாத தொல்குடிச் சமூகமாக தமிழினம் வரலாற்றில் இடம்பெறும் வாய்ப்பிருக்கிறது.

கீழடி நாகரிக மக்களின் வாழ்வாதாரம் , பண்பாடு , கலாச்சாரம் , அம்மக்கள் எழுதிய ஏடுகள் , அவர்கள் அழிவிற்கு காரணமான நிகழ்வுகள் இதுபற்றியெல்லாம் இனிமேல் தொடர இருக்கும் அகழ்வாய்கள்தான் இன்ஷா அல்லாஹ் வெளி உலகிற்கு கொண்டு வரும் .

குறிப்பு :- கீழடி நாகரிகங்கள் குறித்து மேலே குறிப்பிட்டுள்ள புத்தகங்கள் வாங்கி படித்து விட்டு ஒரு நடை கீழடிக்கு போய் வாருங்கள் .
கீழடி ஆன்மாக்கள் ஒரு சமயம் உங்களுடன் பேசலாம்
ர.ரா

ராமநாதபுரம் உத்தரகோசமங்கை அருகே 2000 ஆண்டுகளுக்கு முந்தைய நகரம்
(அழிக்கப்பட்ட நாகரிகங்கள் 20 )

ராமநாதபுரம் மாவட்டம் உத்தரகோசமங்கை அருகே 2000 ஆண்டுகளுக்கு முந்தைய பழமையான சங்ககால நகரத்தை தொல்லியல் துறையினர் அகழாய்வு செய்யக் கோரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

உத்தரகோசமங்கையில் இருந்து திருப்புல்லாணி செல்லும் வழியில் கீழச்சீத்தை கானத்திடல் என்ற பகுதியில் குட்டை தோண்டிய இடத்தில், ராமநாதபுரம் தொல்லியல் மற்றும் வரலாற்று பாதுகாப்பு மைய நிறுவனர்கள் வே.ராஜகுரு, டாக்டர் க.ராஜமோகன், தொல்லியல் மற்றும் வரலாற்று பாதுகாப்பு மைய மாணவர்கள் முத்துக்குமார், ராபிட் ராஜ்குமார், விஜயகுமார், அழகேஸ்வரன், முரளிதரன், சக்திமுருகன், ரமேஷ்கண்ணன், முனியசாமி ஆகியோர்கள் மேற்பரப்பாய்வு செய்தனர்.

அப்போது, ரோமானிய ரௌலெட்டட் ஓடுகள், சீன போர்சலின் ஓடுகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள், சிறு இரும்புக்கோடரி, குறியீடு உள்ள பானை ஓடுகள், நெசவுத்தொழிலுக்குப் பயன்படுத் தப்படும் தக்களி, பாண்டி ஆட்டத்துக்குரிய சில்லுகள், சுடுமண் விளக்கு, மான் கொம்புகள், தேய்ப்புக் கற்கள், சங்குகள், பவளப்பாறைகள் ஆகியவற்றை கண்டுபிடித்தனர்.

**இதுகுறித்து வே.ராஜகுரு, க.ராஜமோகன்** ஆகியோர் ராம நாதபுரத்தில் செய்தியாளர்களிடம் நேற்று கூறியதாவது:
தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டிய மன்னர்களில் மிகப்
பழமையானவர்கள் பாண்டியர்களே. பாண்டிய மன்னர்களின் ஆட்சிப் பகுதிகளில் ஒன்றாக ராமநாதபுரம் மாவட்டம் விளங்கியது.

இந்த மாவட்டத்தில் **அழகன்குளம், தேரிருவேலி** ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகள் மூலம் இந்நகரங்கள் 2,500 ஆண்டுகளுக்கும் மேல் பழமையானவை என உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

அழகன்குளம் கி.மு. 500 முதல் கி.பி.1200 வரை வெளிநாடுகளுடன் வாணிபம் செய்து பிரபலமாக இருந்த துறைமுக நகரம் ஆகும். தேரிருவேலி வரலாற்றுக் காலமான கி.மு.300 முதல் கி.பி.300 வரை மக்கள் வாழ்ந்த ஊர் ஆகும்.
தற்போது 2 ஆயிரம் ஆண்டுகள் பழமையான சங்க காலத்தைச் சேர்ந்த கீழச் சீத்தை , வெள்ளாமரிக்கட்டி ஆகிய 2 ஊர்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன .

கீழச்சீத்தை கானத்திடலில்
கள மேற்பரப்பாய்வு செய்தபோது ரோமானிய ரௌலெட்டட் ஓடுகள்,
சீன போர்சலின் ஓடுகள் ஆகியவை கிடைத்துள்ளன. இதன் மூலம் இப்பகுதியில் இருந்து ரோமானியர், சீனர்களுடன் வணிகம் செய்திருப்பது உறுதியாகிறது.
இங்கு நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தப்படும் தக்களி, சிறிய அளவிலான இரும்புக்கோடரி, இரும்புத்தாதுக்கள், இரும்புக் கழிவுகள் கிடைத்துள்ளதால் இரும்பு உருக்கும் தொழில் இங்கு நடைபெற்று இருந்திருக்கும்.

சங்குகள், பவளப்பாறைகள், மான் கொம்புகள் கிடைத்ததன் மூலம் இவற்றை இவ்வூரில் இருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்திருப்பார்கள் என அறிய முடிகிறது. தமிழகத்தில் இருந்து மான் கொம்புகள் ஏற்றுமதி செய்யப்பட்டதை சங்கப்பாடல்கள் மூலம் அறியலாம்.
கருப்பு சிவப்பு பானை ஓடுகள், சிவப்பு பானை ஓடுகள், பழுப்பு நிற பானை ஓடுகள் சிலவற்றில் குறியீடுகள் காணப்படுகின்றன. திரிசூலம், ஏணி குறியீடுகள் உள்ள ஓடுகள் கிடைத்துள்ளன. இது போன்ற குறியீடுகளில் இருந்தே தமிழ் பிராமி எழுத்துக்கள் தோன்றி யுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இங்கு கண்டெடுத்த பழம் பொருட்களைக் கொண்டு 2000 ஆண்டுகளுக்கு முந்தைய சங்க காலத்தைச் சேர்ந்த நகரங்களான கீழச் சீத்தை , வெள்ளாமரிக்கட்டி ஆகிய 2 ஊர்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன . மேலும் இது சங்க காலத்தில் பாண்டியர் களின் தலைநகரான மதுரைக்கு செல்லும் வணிகப்பாதையாக இருந்திருக்கலாம்.
எனவே இப்பகுதியில் தொல்லியல் துறையினர் முழு அளவில் அகழாய்வு செய்து இவ்வூர் பற்றிய வரலாற்றுச் சிறப்பை அனைவரும் அறியச் செய்ய வேண்டும்.

وَكَمْ مِّنْ قَرْيَةٍ اَهْلَـكْنٰهَا فَجَآءَهَا بَاْسُنَا بَيَاتًا اَوْ هُمْ قَآٮِٕلُوْنَ
(பாவிகள் வசித்திருந்த) எத்தனையோ நகரங்களை நாம் அழித்திருக்கின்றோம். அவற்றில் இருந்தவர்கள் இரவிலோ, பகலிலோ நித்திரையில் இருக்கும்பொழுது நம்முடைய வேதனை அவர்களை வந்தடைந்தது.
(அல்குர்ஆன் : 7:4)
ர.ரா

" திருக்குர்ஆனின் 30 ஜுஸ்வுகளின் சிறப்புகள் "



ஒவ்வொருவரும் குர்ஆனைக் குறைந்தது மாதத்திற்கு (30 நாட்களுக்கு) ஒரு தடவையேனும் ஓதி முடிப்பதற்கேற்றவாறு குர்ஆனிலுள்ள வசனங்கள் யாவையும் ஏறத்தாழ சமமான முப்பது ஜுஸ்வு ( பாகங்களாக) பிரிக்கப்பட்டுள்ளது .

ஒவ்வொரு பாகத்திற்கும் **' ஸயகூல்'**
' தில்கர்ருஸுலு ' போன்ற அந்தந்த பாகத்தின் தலைப்பிலுள்ள சொற்களையே பெயராகக் கூறப்படுகின்றது .

அன்றி ஒவ்வொரு ஜுஸ்வுவையும், சமமான நான்கு பாகங்களாகப் பிரித்து , முந்திய பாகத்திற்கு ' ருபுவு ' (கால் பாகம்)
என்றும் முந்திய இரு பாகங்களுக்கு **'நிஸ்ஃப்'** (அரை பாகம்) என்றும், முந்திய மூன்று பாகங்களுக்கு ' **ஸலாஸா** ( முக்கால் பாகம் ) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன .

**' அல் ஃபாத்திஹா '** (தோற்றுவாய்) என்னும் முதல் அத்தியாயம் , குர்ஆனிலுள்ள 30 பாகங்களுக்குமே ஒரு முன்னுரை (அட்டவணை )யைப் போன்று அமைந்திருப்பதால் முந்திய பாகத்திற்கு **' அல்ஹம்து ஜுஸ்வு '** என்று கூறாமல் இரண்டாம் அத்தியாயத்தின் முதல் வாக்கியமாகிய ' அலிஃப் லாம் மீம் ' என்பதையே பெயராகக் கூறப்படுகிறது.

இப்படி பிரிக்கப்பட்ட 30 பாகங்களின் சிறப்புகள் , அதில் உள்ள அத்தியாயங்களின் சிறப்புகள் என்று தனித்தனியாக விவரித்து ஒரு நாளைக்கு ஒரு ஜுஸ்வு பதிவாக 30 நாளைக்கு 30 ஜுஸ்வு பதிவுகளாக பதிக்கலாம் என்று இன்ஷா அல்லாஹ் நாடியுள்ளேன் .

வல்ல ரஹ்மான் இதற்குரிய நுட்பத்தையும் , தெளிவையும் , எழுதும் ஆற்றலையும் எனக்கு தந்து , அதை தெளிவாக விளங்கவும் , அதைக் கொண்டு குர்ஆனின் முழுப் பலனையும் நீங்களும் , நானும் பெற்றுக் கொள்வோமாக ! ஆமீன் .
ர.ரா

திருக்குர்ஆனின் 1-வது ஜுஸ்வு
(அலிஃப் லாம் மீம் )



இந்த முதல் ஜுஸ்வு அல் ஃபாத்திஹா வின் முதல் வசனத்தில் இருந்து
அல்பகரா சூராவின் 141 வது வசனத்துடன் நிறைவு பெறுகிறது .
**அல் ஃபாத்திஹா ' (தோற்றுவாய்)**
இந்த அத்தியாயத்திற்கு **' உம்முல் கிதாப்'**
(குர்ஆனின் தாய்) என்று அழைக்கப்படுகிறது .
முதன்மை ஒன்றுக்கு அல்லது அனைத்தையும் உள்ளடக்கிய திரட்டுக்கு அரபியர் "உம்மு " (அன்னை) என்பர்.
மூளையைச் சுற்றியுள்ள சவ்வுக்கு **'உம்முர் ரஃஸ் (தலையின் அன்னை)** என்றும் , ஒன்றுசேர்க்கின்ற இராணு கொடிக்கு 'உம்மு ' என்றும் கூறுவர்

அல் ஃபாத்திஹா ' (தோற்றுவாய்) என்னும் முதல் அத்தியாயம் , குர்ஆனிலுள்ள 30 பாகங்களுக்குமே ஒரு முன்னுரை (அட்டவணை )யைப் போன்று அமைந்திருப்பதால் முந்திய பாகத்திற்கு
' அல்ஹம்து ஜுஸ்வு ' என்று கூறாமல் இரண்டாம் அத்தியாயத்தின் முதல் வாக்கியமாகிய ' அலிஃப் லாம் மீம். ' என்பதையே பெயராகக் கூறப்படுகிறது.
மேலும் குர்ஆனின் அட்டவணை என்பதற்கு காரணம் ,அல்ஹம்து என்ற முதல் அத்தியாயத்தில் மொத்த எழுத்துக்கள் 114 . திருக்குர்ஆனின் மொத்த அத்தியாயங்களின் எண்ணிக்கை 114 . இது சிந்தனைக்குரிய வியப்பாக இருக்கிறது.

நபி (ஸல்) அவர்கள் : **தவ்ராத் , இன்ஜீல்** வேதங்களில் உம்முல் குர்ஆனைப் போன்றதோர் அத்தியாயத்தை இறைவன் அருளியதில்லை . அது திரும்பத் திரும்ப ஓதப்படும் ஏழு வசனங்களைக் கொண்டதாகும்.

وَلَقَدْ اٰتَيْنٰكَ سَبْعًا مِّنَ الْمَثَانِىْ وَالْقُرْاٰنَ الْعَظِيْمَ
(நபியே!) நிச்சயமாக நாம் உங்களுக்கு திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களை (உடைய "அல்ஹம்து" என்னும் அத்தியாயத்தை)யும், இந்த மகத்தான குர்ஆனையும் அளித்திருக்கிறோம்.
(அல்குர்ஆன் : 15:87)

அடுத்து திருக்குர்ஆனின் 2-வது அத்தியாயம் அல்பகரா . கொலையாளியைக் கண்டு பிடிப்பதற்காக ஒரு பசு மாட்டை அறுத்து அதன் உறுப்பான நாக்கைக் கொண்டு கொலை செய்யப்பட்ட சடலத்தின் மீது அடிக்க சடலம் மீண்டும் உயிர்த்தெழுந்து தன்னை கொலை செய்தவனை காட்டிக் கொடுப்பதாக இறைவன் கூறும் இவ் வரலாற்றில் பயன்படுத்தும் அந்த மாட்டை இவ்வத்தியாயத்தின் தலைப்பாக அல்பகரா என்றழைக்கப்படுகிறது.
மாடு மட்டும் அல்ல , இவ்வத்தியாயத்தில் 5 சம்பவங்களில் மீண்டும் உயிர்த்தெழுவது குறித்து இறைவன் பேசுகிறான்

1 ) فَقُلْنَا اضْرِبُوْهُ بِبَعْضِهَا ‌ كَذٰلِكَ يُحْىِ اللّٰهُ الْمَوْتٰى ۙ وَيُرِيْكُمْ اٰيٰتِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ
ஆகவே, அவர்களை நோக்கி (நீங்கள் அதனை அறுத்து) "அதில் ஒரு பாகத்தைக்கொண்டு (கொலையுண்ட) அவனை அடியுங்கள்" என நாம் கூறினோம். (அவ்வாறு அடித்தவுடன் இறந்தவன் உயிர்பெற்றெழுந்து கொலையாளியை அறிவித்தான். அவன் உயிர்பெற்ற) இவ்வாறே இறந்தவர்களை அல்லாஹ் உயிர்ப்பிப்பான். மேலும், நீங்கள் அறிந்துகொள்வற்காக அவன் தன்னுடைய (ஆற்றலை அறிவிக்கக்கூடிய) அத்தாட்சிகளை உங்களுக்குக் காட்டுகின்றான்.
(அல்குர்ஆன் : 2:73)
பனீ இஸ்ரவேலர்கள் தாங்களும் இறைவனை நேரில் காண வேண்டும் என்று நபி மூஸா (அலை) அவர்களிடம் கட்டாயப்படுத்த , இறைவன் இவர்களுக்கு மரணத்தைக் கொடுத்தான் . நபியவர்கள் மீண்டும் உயிர்தெழுவ இறைவனிடம் மன்றாட மீண்டும் உயிர்த்தெழச் செய்தான் .

- 2) ثُمَّ بَعَثْنٰكُمْ مِّنْ بَعْدِ مَوْتِكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

நீங்கள் (அந்த பெரும் சப்தத்தால்) இறந்துவிட்டதற்குப் பின்னும் நீங்கள் நன்றி செலுத்துவீர்கள் என்பதற்காக உங்களை நாம் உயிர்ப்பித்தோம்.
(அல்குர்ஆன் : 2:56)
தாவர்தான் கிராம மக்கள் வாந்திபேதி தொற்று நோய்க்கு பயந்து 8 ஆயிரம் பேர்கள் ஊரை காலி செய்து வேறு ஊருக்கு போக இறைவன் மரணத்தைக் கொடுத்து அவர்கள் மண்ணோடு மண்ணாக மக்கி எலும்பு குவியலாக கிடக்க நபி ஹஸ்கீல் (அலை) (கி மு 593 - கிமு 571 ) இன்னொரு பெயர்
துல்கிஃப்ல் பழைய ஏற்பாட்டில் எசேக்கியல் என்றும் கூறப்படும் நபியவர்கள் மன்றாடி இறைவனிடம் கேட்க , மீண்டும் உயிர்த்தெழச் செய்ததாக ...

3) اَلَمْ تَرَ اِلَى الَّذِيْنَ خَرَجُوْا مِنْ دِيَارِهِمْ وَهُمْ اُلُوْفٌ حَذَرَ الْمَوْتِ فَقَالَ لَهُمُ اللّٰهُ مُوْتُوْا ثُمَّ اَحْيَاهُمْ اِنَّ اللّٰهَ لَذُوْ فَضْلٍ عَلَى النَّاسِ وَلٰـكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَشْكُرُوْنَ
(நபியே!) மரணத்திற்குப் பயந்து தங்கள் வீடுகளை விட்டு ஆயிரக் கணக்கில் வெளியேறியவர்களை நீங்கள் கவனித்தீர்களா? அல்லாஹ் அவர்களை இறக்கும்படிக் கூறி (இறக்கச் செய்து) பின்னர் அவர்களை உயிர்ப்பித்தான். நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது கருணையுள்ளவனாக இருக்கின்றான். எனினும், மனிதர்களில் பெரும்பாலானவர்கள் நன்றி செலுத்துவது இல்லை.
(அல்குர்ஆன் : 2:243)

4) اَوْ كَالَّذِىْ مَرَّ عَلٰى قَرْيَةٍ وَّ هِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا ‌ قَالَ اَنّٰى يُحْىٖ هٰذِهِ اللّٰهُ بَعْدَ مَوْتِهَا ‌ فَاَمَاتَهُ اللّٰهُ مِائَةَ عَامٍ ثُمَّ بَعَثَهٗ‌ قَالَ كَمْ لَبِثْتَ‌ قَالَ لَبِثْتُ يَوْمًا اَوْ بَعْضَ يَوْمٍ‌ قَالَ بَلْ لَّبِثْتَ مِائَةَ عَامٍ فَانْظُرْ اِلٰى طَعَامِكَ وَشَرَابِكَ لَمْ يَتَسَنَّهْ‌ وَانْظُرْ اِلٰى حِمَارِكَ وَلِنَجْعَلَكَ اٰيَةً لِّلنَّاسِ وَانْظُرْ اِلَى الْعِظَامِ كَيْفَ نُنْشِزُهَا ثُمَّ نَكْسُوْهَا لَحْمًا‌ فَلَمَّا تَبَيَّنَ لَهٗ ۙ قَالَ اَعْلَمُ اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

(நபியே!) அல்லது ஒரு கிராமத்தின் மீது சென்றவரைப் போல் (நீங்கள் பார்த்திருக்கின்றீரா? அவர்) அ(க்கிராமத்)திலுள்ள (வீடுகளின்) முகடுகளெல்லாம் இடிந்து (பாழாய்க்) கிடக்க(க் கண்டு) "இவ்வூர் (மக்கள் இவ்வாறு அழிந்து) இறந்தபின் அல்லாஹ் இதனை எவ்வாறு உயிர்ப்பிப்பான்?" என்று கூறினார். ஆகவே, (அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதற்காக) அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரையில் மரணித்திருக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்து (அவரை நோக்கி "இந்நிலையில்) நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள்" எனக் கேட்க "ஒருநாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன்" எனக் கூறினார். (அதற்கு அவன்) "அல்ல! நீங்கள் நூறு ஆண்டுகள் (இந்நிலையில்) இருந்தீர்கள். (இதோ!) உங்களுடைய உணவையும், உங்களுடைய பானத்தையும் பாருங்கள். (அவை இதுவரை) கெட்டுப்போகவில்லை. (ஆனால்) உங்களுடைய கழுதையைப் பாருங்கள். (அது செத்து மக்கி எலும்பாகக் கிடக்கின்றது.) இன்னும் உங்களை(ப் போல் சந்தேகிக்கும்) மனிதர் களுக்கு ஓர் அத்தாட்சியாக ஆக்குவதற்காக (கழுதையின்) எலும்பு களையும் நீங்கள் பாருங்கள். எவ்வாறு அவைகளைக் கூடாகச் சேர்த்து அதன் மீது மாமிசத்தை அமைக்கின்றோம் என்று கூறி (அவ்வாறே உயிர்ப்பித்துக் காட்டி)னான். (இவை அனைத்தும்) அவர் முன் தெளிவாக நடைபெற்றபோது (அவர்) "நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக பேராற்றலுடையவன் என்பதை நான் உறுதியாக அறிந்துகொண்டேன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 2:259)

5) وَاِذْ قَالَ اِبْرٰهٖمُ رَبِّ اَرِنِىْ كَيْفَ تُحْىِ الْمَوْتٰى قَالَ اَوَلَمْ تُؤْمِنْ قَالَ بَلٰى وَلٰـكِنْ لِّيَطْمَٮِٕنَّ قَلْبِىْ قَالَ فَخُذْ اَرْبَعَةً مِّنَ الطَّيْرِ فَصُرْهُنَّ اِلَيْكَ ثُمَّ اجْعَلْ عَلٰى كُلِّ جَبَلٍ مِّنْهُنَّ جُزْءًا ثُمَّ ادْعُهُنَّ يَاْتِيْنَكَ سَعْيًا وَاعْلَمْ اَنَّ اللّٰهَ عَزِيْزٌ حَكِيْمٌ

அன்றி, இப்ராஹீம் (இறைவனை நோக்கி) "என் இறைவனே! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கின்றாய். (அதை) நீ எனக்குக் காண்பி" எனக் கூறியபோது, அவன் (இதை) "நீங்கள் நம்பவில்லையா?" என்று கேட்டான். (அதற்கு) அவர் "நான் நம்பியே இருக்கின்றேன். ஆயினும், (அதனை என் கண்ணால் கண்டு) என்னுடைய உள்ளம் திருப்தியடைவதற்காக (அதனைக் காண்பி)" எனக் கூறினார். (அதற்கவன்) "நான்கு பறவைகளைப் பிடித்து நீங்கள் அவைகளைப் பழக்கி, பின்னர் (அவைகளைத் துண்டு துண்டாக ஆக்கி) அவற்றில் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு மலையின் மீதும் வைத்துவிட்டு (நடுவில் இருந்துகொண்டு) அவைகளை நீங்கள் கூப்பிடுங்கள். அவை உங்களிடம் பறந்துவந்து சேரும் (எனக் கூறி, அவ்வாறு செய்து காண்பித்து) "நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனும், மிக்க நுண்ணறிவுடையவனுமாக இருக்கின்றான் என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்" என்றான்.
(அல்குர்ஆன் : 2:260)

ஆக இந்த 5 உயிர்த்தெழும் சம்பவங்களையும் , பனீ இஸ்ரவேலர்கள் நீண்ட நாள் இறவாமல் உயிர்வாழும் பேராசையும் இறைவன் இவ்வத்தியாயத்திலே குறிப்பிடுகிறான்
وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ

அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்! அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 2:96)

மேலும் நபி (ஸல்) அவர்கள் " உங்கள் இல்லங்களை (குர்ஆன் ஓதாமல் இருப்பதன் மூலம் ) சவக்குழிகளாக ஆக்கி விடாதீர் . 'அல்பகரா' அத்தியாயம் ஓதப்பட்டு வருகிற இல்லத்தில் நிச்சயமாக ஷைத்தான் நுழைவதில்லை.
(முஸ்லீம் 1430)
இந்த நபி மொழியை மேற்கண்ட
நிகழ்வுகளோடு ஒப்பிட்டுப் பாருங்கள் .
மீண்டும் உயிர்த்தெழும் யுக்தி சூரா அல்பகராவில் இருக்கலாம் .
ர.ரா

திருக்குர்ஆனின் 2-வது ஜுஸ்வு
2-வது ( பாகம் ) : ஸயகூல்




இந்த 2வது பாகம் குர்ஆனின் இரண்டாவது அத்தியாயத்தில் 142 வது வசனத்தில் ஆரம்பித்து 252 வசனத்தோடு நிறைவு பெறுகிறது.

இந்த இரண்டாவது பாகத்தில் பல விஷயங்கள் சொல்லப்பட்டாலும் , இறைவன் தன் அடியார்களுக்கு வைக்கும் சோதனையைப் பற்றி விவரிக்கப்படுகிறது.

அதில் முதலாவது கிப்லா திசையை மாற்றி சோதனை செய்யப்பட்டது.
நபி (ஸல்) அவர்கள் மதீனா வந்த பின்னர் ஜெருலேமிலுள்ள பைத்துல் முகத்தஸை 17 மாதம் வரை கிப்லா தொழுது வந்தார்கள் .
தங்களது பாட்டனார் இப்ராஹீம் (அலை) அவர்களுடைய கிப்லாவாகிய கஃபாவை முன்னோக்கித் தொழுவதை பிரியம் வைத்ததுடன் "யூதர்களுடைய கிப்லாவை விட்டு வேறு பக்கம் அல்லாஹ் என்னை திரும்பித்
தொழும்படி செய்வதை நான் நேசிக்கிறேன் " என்று வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கூறினார்கள்.

قَدْ نَرٰى تَقَلُّبَ وَجْهِكَ فِى السَّمَآءِ فَلَنُوَلِّيَنَّكَ قِبْلَةً تَرْضٰٮهَا فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَـرَامِ وَحَيْثُ مَا كُنْتُمْ فَوَلُّوْا وُجُوْهَكُمْ شَطْرَهٗ‌ ؕ وَاِنَّ الَّذِيْنَ اُوْتُوا الْكِتٰبَ لَيَـعْلَمُوْنَ اَنَّهُ الْحَـقُّ مِنْ رَّبِّهِمْ وَمَا اللّٰهُ بِغَافِلٍ عَمَّا يَعْمَلُوْنَ
(நபியே!) உங்களுடைய முகம் (பிரார்த்தனை செய்து) அடிக்கடி வானத்தை நோக்குவதை நாம் காண்கிறோம். ஆதலால், நீங்கள் விரும்பும் கிப்லா(வாகிய மக்கா)வின் பக்கமே நாம் உங்களை நிச்சயமாகத் திருப்புகின்றோம். எனவே, நீங்கள் (தொழும்போது மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராமின்" பக்கமே உங்களுடைய முகத்தைத் திருப்புங்கள். (நம்பிக்கையாளர்களே!) நீங்களும் எங்கிருந்தபோதிலும் (தொழுகையில்) அதன் பக்கமே உங்களுடைய முகங்களைத் திருப்புங்கள். வேதம் கொடுக்கப்பட்ட (யூதர்களும், கிறிஸ்த)வர்களும் (நீங்கள் மக்காவின் திசையளவில் திரும்பிய) "இது தங்கள் இறைவனிடமிருந்(து வந்)த உண்மை(யான உத்தரவு)தான்" என நிச்சயமாக அறிவார்கள். (ஏனென்றால், அவ்வாறே அவர்களுடைய வேதத்தில் இருக்கின்றது. எனவே, உண்மையை மறைக்கும்) அவர்கள் செயலைப்பற்றி அல்லாஹ் பராமுகமாயில்லை.
(அல்குர்ஆன் : 2:144)

ஒரு லுஹர் தொழுகையின் இரண்டாவது ரக்அத்தில் நபியவர்களுக்கு வஹி வருகிறது . கிப்லா தாங்கள் விரும்பிய மக்கா ஹரமை முன்னோக்குங்கள் என்று .
இந்த நிகழ்வு இரண்டாம் ஜுஸ்வுவின் ஆரம்பத்தில் என்றால் அதே ஜுஸ்வுவின் நிறைவையில் பனீ இஸ்ரவேலர்களின் அரசர் பனீ இஸ்ரவேலர்களாக இல்லாத ஒருவரை அவர்களுக்கு அரசராக்குவது இந்த நிகழ்வும் எப்படி கிப்லா திசையை பனீ இஸ்ரவேலருக்கு விருப்பமில்லாமல் மாற்றப்பட்டதோ அதே மாதிரி அவர்கள் விருப்பமில்லாத வேறு ஒருவரை அவர்களுக்கு அரசர்களாக நியமிப்பது பற்றி குர்ஆன் குறிப்பிடுகிறது.
وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اللّٰهَ قَدْ بَعَثَ لَـكُمْ طَالُوْتَ مَلِكًا‌ ؕ قَالُوْٓا اَنّٰى يَكُوْنُ لَهُ الْمُلْكُ عَلَيْنَا وَنَحْنُ اَحَقُّ بِالْمُلْكِ مِنْهُ وَلَمْ يُؤْتَ سَعَةً مِّنَ الْمَالِ‌ؕ قَالَ اِنَّ اللّٰهَ اصْطَفٰٮهُ عَلَيْكُمْ وَزَادَهٗ بَسْطَةً فِى الْعِلْمِ وَ الْجِسْمِ‌ؕ وَاللّٰهُ يُؤْتِىْ مُلْكَهٗ مَنْ يَّشَآءُ‌ ؕ وَاللّٰهُ وَاسِعٌ عَلِيْمٌ

மேலும், அவர்களுடைய நபி அவர்களை நோக்கி "நிச்சயமாக அல்லாஹ் தாலூத்தை உங்களுக்கு அரசனாக அனுப்பியிருக்கின்றான்" என்று கூறியதற்கு (அவர்கள்) "எங்கள் மீது அரசாலும் உரிமை அவருக்கு எவ்வாறு ஏற்படும். அவரை விட நாங்கள்தான் அரசாட்சி புரிய மிகத் தகுதியுடையவர்கள், (அரசாட்சி புரிவதற்கு அவசியமான) திரளான செல்வத்தையும் அவர் அடையவில்லை" என்று கூறினார்கள். (அதற்கு அவர் களுடைய நபி) "நிச்சயமாக அல்லாஹ், உங்கள் மீது (ஆட்சி புரிய) அவரைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான். அன்றி (போர்க்) கல்வியிலும், தேகத்(தின் பருமனிலும் பலத்)திலும் உங்களைவிட அவரை அதிகப்படுத்தியும் இருக்கின்றான். அல்லாஹ் தான் விரும்பியவர் களுக்கே தன் ஆட்சியை வழங்குவான். அல்லாஹ் (வழங்குவதில்) அதிக விசாலமானவன் (அரசாட்சி புரியத் தகுதியுடையவர்களை) நன்கறிந்தவன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 2:247)

அன்றைய காலகட்டத்தில் பனீ இஸ்ரவேலர்களுக்கு நபியாக **உஷ்மூயில் (அலை)** அவர்கள் இருந்தார்கள் .
அரசராக வருபவரை தேர்வு செய்ய, நபியவருக்கு ஒரு தண்டமும் , பைத்துல் முகத்துஸுடைய எண்ணெய் வைக்கப்பட்டுள்ள ஒரு கலயமும் கொடுக்கப்பட்டு , " இஸ்ரவேலர்களுக்கு அரசராக வருபவர் இந்த தண்டத்தின் உயரமிருப்பார். அவர் வந்தவுடன் இந்த கலயத்தில் உள்ள எண்ணெய் கொதிக்கும் .அப்படிப்பட்டவருக்கு இந்த எண்ணெயைப் பூசி , அவரை அரசரென அறிவிக்க வேண்டும்" என இறைவன் கட்டளை இட்டிருந்தான் .

இந்நிலையில் தாலூத்துடைய தந்தையின் கழுதை காணாமல் போய்விட்டது. அவர் தமது புதல்வர் தாலூத்தையும் , தமது அடிமையையும் அனுப்பி கழுதையை தேடிக் கொண்டு வர வேண்டினார்.

அவ்விருவரும் நபி உஷ்மூயில் (அலை) அவர்களது வீட்டின் அருகே சென்ற போது , தாலூத்திடம் அவ்வடிமை " நாம் நபியிடம் கழுதையைப் பற்றி விசாரிப்போம் .அவர் காணாமல் போன கழுதையைப் பற்றி தகவல் அறிவிப்பார்"
இருவரும் நபியவர்களை சந்திக்க , எண்ணெய் கலயத்திலிருந்து கொதிக்க, தண்டத்தைக் கொண்டு தாலூத்தின் உயரத்தை அளக்கப்பட்டது. அது சரியாக இருந்தது.
" உம் மீது எண்ணெயைத் தடவி உம்மை பனீ இஸ்ரவேலர்களுக்கு அரசனாக்கும்படி இறைவன் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறான்.

" என்னை அரசனாக்கும்படி இறைவன் கட்டளையிட்டதற்கு அடையாளம் என்ன ?"
"உமது கழுதை உம் தந்தையிடம் வந்திருக்கும் நீர் போய் பார்த்துக் கொள்ளலாம் " என்றார்
அவ்வண்ணமே கழுதையும் வீடு வந்து சேர்ந்திருந்தது.
பனீ இஸ்ரவேலர்களுக்கு தாலூத் அரசராக்கப்பட வேண்டும் என்பதாக என்பதாக இறைவன் கட்டளையை அறிவித்தார்கள் .

தாலூத் தோல் பதனிடுபவருமாகவும் , தண்ணீர் புகட்டுபவராகவும் , கூலிக்காரருமாகவும் இருந்தார் .
" அரசுரிமைக்கு வம்சம்தான் பிரதானம் என்பதில்லை ; நாட்டை ஆட்சி செய்வதற்கு கல்வியும், உடல் பலமும் இருந்தால் போதுமானது " என்பதாக கூறினார் .
இதை பனீ இஸ்ரவேலர்கள் ஆரம்பத்தில் எதிர்த்தாலும் தங்கள் எதிரியை பலம் கொண்டு எதிர்க்க வலிமை மிக்கவர் தேவை என்பதை உணர்ந்து தாலூத்தை அரசராக ஏற்றுக் கொண்டனர் .

இந்த இரண்டாம் ஜுஸ்வு வின் ஆரம்பத்தில் யூதர்கள் காலமெல்லாம் கிப்லாவாக வழிபட்ட பைத்துல் முஹத்தஸை மாற்றுவதும் , இரண்டாம் ஜுஸ்வு வின் நிறைவில் காலமெல்லாம் யூதர்களாக இஸ்ரவேலர்கள் தங்களின் அரசரும் யூதராகவே இருந்து வந்ததை இறைவன் மாற்றியது .
இந்த இரண்டும் சிந்திக்க வைக்கிறது !
ர.ரா

திருக்குர்ஆனின் 3 வது ஜுஸ்வு
( தில்கர்ருஸுல் )




இந்த 3-வது ஜுஸ்வு திருக்குர்ஆன் இரண்டாவது அத்தியாயம் 253 வசனத்தில் இருந்து ஆரம்பித்து மூன்றாவது அத்தியாயம் 91 ல் நிறைவு பெறுகிறது.
இந்த 3-வது ஜுஸ்வு வின் ஆரம்பத்தில் ஆய்த்துல் குர்ஸி என்னும் பிரதான வசனம் இடம்பெற்றுள்ளது .

اللّٰهُ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ ۚ اَلۡحَىُّ الۡقَيُّوۡمُ ۚ لَا تَاۡخُذُهٗ سِنَةٌ وَّلَا نَوۡمٌ ؕ لَهٗ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الۡاَرۡضِ ؕ مَنۡ ذَا الَّذِىۡ يَشۡفَعُ عِنۡدَهٗۤ اِلَّا بِاِذۡنِهٖ ؕ يَعۡلَمُ مَا بَيۡنَ اَيۡدِيۡهِمۡ وَمَا خَلۡفَهُمۡ ۚ وَلَا يُحِيۡطُوۡنَ بِشَىۡءٍ مِّنۡ عِلۡمِهٖۤ اِلَّا بِمَا شَآءَ ۚ وَسِعَ كُرۡسِيُّهُ السَّمٰوٰتِ وَالۡاَرۡضَ ۚ وَلَا يَـــُٔوۡدُهٗ حِفۡظُهُمَا ۚ وَهُوَ الۡعَلِىُّ الۡعَظِيۡمُ

அல்லாஹ் (எவ்வித மகத்துவமுடையவனென்றால்) அவனைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியான இறைவன் வேறு யாரும் (இல்லவே) இல்லை. அவன் (மரணமில்லா) உயிருள்ளவன்; என்றும் நிலையானவன்; அவனை சிறு உறக்கமும் பீடிக்காது; பெரும் நித்திரையும் பீடிக்காது. வானங்கள், பூமியில் உள்ளவை அனைத்தும் அவனுடையதே. அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) யார்தான் பரிந்து பேசக்கூடும்? அவர்களுக்கு முன் இருப்பவற்றையும் அவர்களுக்குப் பின் இருப்பவற்றையும் அவன் நன்கறிவான். அவனுடைய விருப்பமின்றி அவனுக்குத் தெரிந்த வற்றிலிருந்து யாதொன்றையும் (மற்றெவரும் தங்கள் அறிவால்) அறிந்துகொள்ள முடியாது. அவனுடைய "குர்ஸி" வானங்கள், பூமியை விட விசாலமாய் இருக்கின்றது. அவ்விரண்டையும் பாதுகாப்பது அவனுக்குச் சிரமமன்று. மேலும், அவன்தான் மிக உயர்ந்தவன்; மிக மகத்தானவன்.
(அல்குர்ஆன் : 2:255)

" குர்ஸி " என்பதற்கு ஆசனம் என்று பொருள் . அல்லாஹு தஆலாவினுடைய ஆசனம் வானங்களையும் , பூமியையும் விடவும் விஸ்தீரணமானது.
இந்த குர்ஸி ஏழு வானங்களையும் சூழ்ந்து கொண்டிருக்கிறது . எவ்வாறு எனில் , பூமி முட்டை வடிவத்தில் இருக்கிறது. முதலாவது வானம் இந்த பூமியைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டு இருக்கிறது .

இரண்டாவது வானம் பூமியையும், முதலாவது வானத்தையும் சூழ்ந்து கொண்டிருக்கிறது. இவ்விதமாக 7 வானங்களும் ஒன்றுக்கு மேல் மற்றொன்று என சூழ்ந்து கொண்டிருக்கிறது. இந்த 7 வானங்களையும் சூழ்ந்து கொண்டிருப்பதற்கு குர்ஸி என்று பெயர் .

இதற்கும் மேல் அனைத்தையும் குழ்ந்து கொண்டிருப்பதற்கு " அர்ஷ் " என்று பெயர்.
"காட்டில் கிடக்கும் ஒரு வளையம் காட்டுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது அது எவ்வளவு அற்பமாக இருக்கிறதோ அது போல ஏழு வானங்களும் , ஏழு பூமிகளும் குர்ஸியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது மிகவும் அற்பமாக இருக்கின்றன " நபி (ஸல்) கூறி இருக்கிறார்கள் .
குர்ஸி அர்ஷுக்கு முன்னால் இருக்கிறது. குர்ஸியுடைய ஒரு தூண் ஏழு வானங்கள் ஏழு பூமிகளினுடைய நீளமாக இருக்கிறது .

குர்ஸியை நான்கு மலக்குமார்கள் சுமந்து கொண்டிருக்கிறார்கள் அம்மலக்குகள் ஒவ்வொருவருக்கும் நான்கு முகங்கள் இருக்கின்றன.
அவர்களது கால்கள் பூமிக்குக் கீழில் அதள பாதாளத்தில் இருக்கின்றன.

அவர்களில் ஒரு மலக்கு மனித உருவத்தில் இருக்கிறார். இவர் மனிதருக்கு உணவும் மழையும் அளிக்கும்படி இறைவனை வேண்டிக் கொண்டே இருக்கிறார் .

மற்றொரு மலக்கு காளை மாட்டின் உருவத்தில் இருக்கிறார். இவர் மாடு போன்ற விலங்குகளுக்கு இரையளிக்கும்படி வேண்டிக் கொண்டே இருக்கிறார்.

இன்னொரு மலக்கு புலி உருவத்தில் இருக்கிறார் .இவர் புலி போன்ற கொடிய மிருகங்களுக்கு இரையளிக்கும்படி வேண்டுகிறார்.

மற்றொரு மலக்கு கழுகின் உருவத்தில் இருக்கிறார். இவர் கழுகு முதல் பறவையினங்களுக்கு இறையளிக்கும்படி வேண்டுகிறார் .

திருக்குர்ஆனில் இஸ்முல் அஃலம் மூன்று சூரத்துகளில் இருக்கின்றன. சூரத்துல் பகரா , ஆல இம்ரான் , தாஹா ஆகிய 3 சூரத்துகளில் இருக்கிறது.
சூரத்துல் பகராவில் ஆயத்துல் குர்ஸியில் , " அல்லாஹு லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம் " என்ற வாக்கியமும் ,
ஆல இம்ரானில் " அலிஃப் , லாம் , மீம் அல்லாஹு லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம் " என்ற வாக்கியமும் ,
தாஹா வில் " வஅனதில் ஷஜுஹு
லில்ஹய்யுல் கய்யூம் " என்ற வாக்கியமும் இஸ்முல் அஃலம் ஆகும் .
ர.ரா

திருக்குர்ஆனின் 4 வது ஜுஸ்வு
( லன் த னாலூ )






திருக்குர்ஆனின் 4-வது பாகம் ஆல இம்ரான் ( இம்ரானின் சந்ததிகள் ) வசனம் 3:92 லிருந்து ஆரம்பித்து அன்னிஸாவு (பெண்கள் ) என்ற வசனம் 4:24 நிறைவு பெறுகிறது.
இதில் ஆகுமான உணவு விலக்கப்படல் குறித்தும் , கஃபாவின் வரலாறு , பெண்கள் சம்பந்தமான பல சட்ட திட்டங்கள் குறித்தும் பேசப்படுகிறது .

كُلُّ الطَّعَامِ كَانَ حِلًّا لِّبَنِىۡۤ اِسۡرَآءِيۡلَ اِلَّا مَا حَرَّمَ اِسۡرَآءِيۡلُ عَلٰى نَفۡسِهٖ مِنۡ قَبۡلِ اَنۡ تُنَزَّلَ التَّوۡرٰٮةُ‌ ؕ قُلۡ فَاۡتُوۡا بِالتَّوۡرٰٮةِ فَاتۡلُوۡهَاۤ اِنۡ كُنۡتُمۡ صٰدِقِيۡنَ
இஸ்ரவேலர்களுக்கு தவ்றாத் அருளப்படுவதற்கு முன்னர் எல்லா உணவும் ஆகுமானதாகவே இருந்தது. எனினும், இஸ்ராயீல் தனக்கு விலக்கிக் கொண்டவற்றைத் தவிர. (ஆகவே இதற்கு மாறாகக் கூறும் யூதர்களை நோக்கி நபியே!) நீங்கள் கூறுங்கள்: "நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் தவ்றாத்தைக் கொண்டுவந்து ஓதிக் காண்பியுங்கள்."
(அல்குர்ஆன் : 3:93)

ஒரு நாள் நபி (ஸல்) அவர்களிடம் யூதர்கள் குழு வந்து , " அபுல் காசிமே ! ஒரு நபியைத் தவிர யாரும் அறிந்திருக்க முடியாத 4 கேள்விகள் உம்மிடம் கேட்கிறோம் .இதற்கு நீங்கள் பதில் அளிக்க வேண்டும். சம்மதமா ? "
" சம்மதம் . நான் உங்களிடம் கூறும் தகவல்கள் உண்மையானதுதான் என்று உங்களுக்குத் தெரிந்தால், நீங்கள் என்னைப் பின்பற்றி இஸ்லாத்தை ஏற்க வேண்டும் . இதற்கு நீங்கள் சம்மதமா...? " என்று நபிகளார்கள் கேட்டார்கள் .
யூதர்கள் சம்மதித்து கேள்வி கேட்டனர் .
1) "தவ்றாத் வேதம் அருளப்பெறுவதற்கு முன்பு இஸ்ராயீல் தமக்குத் தாமே தடை செய்து கொண்ட உண்பொருள் எது ?"
2) " பெண்ணின் விந்தும் ஆணின் விந்தும் எவ்வாறு இருக்கும் ?அவற்றிலிருந்து ஆண் மற்றும் பெண் குழந்தை தோன்றுவது எவ்வாறு ?"
3) " எழுதவும், வாசிக்கவும் தெரியாத இந்த முஹம்மத் நபியின் நிலை தூக்கத்தில் எப்படி இருக்கும் ? "
4)"வானவர்களில் இந்த நபியின் தோழர் யார் ? "

1)" இஸ்ராயீல் எனப்படுவது நபி யாகூப் (அலை) அவர்களாவார்கள். நபி யாகூப் (அலை) அவர்கள் இறைவன் தமக்குப் பன்னிரண்டு மகன்களைக் கொடுத்து, தமது மக்களுடன் பைத்துல் முகத்தஸுக்கு நலமுடன் வந்து சேர்ந்தால் , அவர்களில் கடைசியான வரை அறுத்து குர்பானி செய்கிறேன்" என்று நபியவர்கள் நேர்ச்சை செய்து கொண்டார்கள் .
அதன்படி இறைவன் அவர்களுக்கு 12 மக்களைக் கொடுத்தான் .என்றாலும் , கடைசிப் புதல்வரை தனக்காக அவர் அறுத்துக் குர்பானி செய்வதை இறைவன் விரும்பவில்லை.
ஆனாலும் அவருக்கு அர்குன்னிஸா (கீழ்வாத நோய்) என்னும் ஒரு வகை நோயை இறைவன் கொடுத்தான். இதனால் நபியவர்கள் இரவு நேரங்களில் அவர் நோயின் வலியினால் தூங்க முடியவில்லை . எனவே எனக்கு இந்நோய் குணமடைந்தால் , எனக்கு மிகப் பெரிய பிரியமான உணவான ஒட்டகத்தின் இறைச்சியையும் உண்ண மாட்டேன் அதன் பாலையும் பருக மாட்டேன் " என்று இன்னொரு சத்தியம் செய்தார்கள் .இதனால் நபி யாகூப் என்ற இஸ்ராயீல் தமக்குத் தாமே உணவை தடை செய்து கொண்டார்கள் .

2) அடுத்து ஓர் ஆணின் விந்து வெண்ணிறமாகவும் , அடர்த்தியாகவும் இருக்கும் . பெண்ணின் விந்து அடர்த்தியற்றதாகவும் ,மஞ்சள் நிறமுடையதாகவும் இருக்கும் .
இவ்விரண்டில் எது முந்தி மிகைக்கிறதோ அதன் இனத்திலும் சாயலிலும் அல்லாஹ்வின் உத்தரவுப்படி குழந்தைப் பிறக்கும் .
ஆணின் நீர் (விந்து உயிரணு) பெண்ணின் நீரை ( சினைமுட்டையை) முந்தி மிகைத்து விட்டால், ஆண் குழந்தையும்,
பெண்ணின் நீர் (சினை முட்டை) ஆணின் நீரை (விந்து உயிரணுவை ) முந்தி மிகைத்துவிட்டால் , பெண் குழந்தை பிறக்கும் .
3) எழுதவும் , வாசிக்கவும் தெரியாத இந்த நபியின் கண்கள் உறங்குமேயொழிய, அவரது உள்ளம் உறங்காது.
4) வானவர்களில் என்னுடைய தோழர் ஜிப்ரயீல் ஆவார் . அல்லாஹ்வால் அனுப்பப் பெற்ற எந்த ஒரு நபிக்கும் அவரே தோழராக இருந்தார் " என்று
நபி (ஸல்) கூறினார்கள் .

மேற்கண்ட முதல் மூன்று கேள்விக்கு நபிகளார் கொடுத்த பதிலை ஒத்துக் கொண்ட யூதர்கள் 4 வது கேள்விக்குரிய பதிலான தோழராக ஜிப்ரயீல் அல்லாத வேறு ஒருவராக இருந்திருந்தால் , உம்மை நாங்கள் பின்பற்றி இஸ்லாத்தை ஏற்றிருப்போம் . நீங்கள் ஜிப்ரயீலை தோழராக ஏற்றுக் கொண்ட பிறகு உங்களை விட்டு நாங்கள் விலகிக் கொள்கிறோம் " என்றனர் .
அப்போதுதான் கீழ்க்கண்ட வசனம் அருளப்பட்டது .

قُلْ مَنْ كَانَ عَدُوًّا لِّجِبْرِيْلَ فَاِنَّهٗ نَزَّلَهٗ عَلٰى قَلْبِكَ بِاِذْنِ اللّٰهِ مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ وَهُدًى وَّبُشْرٰى لِلْمُؤْمِنِيْنَ
"(உங்களில்) எவர் ஜிப்ரீலுக்கு எதிரி" என (நபியே! நீங்கள் யூதர்களை)க் கேளுங்கள். நிச்சயமாக அவர் இதனை அல்லாஹ்வின் கட்டளைப்படியே உங்களது உள்ளத்தில் இறக்கிவைத்தார். இது தனக்கு முன்னுள்ள (வேதத்)தை உண்மைப்படுத்துவதாகவும், நேரான வழியை அறிவிக்கக் கூடியதாகவும், நம்பிக்கை உடையவர்களுக்கு நற்செய்தியாகவும் இருக்கின்றது.
(அல்குர்ஆன் : 2:97)

இப்படி தொடர்ந்த திருக்குர்ஆனின்
4 - வது பாகமான லன் த னாலூ அன்னிஸாவு (பெண்கள் ) என்ற கீழ்க்கண்ட வசனத்தோடு நிறைவு பெறுகிறது .

حُرِّمَتْ عَلَيْكُمْ اُمَّهٰتُكُمْ وَبَنٰتُكُمْ وَاَخَوٰتُكُمْ وَعَمّٰتُكُمْ وَخٰلٰتُكُمْ وَبَنٰتُ الْاَخِ وَبَنٰتُ الْاُخْتِ وَاُمَّهٰتُكُمُ الّٰتِىْۤ اَرْضَعْنَكُمْ وَاَخَوٰتُكُمْ مِّنَ الرَّضَاعَةِ وَ اُمَّهٰتُ نِسَآٮِٕكُمْ وَرَبَآٮِٕبُكُمُ الّٰتِىْ فِىْ حُجُوْرِكُمْ مِّنْ نِّسَآٮِٕكُمُ الّٰتِىْ دَخَلْتُمْ بِهِنَّ فَاِنْ لَّمْ تَكُوْنُوْا دَخَلْتُمْ بِهِنَّ فَلَا جُنَاحَ عَلَيْكُمْ وَحَلَاۤٮِٕلُ اَبْنَآٮِٕكُمُ الَّذِيْنَ مِنْ اَصْلَابِكُمْۙ وَاَنْ تَجْمَعُوْا بَيْنَ الْاُخْتَيْنِ اِلَّا مَا قَدْ سَلَفَ اِنَّ اللّٰهَ كَانَ غَفُوْرًا رَّحِيْمًا ۙ‏

உங்கள் தாய்மார்களும், உங்கள் பெண்பிள்ளைகளும், உங்கள் சகோதரிகளும், உங்கள் தந்தையின் சகோதரிகளும், உங்கள் தாயின் சகோதரிகளும், உங்கள் சகோதரனின் பெண்பிள்ளைகளும், உங்கள் சகோதரியின் பெண்பிள்ளைகளும், உங்களுக்குப் பாலூட்டிய (செவிலித்) தாய்மார்களும், பால்குடி சகோதரிகளும், உங்கள் மனைவியின் தாய்மார்களும் (ஆகிய இவர்களை நீங்கள் திருமணம் செய்து கொள்வது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது. அவ்வாறே நீங்கள் ஒரு பெண்ணை திருமணம் செய்து அவளுடன் நீங்கள் வீடு கூடிவிட்டால் அவளுக்கு முந்திய கணவனுக்குப் பிறந்த மகளையும் (நீங்கள் திருமணம் செய்வது கூடாது). அவளைத் திருமணம் செய்த பின்னர் அவளுடன் வீடு கூடாதிருந்தாலோ (அவளை நீக்கிவிட்டு அவளுக்கு முந்திய கணவனால் பிறந்த மகளை திருமணம் செய்து கொள்வதில்) உங்கள் மீது குற்றமில்லை. உங்களுக்குப் பிறந்த ஆண்மக்களின் மனைவிகளையும் (நீங்கள் திருமணம் செய்துகொள்ள விலக்கப்பட்டிருக்கிறது). இரு சகோதரிகளை (ஒரே காலத்தில் மனைவிகளாக) ஒன்று சேர்த்து வைப்பதும் கூடாது. இதற்கு முன்னர் நடந்து விட்டவைகளைத் தவிர (அறியாத நிலைமையில் முன்னர் நீங்கள் செய்துவிட்டதை அல்லாஹ் மன்னித்து விடுவான். ஏனெனில்) நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையவனுமாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 4:23)
ர.ரா

ரஹ்மத் மாத இதழில் (மே 2019) வெளியான என் கட்டுரை
ஆகாயத்தின் ஆச்சரியங்கள்




சின்ன வயதிலிருந்தே எனக்கு ஆச்சரியத்தை இன்னும் கொடுத்துக் கொண்டிருப்பது வசீகரமான இந்த வானம்தான் . நழுவிக் கொண்டு இருக்கும் அதன் மேகத்தைப் போலவே விளக்கங்கள் எனக்கு விளங்க முடியாமல் விலகிக் கொண்டு இருப்பதும் இந்த வானம்தான் .
தூண்களை முட்டுக் கொடுத்து வீட்டு மாடியை தூக்கி நிறுத்த முடியும் என்பதைத்தான் அறிந்திருக்கிறேன் . இதென்ன முட்டு எதுவும் கொடுக்காமல் வானத்தை எப்படி தூக்கி நிறுத்த முடியும் என்ற இன்ஜினியராகவும் யோசித்திருக்கிறேன் .

خَلَقَ السَّمٰوٰتِ بِغَيْرِ عَمَدٍ تَرَوْنَهَا وَاَ لْقٰى فِى الْاَرْضِ رَوَاسِىَ اَنْ تَمِيْدَ بِكُمْ وَبَثَّ فِيْهَا مِنْ كُلِّ دَآ بَّةٍ وَاَنْزَلْنَا
அவனே வானங்களைத் தூண்கள் இன்றியே படைத்திருக்கின்றான். அதனை நீங்களும் பார்க்கின்றீர்கள்.
(அல்குர்ஆன் : 31:10)

பல பகல்கள், பல இரவுகள் இடைவிடாமல் வானத்தைப் பார்த்துக் கொண்டே இருந்திருக்கிறேன். இந்த வானத்தில் இருந்துதான் இன்று மழை பொழிந்து கொண்டு இருக்கிறது .
அன்று இதே வானத்தில் இருந்துதான் மூஸா (அலை) மக்களுக்கு மன்னு - ஸல்வா உணவும் , ஈஸா (அலை) மக்களுக்கு மாயிதா உணவுத் தட்டும் பூமிக்கு வந்திறங்கி இருக்கிறது. அது எவ்வளவு பெரிய அற்புதம் .

இதே வானத்தின் அடியில்தான் நம் நபி (ஸல்) அவர்களுக்கு முதன்முதலில் வானவர் ஜிப்ரீயில் (அலை) அவர்கள் காட்சி தந்தார்கள் .

وَلَقَدْ رَاٰهُ بِالْاُفُقِ الْمُبِيْنِ
அவர் திட்டமாக அவரை (ஜிப்ரீலை) தெளிவான அடிவானத்தில் கண்டார்.
(அல்குர்ஆன் : 81:23)
எது பறந்தாலும், அது என்னைவிட வானத்துக்கு அருகில் இருக்கிறது என்று எனக்குத் தோன்றும். அதனாலேயே சிறகடித்துப் பறப்பது எதுவாக இருந்தாலும், அதன் மீது எனக்கு தனிப்பட்ட ஆர்வம் வரும் . பறவைகளும், பூச்சிகளும் பல மணி நேரங்களுக்குப் எப்படிச் சிறகடிக்கின்றன என்பதைக் கவனமாக பார்ப்பேன். இப்படித்தானே சிறகுகளும் இறகுகளுடன்தான் மனித முக தோற்றத்தோடு வானவர்கள் இருக்கிறார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது .
இரவு நேரங்களில் மொட்டை மாடியில் மல்லாந்து படுத்து, வானத்து நட்சத்திரங்களை மின்னிக் கொண்டிருப்பதை ரசித்திருக்கேன் . அங்கே என்ன இருக்க முடியும் என்று எப்போதும் யோசித்துக் கொண்டே இருப்பேன். அன்று ஆய்வுக்காக குர்ஆனைத் தூக்கி கீழ் கண்ட வசனத்தைப் படித்தது போது மெய் சிலிர்த்துப் போனேன்.

وَلَقَدْ خَلَقْنَا فَوْقَكُمْ سَبْعَ طَرَآٮِٕقَ وَمَا كُنَّا عَنِ الْخَـلْقِ غٰفِلِيْنَ
(மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்ற எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப்படைப்புக(ளுக்கு வேண்டியவைக)ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை. (அவைகளுக்கு வேண்டியவை அனைத்தையும் முழுமையாக நாம் படைத்தும் இருக்கிறோம்.)
(அல்குர்ஆன் : 23:17)

இப்போதெல்லாம் இரவு வானத்தைப் பார்த்து ஸலாம் சொல்லிக் கொள்கிறேன் .என்றாவது ஒரு நாள் என் ஸலாத்திற்கு பதில் வராமலா போகும் ?
பள்ளிச் சிறுவனாய் இருந்த போது கிரேக்க கதை ஒன்றை படித்திருக்கிறேன் - தொழில்நுட்பத்தில் சிறந்து விளங்கிய "டேடாலஸ்" என்பவரின் மகனாகப் பிறந்தவன், "இகாரஸ் "ஒருமுறை டேடாலஸ் தன் மகனுக்குச் சிறகுகள் அமைத்துக் கொடுத்தான். நீண்ட கைகளில் மெழுகு பூசி, அவற்றில் பறவையின் இறகுகளை ஒட்டி அமைக்கப்பட்ட அந்தச் சிறகுகளை வீசி, வானில் பறக்க இகாரஸ் தயாரானான்.
'எக்காரணம் கொண்டும் சூரியனுக்குப் பக்கத்தில் பறக்காதே' என்று டேடாலஸ் எச்சரித்தான். ஆனால், காற்றில் எழும்பிப் பறக்க முடிந்ததும், இகாரஸ் தன்னிலை இழந்தான். எச்சரிக்கையை மறந்து சூரியனுக்கு நெருக்கமாகப் பறக்க முனைந்தான்.
வெப்பம் தாளாமல் மெழுகு உருக உருக, அவற்றில் ஒட்டிய இறகுகள் உதிர்ந்து இகாரஸ் பரிதாபமாக விழுந்து மரித்தான்.
இப்போது இந்த கதையை நினைக்கும் போது வானத்தில் ஏறிய பிர்அவனும் , ஹாமானும் நினவில் வந்து போகிறார்கள் .

وَقَالَ فِرْعَوْنُ يٰۤاَيُّهَا الْمَلَاُ مَا عَلِمْتُ لَـكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرِىْ‌ ۚ فَاَوْقِدْ لِىْ يٰهَامٰنُ عَلَى الطِّيْنِ فَاجْعَلْ لِّىْ صَرْحًا لَّعَلِّىْۤ اَطَّلِعُ اِلٰٓى اِلٰهِ مُوْسٰى ۙ وَاِنِّىْ لَاَظُنُّهٗ مِنَ الْكٰذِبِيْنَ
அதற்கு ஃபிர்அவ்ன் (தன் மக்களில் உள்ள தலைவர்களை நோக்கி) "தலைவர்களே! என்னைத் தவிர வேறொரு இறைவன் உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை. ஹாமானே! களிமண்(ணால் செய்த செங்கல்) சூளைக்கு நெருப்பு வை. (அச் செங்கற்களைக் கொண்டு வானளாவ) மாளிகையை நீ கட்டு. (அதில் ஏறி) மூஸாவினுடைய இறைவனை நான் பார்க்க வேண்டும். (அவர் தனக்கு வேறு இறைவன் இருப்பதாகக் கூறுகிறாரே!) இவ் விஷயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன்" என்று கூறினான்.
(அல்குர்ஆன் : 28:38)

ஜக்கி வாசுதேவ் தன் புத்தகம் ஒன்றில் வானத்தைப் பற்றி அழகாக விவரிப்பார் .
ஸ்பெயின் தேசத்தில் ஒரு மதுக்கடை வாசலில் அறிவிப்புப் பலகையில் எழுதப்பட்டு இருக்கும் வாசகம் இது.
'எல்லா விடைகளையும் அறிந்து கொண்டுவிட்டதாக நான் நினைத்த நேரம், கேள்விகளே மாறிப் போய் விட்டன' - வானமும் அப்படித்தான்.

எந்தக் கட்டத்திலும் வானத்தைப் பற்றி முழுமையாக அறிந்து கொண்டதாகச் சொல்லிக் கொள்ள முடியாது. ஏதோ தெரிந்து கொண்டுவிட்டதாக நினைக்கும்போது இன்னும் தெரியாத பல கோடி அம்சங்களைப் பொத்தி வைத்திருப்பதாக அது பழிப்புக் காட்டும்.
வானத்தைப் புரிந்து கொள்ளப் போதுமான மூளை நம்மிடம் இல்லை என்பதுதான் நான் விளங்கிக் கொண்ட உண்மை. ஆகாயம் என்பது ஓர் இடம் அல்ல. சூரியனைப் போலவோ, நட்சத்திரங்களைப் போலவோ, மேகங்களைப் போலவோ வானுக்கு உண்மையில் பொருள்தன்மை எதுவும் இல்லை.

இன்றைய நகரத்து வாழ்க்கையில், வானத்தை நிமிர்ந்து பார்க்கக்கூட எவ்வளவு பேருக்கு நேரம் இருக்கிறது என்று தெரியவில்லை.
நீங்கள் என்னிடம் ஏதோ பேசுகிறீர்கள். அதைக் கவனிக்காமல், நான் வானத்தை வெறித்துக் கொண்டு இருந்தால், உங்களை அவமானம் செய்வதாக நினைப்பீர்கள். நீங்கள் சொல்வது வானத்தைவிட பிரமாண்டமானது என்ற நினைப்பு உங்களுக்கு. உங்களின் உணரும் ஆற்றல் அந்த அளவுக்குத் திரிந்து போயிருக்கிறது.

உண்மையில் நீங்கள் பேசுவதைவிட வானம் வெகு வெகு பெரிது. வானத்தைக் கவனித்தால்தான் படைப்பின் அற்புதமான, அளவிட முடியாத பிரமாண்டம் புலப்படும். படைத்தவனைப் பற்றி உங்கள் கலாச்சாரத்தில் இதுவரை கற்றுக் கொடுத்த விஷயங்கள் வானத்தைப் பார்க்கையில், நேரடியாக வாழ்க்கையின் அனுபவமாகப் புலப்படும்.
வானம் என்பது, ஆன்மீகம் போல் முடிவில்லாத வாய்ப்பு. எல்லையற்ற தன்மை. தொட்டுவிட இயலாத கூரை. நினைத்துப் பார்க்க முடியாத அளவு விசித்திரமானது. நம்புவதற்கு அரியது. முற்றிலும் மர்மமானது.

இதை உணர, மின்சார விளக்குகளை அணைத்துவிட்டுக் கொஞ்சம் நேரம் வானத்தைப் புரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் முழுமையான ஈடுபாட்டுடன் வெறித்துப் பாருங்கள். அது ஆன்மீகப் பயிற்சிக்கு இணையானது!

இந்த வானத்திலிருந்து லைலத்துல் கதிர் இரவில் மலக்குமார்கள் இறங்குவார்கள் வருக ! வருக ! என வரவேற்க நாம் தயாராக இல்லை அதே நேரம் நம் செய்யும் அமல்களுக்குரிய கூலி கொண்டு வருவார்கள் என்பதை கண்டு வியந்தும் போனேன் .

لَيْلَةُ الْقَدْرِ ۙ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ
கண்ணியமுள்ள அந்த இரவு ஆயிரம் மாதங்களைவிட மிக்க மேலானதாகும்.
(அல்குர்ஆன் : 97:3)

تَنَزَّلُ الْمَلٰٓٮِٕكَةُ وَالرُّوْحُ فِيْهَا بِاِذْنِ رَبِّهِمْ‌ مِّنْ كُلِّ اَمْرٍ ۛ ۙ
அதில் மலக்குகளும், ஜிப்ரயீலும், தங்கள் இறைவனின் கட்டளையின் பேரில் (நடைபெற வேண்டிய) எல்லா காரியங்களுடன் இறங்குகின்றனர்.
(அல்குர்ஆன் : 97:4)

வானத்தில் இருந்து மலக்குகள் நன்மையைக் கொண்டு வருவதை சந்தோஷப்பட்டு ,இத்தனை பிரமாண்டமான வானத்தை கண்டு பிரமித்து நிற்கிறேன் , இதே வானம் பிளந்து விட்டால் என்னவாகும் என்று சிந்திக்கையில் .....
وَيَوْمَ تَشَقَّقُ السَّمَآءُ بِالْـغَمَامِ وَنُزِّلَ الْمَلٰٓٮِٕكَةُ تَنْزِيْلًا
வானம் மேகங்களால் பிளக்கப்பட்டு அந்நாளில் மலக்குகள் கூட்டம் கூட்டமாக இறங்குவார்கள்.
(அல்குர்ஆன் : 25:25)
அப்போதும் வானவர்கள் எதைக் கொண்டு கீழே இறங்குவார்கள் ?தெரியவில்லை
வல்ல ரஹ்மானின் இப்படியொரு கட்டளையை கண்டும் பயந்தும் போனேன் .
ர.ரா

திருக்குர்ஆனின் 5-வது ஜுஸ்வு
(வல்முஹ்ஸனாத்)



திருக்குர்ஆனின் 5 - வது பாகம் 4 : 24 ல் துவங்கி 4 : 147 ல் நிறைவு பெறுகிறது .
4-வது அத்தியாத்தின் பெயரே **அன்னிஸா - (பெண்கள்)**

பெண்கள் சம்பந்தப்பட்ட சட்டங்கள், விவாகம், வாரிசு உரிமை , கடமைகள் முதலானவைப் பற்றி இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது .

நபித்தோழர் ஸஅதுபின் ரபீஉ தன் மனைவி ஹபீபா தனக்கு மாறுபாடு செய்தக் காரணத்தினால் கன்னத்தில் அறைந்து விட்டார் .அப்பெண்ணின் தந்தை தன் மகளை அழைத்துக் கொண்டு நபிகளாரிடம் வந்து நியாயம் கேட்க, நபி (ஸல்) அப்பெண்ணிடம் அவள் கணவரை பழிவாங்கும்படி கூறினார்கள் .
அத்தருணத்தில் , " இதோ ஜிப்ரயீல் அவர்கள் இறைச் செய்திக் கொண்டு வருகிறார்கள். அது என்னவென்று பார்ப்போம் திரும்பி வாருங்கள் "

اَلرِّجَالُ قَوّٰمُوْنَ عَلَى النِّسَآءِ بِمَا فَضَّلَ اللّٰهُ بَعْضَهُمْ عَلٰى بَعْضٍ وَّبِمَآ اَنْفَقُوْا مِنْ اَمْوَالِهِمْ فَالصّٰلِحٰتُ قٰنِتٰتٌ حٰفِظٰتٌ لِّلْغَيْبِ بِمَا حَفِظَ اللّٰهُ وَالّٰتِىْ تَخَافُوْنَ نُشُوْزَهُنَّ فَعِظُوْهُنَّ وَاهْجُرُوْهُنَّ فِى الْمَضَاجِعِ وَاضْرِبُوْهُنَّ فَاِنْ اَطَعْنَكُمْ فَلَا تَبْغُوْا عَلَيْهِنَّ سَبِيْلًا اِنَّ اللّٰهَ كَانَ عَلِيًّا كَبِيْرًا

(ஆண், பெண் இருபாலாரில்) ஆண் பாலாரை(ப் பெண்பாலார் மீது) அல்லாஹ் மேன்மையாக்கி வைத்திருப்பதுடன் (ஆண்பாலார்) தங்கள் பொருள்களை(ப் பெண் பாலாருக்கு)ச் செலவு செய்வதனாலும் ஆண்கள்தான் பெண்களை நிர்வகிக்கக் கூடியவர்களாக இருக்கின்றனர். ஆகவே, நல்லொழுக்கமுள்ள பெண்கள் (அல்லாஹ்வுக்கும் தங்கள் கணவனுக்கும்) பணிந்தே நடப்பார்கள். (தங்கள் கணவன்) மறைவாக உள்ள சமயத்தில் அல்லாஹ்வின் பாதுகாப்பைக் கொண்டு (தங்களையும் கணவனின் மற்ற பொருள்களையும்) பேணிக்காத்துக் கொள்வார்கள். எவளும் கணவனுக்கு மாறு செய்வாளென்று நீங்கள் அஞ்சினால் அவளுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள். (அவள் திருந்தாவிடில்) படுக்கையில் இருந்து அவளை அப்புறப்படுத்தி வையுங்கள். (அதிலும் அவள் சீர்திருந்தாவிடில்) அவளை (இலேசாக) அடியுங்கள். அதனால் அவள் உங்களுக்கு கட்டுப்பட்டு விட்டால் அவள் மீது (வேறு குற்றங்களைச் சுமத்த) யாதொரு வழியையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் மிக மேன்மையானவனும் மிகப் பெரியவனுமாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 4:34)

நபி (ஸல்) அவர்கள் , " நாம் ஒன்றை நாடினோம் ; அல்லாஹ் வேறு ஒன்றை நாடி விட்டான் . அல்லாஹ் எதனை
நாடுகின்றானோ அதுவே மிகச் சிறந்தது" என்று கூறி பழி வாங்குவதிலிருந்து அவர்களை தடுத்து விட்டார்கள் .
அறிவிலும் , மார்க்கத்திலும் , ஆட்சி செய்வதிலும் , போர் புரிவதிலும் ஆண்கள் சிறந்து விளங்குகின்றனர் .
ஆண்களில்தான் நபிமார்களும், அவர்களுடைய பிரதிநிதிகளும் தோன்றி இருக்கின்றனர்.
ஓர் ஆண் நான்கு பெண்களை மணந்து கொள்ளலாம் ; ஆனால் ஒரு பெண்ணோ ஒரே ஆணைத்தான் மணந்து கொள்ள வேண்டும் .
வாரிசுரிமை பாகத்திலும் ஆண்களுக்கு பெண்களை விட இரட்டிப்பு மடங்கு பங்கு கிடைக்கிறது .

பெற்ற குழந்தைகளின் பெயர்த் தொடர்பும் ஆண்களைக் கொண்டுதான் ஏற்படுகிறது .
பெண்களை ஆண்கள்தான் நிர்வாகிக்க வேண்டும் . ஆண்களின் பொருட்களிலிருந்தே பெண்களுக்குச் செலவு செய்ய வேண்டியதும் ஏற்படுகிறது .
பெண்கள் எவ்வளவு சம்பாதித்தாலும் , கொஞ்ச காலம் சம்பாதிக்க முடிகிறது . இதற்கு மேல் வீட்டு நிர்வாகம், மக்களைப் பெற்றெடுப்பது முதலானவை ஏற்பட்டு பெண்கள் சம்பாதிக்க முடியாமல் போய் விடுகிறது.

ஆக பெண்ணின் நன்மைக்காக ஓர் ஆண் சிரமம் எடுப்பது போல் ஒரு பெண்ணால் ஆணுக்காக சிரமம் எடுக்க முடியாது .
இதனாலேயே நபி (ஸல்) அவர்கள் , " "மனிதர் , மனிதருக்கு ஸுஜூது (நெற்றியை பூமியில் வைத்து வணக்கம் ) செய்யுமாறு நான் கட்டளை இடுவதென்றால், ஒரு மனைவியை அவருடைய கணவனுக்கு ஸுஜூது செய்யுமாறு ஏவியிருப்பேன். (ஆனால் அல்லாஹ்வைத் தவிர யாருக்கும் ஸுஜூது செய்யக் கூடாது ) - திர்மிதி
பெண்கள் தங்களுடைய கணவர்களுக்கு முற்றிலும் வழிபட்டு, பணிந்து நடந்து கொள்ள வேண்டும் .அக் கணவன் அவளை விட்டு வெளியிற் சென்றிருந்தால் , அவனது உடமைகளையும், அவனது மக்களையும் , தனது கற்பையும் காப்பாற்றி பாதுகாக்க வேண்டும்.
நபி (ஸல் ) அவர்களிடம் , " பெண்களிர் சிறப்புடையோர் யாவர் ?" என்று கேட்கப்பட்டது .
"கணவன் அவளை நோக்கினால் மகிழ்ச்சியூட்டுவாள். அவனது ஏவலுக்கு வழிப்படுவாள் .அவன் வெறுப்படையும் எந்தச் செய்கையையும் , தன்னிலும் சரி , அவனது பொருளிலும் சரி செய்ய மாட்டாள் .அத்தகைய பெண்ணே சிறந்தவள். - நூல் : நஸஈ

" பெண்களுக்கு நன்மையே உபதேசியுங்கள். ஏனெனில் பெண் கோணல் எலும்பினால் படைக்கப்பட்டிருக்கின்றாள். அவ்வெலும்பினை ஒரேயடியாக நேராக்க நீ முனைந்தால் , அதனை முறித்து விடுவாய். அப்படியே விட்டுக் கொண்டே வந்தால், அது அதிகக்
கோணலாக ஆகிவிடும். ஆகவே இதமாக பெண்களுக்கு உபதேசியுங்கள்.-புகாரீ முஸ்லிம்
ர.ரா

**Rahmath Rajakumaran**
பெண் 3
ஆணின் மூளை 1400 ஸி ஸி சுமார் ஒன்றரை கிலோ ஆனால் பெண்களின் மூளை 1200 ஸிஸி தான் இதனால் பெண்களின் புத்திசாலிதனத்திற்கு குறைவு இல்லை ஆனால் ஞாபகத்தில் குறைவு உண்டு
மூளையில் ஸெரிபெல்லம் மெடுலா ஒப்ளங்கடா இந்த மாதிரி மூளையை ஏரியா ஏரியாவாக பிரித்து இந்த ஏரியாவிலுள்ள வேலைகளைக் குறிப்பிடப்பட்டுள்ளது
ஸெரிபெல்லம் பகுதியில் ஞாபகங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது இந்த இடத்தில் பெண்களின் மூளையின் அளவு குறைவு உள்ளது
உங்கள் ஆண்களில் இரு சாட்சியாக்கிக் கொள்ளுங்கள் இரு ஆண்கள் இல்லாத போது நீங்கள் திருப்தி அடையும ஓர் ஆணும் இரண்டு பெண்களும் சாட்சிகளாக இருக்கட்டும் அவ்விரு பெண்களில் ஒருவர் மறந்து விட்டாலும் மற்றொருவர் ஞாபகப்படுத்துவார்
. . . . . . . . குர்ஆன் 2 : 282
ஒரு பெண் நபிஸல் அவர்களிடம் யா ரசூல்லாஹ் . . அறிவிலும் ஆன்மீகத்திலும் பெண்களிடம் என்ன குறை ? என்று கேட்க
நபிஸல் அவர்கள் இரு பெண்களின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியத்திற்கு பிரிதியாக இருப்பது அவளது அறிவுக் குறைவு ஆகும்
தொழுகை நோன்பு ஆகியவற்றை மாதவிடாய் போன்ற காலங்களில் விடுவது ஆன்மீகத்தின் குறைவு ஆகும்
. . . . . . புகாரி 304 1462 1951 2658

திருட்டுக்கு கையை வெட்டு
திருக்குர்ஆனின் 6 வது ஜுஸ்வு
( லாயுஹிப்புல்லாஹ் )



திருக்குர்ஆனின் 6- பாகம் 4 : 148 முதல் தொடங்கி 5 : 82 ல் நிறைவு பெறுகிறது.
இப் பாகத்தில் ஆகுமான உணவு, லஞ்சம் , விபச்சாரம் ,திருட்டு போன்ற நிறைய விஷயங்கள் பேசப்படுகிறது.
وَالسَّارِقُ وَالسَّارِقَةُ فَاقْطَعُوْۤا اَيْدِيَهُمَا جَزَآءً بِمَا كَسَبَا نَـكَالًا مِّنَ اللّٰهِ وَاللّٰهُ عَزِيْزٌ حَكِيْمٌ
ஆணோ, பெண்ணோ எவர் திருடினாலும் (இத்) தீயச் செயலுக்குத் தண்டனையாக அவர்களின் கைகளைத் துண்டித்து விடுங்கள். (இது) அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட தண்டனை ஆகும். அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானம் உடையவனாகவும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 5:38)

திருட்டுத் தொழில் மிகப் பெரிய குற்றங்களில் ஒன்றாகும் .இதனால் பிறரின் பொருள் பாதிக்கப்படுகிறது அப்பொருளை சம்பாதிக்க உழைத்த உழைப்பு கேலி செய்யப்படுகிறது பறிகொடுத்தவர் மிகவும் மன வேதனை அடைகிறார் .இதற்குரிய தண்டனை திருடிய கைகளைத் துண்டித்து விடுவது .

ஒருவர் தனது பொருளை பாதுகாப்பான இடத்தில் வைத்திருக்கும் பொழுது , அதனை யாரும் அறியாமல் எடுத்துச் செல்வதற்கே 'திருட்டு ' எனப்படும் .
சிலர் , 'பொருள் ' எனக் கூறப்படும் வஸ்து எதுவாயினும் சரி , அதனைத் திருடியவரின் கை துண்டிக்கப்பட வேண்டும் .
கால் பொற்காசை ( 1/4 தினாரை ) யோ அல்லது அதன் பெறுமானமுள்ள ஒரு பொருளையோ ஒருவன் திருடினால் அவனது கை துண்டிக்கப்பட வேண்டும் .

மூன்று திர்ஹம் (வெள்ளிக்காசு ) பணத்தையே அல்லது அதன் பெறுமானமுள்ள ஒரு பொருளையோ ஒருவன் திருடினால் அவனது கை துண்டிக்கப்பட வேண்டும் .
திருடப்படும் பொருள் பாதுகாப்பான ஒரு இடத்தில் வைக்கப்பட்டிருக்கும் பொழுது திருடப்பட்டால்தான் இச்சட்டம் பொருந்தும் .சரியான பாதுகாப்புச் செய்யப்படாமலோ , காவல்காரன் இல்லாமலோ இருந்தால் , அது பாதுகாப்பற்ற பொருள் அதற்கு கை துண்டிக்கப்படல் என்னும் சட்டம் பொருந்தாது என்றும் சட்ட அறிஞர்கள் கூறுகின்றனர் .
புதைகுழியைத் தோண்டி , பிணத்தின் மீது போர்த்தப்பட்டிருக்கும் கபன் துணியை திருடுபவர்களின் கை துண்டிக்கப்பட வேண்டுமென சில சட்ட ஆய்வாளர்கள் கூறுகிறார்கள் .
'அது பாதுகாப்பற்றது ; அதனால் கை துண்டிக்கப்படக் கூடாது ' என்று சில சட்ட ஆய்வாளர்கள் கூறுகிறார்கள் .

வேலியோ , ஆள் பாதுகாப்போ இல்லாத தோட்டத்திலுள்ள கனிகள், மேய்ப்பவன் இல்லாமல் வீதிகளில் திரிந்து கொண்டிருக்கும் பிராணிகள், காவலில்லாமல் திறந்த வீடுகளில் வைக்கப்பட்டிருக்கும் பொருள்கள் திருடப்பட்டால், கை துண்டித்தல் கிடையாது .
" தோட்டத்திலுள்ள கனியை ஒருவன் பறித்துத் தின்றான். அதனைப் பறித்து மன்றமுகமாகத் தன் துணிகளில் கட்டிக் கொண்டு செல்லவில்லை என்றால், அவனுக்கு கை துண்டித்தல் இல்லை " என்பதாக நபி (ஸல்) அறிவித்தார்கள் திர்மிதி, அபூதாவூது , நஸாஈ

ஒருவன் தன் தந்தையின் பொருளைத் திருடினாலும் , தந்தை தன் மகனின் பொருளைத் திருடினாலும் , வியாபாரக் கூட்டாளிகள் பரஸ்பரம் திருடினாலும் எவருடைய கையும் துண்டிக்கப்படக் கூடாது .அவையெல்லாம் சந்தேகத்திற்குரிய நிலைகளாகும் .
திருக்குர்ஆனை ஒருவன் திருடினால் கை துண்டிக்கபடக் கூடாது. ஓதுவதற்காக எடுத்துச் சென்றிருக்கலாம் என்று சந்தேகம் ஏற்படுவதே காரணம் .
நிச்சயமான திருட்டுகளுக்கு மட்டுமே இச் சட்டம் கூறப்பட்டிருக்கிறதே தவிர சந்தேகமான திருட்டிற்கு அல்ல .

3475. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
(மக்கா வெற்றியின் போது) மக்ஸூமீ குலத்துப் பெண் ஒருத்தி (ஃபாத்திமா பின்த் அல் அஸ்வத்) திருட்டுக் குற்றம் செய்திருந்தாள்.
அவள் விஷயமாக குறைஷிகள் மிகவும் கவலைக்குள்ளாயினர். 'அவள் விஷயமாக அல்லாஹ்வின் தூதரிடம் யார் பேசுவார்கள்?' என்று தமக்குள் பேசிக் கொண்டனர்.
அவர்களில் சிலர், 'அல்லாஹ்வின் தூதருடைய செல்லப் பிள்ளையான உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தவிர இதற்கு யாருக்குத் துணிவு வரும்?' என்று கூறினர்.
(உஸாமா(ரலி) அவர்களிடம் பரிந்துரை செய்யும்படி அவர்கள் கேட்டுக் கொள்ள, அவ்வாறே) உஸாமா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் (அவள் விஷயமாகப்) பேசினார்கள்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒரு தண்டனையின் விஷயத்திலா (அதைத் தளர்த்தும்படி என்னிடம்) நீ பரிந்துரை செய்கிறாய்' என்று (கோபத்துடன்) கேட்டுவிட்டு,
பிறகு எழுந்து நின்று உரை நிகழ்த்தினார்கள். பிறகு (அவ்வுரையில்), 'உங்களுக்கு முன்னிருந்தவர்கள், அழிக்கப்பட்டதெல்லாம் அவர்களில் உயர் குலத்தவன் திருடிவிட்டால் அவர்கள் அவனை (தண்டிக்காமல்)விட்டு வந்தார்கள்; அவர்களில் பலவீனமான (பிரிவைச் சேர்ந்த)வன் திருடிவிட்டால் அவனுக்கு தண்டனையளித்து வந்தார்கள் என்பதால் தான்.

அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதின் மகள் ஃபாத்திமா திருடி விட்டிருந்தாலும் அவரின் கையையும் நான் துண்டித்திருப்பேன்' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி
ர.ரா

வேண்டாம் துறவறம்
திருக்குர்ஆனின் 7 வது ஜுஸ்வு
(வஇதாஸமிஊ )



7 வது பாகம் அத்தியாயம் 5 : 83 லிருந்து ஆரம்பித்து அத்தியாயம் 6 : 110 -ல் நிறைவடைகிறது .
**ஒரு நாள் நபி (ஸல்)** அவர்கள் இறுதி நாளைப் பற்றி மக்களுக்குக் கூறினார்கள் .அந்நாளின் பயங்கர நிலை குறித்து அங்கிருந்தவர்களின் **இதயங்கள் இளகி , அழ ஆரம்பித்துவிட்டார்கள் .**

நபித் தோழர்களில் பத்து பேர்கள் **உஸ்மான் பின் மள்ஊன்** வீட்டில் ஒன்று கூடி , நம் அனைவரும் துறவறம் பூண்டு விட வேண்டும் ; காலமெல்லாம் நோன்பு நோற்க வேண்டும்; இரவு முழுவதும் விழித்திருந்து இறையை வணங்க வேண்டும் ; விரிப்புகளில் படுத்துறங்கக் கூடாது ; மாமிசத்தையும் , கொழுப்புப் பதார்த்தத்தையும் புசிக்கக் கூடாது. பெண்களிடம் நெருங்கவே கூடாது ;

நற்மணம் பூசக் கூடாது ; **பரதேசிகள்** போல் பூமியில் சுற்றிக் கொண்டிருக்க வேண்டும் " என்று முடிவு செய்தனர் .
அவர்களது இம் முடிவு **நபிகளாருக்கு** தெரிய வந்தது , உஸ்மான் பின் மள்ஊன் வீட்டிற்கு **நபிகளார்** வந்து , அவரது மனைவியிடம் , " உனது கணவரையும் , அவரது தோழர்களையும் பற்றி நான் கேள்விப்பட்ட சேதி உண்மை தானா ? "

அம்மாது நபி (ஸல்) அவர்களிடம் பொய்யுரைக்கவும் விரும்பவில்லை அதே சமயத்தில் தமது கணவரின் இரகசியத்தையும் வெளியிடவும் விரும்பவில்லை.

"**அல்லாஹ்வின் தூதரே ! என் கணவர் தங்களுக்கு ஏதாவது சொன்னாரேயானால் அது நிச்சயமாக உண்மைதான் "**
நபிகளார் அங்கிருந்து திரும்பி விட்டார்கள் .
அப்பொழுது **உஸ்மான் பின் மள்ஊனும்** அவரது பத்து தோழர்களும் நபிகளாரிடம் வந்தனர் .
நபிகளார் அவர்களிடம் , " நான் கேள்விப்படடது உண்மைதானா ? "
" ஆமாம் யா ரசூல்லாஹ் ! அதன் மூலம் நன்மையல்லாத வேறொன்றையும் நாங்கள் கருதவில்லை "
" நான் இவ்வாறெல்லாம் செய்ய வேண்டுமென்று ஏவப்படவில்லை .
உங்களுடைய ஆன்மாவுக்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமைகள் உண்டு.
நபிலான நோன்பு ஒரு நாள் நோற்றுங்கள் ; ஒரு நாள் விட்டு விடுங்கள். (காலமெல்லாம் நோன்பு நோற்கக் கூடாது)
இரவில் கொஞ்சம் விழித்திருந்து வணங்குங்கள். அப்பால் தூங்குங்கள் (ஒரேயடியாக விழித்திருந்தல் சரியல்ல ) .
நான் இரவில் நின்று வணங்குகிறேன் நித்திரையும் புரிகிறேன்.
மாமிசம் , கொழுப்புப் பதார்த்தங்களையும் புசிக்கிறேன் . மனைவியிடம் செல்கிறேன் . இது எனது நடைமுறை . எனது நடைமுறையை எவர் புறக்கணிக்கின்றாரோ அவர் என்னைச் சேர்ந்தவரல்லர் " என்று கூறினார்கள்

பின்னர் மக்கள் அனைவரையும் ஒன்று திரட்டி நபி (ஸல்) உரையாற்றினார்கள் .

" சிலருக்கு என்ன கேடு பிடித்தது ? அவர்கள் பெண்களை ஆகாதவர்களாக ஆக்குகின்றனர் .**நல்லுணவு , மணம்** இவைகளை வெறுத்து ஒதுக்குகின்றனர் . **நீங்கள் பரதேசிகளாகவும் ,** துறவிகளாகவும் இருக்க வேண்டும் என்று நான் உங்களுக்குக் கட்டளையிடவில்லை.
எனது மார்க்கத்தில் மாமிசத்தையும் , பெண்களையும் அடியுடன் துறந்து விட வேண்டுமென்றோ ,ஊரை விட்டு ஒதுங்கி ஆசிரமங்களை அமைத்துக் கொண்டு தங்க வேண்டுமென்றோ நான் சொல்லவில்லை.

துறவறம் , தியாகம்தான் எனது கூட்டத்தினரின் துறவறம் . நேர்மை தவறாமல் உறுதியுடன் நடந்து கொள்ளுங்கள் உங்களுக்கு முன்னிருந்தோர் அழிந்து நாசமடைந்ததற்குக் காரணம், அவர்களாகத் தங்கள் மீது சில கடினமான வரம்புகளை ஏற்படுத்திக் கொண்டது தான். அப்பொழுது அல்லாஹ் இன்னும் கடினமானதை அவர்கள் மீது விதித்து விட்டான் "
இதனை அனுசரித்தே ...

يٰۤـاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تُحَرِّمُوْا طَيِّبٰتِ مَاۤ اَحَلَّ اللّٰهُ لَـكُمْ وَلَا تَعْتَدُوْا‌ ؕ اِنَّ اللّٰهَ لَا يُحِبُّ الْمُعْتَدِيْنَ
நம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு ஆகுமாக்கி வைத்திருக்கும் நல்லவைகளை நீங்கள் ஆகாதவைகளாக ஆக்கிக் கொள்ளாதீர்கள். அன்றி, நீங்கள் வரம்பு மீறியும் செல்லாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ், வரம்பு மீறுபவர்களை நேசிப்பதேயில்லை. (அல்குர்ஆன்: 5:87)

وَكُلُوْا مِمَّا رَزَقَكُمُ اللّٰهُ حَلٰلًا طَيِّبًا وَّ اتَّقُوا اللّٰهَ الَّذِىْۤ اَنْـتُمْ بِهٖ مُؤْمِنُوْنَ
அல்லாஹ் உங்களுக்கு அளித்தவைகளில் (நீங்கள் புசிக்க) அனுமதிக்கப்பட்ட நல்லவைகளையே புசியுங்கள். நீங்கள் நம்பிக்கை கொண்டிருக்கும் அல்லாஹ்வுக்கே பயப்படுங்கள். (அல்குர்ஆன் : 5:88)
என்ற வசனங்கள் இறங்கியருளப்பட்டது.
ர.ரா

எங்களுக்கும் வஹி இறங்க வேண்டும் .
திருக்குர்ஆனின் 8 ஜுஸ்வு
( வலவ் அன்னனா )



திருக்குர்ஆனின் 8 பாகம் அல் அன்ஆம் (கால்நடைகள் ) சூரா 6 : 111ல் துவங்கி சூரா அல் அஃராப் 7 : 87 ல் நிறைவடைகிறது .

**ஒரு சமயம் நபி (ஸல்) அவர்களிடம் வலீத் பின் முகீரா** , " நபிப் பட்டம் என்பது உண்மையாயின் , உம்மை விட நானே அதற்கு மிகத் தகுதியுடையவன் , ஏனெனில் , நான் உம்மை விட வயதில் பெரியவன், செல்வம் மிகுந்தவன் , அரபுலக செல்வாக்கு மிக்கவன் " என்றான் .

அபூஜஹ்லும் , " அவருக்கு அந்த வேத வெளிப்பாடு (வஹீ ) வருவது போல் எங்களுக்கும் வராத வரையில் நாங்கள் அவரை நம்ப முடியாது " என்றான்

அப்போதுதான் திருக்குர்ஆனின் கீழ்க்கண்ட வசனங்கள் அருளப்பட்டது.

وَاِذَا جَآءَتْهُمْ اٰيَةٌ قَالُوْا لَنْ نُّـؤْمِنَ حَتّٰى نُؤْتٰى مِثْلَ مَاۤ اُوْتِىَ رُسُلُ اللّٰهِ‌ؔ ۘ اَللّٰهُ اَعْلَمُ حَيْثُ يَجْعَلُ رِسٰلَـتَهٗ‌ ؕ سَيُصِيْبُ الَّذِيْنَ اَجْرَمُوْا صَغَارٌ عِنْدَ اللّٰهِ وَعَذَابٌ شَدِيْدٌ ۢ بِمَا كَانُوْا يَمْكُرُوْنَ

அவர்களிடம் யாதொரு வசனம் வந்தால் "அல்லாஹ்வுடைய தூதர்களுக்குக் கொடுக்கப்பட்டது போன்ற (நபித்துவத்)தை எங்களுக்கும் கொடுக்கப்படாத வரையில் நாங்கள் (அதனை) நம்பிக்கை கொள்ளவே மாட்டோம்" என்று கூறுகின்றனர். நபித்துவத்தை எங்கு (எவருக்கு) அளிப்பது என்பதை அல்லாஹ்தான் நன்கறிவான். குற்றம் செய்யும் இவர்களை இவர்கள் செய்யும் சதியின் காரணமாக அல்லாஹ்விடமிருந்து சிறுமையும், கொடிய வேதனையும் அதிசீக்கிரத்தில் வந்தடையும்.
(அல்குர்ஆன் : 6:124)

فَمَنْ يُّرِدِ اللّٰهُ اَنْ يَّهْدِيَهٗ يَشْرَحْ صَدْرَهٗ لِلْاِسْلَامِ‌ ۚ وَمَنْ يُّرِدْ اَنْ يُّضِلَّهٗ يَجْعَلْ صَدْرَهٗ ضَيِّقًا حَرَجًا كَاَنَّمَا يَصَّعَّدُ فِى السَّمَآءِ‌ ؕ كَذٰلِكَ يَجْعَلُ اللّٰهُ الرِّجْسَ عَلَى الَّذِيْنَ لَا يُؤْمِنُوْنَ

அல்லாஹ் எவர்களுக்கு நேர்வழி காண்பிக்க விரும்புகின்றானோ அவர்களுடைய உள்ளத்தை இஸ்லாமின் பக்கம் (செல்ல) விரிவாக்குகிறான். எவர்களை, அவர்களுடைய வழிகேட்டிலேயே விட்டுவிட விரும்புகின்றானோ அவர்களுடைய உள்ளத்தை (நிர்ப்பந்தத்தால்) வானத்தில் ஏறுபவ(னி)ன் (உள்ளம்) போல் கஷ்டப்பட்டு சுருங்கும்படியாக்கி விடுகிறான். இவ்வாறே நம்பிக்கை கொள்ளாதவர்களுக்கு அல்லாஹ் தண்டனை கொடுக்கின்றான்.
(அல்குர்ஆன் : 6:125)

அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட நபித்துவத்தின் உண்மையை அறிவிக்கும் ஆதாரங்கள் எத்தனையோ அவர்களிடம் வந்திருக்கின்றன. அவற்றை அவர்கள் நம்பவில்லை. விதண்டா வாதம் புரிந்து அதனை நிராகரிப்பதிலேயே குறியாக இருந்தனர்
ஒருவர் நேர்வழி பெறுவதும் , தவறான வழியிலேயே இருப்பதும் இறைவனின் நாட்டத்தைப் பொருத்தே இருக்கின்றன.

அவன் எவருக்கு நேர்வழி காட்ட நாடுகிறானோ அவருடைய அகக் கண்களைத் திறந்துவிட்டு விடுகிறான் அவற்றின் மூலம் உண்மை விசுவாசத்தின் ஒளியைப் பெறுவதால், தடையாக இருந்த திரைகள் அனைத்தும் அகன்று அம்மனிதன் நேர்வழியைப் பெற்று விடுகின்றான் .
இதனைக் குறித்தே இங்கு இஸ்லாம் மார்க்கத்திற்காக அவருடைய நெஞ்சத்தை விரிவுப்படுத்துகின்றான் என்று கூறப்படுகிறது.
அவ்வாறு விரிவடைந்த நெஞ்சத்தில் இதயத்தில் இஸ்லாமிய ஞானம் தாராளமாக நுழைகிறது.

எல்லா வகையான அறிவு ஞானங்களும் ஊற்றுக்கள் போல் ஒலித்து ஓட ஆரம்பிக்கின்றன.
இவ்வசனம் இறக்கப்பட்டதும் நபி (ஸல்) அவர்களிடம் " நெஞ்சம் விரிவடைவது என்றால் என்ன ? "
" அது ஒரு பிரகாசமாகும். அதனை உண்மை விசுவாசியின் இதயத்தில் அல்லாஹ் பிரயோகிக்கும் பொழுது, அந்த விசுவாசியின் நெஞ்சம் ஞானத்தால் விரிவடைகிறது "
" அதற்கு ஏதாவது அடையாளமுண்டா ?"
" ஆம் ! உண்டு. நிலையான மறு உலகின் சிந்தனை அதிகமாகச் செல்லும் . மயக்குகிற இவ்வுலகினை விட்டு மனம் அகன்று கொள்ளும். மரணம் வருமுன்னரே மரணத்திற்குரிய சித்தமுடன் இருக்குமாறு தூண்டும் "
எவர் வழிகேட்டிலேயே இருக்குமாறு செய்ய அல்லாஹ் நாடுகின்றானோ அவருடைய நெஞ்சத்தை நெருக்கடியானதாகவும் , சிரமப்படக் கூடியதாகவும் ஆக்கி விடுகின்றான் .
அத்தகையவனின் நெஞ்சம் மிகவும் குறுகி விடுகிறது. அங்கே எந்த பிரகாசமும் நுழையாது .எந்த ஞானமும் உதிக்காது.

குறுகி இறுகி அந்த இதயத்தில் ஈமான் எனும் ஒளியை எம் முறையிலும் புகுத்த முயன்றாலும் அது துன்புறுத்தி பலவந்தப்படுத்தி வானத்தில் ஏறுபவனின் நெஞ்சம் போல் நெருக்கடியில் கஷ்டமானதாக இருக்கும்
ர.ரா

இறைவன் பேசினான் .
திருக்குர்ஆனின் 9 வது ஜுஸ்வு
(காலல்மலவு )



وَلَمَّا جَآءَ مُوْسٰى لِمِيْقَاتِنَا وَكَلَّمَهٗ رَبُّهٗ ۙ قَالَ رَبِّ اَرِنِىْۤ اَنْظُرْ اِلَيْكَ‌ قَالَ لَنْ تَرٰٮنِىْ وَلٰـكِنِ انْظُرْ اِلَى الْجَـبَلِ فَاِنِ اسْتَقَرَّ مَكَانَهٗ فَسَوْفَ تَرٰٮنِىْ‌ فَلَمَّا تَجَلّٰى رَبُّهٗ لِلْجَبَلِ جَعَلَهٗ دَكًّا وَّخَرَّ مُوْسٰى صَعِقًا‌ فَلَمَّاۤ اَفَاقَ قَالَ سُبْحٰنَكَ تُبْتُ اِلَيْكَ وَاَنَا اَوَّلُ الْمُؤْمِنِيْنَ

நாம் (குறிப்பிட்ட இடத்திற்கு) குறிப்பிட்ட நேரத்தில் மூஸா வந்தபொழுது அவருடைய இறைவன் அவருடன் பேசினான். (அப்பொழுது மூஸா தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! நான் உன்னை (என் கண்ணால்) பார்க்க (விரும்புகின்றேன்.) நீ உன்னை எனக்கு காண்பி" என்று கூறினார். (அதற்கு இறைவன் "நேர்முகமாக) என்னைக் காண உங்களால் ஒருக்காலும் முடியாது. எனினும் இம்மலையை நீங்கள் நோக்குங்கள். அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால் பின்னர் நீங்கள் என்னைக் காண்பீர்கள்" என்று கூறினான். அவருடைய இறைவன் அம்மலை மீது தோற்றமளிக்கவே அது தவிடு பொடியாயிற்று. மூஸா திடுக்கிட்டு (மூர்ச்சையாகி) விழுந்தார். அவர் தெளிவுபெறவே (இறைவனை நோக்கி) "நீ மிகப் பரிசுத்தமானவன். நான் (உன்னைப் பார்க்கக் கோரிய குற்றத்திலிருந்து விலகி) உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றேன். அன்றி, உன்னை நம்பிக்கை கொள்பவர்களில் நான் முதன்மையானவன்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 7:143)

நபி மூஸா (அலை) அவர்கள் 40 நாட்கள் நோன்பு நோற்ற பின்னர் குறிக்கப்பட்ட நேரத்தில் இறைவனைத் தரிசிக்க நபியவர்கள் வந்த பொழுது அவருடைய இரட்சகனும் அவருடன் பேசினான் .
அல்லாஹ் பேசுவதற்கு அவனுக்கு நாவோ இதர சாதனங்களோ தேவை இல்லை. இவற்றையெல்லாம் விட்டு அவன் அப்பாற்பட்டவன் .
பின் அவன் எப்படித்தான் பேசினான் ?
அது அவனுக்கே உரித்தான ஒரு தன்மையாகும் . அதற்கு நாவோ , வார்த்தைகளோ எதுவும் தேவை இல்லை
ஆனால் அவன் கூறுவதைக் கேட்போர் விளங்கிக் கொள்ளும் வகையில் அவன் உரையாடல் இருக்குமாறு அவனே செய்கிறான் . அது எப்படி ?
இது மனித அறிவுக்கு எட்டாத ஒன்றாகும்
ஆகவே, அவன் பேசினான் என்றால் எத்தனை ஒலியின் அளவான டெசிபலில் பேசினான் என்பதையெல்லாம் தவிர்த்து மனிதர்களைப் போன்று பேசினான் என்றோ அல்லது எதிரொலியாக வந்தது என்றோ எந்தக் கற்பனையும் செய்வதற்கில்லை.
ஏனென்றால் அவனே தொனியையும் , அதன் மூலம் ஏற்படும் எழுத்துக்கள், உச்சரிப்புகளையும் படைத்தான். இவற்றிற்கெல்லாம் முன்னரே அவன் இருக்கிறான் .ஆதலால், அவனுக்கு இவையொன்றும் தேவையே இல்லை.

ஆகவே , அது ஓர் ஆன்மீக உரையாடவேயாகும் . இதற்கு எந்த ஒரு படைப்பையும் ஒப்பிட முடியாது.

**ஓர் உதாரணம்** : தூக்கத்தில் வெளிப்புலன்கள் முற்றிலும் அடங்கி விடுகின்றன. கண் பார்ப்பதில்லை ; காது கேட்பதில்லை .அனால் அப்பொழுது எத்தனை காட்சிகள் தென்படுகின்றன. பேச்சு ,வார்த்தைகள், உரையாடல்கள் எல்லாம் ஏற்படுகின்றன.
ஆனால் வெளிப் புலனாக இருக்கும் வாயோ பேசுவதில்லை . அனாலும் பேசப்படுகின்றன. ஆனால் வெளிச்செவியோ கேட்படுவதில்லை ஆனால் கேட்கப்படுகின்றன.

இதைத்தான் ஆன்மீக ரீதியிலான உணர்வு .இதில் பேச்சும் மற்றும் செவியேற்றல் இருக்கும் .
இத்தகைய உதாரணத்தை வைத்துக் கொண்டு அல்லாஹ்வுக்கும் மூஸாவுக்கும் நடை பெற்ற உரையாடலை நாம் சிந்திக்கும்பொழுது வெளிப் புலன்களான வாயோ , காதோ தேவை இல்லை . மைக் , ஸ்பீக்கர் , ஹெட்போன் போன்ற இதர சாதனங்கள் உதவியுமின்றி உரையாடல் நடைபெற முடியும் என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும் .

இத்தகைய உரையாடல்கள் நபி மூஸா (அலை) அவர்களுக்கு மட்டுமல்ல , இதர நபிமார்களுக்கும் , இறைநேசர்களுக்கும் ஏற்பட்டிருக்கின்றன.
ஆனால் சொல்பவனான அல்லாஹ்வுக்கு நாவோ வார்த்தைகளோ தேவையில்லை. கேட்பவர்களுக்குத்தான் செவிகள் தேவைப்படுகின்றன .
ஆக நபி மூஸா (அலை) அவர்களுடைய இரட்சகன் அவர் பூரணமாகப் புரிந்துக் கொள்ளக் கூடிய முறையில் செவ்வனே பேசினான்.
இறைவனை நேரில் காண்பது குறித்து அடுத்தப் பதிவில் இன்ஷா அல்லாஹ்
ர.ரா

இறைவனை கண்ணால் பார்க்க வேண்டும் .
திருக்குர்ஆனின் 9 வது ஜுஸ்வு
(காலல்மலவு )



وَلَمَّا جَآءَ مُوْسٰى لِمِيْقَاتِنَا وَكَلَّمَهٗ رَبُّهٗ ۙ قَالَ رَبِّ اَرِنِىْۤ اَنْظُرْ اِلَيْكَ‌ قَالَ لَنْ تَرٰٮنِىْ وَلٰـكِنِ انْظُرْ اِلَى الْجَـبَلِ فَاِنِ اسْتَقَرَّ مَكَانَهٗ فَسَوْفَ تَرٰٮنِىْ‌ فَلَمَّا تَجَلّٰى رَبُّهٗ لِلْجَبَلِ جَعَلَهٗ دَكًّا وَّخَرَّ مُوْسٰى صَعِقًا‌ فَلَمَّاۤ اَفَاقَ قَالَ سُبْحٰنَكَ تُبْتُ اِلَيْكَ وَاَنَا اَوَّلُ الْمُؤْمِنِيْنَ

நாம் (குறிப்பிட்ட இடத்திற்கு) குறிப்பிட்ட நேரத்தில் மூஸா வந்தபொழுது அவருடைய இறைவன் அவருடன் பேசினான். (அப்பொழுது மூஸா தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! நான் உன்னை (என் கண்ணால்) பார்க்க (விரும்புகின்றேன்.) நீ உன்னை எனக்கு காண்பி" என்று கூறினார். (அதற்கு இறைவன் "நேர்முகமாக) என்னைக் காண உங்களால் ஒருக்காலும் முடியாது. எனினும் இம்மலையை நீங்கள் நோக்குங்கள். அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால் பின்னர் நீங்கள் என்னைக் காண்பீர்கள்" என்று கூறினான்.

அவருடைய இறைவன் அம்மலை மீது தோற்றமளிக்கவே அது தவிடு பொடியாயிற்று. மூஸா திடுக்கிட்டு (மூர்ச்சையாகி) விழுந்தார். அவர் தெளிவுபெறவே (இறைவனை நோக்கி) "நீ மிகப் பரிசுத்தமானவன். நான் (உன்னைப் பார்க்கக் கோரிய குற்றத்திலிருந்து விலகி) உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றேன். அன்றி, உன்னை நம்பிக்கை கொள்பவர்களில் நான் முதன்மையானவன்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 7:143)

புலன்களின் அறிவால் கட்டுப்பட்ட மனிதன்
நம் கண்கள் , வீசுகின்ற ஒளியை முழுமையாக பார்த்து விட முடியாது **0.00004 cm** இருந்து **0.00007 cm** வரைதான் பார்க்க முடியும் இந்த அளவுகோலுக்கு மேலும் கீழும் உள்ள ஒளி கிரணங்கள் வீசும் உண்மை மனிதனுக்குத் தெரியாது .
அதைப்போலவே நம் காது 20 Hz இல் இருந்து 20 கிலோ Hz வரைதான் கேட்க முடியும் இந்த அளவீட்டிற்கு மேலும் கீழும் உள்ள சப்தங்களில் உள்ள உண்மை மனிதனுக்கு தெரியாது .
இது மாதிரி நம் ஒவ்வொரு புலன்களும் ஒரு எல்லைக்குள் கட்டுப்பட்டு இருக்கும் போது இந்த பிரபஞ்ச வெளியில் வெளிப்படும் முழு உண்மை நமக்கு தெரியாது .

அணுக்கதிரியக்கத்தால் ஏற்படும் ஒளியும் அக்கதிரியக்கம் காரணமாக ஆகாச வெளியில் ஏற்படும் ஒளியின் சஞ்சாரமும் இயற்கையின் மர்மமாக இருக்கிறது .
புலன்களின் கட்டுப்பட்ட தன்மையில் உள்ள மனிதனால் இனிப்பும் கசப்பும், குளிர்ச்சியும் உஷ்ணமும் , பச்சையும் சிவப்பும் ஒருவனுடைய அபிப்பிராயங்களே தவிர உண்மையானவை அல்ல : புலன்களால் அறிய முற்படும் மனிதனுக்குத்தான் நிறம், ருசி , வாசனை , சப்தம் என்ற பேதங்கள் ஏற்படுகின்றனவே தவிர அறியப்படும் பொருளுக்கு இப்பேதங்கள் எவையும் இல்லை .

இத்தனையும் உள்ள உண்மையினை அதைப் படைத்தவனைத் தவிர யாரும் அறிந்து கொள்ள முடியாது இதைதான் மலக்குகள் " நீ எங்களுக்கு அறிவித்ததைத் தவிர வேறொன்றையும் நாங்கள் அறியமாட்டோம் நீ மிக்க அறிந்தவனும் ஞானம் உடையவனாகவும் இருக்கின்றாய் ". எனக் கூறினார்கள் (திருக்குர்ஆன் 2 : 32)

ஆக மனிதர்களுக்கு மட்டும் அல்லாது அவன் படைத்த மலக்குகளுக்கு கூட புலன்களில் குறைவு உள்ளது அவர்களின் புலனுக்கு அப்பாற்பட்ட அனந்த கோடி உண்மைகள் இருக்கிறது என்பதைதான் மேற்கண்ட வசனம் உணர்த்துகிறது.

தன்னை நேரில் காண வேண்டிய நபி மூஸா (அலை) அவர்களுக்கு இவ்வுண்மையை விளங்க வைக்க , " நீர் அமர்ந்து கொண்டிருக்கும் இம்மலையை உற்று நோக்கும் .அது தனது இடத்தில் நிலைபெற்றால் , அப்பொழுது நீர் என்னைப் பார்க்கலாம் என்று இறைவன் கூறினான்.
அப்பொழுது அவருடைய இரட்சகனின் ஒளி அம்மலையில் தோன்றியது.
அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள் இதுபற்றி அறிக்கையில், "அல்லாஹ் வின் பேரொளி ஓர் ஊசி துவாரத்தின் அளவுதான் அம்மவையில் தோன்றிற்று " எனக் குறிப்பிடுகிறார்கள்
அவ்வளவுதான். அதனைத் தாங்கிக் கொள்ள சக்தியற்ற அம்மலை கருகித் தவிடு பொடியாகி விட்டது.
இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியாத நபி மூஸா (அலை) அவர்கள் மயக்கமுற்று கீழே வீழ்ந்து விட்டார்கள்.

பனீ இஸ்ரவேலர்கள் , நபி மூஸா (அலை) அவர்களிடம் , " இறைவன் உங்களிடம் பேசுவதை நாங்களும் செவியேற்க வேண்டும் " என்று அடம் பிடித்தனர். இறைவனிடம் இது விஷயமாக பேசி, அவர்களை கூட்டிக் கொண்டு வந்து இறைப் பேச்சை அவர்களும் கேட்க இறைவனின் உத்தரவை நபியவர்கள் பெற்றார்கள்.
மூஸா (அலை) அவர்கள் பனீ இஸ்ரவேலர்களில் 70 பிரபலமானவர்களை தேர்ந்தெடுத்து , தூர்ஸீனா மலைக்ககுக் கூட்டிச் சென்றார்கள்
நபியவர்கள் மலையை நெருங்கியதும் மேகத்தின் தூண்கள் போன்று வெண்மேகம் அவர்கள் மீது அமர்ந்து மொத்த மலையையும் அது மூடிக் கொண்டது .

தன்னுடன் வந்த 70 பேர்களையும் படரும் மேகத்திற்குள் புகுந்துக் கொள்ள அழைத்தார்கள் .அவர்களும் பயந்த வண்ணம் நபியின் அருகிலேயே மேகத்திற்குள் நின்றனர் .
பிறகு மூஸா (அலை) அவர்கள் இறைவனிடம் பேசினார்கள் . அல்லாஹ் நபியவர்களிடம் பேசும்போதெல்லாம் நபியின் முகத்தில் இலங்கும்படியான பிரகாசத்தை 70 பேர்களால் ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அத்தனை பிரகாசம் . அத்தனை பிரகாசம் ஆனாலும் இறைவன் நபியவர்களிடம் பேசிய பேச்சை 70 பேர்களும் செவியேற்றனர் .

உடனே பனீ இஸ்ரவேலர்கள். "இறைவனின் பேச்சைத்தான் கேட்டோம் இறைவனை நேரில் பார்க்காமல் உம்மை விசுவாசிக்க மாட்டோம் " என்று அடுத்து பிடிவாதமாக அடம் பிடித்தார்கள், வந்தது வினை .அப்பொழுது இறைவன் **"அஸ்ஸாஇகத்"** என்ற கரிக்கக் கூடிய ஒரு வகை நெருப்பு. அதில் சப்தமும் இருக்கும் . வானத்திலிருந்து கீழே இறங்கி , புத்தியையும் , அறிவையும் போக்கி. மரணத்தை உண்டாக்ககூடிய பயங்கரமான ஒவ்வொன்றுக்கும் "ஸாஇகத்" என்று சொல்கிறார்கள் .இறங்கியது அந்த நெருப்பு .

70 பேர்களும் பிணமாக கிடந்ததைப் பார்த்து நபி மூஸா (அலை ) அவர்கள் பதறியடிதது அழுதார்கள் . " இறைவா இந்த 70 பேர்களின் மரணத்திற்கு அம்மக்களிடம் நான் என்ன பதில் சொல்வேன்?" நீ அழிக்க வேண்டும் என்று முடிவு செய்திருந்தால் , காளை மாட்டுக்காரர்களுடன் சேர்த்து அன்றைக்கே அழித்திருக்கலாமே .. நான் கூட்டிக் கொண்டு வந்த பிறகு நீ அவர்களை மரணிக்கச் செய்ததால் வீண் சந்தேகமும் கொலை பலியும் என் மீது அல்லவா ஏற்படும் என்று இறைவனிடம் அழுதார்கள் . அவர்களை நீ உயிர்ப்பித்து தர வேண்டும். மன்றாடினார்கள்

இறைவனும் நபியவர்களுக்காக அந்த 70 பேர்களையும் மீண்டும் உயிர்ப்பித்துக் கொடுத்தான் . " அன்றி நீங்கள் மூஸாவை நோக்கி "நாங்கள் அல்லாஹ்வைக் கண்கூடாகக் காணும் வரையில் உங்களை நம்ப மாட்டோம் " என்று கூறிய போது நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே உங்களை பெரும் சப்தம் பீடித்துக் கொண்டது " குர்ஆன் ( 2 : 55 )

பனீ இஸ்ரவேலர்கள் அல்லாஹ்வின் மீது பிரியத்தால் கேட்கவில்லை . விஷயத்தை தெரிந்து நேர்வழி பெற்று விட வேண்டும் என்ற நோக்கத்திலும் கேட்கவுமில்லை , நபியின் மீது சந்தேகம் , நபியைப் பொய்ப் பிக்குவதற்காகவும் அதனால் வேண்டுமென்ற வம்புக்காக கேட்டனர் என்பதாக குர்ஆன் ஆய்வாளர்கள் கருத்து தெரிவிக்கின்றனர்.

அட , மூஸா நபியின் எதிரியான ஃபிர்அவ்னும் இறைவனை நேரடியாக கண்ணால் பார்க்க எத்தனித்தான் .
ஃபிர்அவ்ன் (தன் மக்களிலுள்ள தலைவர்களை நோக்கி ,) " தலைவர்களே ... என்னைத் தவிர வேறொரு இறைவன் உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை . ஹாமோனே..... களிமண் (ணால் செய்த செங்கல் ) சூளைக்கு நெருப்பு மூட்டு . (அச் செங்கவைக் கொண்டு வானளாவ ) மாளிகை நீ கட்டு (அதில் ஏறி ) மூஸாவினுடைய இறைவனை நான் பார்க்க வேண்டும் (அவர் தனக்கு வேறு இறைவன் இருப்பதாகக் கூறுகிறாரே ) இவ்விஷயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன்" என்று கூறினான் . குர்ஆன் ( 28 : 38)

உடனே ஹாமான் பல்லாயிரக்கணக்கான இஸ்ரவேலர்களைக் குடும்பத்தோடு கொடுமைப்படுத்தி , செங்கல் அறுக்கச் செய்து ஏழாண்டுகள் வேலை செய்து , ஏழாயிரம் முழம் உயரமும் மூவாயிரம் முழம் அகலமும் கொண்ட கோபுரத்தை எழுப்பினான் .
ஃபிர்அவ்ன் அதில் ஏறி தன் அம்பறாத் துணிலிருந்து அம்புகளை ஒன்றன் பின் ஒன்றாக எடுத்து விண்ணை நோக்கி எய்தான் அவைகள் இரத்தத்தில் தோய்ந்து கீழே விழுந்தன .

அது கண்டு ஃபிர்அவ்ன் " நான் மூஸாவின் இறைவனைக் கொன்று விட்டேன்." என்று தன் தலைவர்களிடம் கூறினான்.
கொஞ்ச நாளில் விண்ணை முட்டும் கோபுரம் பேரொலியுடன் கீழே விழுந்தது
அதன் ஒரு துண்டு இலட்சக் கணக்கான படை வீரர்களை கொன்றது
இன்னொரு துண்டு மனப்பூர்வமாக கோபுரத்திற்கு உதவிய கிப்தியாக்கள் ஒருவரையும் உயிரோடு விடவில்லை .
ர.ரா

Rahmath Rajakumaran

அல்லாஹ்வை பார்க்க முடியுமா?
இவ்வுலகில் யாரும் அல்லாஹ்வைப்ப பார்க்க முடியாது.
அல்லாஹ் கூறுகிறான்:
لَا تُدْرِكُهُ الْأَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَارَ وَهُوَ اللَّطِيفُ الْخَبِيرُ(103) سورة الأنعام
அவனை கண்கள் பார்க்காது. அவனோ கண்களைப் பார்க்கிறான். (al quran 6 : 103)
وَلَمَّا جَاءَ مُوسَى لِمِيقَاتِنَا وَكَلَّمَهُ رَبُّهُ قَالَ رَبِّ أَرِنِي أَنظُرْ إِلَيْكَ قَالَ لَنْ تَرَانِي وَلَكِنْ انظُرْ إِلَى الْجَبَلِ فَإِنْ اسْتَقَرَّ مَكَانَهُ فَسَوْفَ تَرَانِي فَلَمَّا تَجَلَّى رَبُّهُ لِلْجَبَلِ جَعَلَهُ دَكًّا وَخَرَّ مُوسَى صَعِقًا فَلَمَّا أَفَاقَ قَالَ سُبْحَانَكَ تُبْتُ إِلَيْكَ وَأَنَا أَوَّلُ الْمُؤْمِنِينَ(143) سورة الأعراف
நாம் வாக்களித்த இடத்துக்கு மூஸா வந்து. அவரிடம் அவரது இறைவன் பேசிய போது"என் இறைவா! (உன்னை) எனக்கு காட்டுவாயாக! நான் உன்னைப் பார்க்க வேண்டும்". எனக்கூறினார் . அதற்க்கு(இறைவன்) "என்னை நீர் பார்க்கவே முடியாது எனினும் அந்த மலையைப் பார்பீராக அது அதற்க்குரிய இடத்தில் நிலையாக இருந்தால் நீர் என்னைப் பார்க்கலாம்". என்று கூறினான். அவரது இறைவன் அந்த மலைக்குக் காட்சி தந்த போது அதைத் தூளாக்கினான். மூர்ச்சித்து விழுந்தார். அவர் தெளிவடைந்த போது "நீ தூயவன். உன்னிடம் மன்னிப்புக் கேட்கிறேன். நம்பிக்கை கொண்டோரில் நான் முதலாமவனாக இருக்கிறேன்" எனக் கூறினார்.(Al quran 7:143)
நபி (ஸல்) அவர்களிடம் "நீங்கள் உங்கள் இறைவனைப் பார்த்ததுண்டா?" என்று கேட்கப்பட்ட போது "அவனோ ஒளியானவன் நான் அவனை எப்படிப் பார்க்கமுடியும்"என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூதர் (ரலி)
(நூல் முஸ்லிம் 261)
மறுமையில் நல்லடியார்கள் இறைவனைக் காண்பார்கள்.
وُجُوهٌ يَوْمَئِذٍ نَاضِرَةٌ(22)إِلَى رَبِّهَا نَاظِرَةٌ(23) سورة القيامة அந் நாளில் சில முகங்கள் மலர்ந்திருக்கும். தமது இறைவனைப் பார்த்துக் கோண்டிருக்கும்.(Al quran 75 : 22, 23)
صحيح البخاري ـ حسب ترقيم فتح الباري - (6 / 56)
4581- حدثني محمد بن عبد العزيز ، حدثنا أبو عمر حفص بن ميسرة ، عن زيد بن أسلم ، عن عطاء بن يسار ، عن أبي سعيد الخدري ، رضي الله عنه ، أن أناسا في زمن النبي صلى الله عليه وسلم قالوا : يا رسول الله هل نرى ربنا يوم القيامة قال النبي صلى الله عليه وسلم نعم هل تضارون في رؤية الشمس بالظهيرة ضوء ليس فيها سحاب ؟ قالوا : لا قال وهل تضارون في رؤية القمر ليلة البدر ضوء ليس فيها سحاب ؟ قالوا : لا قال النبي صلى الله عليه وسلم ما تضارون في رؤية الله عز وجل يوم القيامة إلا كما تضارون في رؤية أحدهما
.
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் மக்கள் சிலர் "அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா? என்று கேட்டனர் நபிஸல் அவர்கள் ஆம் காண்பீர்கள் மேகமே இல்லாத நன்பகல் வெளிச்சத்தில் சூரியனைப் பார்க்க ஒருவரையொருவர் முண்டியடிப்பார்களா?"என்று கேட்டார்கள் மக்கள் இல்லை என்று கூறினார்கள் நபி ஸல் அவர்கள் மேகமே இல்லாத பவ்ர்னமி இரவின் வெளிச்சத்தில் நிலவைப் பார்பதற்க்கு ஒருவரை ஒருவர் முண்டியடிப்பீர்களா? என்று கேட்டனர் மக்கள் அப்போது இல்லை என்று பதிலளித்தார்கள் நபி ஸல் அவர்கள் இவ்வரண்யில் ஒன்றைப் பார்க்க நாங்கள் முண்டியடித்துச் செல்லாதது போலவே மறுமை நளில் கண்ணியமும் மகத்துவமும் மிக்க அல்லாஹ்வைக் காணவும் முண்டியடிக்க மாட்டீர்கள் என்று கூறினார்கள்.
அறிவிப்பவர் அபூ ஸயீத் அல் குத்ரி ரலி
ஆதாரம் நூல் புஹாரி 4581
காபிர்கள் மறுமையில் இறைவனைப் பார்ப்பதை விட்டும் திரையிடப்படுவார்கள்.
كَلَّا إِنَّهُمْ عَنْ رَبِّهِمْ يَوْمَئِذٍ لَمَحْجُوبُونَ(15) سورة المطففين
அந்நாளில் அவர்கள் தமது இறைவனைப் பார்ப்பதை விட்டும் திரையிடப்படுவார்கள்(al quran 83 :15)

## யுத்த களத்தில் இறை யுக்தி
## திருக்குர்ஆனின் 10 ஜுஸ்வு வஃலமூ



ஒளிக் கதிர்கள் ஒரு பொருளின் மீது பட்டு அவை பிரதிபலித்து நம் கண்களை வந்தடைந்தால் அப் பொருளை நம்மால் பார்க்க முடியும் .
இந்த ஒளிக் கதிர்கள் நேர் கோட்டிலேயே செல்பவை . எனவே தூரத்தில் நமது பார்வையைச் செலுத்தும் போது அடிவானத்திறகு மேலே உள்ள பொருட்களைத்தான் நம்மால் காணமுடியும் .
பார்க்கப்படும் பொருட்களை வைத்து நம் பார்வையும் மூளையும் இணைந்து நம் மனதில் ஒரு கருத்தை பதிவு செய்து விடும் . அதைத்தான் நாம் நம் கண்ணால் பார்த்த உண்மை என்று நம்பி விடுகிறோம் .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ் ...

وَ اِذْ يُرِيْكُمُوْهُمْ اِذِ الْتَقَيْتُمْ فِىْٓ اَعْيُنِكُمْ قَلِيْلًا وَّيُقَلِّلُكُمْ فِىْٓ اَعْيُنِهِمْ لِيَـقْضِىَ اللّٰهُ اَمْرًا كَانَ مَفْعُوْلًا وَاِلَى اللّٰهِ تُرْجَعُ الْاُمُوْرُ
பத்ரு யுத்தத்தில் அவர்களும நீங்கள்களும் சந்தித்துக் கொண்ட சமயத்தில் அவர்களுடைய தொகை உங்கள் கண்களுக்குக் குறைவாகவும் உங்களுடைய தொகையை அவர்களின் கண்களுக்கு குறைத்துக் காண்பித்ததெல்லாம் அல்லாஹ் முடிவு செய்த காரியம் நடைபெற்று அவர்களை அழித்துத் தீருவதற்காகத்தான் எனபதை நீங்கள் அறிந்துக் கொள்ளுங்கள் அல்லாஹ்விடமே எல்லா காரியங்களும் சென்று முடிவடைகின்றன (குர்ஆன் 8 : 44)

பத்ரு யுத்த களத்தில் இரு படையினரும் சந்தித்த பொழுது முஸ்லிம்களின் கண்களுக்கு அவர்களுடைய எதிரிகளின் எண்ணிக்கையை மிகக் குறைவாக இறைவன் காட்டினான் .
பத்ரு யுத்தத்தில் எதிரிகளைக் குறித்து **இப்னு மஸ்ஊத் ரலி** அவர்கள் பக்கத்தில் இருந்த ஸஹாபியை நோக்கி, "எதிரிகள் 70 பேர்கள் இருப்பார்களா ? " என்று கேட்டதற்கு

அந்த சஹாபி, " 100 பேராக் காண்கிறேன் " என்றார்
எதிரிகளில் ஒருவரைக் கைதியாக பிடித்து , "நீங்கள் எத்தனை பேர்கள் ?" எனக் கேட்ட போது , " நாங்கள் சுமார் 1000 பேர்கள் வநதுள்ளோம் " என்றார்
இவ்வாறே எதிரிகளின் கண்களுக்கும் முஸ்லிம்களைக் குறைவாக இறைவன் காட்டினான் .
எதிரிகளின் தலைவன் அபூஜஹில் கூறுகையில் , " முஹம்மதும் அவருடைய தோழர்களும் அறுக்கப்படும் ஓர் ஒட்டகத்தின் அளவே உள்ளனர் . ஆகவே அவர்களைக் கொல்லாதீர்கள் கயிறுகளில கட்டி இழுத்து வாருங்கள் " என்றான் .

யுத்தத்தில் கண்ணால் கண்ட உண்மை 70 பேர் விசாரித்த உண்மை
100 பேர் ஆனால் இறைவன் நாடிய உண்மை 1000 பேர்.
ஒரு படையினருக்கு மற்றைய படையினரை இப்படி குறைவாக இறைவன் ஏன் காட்ட வேண்டும் ?
1) முஸ்லிம்களுடைய கண்களுக்கு எதிரிகளைக் குறைவாகக் காட்டும் போது , துணிச்சலுடனும் , வீரத்துடனும் அவர்கள் எதிரிகளுடன் போர் செய்வர் என்பதாகும் .
2) எதிரிகளுடைய கண்களுக்கு முஸ்லிம்களை குறைவாகக் காட்டும் போது மிக இலேசாக மதித்து , ப்பூ..... இத்தனை குறைவான நபர்கள்தானா .. என்றெண்ணி , சரியான ஆயத்தமின்றி சாதாரணமாகத் தாக்க வந்து , அவர்கள் அனுபவிக்க வேண்டிய தோல்வியை அனுபவிப்பர் .
இவைதான் யுத்தத்தின் யுக்தி குறைத்துக் காட்டுவதின் உள்நோக்கம் இக்கருத்தினையே இவ்வசனமும் எடுத்துக் காட்டுகிறது.

ர.ரா

எந்நிலையிலும் உண்மை பேசுவேன் .
திருக்குர்ஆனின் 11 ஜுஸ்வு (11 பாகம்)
( யஃததிரூன் )



**ஹஜ்ரத் கஅபு பின் மாலிக் (ரலி)** கூறுகிறார்கள் :
"நான் பத்ரு யுத்தத்தைத் தவிர்த்து வேறு எந்த யுத்தத்திலும் பெருமானாரை விட்டுப் பின் வாங்கியதே கிடையாது .

"தபுக் " யுத்தம் நடைபெற இருந்த சமயம் என்னிடம் இரண்டு வாகனங்கள் இருந்தன .நான் சற்று வசதிப் படைத்தவன் .
நபி (ஸல்) அவர்கள் தபூக் யுத்தத்திற்குச் செல்வதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்கள் .அனைவரும் அதற்காகப் புறப்பட வேண்டுமென்ற அறிவிப்பையும் கொடுத்திருந்தார்கள்.
ஆனால் , அச்சமயம் பேரீச்சம் பழம பறிக்கும் காலமாக இருந்தது. மற்றவர்கள் எல்லாம் யுத்தத்திற்குச் செல்வதற்குரிய ஏற்பாட்டில் இருந்தனர் . நானோ சற்று பின்னர் போய்ச் சேர்ந்து கொள்ளலாம் . அதுவும் நம்மிடம் இரண்டு வாகனங்கள் இருக்கின்றன. அவர்களெல்லாம் முன்னர் போகட்டும் என்று இருந்து விட்டேன் .பெருமானார் (ஸல்) அவர்களும் மற்ற வீரர்களும் புறப்பட்டு விட்டனர்.

அக்காலத்தில் வீரர்களைப் பதிவு செய்து வைத்திருக்கும் ஏடுகள் எதுவும் கிடையாது அதனால் யார் வந்தார்கள், யார் வரவில்லை எனத் தெரிந்து கொள்ள முடியாது . முஸ்லிம்கள் அதிக அளவு இருந்தனர் .இன்று போய்ச் சேர்ந்து கொள்ளலாம் . நாளைபோய் சேர்ந்து கொள்ளலாம் என்றே நான் இருந்து விட்டேன். பின்னர் கவனித்தபொழுது மதீனாவில் இருந்து நயவஞ்சகர்களில் யாரும் இந்த யுத்தத்திற்குச் செல்லவில்லை. தக்க காரணம் இருந்தவர்களும் செல்லவில்லை .

நான் காரணம் இன்றி செல்லாமலிருந்தது என் மனதில் பெருங்கவலையை உண்டாக்கி விட்டது.பெருமானார் (ஸல்) அவர்களும் வீரர்களும் தபூக் சென்றடைந்து விட்டனர் அங்கு அவர்கள் மற்றவர்கள் மத்தியில் "கஃபுக்கு என்ன நேர்ந்தது ? " என்று கேட்டிருக்கிறார்கள் .பனிமஸ்லமா வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் , "அல்லாஹ்வின் தூதரே ! அவருடைய சுகவாழ்வும் , ஆடை அலங்காரமும் அவரைத் தடை செய்து விட்டன " என்று கூறி இருக்கிறார் .
அதற்கு முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள் "நீர் சொல்வது சரி அல்ல " என்று கூறி விட்டு நபி (ஸல்) அவர்களை நோக்கி , "யா ரசூல்லாஹ் ! அவர் சம்பந்தமாக நன்மைத் தவிர வேறொன்றையும் நாம் அறியவில்லை " என்று கூறியிருக்கிறார்.

பெருமானார் (ஸல்) அவர்கள் தபூக்கிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி எனக்குக் கிடைத்தது .மிகவும் கவலை அடைந்தேன். அவர்களிடம் நாம் தபூக்கிற்கு வராமலிருந்ததற்காக என்ன காரணத்தைக் கூறுவது என்ற சிந்தனையிலிருந்தேன் . ஏதாவதொரு பொய்யைக் கூறி அவர்களுடைய வெறுப்பிலிருந்து தப்பித்துக் கொள்ளலாமா என்றும் எண்ணினேன்.
பெருமானார் (ஸல்) அவர்கள் ஊருக்குள் வந்து விட்டார்கள் . எக்காரணத்தைக் கொண்டும் பெருமானார் (ஸல்) அவர்களிடம் பொய் சொல்லவே கூடாது என்று என் மனதில் முடிவு செய்து உறுதி எடுத்து விட்டேன்.

பெருமானார் (ஸல்) அவர்கள் பிரயாணத்தில் இருந்து திரும்பி ஊருக்குள் நுழைந்ததும் முதலில் பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்துக்கள் தொழுவார்கள். பின் மனிதர்கள் மத்தியில் வந்து அமருவார்கள் .
இந்த யுத்தத்தில் கலந்து கொள்ளாமல் பின்தங்கிய சுமார் எண்பது பேர்கள் பெருமானாரிடம் வந்து சில சாக்குப் போக்குகள் கூறினார்கள் .அவற்றை உறுதிப்படுத்த சத்தியமும் செய்தனர்.
அவர்களின் வெளிநிலையை மட்டும் கவனித்த நபிகளார் சாக்குப் போக்குகளை ஏற்றுக் கொண்டு அவர்களுக்காக இறைவனிடம் மன்னிப்புத் தேடினார்கள் அவர்களுடைய அந்தரங்களை அல்லாஹ்விடம் ஒப்படைத்து விட்டார்கள்

நான் அவர்களிடம் வந்து சலாம் கூறினேன் .ஆத்திரமடைந்தவர்கள் போன்று முறுவலித்தார்கள். "அருகில் வாரும் " என்றார்கள் . அவர்கள் முன்னால் சென்று அமர்ந்தேன் .
"நீர் ஏன் யுத்தத்திற்கு வராமல் பின்தங்கினீர் ?"

"ஆம் ! நான் வராமல் இருந்து விட்டேன். நீங்களல்லாத வேறு ஒருவராக இருந்தால், அவருடைய கோபத்தில் இருந்து தப்பிப்பதற்கு ஏதாவதொரு பொய்க் காரணத்தைக் கூறி விடுவேன் உங்களிடம் இன்று நான் ஒரு பொய்யைக் கூறி அதனை நீங்கள் ஏற்றுக் கொண்டாலும் , அதனை அல்லாஹ் வெளியாக்கி நீங்கள் என்னை முற்றிலும் வெறுக்குமாறு செய்து விடுவான்.
ஆனால் , உண்மையையே நான் தாங்களிடம் சொல்லிவிட்டால் நீங்கள் என் மீது கோபங்கொள்வீர்கள் ஆயினும் அல்லாஹ் என்னை மன்னிப்பான் என்று முழு நம்பிக்கை வைக்கிறேன் "

ஆகவே, அல்லாஹ்வின் மீது பிரமாணமாக ! எனக்கு யுத்தத்திற்கு வர எவ்விதத் தங்கடமும் கிடையாது உங்களை விட்டு நான் பிந்தியபொழுது நான் நல்ல சக்தியுடையவனாகவே இருந்தேன் "

" இவர் நிச்சயமாக உண்மையே கூறுகின்றார் " என்று கூறிவிட்டு , என்னை நோக்கி, "நீர் இங்கிருந்து போய் விடும் . அல்லாஹ் உம் சம்பந்தமாக ஒரு தீர்ப்பு வழங்கட்டும் " என்று கூறிவிட்டார்கள் .அங்கிருந்து வெளியேறிவிட்டேன்.
சிலர் என்னிடம், "நயவஞ்சகர்கள் பொய்க் காரணங்களைக் கூறி தப்பித்தது போல் நீரும் தப்பித்தாலென்ன ? உமக்கும் அவர்களைப்போல் பெருமானார் (ஸல்) அவர்கள் பாவ மன்னிப்புக் கோரியிருப்பார்கள் அல்லவா ? என்று இரகசியமாக என்னிடம் கூறினர் .
அவர்கள் திரும்பத் திரும்ப இவ்வாறு என்னிடம் கூறியதைக் கேட்ட நான் மீண்டும் பெருமானாரிடம் சென்று பொய் சொல்லித் தப்பித்து வந்து விடலாமா என்று எண்ணினேன்.
அவர்களை நோக்கி , " என் போன்ற இந்த நிலை வேறு யாருக்காவது ஏற்பட்டிருக்கிறதா ?"
"ஆம் . மிராரத் பின் ரபீஉ , ஹிலால் பின் உமைய்யா அன்சாரி இந்த இரு நபர்களுக்கும் இதே நிலை ஏற்பட்டிருக்கிறது . அவர்கள் இருவரும் உம்மைப் போன்ற பெருமானார் (ஸல்) அவர்களிடம் உண்மையைக் கூறி இருக்கிறார்கள் " என்று கூறினார்கள் .

பத்ரு யுத்தத்தில் சேர்ந்து போரிட்ட இரு நல்லவர்களைக் குறித்தே அவர்கள் கூறியதால் நான் இப்பொழுது இருக்கும் உண்மை நிலையிலேயே உறுதியாக இருப்பதென்று முடிவு செய்து கொண்டேன் .
இதர முஸ்லிம்கள் யாரும் எங்கள் மூவருடன் பேசக்கூடாது என்று பெருமானார் (ஸல்) அவர்கள் பொது அறிவிப்பு செய்து விட்டார்கள் . எல்லோரும் எங்கள் மூவரையும் வெறுத்தனர் .இந்த அகன்ற பூமியே எனக்கு நெருக்கடி மிக்கதாக மாறிவிட்டது.
மற்ற இருவரும் கவலை மிகுதியால் அழுது கொண்டு வீட்டங்கி விட்டனர். நான் சக்தி மிக்க வாலிபனாதலால் வெளியில் நடமாடிக் கொண்டிருந்தேன் கடைவீதிக்கு செல்வேன் எவரும் என்னுடன் பேச மாட்டார்கள் .

பெருமானார் (ஸல்) திருச்சமூகம் வந்து ஸலாம் கூறுவேன் .பதில் ஸலாம் கூறுவதன் மூலம் அவர்களுடைய இரு உதடுகளும் அசைகின்றனவா எனப் பார்ப்பேன் .அவர்களுக்கு அருகில் நின்று தொழுவேன் .என்னைப் பார்க்கிறார்களா என்று ஆவலுடன் கவனிப்பேன் .நான் அவர்களைப் பார்க்காத போது என்னை அவர்கள் பார்ப்பார்கள் .அவர்கள் என்னைப் பார்க்காதபோது நான் அவர்களைப் பார்ப்பேன்.
யாருக்கு நான் ஸலாம் கூறினாலும் அவர்கள் எனக்கு பதில் கூற மாட்டார்கள் பேசவும் மாட்டார்கள் .
இதனிடையே எனது சிறிய தந்தையின் மகன் அபூகதாதாவின் தோட்டத்திற்குச் சென்றேன் . அவரை நான் மிகவும் நேசித்திருந்தேன் .அவர் என் மீது ரொம்பவும் பிரியமாக இருப்பார் . ஸலாம் கூறினேன். அவர் எனக்கு பதில் கூற வில்லை. அவரிடம் நான் பேசிப் பார்த்தேன் . மௌனமாக இருந்து விட்டார் . எனக்கு அழுகை அழுகையாக பீறிட்டு வந்தது.

ஒரு நாள் கஸ்ஸானிய அரசரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது . அதில்
"உமது தோழர் உமக்கு அநீதி செய்திருப்பதாக எனக்குச் சேதி எட்டியிருக்கிறது . நீர் நம்மிடம் வந்து தாராளமாக சேர்ந்து கொள்ளலாம் உமக்கு வேண்டிய உதவி செய்கிறோம்" என எழுதப்பட்டிருந்தது .
"இதுவும் ஒரு சோதனைதான் " என்றெண்ணி அதனை தீயிலிட்டு கொளுத்தி விட்டேன் .
இப்படியே 40 நாட்கள் கடந்து விட்டன. பெருமானார் (ஸல்) அவர்களிடமிருந்து ஒரு தூதுவர் வந்து , " நீங்கள் உங்கள் மனைவியரை விட்டுப் பிரிந்து இருக்க வேண்டும்" என்று பெருமானார் (ஸல்) உத்திரவிட்டார்கள் .உடனேயே என் மனைவியை அவள் வீட்டிற்கு அனுப்பி விட்டேன் . மன வேதனையில் இருக்கும் போது கொஞ்சம் ஆறுதலாக பேசிக் கொண்டிருந்த மனைவியும் பிரித்து வைக்கப்பட்டது .

ஐம்பது இரவுகள் கடந்து விட்டன . அன்று என் வீட்டின் மாடியில் அமர்ந்திருந்தேன் என்னுடைய செயலை நினைத்து நினைத்து வருந்தினேன் . நபிகளார் முகத்தை ஏறெடுத்தும் பார்க்க முடியாத எண்ணி எண்ணி இவ்வுலகமே நெருக்கடிக்குள்ளாகி , என் உயிரையும் வெறுத்தேன்.
திடீரென எங்கிருந்தோ ஒரு குரல் ஒலித்தது ." கஅபே ! நற்செய்தி பெறுவீராக ! என்றதும் இறைவனுக்காக ஸுஜூதில் வீழ்ந்தேன் .
وَّعَلَى الثَّلٰثَةِ الَّذِيْنَ خُلِّفُوْا حَتّٰۤى اِذَا ضَاقَتْ عَلَيْهِمُ الْاَرْضُ بِمَا رَحُبَتْ وَضَاقَتْ عَلَيْهِمْ اَنْفُسُهُمْ وَظَنُّوْۤا اَنْ لَّا مَلْجَاَ مِنَ اللّٰهِ اِلَّاۤ اِلَيْهِ ثُمَّ تَابَ عَلَيْهِمْ لِيَتُوْبُوْا ؕ اِنَّ اللّٰهَ هُوَ التَّوَّابُ الرَّحِيْمُ

(அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்துத் தீர்ப்புக் கூறாது) விட்டு வைக்கப்பட்டிருக்கும் மூவரையும் (அல்லாஹ் மன்னித்து விட்டான்.) பூமி இவ்வளவு விசாலமாக இருந்தும் (அது) அவர்களுக்கு மிக்க நெருக்கமாகி அவர்கள் உயிர் வாழ்வதும் மிக்க கஷ்டமாகி விட்டது. அல்லாஹ்வையன்றி அவனை விட்டுத் தப்புமிடம் அவர்களுக்கு இல்லவே இல்லை என்பதையும் அவர்கள் நிச்சயமாக அறிந்து கொண்டனர். ஆதலால், அவர்கள் (பாவத்தில் இருந்து) விலகிக் கொள்வதற்காக அவர்(களுடைய குற்றங்)களை மன்னித்(து அவர்களுக்கு அருள் புரிந்)தான். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 9:118)

பெருமானார் (ஸல்) அவர்கள் ஃபஜ்ருத் தொழுகையை முடித்ததும் இந்த இறங்கிய வசனத்தை ஓதிக் காண்பித்து எங்களது பாவங்களை இறைவன் மன்னித்து விட்டதாகக் கூறினார்கள் என்ற நற்செய்தியை எங்களுக்கு மக்கள் அறிவித்தனர் .

வாகனத்தில் ஏறி விரைந்து , ஒருவர் என்னிடம் வந்தார் .அவருடைய குரல்தான் என்னிடம் முதலில் ஒலித்தது. அவருக்கு என் உடைகளைக் களைந்து அப்படியே கொடுத்தேன். என் வாழ்நாளில் புனித மிக்க நாள் .
பள்ளிவாசலுக்குச் சென்றேன் . பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினேன் .பதில் கூறிய அவர்களுடைய திருமுகம் சந்தோஷ மிகுதியால் இலங்கிக் கொண்டிருந்தது .
" நீர் பிறந்த நாள் முதல் இதுவரை இத்தகைய மகிழ்ச்சியை அனுபவித்திருக்க மாட்டீர் " என்று நபிகளார் கூறினார்கள்.
"இந்த மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சிக்காக - எனது பாவங்கள் மன்னிக்கப்பட்டதற்கு நன்றியாக எனது பொருள்கள் அனைத்தையும் அல்லாஹ்வுக்காகக் கொடுக்கிறேன் " என்றேன் .
"அத்தனையும் வேண்டாம் ; ஓர் அளவு நீரும் வைத்துக் கொள்ளும் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
"அல்லாஹ்வின் தூதரே ! நான் உண்மை மட்டும் கூறியதால்தான் , அல்லாஹ் என்னைக் காப்பாற்றினான் .இனி உலகில் வாழுங்காலமெல்லாம் நான் உண்மையைத் தவிர வேறெதையும் பேசவே மாட்டேன் " என்று மன உறுதியுடன் கூறினேன் "

திருக்குர்ஆன் விடும் சவால்.
திருக்குர்ஆனின் 12 ஜுஸ்வு (12வது பாகம் ) (வமாமின் தாப்பாஹ் )



اَمْ يَقُوْلُوْنَ افْتَـرٰىهُ‌ قُلْ فَاْتُوْا بِعَشْرِ سُوَرٍ مِّثْلِهٖ مُفْتَرَيٰتٍ وَّ ادْعُوْا مَنِ اسْتَطَعْتُمْ مِّنْ دُوْنِ اللّٰهِ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ
(நம்முடைய தூதர்) இதனைப் பொய்யாகக் கற்பனை செய்து கொண்டார் என அவர்கள் கூறுகின்றனரா?
அவ்வாறாயின் (நபியே! அவர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள்: இதைப்போன்ற பத்து அத்தியாயங்களையேனும் நீங்கள் கற்பனை செய்து கொண்டு வாருங்கள்.
அல்லாஹ்வையன்றி உங்களுக்குச் சாத்தியமான அனைத்தையும் இதற்காக அழைத்து (உங்களுக்குத் துணையாக)க் கொள்ளுங்கள். மெய்யாகவே (இது கற்பனை என்று) நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் (இவ்வாறு செய்யலாமே!) (அல்குர்ஆன் : 11:13)

وَإِن كُنتُمْ فِي رَيْبٍ مِّمَّا نَزَّلْنَا عَلَىٰ عَبْدِنَا فَأْتُوا بِسُورَةٍ مِّن مِّثْلِهِ وَادْعُوا شُهَدَاءَكُم مِّن دُونِ اللَّهِ إِن كُنتُمْ صَادِقِينَ
2:23. இன்னும், (முஹம்மது ((ஸல்)) என்ற) நம் அடியாருக்கு நாம் அருளியுள்ள (வேதத்)தில் நீங்கள் சந்தேகம்உடையோராக இருப்பீர்களானால், (அந்த சந்தேகத்தில்) உண்மை உடையோராகவும் இருப்பீர்களானால் அல்லாஹ்வைத் தவிர உங்கள் உதவியாளர்களை (யெல்லாம் ஒன்றாக)அழைத்து (வைத்து)க்கொண்டு இது போன்ற ஓர் அத்தியாயமேனும் கொண்டு வாருங்கள்.

மேற்கூறிய வசனத்தை யார் படித்தாலும் படிக்கும் பொழுது அவரை அறியாமலேயே அவரது உடலில் மின் அதிர்ச்சி ஏற்படுவதை உணர்வார்.
காரணம் உலகில் இதுவரை எழுதப்பட்ட எந்த நூலிலும் எந்த நூலாசிரியரும்
இப்படிப்பட்ட ஒரு சவாலை - அறை கூவலை மனித இனத்துக்கு முன் வைத்ததில்லை.
இந்த அறை கூவல் இதுவரை, பதினான்கு நூற்றாண்டுகளாக உலகின் முன் இருந்து கொண்டு தான் இருக்கிறது. ஆனால் இன்று வரை இந்த சவால் எவராலும் எதிர் கொள்ளப்படவில்லை. குர்ஆனில் பல்வேறு இடங்களில் இந்த அறிவிப்பு திரும்ப திரும்ப இடம் பெற்றுள்ளது.

ஜெர்மனியில் கம்ப்யூட்டரில் திருக்குர்ஆனின் மொத்தம் உள்ள **6666** வசனங்களையும் கொடுத்து விட்டு **6666** க்குப் பிறகு உள்ள வசனங்களை எப்படி இருக்கும் என்கிற தேர்வு செய்யும் முயற்சியும் இதுவரை தோல்வியில் முடிந்தாம் .

குர்ஆன் விடும் சவால் மாதிரி ஓர் அறைக்கூவல் விடுவதற்கு எந்த நூலாசிரியரும் துணிவு கொள்ள மாட்டார். ஏனெனில் ஒரு மனிதன் எழுதுகின்ற நூலைப் போல் இன்னொரு மனிதர் அதை விடவும் சிறப்பாக இயற்றி விட முடியும்.
ஆனால்மனித மூளை இது போன்ற ஒரு நூலை இயற்றி விட முடியாது. முடிந்தால் இயற்றட்டும் பார்க்கலாம். .
இது மனிதனிடமிருந்து அல்ல, இறை அர்ஷிலிருந்து வெளிப்பட்ட வேதம். இறைவனிடமிருந்து எது வந்ததோ அதற்கு மனிதனால் விடை சொல்ல முடியாது.
இதுவரை உலகில் யாருமே இப்படி ஓர் அறைகூவலை விடுத்ததே இல்லை. ஆனால் இந்த சவாலை எவரேனும் ஏற்றுக் கொண்டது உண்டா...? எனப்பார்த்தால் குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருந்த காலத்திலேயே இந்த சவாலை ஒருவர் ஏற்றுக் கொண்டார் என வரலாறு கூறுகிறது.
ஆம். அரபு உலகிலே தனது ஆற்றல் மிகு கவிதைகளாலும், வீறு கொண்ட உணர்வுகளாலும் புகழ் பெற்றல் லபீத் என்பார் இதை ஏற்று போட்டியிட முன் வந்தார். அரபு நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் கவிதை வெள்ளம் கரைபுரண்டு கொண்டிருந்த காலத்தில் கஃபாவில் தொங்க விடப்படுகின்ற கவிதைகளுக்குத் தனிபுகழ் இருந்தது.

மிகச் சிறந்த கவிதைக்கு மட்டுமே அந்த மரியாதை கிடைத்தது. எழுவர் கவிதைகளே அத்தகைய சிறப்பை பெற்றிருந்தன. ஏழு தொங்கல் கவிதைகள்
**(ஸப்அ முஅல்லகாத்.)**என்பவை அரபு இலக்கியத்தில் அழியா இடம் பெற்றவையாகும்.
அந்த எழுவரில் ஒருவர் தான் இந்த லபீத். லபீத் ஒரு கவிதை எழுதி கஃபாவின் வாயிலில் தொங்கவிட்டார். இவ்வாறு அவர் தொங்கவிட்ட நிகழ்ச்சி நடந்த உடனே முஸ்லிம் ஒருவர் குர்ஆனிலிருந்து ஓர் அத்தியாயத்தை எழுதி அதற்கு அருகிலேயே மாட்டி வைத்தார்.

இஸ்லாத்தை அது வரை ஏற்றுக் கொள்ளாதிருந்த கவிஞர் லபீத் மறுநாள் கஃபா ஆலயத்தின் வாயில் அருகே வந்தார். திருக்குர்ஆன் அத்தியாயத்தை வாசித்தார். அத்தியாயத்தி ஆரம்ப வரிகளிலேயே அவர் அசாதாரண முறையில் ஒருவித மாறுதலுக்கு ஆளானார்.
இவை மனிதனின் வார்த்தைகளே அல்ல. இவை இறைவசனங்கள் தாம் என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று உரத்துக் கூறினார். **( MOHAMED THE HOLY PROPHET BY H.G SARWAR, P.448 )**
அரபு உலகின் ஓர் ஒப்பற்ற கவிஞர் இவர். திருக்குர்ஆனின் இலக்கிய நடையால் மிகப்பெரிய அளவில் ஆட்கொள்ளப்பட்ட இவர் கவிதை எழுதுவதையே விட்டுவிட்டார்.

பின்னர் ஒருமுறை உமர் (ரலி) அவர்கள் இந்த கவிஞரிடம் கவிதை வேண்டிய போது லபீத் (ரலி) பின்வருமாறு பதிலளித்தார்கள்.
"அல்பகரா மற்றும் ஆல இம்ரான் போன்ற அத்தியாயங்களை அல்லாஹ் எனக்கு வழங்கியிருக்கும் போது கவிதையை தொடுவதே எனக்கு அழகல்ல."
பிற்காலத்தில் இன்னொருவர் இதை ஏற்றார். இப்னுல் முகப்பஉ என்பார் இந்தச் சவாலை ஏற்க முன் வந்தார். இவரைப் பற்றிய பிரபல கீழைக் கல்வியாளர் ஓல்ஆடன் என்பவர் வியப்புடன் குர்ஆன் ஓர் அற்புதம் என்பதைப் பற்றி முஹம்மது நபி பெருமிதத்தோடு கூறுவது

உண்மைதான். பொய்யல்ல. இந்த உண்மையை இஸ்லாம் தோன்றி 100 ஆண்டுகளுக்கு பின்னர் நடந்த நிகழ்ச்சி ஒன்று உறுதிபடுத்துகிறது என்று எழுதுகின்றார்.
அந்த நிகழ்ச்சி இது தான். மதங்களையே மறுக்கும் ஒரு குழுவினர் குர்ஆன் வெகு வேகமாக தன் ஈர்ப்பதையும் அதனால் மக்கள் இஸ்லாத்தை தழுவதையும் கண்டு குர்ஆனின் சவாலை ஏற்று அதற்கு எதிராக ஒரு வேதத்தை உருவாக்க தீர்மானித்தார்கள்.
இந்த நோக்கத்திற்காக அவர்கள் இப்னு முகஃப்பஉ தங்கியிருந்த அறைக்குச் சென்றார்கள். அவர் உட்கார்ந்திருந்தார் அவரது கையில் பேனா இருந்தது. ஆழ்ந்த வாசிப்பில் ஈடுபட்டிருந்தார். அவர் அமர்ந்திருந்த இடத்திற்கு அருகே ஒரு கூடை இருந்தது. எழுதி, எழுதி கிழிக்கப்பட்ட காகிதங்கள் பெரும் குவியலாக அதில் கிடந்தன. அங்கு மட்டுமல்ல அறை முழுவதுமே அத்தகைய குவியல்கள் காணப்பட்டன.

அவை வெறும் தாள்கள் ஒரு வரி கூட அதில் எழுதப்படவில்லை. அளவு கடந்த திறமையுடைய மிகச் சிறந்த மொழி அறிவு படைத்த அந்த ஈரான் நாட்டு மேதை தன்னுடைய எல்லா சக்திகளையும் பிரயோகித்து குர்ஆனுக்கு எதிராக ஒரு நூலை எழுதுகின்ற தமது முயற்சியில் ஈடுபட்டு ஒரு வரி கூட எழுத முடியாமல் தோற்றுப் போய் உட்கார்ந்திருந்தார்.
அவர் தன்னுடைய தோல்வியை ஏற்றுக் கொண்டார் ஒரு வரி எழுத முயன்று ஆறு மாதங்கள் ஆகியும் அவரால் எழுத முடியவில்லை. அவர் நம்பிக்கை இழந்து வெட்கமுற்று அந்த பணியை விட்டே ஒதுங்கிக் கொண்டார்.
**(MOHAMED, HIS LIFE AND DOCTRINES BY WOLLATON. P.143 )**

மனிதனின் அகத்தில் சிந்திக்கும் திறன் உண்மையிலேயே இருந்தால் இந்த நிகழ்ச்சியே அவர் ஈமான் கொள்வதற்கு போதுமானதாகும்.
.எம்மாது அஜ்தி என்பவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவர் முஸ்லிமல்ல அவரிடம் நபி (ஸல்) அவர்கள் குர்ஆனிலிருந்து சில வசனங்களை ஓதிக் காட்டினார்கள். இதைக் கேட்டவுடன் அவர் திகைத்து திகைத்தபடியே நின்று விட்டார்.
அவரை அறியாமலேயே அவருடைய நாவிலிருந்து "அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் சோதிடர்களின் அடுக்குச் சொற்களையும் மந்திரவாதிகளின் ராகம் மிகுந்த மந்திரங்களையும் கவிஞர்களின் பாடல்களையும் செவிமடுத்துள்ளேன். ஆனால் உங்களுடைய வார்த்தைகள் - அவை தனித் தன்மையுடையவைகளாக இருக்கின்றன. இவை சமுத்திரம் வரைக்கும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடியாக இருக்கின்றன என்ற சொற்கள் அவரையறியாமலேயே வெளிப்பட்டன.
இவை போன்ற ஏராளமான ஏற்பு மொழிகள் ஏராளம் ஏராளம்.

பண்டைக் காலத்தில் மட்டுமல்ல அண்மைக்காலத்திலும் இத்தகைய நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருக்கின்றன.
“(முஹம்மதே!) இது ஒரு வேதமாகும். இதனை நாம் உம் மீது இறக்கியுள்ளோம். மக்களை அவர்களுடைய இறைவனின் உதவி கொண்டு இருளில் இருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் நீர் கொண்டு வரவேண்டும் என்பதற்காக” **(14:1)** என்றும் இறைவன் திருக்குர்ஆனில் கூறுகின்றான்.

திருக்குர்ஆனை இறைவன்தான் இறக்கி அருளினான் என்று குர்ஆனே திட்டவட்டமாகக் கூறுகிறது.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொடக்கக் கல்வியைக்கூட கற்றதில்லை. அதனால்தான் அவர்களை ‘உம்மீ நபி’ என்கிறார்கள். 'உம்மீ நபி’ என்றால் ‘எழுதப் படிக்கத் தெரியாத நபி’ என்று பொருள்.

திருக்குர்ஆன் அரபி மொழியின் மிகச்சிறந்த இலக்கியமாகக் கருதப்படுகிறது. அரபி மொழிக்கு இலக்கணம், சொல் வளம், சொற்றொடரியல் ஆகியவற்றுக்கான அடித்தளமாக அமைந்தது குர்ஆனே.
அப்படிப்பட்ட குர்ஆனை எழுதப்படிக்கத் தெரியாத ஒருவர் இயற்றினார் என்பதை யாரும் நம்ப மாட்டார்கள். இதுவே திருக்குர்ஆன் இறைவனின் வார்த்தைகளே என்பதற்கு முதல் அத்தாட்சியாகும்.

திருக்குர்ஆன் 23 ஆண்டு கால இடைவெளியில் சிறிது சிறிதாகப் பல்வேறு சூழ்நிலைகளில் அருளப்பட்டது. ஆனாலும் தொடக்கத்தில் இருந்து இறுதிவரை குர்ஆனின் உரை அனைத்தும் ஒழுங்காகவும், சீராகவும் அமைந்துள்ளதைக் காணலாம். அதில் முரண்பாடுகள் எதையும் காண முடியாது. ஏக இறைவனின் வார்த்தையாக இருந்தால் மட்டுமே முரண்பாடுகள் இல்லாமல் இருக்கும்.

இதுகுறித்து திருமறையில், “இந்தக் குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடம் இருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் காண்பார்கள்” (திருக்குர்ஆன்-4:82) இறைவன் கூறுகின்றான்.
திருக்குர்ஆனில் முரண்பாடுகள் இல்லை என்பது அது இறைவேதம் என்பதற்கு போதுமான சான்றாகும்.

இறைமொழி என்றால் அது தரமாக இருக்க வேண்டும்; உயர்தரமாக இருக்க வேண்டும்; நிரந்தரமாக இருக்க வேண்டும். திருக்குர்ஆன் இப்படி அமைந்துள்ளதா என்றால், அரபி மொழி அறிந்த முஸ்லிம் அல்லாதார் திருக்குர்ஆனை ஆய்வு செய்தால் நிச்சயமாக அது இறைவேதம் என்பதை அறிந்து கொள்ளவும், அறிவிக்கவும் முடியும்.

குர்ஆனின் நடை உரைநடையும் அல்ல; கவிதையும் அல்ல. இவைகளில் இருந்து முற்றிலும் மாறுபட்ட ஈர்க்கும் இசைநயம் கொண்ட ஓசையுடன் புதிய பாணியில் அமைந்துள்ளது. பாமர மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும், அதே நேரத்தில் அறிஞர்களும் ஆச்சரியப்படத்தக்க வகையிலும் அதன் வசனங்கள் அமைந்துள்ளன. இவ்வளவு உயர்ந்த இலக்கிய தரத்தில் ஒரு நூலை இயற்ற வேண்டும் என்றால் நபிகளார், அறிஞராகவோ, அரபி மொழியில் கரை கண்டவராகவோ இருக்க வேண்டும். ஆனால் அவர்களோ எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் .
இதையே, “(நபியே!) நீங்கள் இதற்கு முன்னர் யாதொரு வேதத்தை ஓதி அறிந்தவருமல்ல; உங்களுடைய கையால் அதை எழுதி(ப் பழகி)யவருமல்ல. அவ்வாறு இருந்திருக்குமாயின், நிராகரிப்பவர்கள் (இதனை நீங்கள் தாமாகவே கற்பனை செய்து கொண்டீரே தவிர இறைவனால் அருளப்பட்டதல்ல என்று) சந்தேகம் கொள்ளலாம்” (29:48) என்று இறைவன் திருமறையில் கூறுகின்றான்.

திருக்குர்ஆனின் நடையும் நயமும், நபிகளாரின் மொழி ( ஹதீஸ் ) நடையில் இருந்து முற்றிலும் மாறுபட்டது;
சில பல சமயங்களில் சிக்கலான பிரச்சினைகள் வரும்போது இறை வழிகாட்டுதல் வரும் வரை நபிகளார் காத்திருந்தார்கள். இவை அனைத்தும் திருக்குர்ஆன் இறைவாக்கு என்பதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

திருக்குர்ஆனில் உள்ள **கம்பீரம், தொனி, உவமை, சொல்லாட்சி,** இலக்கிய நயம் ஆகிய அனைத்தும் மனித ஆற்றல் களுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கின்றன.
குர்ஆன் இறைவனால் அருளப்பட்டதுதானா என்று சந்தேகம் கொள்வோரைச் சந்திக்க இறைவன் தயாராக இருக்கின்றான் என்பதற்கு கீழ்க்கண்ட வசனங்கள் சான்றாகத் திகழ்கின்றன.

“இவர்தான் இவ்வேதத்தை புனைந்து கூறுகிறார்” என்று இவர்கள் வாதிடுகிறார்களா? நீர் கூறும்: அவ்வாறாயின் இதுபோன்ற பத்து அத்தியாயங்களை நீங்கள் இயற்றிக் கொண்டு வாருங்கள்” **(11:13)**
“என்ன, இவர்கள் இறைத்தூதர் இதனைச் சுயமாக இயற்றியுள்ளார் என்று கூறுகின்றார்களா? நீர் கூறும்: “(இக்குற்றச்சாட்டில்) நீங்கள் உண்மையானவர்களாயின், இதுபோன்ற ஓர் அத்தியாயத்தை இயற்றிக் கொண்டு வாருங்கள்!” **(10:38)**

இறைவன் விடுத்த இந்தச் சவால் திருக்குர்ஆன் அருளப்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு மட்டுமல்ல; உலக முடிவு நாள் வரையுள்ள அனைத்து மக்களுக்கும் விடப்பட்ட சவால் ஆகும். குர்ஆன் அருளப்பட்டு 1,500 ஆண்டுகள் ஆகி விட்டன. இந்தச் சவாலுக்கு இன்று வரை எவராலும் பதில் அளிக்க முடியவில்லை.
ர.ரா

மனம் செய்யும் மாயம்.
திருக்குர்ஆனின் 13-வது ஜுஸ்வு
" வமா உபர்ரிஉ " _ 13வது பாகம்



எகிப்து நாட்டு அஜீஸ் சந்தையில் அடிமையாக விற்கப்பட்ட 17 வயது இளைஞரான நபி யூஸுபு (அலை) அவர்களை விலைக்கு வாங்கி ,தன் மனைவி ஜூலைகாவிடம் தம் வளர்ப்பு மகனாக சுவீகாரம் எடுத்துக் கொள்வோம் என்கிறார் .
ஆனால் ஜுலைகா தன் கனவில் காட்டப்பட்ட இளைஞர் இவர்தான் என்றெண்ணி காதலிக்க ஆரம்பிக்கிறாள் .
நபி யூஸுபு (அலை) அவர்கள் தன்னை வளர்த்து வரும் எஜமானுக்கு துரோகம் இளைக்கக் கூடாது என்றெண்ணி அவளது காதலை வெறுக்கிறார் .
ஒரு கட்டத்தில் ஜூலைகா வரம்பு மீறி தன் இச்சைக்கு அவரை அழைத்தபோது அவர் , அவளிடமிருந்து தப்பி வெளியே ஓடி விடுகிறார் .

وَمَاۤ اُبَرِّئُ نَفۡسِىۡ اِنَّ النَّفۡسَ لَاَمَّارَةٌ ۢ بِالسُّوۡۤءِ اِلَّا مَا رَحِمَ رَبِّىۡ اِنَّ رَبِّىۡ غَفُوۡرٌ رَّحِيۡمٌ
அன்றி, "நான் (தவறுகளிலிருந்து) தூய்மையானவன்" என்று என்னை பரிசுத்தம் செய்து கொள்ளவில்லை. ஏனென்றால், என் இறைவன் அருள் புரிந்தாலன்றி மனிதனின் சரீர இச்சை, பாவம் செய்யும்படித் தூண்டக்கூடியதாகவே இருக்கின்றது. நிச்சயமாக என் இறைவன் மிக்க மன்னிப்பவனும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான்" (என்றார்.)
(அல்குர்ஆன் : 12:53)

**மனிதனின் ஆத்மா ஒன்றுதான் .ஆனால் அதற்கு 3 இலக்கணங்கள் உண்டு**
**1) அவற்றில் ஒன்றுதான் இவ்வசனத்தில் கூறப்பட்ட , " அம்மாரத்துன் பிஸ்ஸூஇ "**
**_ (தீயதை செய்யச் சொல்லி கட்டளையிடக் கூடியது) என்னும் சொல் குறிக்கின்றது.**
**மனமானது தீய இச்சைத் தூண்டி அதன்பக்கம் பூரணமாகச் சாய்ந்து விடும் பொழுது அதற்கு " அன்னஃப்ஸுல் அம்மாரத்துன் பிஸ்ஸூஇ " எனப்படும்**
**தீய இச்சையைத் தூண்டியதனால் அதனை நிந்திக்கும் பொருட்டு வரக்கூடிய மனநிலைக்கு**

**(2) "அன்னஃப்ஸுல் லவ்வாமா (பழித்துரைக்கும் ஆன்மா ) எனப்படும்**
**அதாவது நடைபெற்ற தீய செயலைப் பற்றி இந்த ஆன்மா நிந்தித்துப் பழித்துக் காட்டும் . அப்பொழுது மனிதனுக்கு தனது தீய செயலின் மீது சஞ்சலமும் , மேற்கொண்டு அத்தகைய தீய செயல் தன் மூலம் ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்ற நல்ல எண்ணமும் தோன்றும் .**
**இந்த நிலை ஏற்படும் பொழுது அவனுடைய மனதில் ஓர் அமைதி ஏற்படும். இவ்வாறு அமைதியை உண்டாக்கும் மனநிலைக்குத்தான் ,**

**3) "அன்னஃப்ஸுல் முத்ம இன்னா (அமைதியைத் தரும் மனம் ) எனப்படும்.**
**எனவே, யூஸுபின் மனத்தில் எத்தகைய தீய எண்ணமும் பிடிக்காமல் தூய்மையே குடிகொண்டிருந்ததால், அவர்கள் தகாத முறையில் ஏற்படவிருந்த பெண் இச்சை என்னும் பேராபத்திலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொண்டார்கள் .**

இதே மாதிரி மனோ இச்சையை தன் இறைவானாக்கி பின்பற்றியவன் பற்றி குர் ஆன் ...
ஒரு நாள் இரவில் அபூஜஹ்லீல் கஃபாவை வலம் சுற்றிக் கொண்டிருந்தான் அவனுடன் வலீது பின் முகைரா என்பவனும் வலம் சுற்றிக் கொண்டு இருந்தான் .இருவரும் நபிஸல் அவர்கள் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர் அப்போது அபூஜஹ்ல்

" அல்லாஹ்வின் மீது ஆணையாக முஹம்மது உண்மையாளர் என்று எனக்கு நிச்சயமாக தெரியும் என்றான் அதற்கு முகைரா " நில் அதெப்படி உனக்குத் தெரியும் ? ஆதாரம் என்ன ?
அதற்கு அபூஜஹ்ல் " நாம் அவரை சிறு பிராயத்திலே நம்பிக்கைகுரியவர், உண்மையாளர் என அழைத்தோம் அவருடைய அறிவு முதிர்ச்சியடைந்து , அவருடைய நேர்மையான வழி பரிபூர்ணமடைந்த பொழுது அவரை நாம் பொய்யர் , மோசடிக்காரர் எனக் கூறுகிறோம் அல்லாஹ்வின் ஆணையாக நிச்சயமாக அவர் உண்மையாளர் என்றே அறிகிறேன்" என்றான்
""அப்படியானால் நீ அவரை மெய்பித்து ஈமான் கொள்ள வேண்டியதுதானே " என்று முகைரா கேட்டான்

அதற்கு அபூஜஹ்ல் " ஒரு சில ரொட்டித் துண்டுக்காக அபூதாலிபின் அநாதையை நான் பின்பற்றி விட்டேன் என்று குறைஷி வர்க்கப் பெண்கள் கேவலமாகக் கூறுவார்கள் . லாத் உஜ்ஜா மீது ஆணையாக எப்போதும் முஹம்மதைப் பின்பற்றமாட்டேன் என்று அபூஜஹ்ல் கூறினான்
அந்த உடனேயே இந்த வசனம் இறங்கியது
நபியே ! தன்னுடைய மனோ இச்சையை தன்னுடைய இறைவனாக்கி கொண்டவனை நீர் கண்டீரா ? அவன் வழிகெடுவதற்குத் தகுதியானவன் என்று அறிந்தே அவனை அல்லாஹ் வழிகேட்டில் ஆக்கி விட்டான் அவனது செவியின் மீதும் அவனது இதயத்தின் மீதும் முத்திரை இட்டு விட்டான் ஆகவே அல்லாஹ்க்குப் பிறகு நேர்வழி காட்டுபவர் யார் ? எனவே நீங்கள் உணர்வு பெற வேண்டாமா ?
குர்ஆன் 45 : 23
ர.ரா

திருக்குர்ஆனின் 14 வது ஜுஸ்வு

(ருபமா )



وَالَّذِيْنَ هَاجَرُوْا فِى اللّٰهِ مِنْۢ بَعْدِ مَا ظُلِمُوْا لَـنُبَوِّئَنَّهُمْ فِى الدُّنْيَا حَسَنَةً ‌ وَلَاَجْرُ الْاٰخِرَةِ اَكْبَرُ‌ۘ لَوْ كَانُوْا يَعْلَمُوْنَۙ
(நம்பிக்கையாளர்களே! உங்களில்) எவர்கள் (எதிரிகளால்) துன்புறுத்தப்பட்டு பின்னர் அல்லாஹ்வுக்காக(த் தங்கள் ஊரை விட்டு)ப் புறப்பட்டார்களோ, அவர்களுக்கு நிச்சயமாக நாம் இவ்வுலகிலும் நல்ல இருப்பிடத்தையே தருவோம்; மறுமையின் கூலியோ (இதைவிட) மிகப் பெரிது. (இதனை) அவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமே! (அல்குர்ஆன் : 16:41)

الَّذِيْنَ صَبَرُوْا وَعَلٰى رَبِّهِمْ يَتَوَكَّلُوْنَ

இவர்கள்தாம் (கஷ்டங்களைப்) பொறுமையுடன் சகித்துக் கொண்டு தங்கள் இறைவனையே முற்றிலும் நம்பியிருப்பவர்கள். (அல்குர்ஆன் : 16:42)

பிலால் (ரலி) , ஸுஹைப் (ரலி) ,அம்மார் பின் யாஸிர் (ரலி) , முதலானோர் எதிரிகளால் துன்பமடைந்து நாடு துறந்து சென்ற மிக எளிய முஸ்லிம்களைப் பற்றி மேற்கண்ட வசனங்கள் குறிப்பிடுகிறது .

பிலால் (ரலி) அவர்களின் எஜமானனான உமய்யா பின் கலப் என்பான் , பிலாலை மதிய நேரச் சுடுமணலில் வெறும் மேனியுடன் கீழே கிடத்தி எழுந்திருக்க விடாமல் அவருடைய நெஞ்சில் பெருங்கல்லைத் தூக்கி வைத்து சித்திரவதை செய்தான்

அப்படியிருந்தும் பிலால் (ரலி) அவர்கள் அதனைச் சகித்துக் கொண்டு " அஹதுன் அஹதுன் " ( ஏகன் , ஏகன் ) என்றே கூறிக் கொண்டிருந்தார்கள் .

இதனைக் கண்ணுற்ற அபூபக்கர் (ரலி) அவர்கள் , பிலாலுடைய எஜமானனுக்கு பெரும் பணத்தைக் கொடுத்து பிலாலை வாங்கி அடிமைத் தளையிலிருந்து விடுதலை செய்தார்கள் .

ஸுஹைப் (ரலி) அவர்கள், ஒரு கொல்லர், பிழைப்பு நிமித்தமாக கிரேக்க நாட்டிலிருந்து மக்காவிற்கு வந்தவர் இவர் இஸ்லாத்தை ஏற்றதற்காக இவருடைய எஜமானனால் பல துன்பங்களை அனுபவித்தார்

தம்மைத் துன்புறுத்தியவர்களை நோக்கி , " நான் வயது முதிர்ந்த வயோதிகன் , நான் உங்களுடன் இருந்தாலும் என்னால் உங்களுக்கு ஒரு பயனும் இல்லை ; உங்களை விட்டுப் பிரிந்தாலும் என்னால் உங்களுக்கு எந்த இடரும் ஏற்படப் போவதில்லை என்றார்

" எங்களூரில் சம்பாதித்த பொருள்களை எங்களிடமே தர வேண்டும் என்று கூறி அவரிடமிருந்து அத்தனை பொருட்களையும் பிடுங்கிக் கொண்டு வீசிய கையும் வெறுங்கையுமாக மதீனா போக அனுமதித்தனர். மதீனாவிற்கு ரொம்பவும் சிரமத்துடன் வெறுமனே வந்து சேர்த்தார் .

அக்காலத்தில் மட்டும் அல்ல, நவீன காலத்தில் கூட மெத்தப் படித்த டாக்டரும் அதுவும் பெரும் பணக்காரான ஒருவரின் வரலாற்றை நண்பர் #மதீனத்துல் முனவ்வரா பதிவிலிருந்து ..

இஸ்லாத்தை ஏற்றதால் மனைவி, மகள்கள், தாய், தந்தை, பெரிய பண்ணை வீடு, இரண்டு கார்கள், நண்பர்கள், 20 வருடங்களாகப் பார்த்து வந்த அமெரிக்க விமானப்படை கண் டாக்டர் வேலை, அனைத்தையும் இழந்து நடுத்தெருவில் நின்றார் டாக்டர் லாரன்ஸ் பிரவுன் (பிறப்பு: 1959) ஏக இறைவன் அல்லாஹ் அவரைக் கைவிட்டு விட்டானா?

இஸ்லாத்தை ஏற்ற பிறகு என் சொந்த வாழ்க்கையில் புயல் வீசியது. நான் இஸ்லாத்தை ஏற்றதை என் மனைவியால் தாங்க இயலவில்லை. என்னிடமிருந்து விவாகரத்து கேட்டு கோர்ட்டில் வழக்கு தொடர்ந்தாள்.

கோர்ட்டில் நான் அடித்து துன்புறுத்தினேன் என்று கூறி விவாகரத்து கேட்டாள். ஆனால், நான் உண்மையில் மனைவியை அடிப்பவன் அல்ல. நீதிமன்றம் விவாகரத்து வழங்கியது.

எனது இரண்டு குழந்தைகளையும் தன்னுடன் அவள் எடுத்துக் கொண்டு போனாள். மேலும் நீதிமன்றத்தில் 100 வருடங்களுக்கு ஜீவனாம்சம் வேண்டுமென்று வாதிட்டாள். நீதிமன்றமும் இசைந்தது. ஜீவனாம்சமாக எனது வீடு மற்றும் இரண்டு கார்களை நீதிமன்றத்தின் மூலம் பெற்றுக் கொண்டாள்.

இதற்கெல்லாம் மேலாக இன்னொரு அநியாயமும் எனக்கு நடந்தது. அது வாரத்தில் ஒரு நாள் எனது மகள்களை பார்க்கும் சமயத்தில் அவர்களை நான் அடித்து துன்புறுத்தி விடக்கூடாது என்பதற்காக பாதுகாப்பு அதிகாரி ஒருவரை நியமிக்கும்படி நீதிமன்றம் எனக்கு கூறியிருந்ததாகும். என்னமோ மனிதர்களை அடித்து துன்புறுத்தும் கொடுமைக்காரன் போன்று சித்தரிக்கப்பட்டேன். எந்த பிள்ளையைக் காப்பாற்ற இறைவனிடம் மன்றாடி உதவியைப் பெற்றதால், உண்மையான இறைவனை ஏற்றேனோ அந்தப் பிள்ளை இப்போது என்னுடன் இல்லை.

எனது நெஞ்சம் கவலைகளால் கசங்கிப் போனது. அத்துடன் எனக்கு இன்னொரு சோதனையும் வந்தது. அது என்னை ஈன்றெடுத்த தாய் – தந்தையர் என்னை வெறுத்ததாகும். இஸ்லாத்தை ஏற்றதால் அவர்கள் என்னை விலக்கி வைத்தனர்.

ஒரு முறை அவர்களிடமிருந்து எனக்கு கடிதம் வந்தது. இனி அவர்களை நான் பார்க்கக் கூடாது என்று. முழுமையாக குடும்ப உறவற்று அநாதையாகிப் போனேன்.

இஸ்லாத்தை ஏற்ற சமயத்தில் அமெரிக்க விமானப்படை மருத்துவராக 20 வருடங்களை பூர்த்தி செய்திருந்தேன். இஸ்லாத்தை ஏற்ற பிறகு அமெரிக்க ராணுவத்தில் ஒரு முஸ்லிமாக என்னால் பணியாற்ற இயலவில்லை. என் மனசாட்சி என்னைக் கொன்று போட்டது. பதவியை ராஜினாமா செய்தேன்.

மனைவி- பிள்ளைகளை இழந்தேன். வீடு வாசல்களை இழந்தேன். நண்பர்களை இழந்தேன்.கடைசியில் வேலையையும் இழந்து நின்றேன். பெரிய பண்ணை வீட்டில் வசித்த நான் குறுகலான ஏணிப்படி கொண்ட அறைகள் ஏதுமற்ற சின்ன வீட்டில் வசித்தேன்.

எல்லாவற்றையும் உண்மையான அந்த இறைவனுக்காகப் பொறுத்தேன். இஸ்லாத்தை ஏற்ற பிறகு அதுவரை என்னுடன் பழகி வந்த எனது நண்பர்கள் என்னை விட்டுப் பிரிந்தனர்.அதற்கு அவர்கள் சொன்ன காரணம், நான் நடன விடுதிகளுக்கு செல்வதில்லையாம். மது அருந்துவதில்லையாம் தோழிகளுடன் கைகுலுக்குவதில்லையாம். இதுதான் அவர்கள் என் மீது வைக்கும் குற்றச்சாட்டு.

நான் கேட்கிறேன், இயேசு எங்காவது நெருங்கிய குடும்ப உறுப்பினர் அல்லாத அந்நியப் பெண்களுடன் கைகுலுக்கியுள்ளாரா? பைபிளில் எங்காவது அப்படி ஒன்று நடந்திருப்பதாக காட்ட முடியுமா? நான் சவாலாக கேட்கிறேன். இன்றும் ஆர்த்தொடெக்ஸ் யூதர்கள் அன்னியப் பெண்களுடன் கைகுலுக்குவதில்லை. இயேசுவும் ஆர்த்தொடெக்ஸ் மதகுருவைப் போன்றே வாழ்ந்துள்ளார். இதுவே உண்மை, கிறிஸ்தவர்கள் என்று கூறிக்கொண்டு இவர்கள் யாரைப் பின்பற்றுகிறார்கள்?

இஸ்லாத்தை ஏற்றதால் மனைவி பிள்ளைகளை இழந்தாலும் அல்லாஹ் என்னைக் கைவிடவில்லை. மிக நல்லதொரு குணவதியை அல்லாஹ் எனக்கு இரண்டாவது மனைவியாகத் தந்தான். அவள் மூலமாக அழகிய பெண் குழந்தையும் எனக்குப் பிறந்தாள்.

வீடு – வாசலை இழந்தேன்.எனினும் அல்லாஹ் என்னைக் கைவிடவில்லை. உலக முஸ்லிம்களால் மிகவும் விரும்பப்படும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நகரமான மதீனா மாநகரில் எனக்கு அல்லாஹ் வீட்டைத் தந்தான்.

உலகின் மிக அழகிய நகரங்களான வியன்னா, சூரிச், வான்கூவர், ஜெனிவா, சிட்னி போன்ற நகரங்களை விட மிகச்சிறந்த நகரம் அது. ஏனெனில், அந்நகரில் தஜ்ஜால் ( அந்திக் கிறிஸ்து ) நுழைய இயலாது என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

என்னுடைய பழைய நண்பர்கள் என்னை விட்டுப் பிரிந்தாலும் அவர்களை விட எல்லா வகையிலும் சிறந்த நண்பர்களை அல்லாஹ் எனக்குத் தந்துள்ளான். உலகெங்கும் வாழும் முஸ்லிம்கள் எனக்குத் தோழர்களாகவும் சகோதரர்களாகவும் ஆகிவிட்டனர். அல்லாஹ் போதுமானவன்.

ர.ரா

" நாங்கள் கேட்கும் அத்தாட்சிகளை நீர் கொண்டு வாரும் "
திருக்குர்ஆனின் 15. வது ஜுஸ்வு
(ஸூப்ஹானல்லதீ )



மக்கா தலைவர்களான **உத்பா , ஷைபா, அபூஜஹ்ல் , அப்துல்லாஹ் பின் அபூ உமைய்யா , உமய்யத் பின் கலப் , அபூஸூப்யான் , நல்ரு பின் ஹர்து , அபுல்புக்தரி , அஸ்வத் பின் அப்துல் முத்தலிப் , ஜம்ஆ , வலீது , ஆஸ்பின்**
வாயில் முதலானோர் கஃபாவில் ஒன்று கூடி , பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஆள் அனுப்பி அழைத்தனர்.

நபிகளார் , அக்கூட்டத்தினர் நேர்வழி பெற வேண்டும் என்று விரைந்தோடி வந்தார்கள்.
ஒரு தலைவர் " முஹம்மதே ! நீர் உமது கூட்டத்தினர் மத்தியில் எந்தக் கொள்கையைப் புகுத்தியிருக்கின்றீரோ , அப்படி ஒன்றை அரபியரிடையே எந்த மனிதரும் புகுத்தவில்லை "
இன்னொரு தலைவர் " மூதாதையரை நீர் திட்டுகின்றீர் .நமது மார்க்கத்தை பழிக்கின்றீர் , புத்திசாலிகளை மடையர்களாக்கின்றீர், நம்முடைய கடவுள்களை ஏசுகின்றீர் , நம்மிடைய பிரிவினையை ஏற்படுத்திவிட்டீர் , நீர் கொண்டு வராத எந்த தீங்குமில்லை "
மற்றொரு தலைவர் " நம்மிடமிருந்து பெரும் பொருளைப் பெற இவ்வாறெல்லாம் நீர் செய்வதாக இருந்தால், பெரிய சீமானாக நாங்கள் உம்மை ஆக்கி விடுகின்றோம் . பெரும் பதவியை நீர் விரும்பினால் , உம்மை எங்கள் தலைவராக நியமித்து விடுகிறோம் . ஓர் அரசை நீர் விரும்பினால், உம்மையே எங்களுடைய அரசராகவே பட்டம் சூட்டி விடுகிறோம் "
" அல்லது உமக்கு பிசாசுக் கோளாறு உம்மில் இருந்து , இவ்வாறெல்லாம் செய்யுமாறு உமரை தூண்டப்பட்டால் , பெரும் பொருளை நாங்கள் செலவு அதற்குரிய பரிகாரத்தைச் செய்கிறோம் "

**அதற்கு " பெருமானார் (ஸல்) அவர்கள் ,**

உங்களுடைய பொருளை விரும்பியோ, பதவியை ஆசித்தோ , அரசனாக ஆக வேண்டுமென்று எண்ணியோ நான் வரவில்லை. அல்லாஹ் என்னை உங்கள்பால் ஒரு தூதனாக அனுப்பியிருக்கின்றான் .என் மீது ஒரு வேதத்தையும் இறக்கி இருக்கின்றான்.

நான் உங்களுக்கு வேதனைப்பற்றி அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறவனாகவும், நற்கூலிகளைப் பற்றி நற்செய்தி கூறுகிறவனாகவும் இருக்க வேண்டுமென்றே எனது இரட்சகன் எனக்குக் கட்டளை இட்டுள்ளான் "
" நான் எனக்கு அறிவிக்கப்பட்டதையே உங்களுக்கு எடுத்துரைக்கின்றேன் உங்களுடைய நன்மையையே நான் விரும்புகிறேன் .இதனை நீங்கள் ஏற்றுக் கொண்டால் இரு உலகிலும் அது உங்களுக்கு நற்பலனைத் தரும் . இதனை நீங்கள் நிராகரித்தால் எனக்கும், உங்களுக்குமிடையே இறைவன் ஒரு தீர்ப்பை வழங்கும் வரையில் நான் பொறுமையுடனிருப்பேன் "
இதற்கு அத் தலைவர்கள் , " முஹம்மதே ! நெருக்கடியான நம் மக்காவை விரிவுப்படுத்த சுற்றியுள்ள மலைகளை அகற்றிவிட்டு , ஷாம், ஈராக் நகரங்களில் பெரிய நதிகள் ஓடுவது போல் மக்காவிலும் ஓடச் செய்யும் "

"காலஞ் சென்ற நமது மூதாதையர் உண்மையானவர் "குஸைய்யி பின் கிலாப் " என்பவர் உயிர் பெற்று வர வேண்டும் அவர், நீர் கூறுவது எல்லாம் உண்மைதான் என்று சொன்னால் உம்மை நாங்கள் நம்புகிறோம். அதோடு
وَقَالُوْا لَنْ نُّؤْمِنَ لَكَ حَتّٰى تَفْجُرَ لَنَا مِنَ الْاَرْضِ يَنْۢبُوْعًا ۙ
(நபியே!) "இப்பூமி வெடித்து, ஒரு ஊற்றுக்கண் தோன்றினாலன்றி நாம் உங்களை நம்பிக்கை கொள்ள மாட்டோம்" என்று அவர்கள் கூறுகின்றனர்.
(அல்குர்ஆன் : 17:90)

اَوْ تَكُوْنَ لَكَ جَنَّةٌ مِّنْ نَّخِيْلٍ وَّعِنَبٍ فَتُفَجِّرَ الْاَنْهٰرَ خِلٰلَهَا تَفْجِيْرًا ۙ
"அல்லது மத்தியில் தொடர்ந்து நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கக் கூடிய திராட்சை, பேரீச்சை மரங்களையுடைய ஒரு சோலை உங்களுக்கு இருந்தால் அன்றி (உங்களை நம்பிக்கை கொள்ள மாட்டோம்" என்றும் கூறுகின்றனர்.)
(அல்குர்ஆன் : 17:91)

اَوْ تُسْقِطَ السَّمَآءَ كَمَا زَعَمْتَ عَلَيْنَا كِسَفًا اَوْ تَاْتِىَ بِاللّٰهِ وَالْمَلٰٓٮِٕكَةِ قَبِيْلًا ۙ
"அல்லது நீங்கள் எண்ணுகிற பிரகாரம் வானத்தின் முகடு இடிந்து, அதில் ஒரு துண்டு எங்கள் (தலை) மீது விழுந்தாலன்றி அல்லது அல்லாஹ்வையும் மலக்குகளையும் நம் முன் கொண்டு வந்தாலன்றி (உங்களை நாம் நம்பிக்கை கொள்ள மாட்டோம்" என்றும் கூறுகின்றனர்.)
(அல்குர்ஆன் : 17:92)

اَوْ يَكُوْنَ لَكَ بَيْتٌ مِّنْ زُخْرُفٍ اَوْ تَرْقٰى فِى السَّمَآءِ وَلَنْ نُّؤْمِنَ لِرُقِيِّكَ حَتّٰى تُنَزِّلَ عَلَيْنَا كِتٰبًا نَّقْرَؤُهٗ قُلْ سُبْحَانَ رَبِّىْ هَلْ كُنْتُ اِلَّا بَشَرًا رَّسُوْلًا
"அல்லது (மிக்க அழகான) தங்கத்தினாலாகிய ஒரு மாளிகை உங்களுக்கு இருந்தாலன்றி (நாம் நம்பிக்கை கொள்ள மாட்டோம்.) அல்லது நீங்கள் வானத்தின் மீது ஏறியபோதிலும் நாம் ஓதக்கூடிய ஒரு வேதத்தை (நேராக) நம்மீது நீங்கள் இறக்கிவைக்காத வரையில் நீங்கள் வானத்தில் ஏறியதையும் நம்பமாட்டோம்" என்றும் கூறுகின்றனர். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: "என் இறைவன் மிகப் பரிசுத்தமானவன். நான் (உங்களைப் போன்ற) ஒரு மனிதன்தான். எனினும், நான் (அவனால் அனுப்பப்பட்ட) ஒரு தூதர் என்பதைத் தவிர வேறெதுவும் உண்டா?"
(அல்குர்ஆன் : 17:93)

இதனைக் கேட்ட பெருமானார் (ஸல்) அவர்கள் அங்கிருந்து எழுந்து விட்டார்கள் . அப்துல்லாஹ் பின் உமைய்யா என்பவரும் எழுந்து கொண்டார் .இவர் நபி (ஸல்) அவர்களின் மாமியரான ஆதிகா என்பவரின் மகனாவார். இவரும் நபி (ஸல்) அவர்களை எதிர்த்துக் கொண்டிருந்தவர் .அவர் ...
" முஹம்மதே ! இதுவரை நாங்கள் பல கோரிக்கைகளை விடுத்தோம் . நீர் ஏற்கவில்லை .அல்லாஹ்விடம் உமக்கு இருக்கும் மதிப்பை கொண்டு , அவற்றை அவனிடமிருந்து நீர் பெற்று எங்களுக்கு வழங்கி இருக்கலாம் அல்லது நீர் பயமுறுத்தும் வேதனையாவது கொண்டு வாரும் .அதனையும் நீர் ஏற்கவில்லை அப்போ நாங்கள் உம்மை எப்படி ஏற்பது ?
" சரி, இப்போது நீர் வானின் மீது ஏறி வானுக்குச் செல்ல வேண்டும் . நீர் வானில் ஏறிச் செல்வதை நானும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் அங்கிருந்து விரிக்கப்பட்ட வேதம் ஒன்றை நீர் கொண்டு வர வேண்டும் . நீர் சொல்வது உண்மைதான் என்று சாட்சியங் கூற மலக்குகளும் உம்முடன் வரவேண்டும்" .
பெருமானார் (ஸல்) அவர்கள் அங்கிருந்தோரின் நிராகரித்தலைக் கண்டு மிகவும் கவலையுடன் அங்கிருந்து திரும்பினார்கள் .
அறிவித்தவர் : அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி ) நூல்கள் : **காஜின் ,ஹக்கானி , ருஹுல் மஆனி**
ர.ரா

**Rahmath Rajakumaran**
அவர்கள் கேட்ட மாதிரி நடந்தது .மன்னர் ஹாரூன் ரஷீத் மனைவி மக்காவிற்கு கால்வாய் வெட்டி நீரை விடவில்லையா ?
மலைகளை தகர்த்து ஹரத்தின் எல்லையை விரிவாக்கவில்லை ?
கூடவே இருந்து யுத்தம் செய்ய மலக்குகள் வரவில்லையா ?
பெரிய மாட மாளிகையாக மஸ்ஜித்துன் நபவீ யை நபிகளாருக்கு கொடுக்கவில்லையா ?
மன்னாதி மன்னருக்கெல்லாம்
மா மன்னராக நபிகளாரை காலமெல்லாம் ஆக்க வில்லையா ?
நபிகளார் விண்ணில் ஏறி மிஹ்ராஜ் என்கிற விண்ணுலக பயணம் செய்யவில்லையா ?
அவர்கள் கேட்டதெல்லாம் இறைவன் கொடுத்தான்
கேட்டவர்கள்தான் தங்களுக்கு ஈமான் எனும் ஹிதாயத்தை கேட்காமல் விட்டு விட்டார்கள் .

நெருப்பும் , செருப்பும்
திருக்குர்ஆனின் 16-வது ஜுஸ்வு
(கால அலம் )



நபி ஷுஐப் (அலை) அவர்களது புதல்வி
ஸஃபூராவை , நபி மூஸா (அலை) அவர்கள் மணம் புரிந்தார்கள் . சிறிது காலத்திற்குப் பிறகு தமது தாயாரையும் , சகோதரர் ஹாரூனையும் பார்த்து வருவதற்காக மத்யன் தேசத்திலிருந்து எகிப்து தேசம் செல்ல ஆய்த்தமானவர்கள் .

கர்பமான மனைவியை அழைத்துக் கொண்டு எகிப்துக்குப் பிரயாணமானார்கள் ஆனால் , எகிப்துக்குச் செல்லும் சாலையில் சென்றால் ஷாம் தேசத்து கொடுங்கோல் மன்னன் ஆட்சி செய்தான் . அவனால் தனக்கு கெடுதல் உண்டாலாம் , என்றெண்ணி வேறு பாதையாகச் சென்றார்கள் .
இதனால் தூர்ஸீனாய் மலையின் மேற்கு புறத்தினுள்ள " துவா" என்ற பள்ளத்தாக்கில் வந்த பொழுது இரவாகி மிகவும் இருட்டி விட்டது. குளிரும் , பனியும் மிகுதியாக இருந்தன. அது வெள்ளிக் கிழமை இரவாக இருந்தது . மனைவியும் ஓர் ஆண் குழந்தையும் பிரசவித்தார். எனவே , குளிர் காய்வதற்கும் இதர காரியங்களுக்கும் நெருப்பு தேவையாக இருந்தது. ஆதலின் நெருப்பை மூட்ட தம்மிடமுள்ள சக்கிமுக்கி கல்லைத் தட்டினார்.ஈரப் பனியின் காரணமாக நெருப்பு உண்டாகவில்லை . அப்பள்ளத்தாக்கில் கொஞ்ச தூரத்துக்கு அப்பால் நெருப்பு இருப்பது போல் தெரிய , அது இடையர்கள் குளிர் காய்வதற்காகக் கொளுத்திய நெருப்பென எண்ணி ,

اِذْ رَاٰ نَارًا فَقَالَ لِاَهْلِهِ امْكُثُوْۤا اِنِّىْۤ اٰنَسْتُ نَارًا لَّعَلِّىْۤ اٰتِيْكُمْ مِّنْهَا بِقَبَسٍ اَوْ اَجِدُ عَلَى النَّارِ هُدًى
(அவர் (மூஸா) தன் குடும்பத்தாருடன் சென்றபொழுது தான் செல்ல வேண்டிய வழியை அறியாத நிலையில் தூர் என்னும் மலைமீது) அவர் நெருப்பைக் கண்ட சமயத்தில் தன் குடும்பத்தாரை நோக்கி "நீங்கள் (இங்கு சிறிது) தாமதித்திருங்கள். மெய்யாகவே நான் ஒரு நெருப்பைக் காண்கிறேன்.
அதிலிருந்து ஒரு எரி கொள்ளியை எடுத்துக்கொண்டு உங்களிடம் வருகிறேன். அல்லது நெருப்பி(ன் வெளிச்சத்தி)னால் (நாம் செல்லவேண்டிய) வழியை அறிந்து கொள்வேன்" என்றார்.

(அல்குர்ஆன் : 20:10)
மூஸா (அலை) அவர்கள் மலை மீது பார்த்தது உண்மையான நெருப்பல்ல, அது அல்லாஹுதஆலாவின் தஜல்லியான பிரகாசமாக இருந்தது .அதனை நெருப்பென எண்ணிக் கொண்டதால்,
அதனை இறைவன் நெருப்பு என்ற வார்த்தையால் கூறியுள்ளான்.

فَلَمَّاۤ اَتٰٮهَا نُوْدِىَ يٰمُوْسٰى
அவர் அதனிடம் வரவே (அவரை நோக்கி) "மூஸாவே!" என்று சப்தமிட்டழைத்து (நாம் கூறியதாவது:)
(அல்குர்ஆன் : 20:11)

நபி மூஸா (அலை ) அவர்கள் நபியானதற்குப் பிறகு ......(அப்பொழுது மூஸா தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! நான் உன்னை (என் கண்ணால்) பார்க்க (விரும்புகின்றேன்.) நீ உன்னை எனக்கு காண்பி" என்று கூறினார். (அதற்கு இறைவன் "நேர்முகமாக) என்னைக் காண உங்களால் ஒருக்காலும் முடியாது. எனினும் இம்மலையை நீங்கள் நோக்குங்கள். அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால் பின்னர் நீங்கள் என்னைக் காண்பீர்கள்" என்று கூறினான். அவருடைய இறைவன் அம்மலை மீது தோற்றமளிக்கவே அது தவிடு பொடியாயிற்று. மூஸா திடுக்கிட்டு (மூர்ச்சையாகி) விழுந்தார்.
திருக்குர்ஆன் ( 7:143 )

நபி ஆவதற்கு முன் இதே மலையில் இறைவன் தஜல்லி வெளிப்பட்ட போது தவிடு பொடியாகாத தூர் ஸீனா மலை நபி ஆன பிறகு நபிகளார் இறைவனை பார்க்க கேட்டபோது , தவிடு பொடியானது. இது என்ன விந்தை !

நெருப்பு நான்கு வகை .
ஒரு வகை நெருப்பு சுட்டெரிக்கும் ஆனால் தண்ணீரை உறுஞ்சாது .அது இவ்வுலகத்து நெருப்பு .
மற்றொரு வகை நெருப்பு சுட்டெரிக்காமல் தண்ணீரை மட்டும் உறிஞ்சக்கூடிய நெருப்பு . அது பச்சை மரங்களிலுள்ள நெருப்பு .
இன்னொரு வகை நெருப்பு , சுட்டெரிக்கும் செய்து , தண்ணீரையும் உறிஞ்சக்கூடிய நெருப்பு . அது நரகத்தின் நெருப்பு.
நாலாவது வகை நெருப்பு, சுட்டெரிக்கவும் செய்யாமல் . தண்ணீரையும் உறிஞ்சாமல் உள்ள நெருப்பு இதைத்தான் நபி மூஸா (அலை) மலையில் பார்த்த நெருப்பு.

اِنِّیْۤ اَنَا رَبُّكَ فَاخْلَعْ نَعْلَيْكَ اِنَّكَ بِالْوَادِ الْمُقَدَّسِ طُوًى
நிச்சயமாக நான்தான் உங்களது இறைவன். உங்களுடைய காலணிகள் இரண்டையும் கழற்றிவிடுங்கள். நிச்சயமாக நீங்கள் "துவா" என்னும் பரிசுத்த இடத்தில் இருக்கிறீர்கள்.
(அல்குர்ஆன் : 20:12)

காலணிகளைக் கழற்றுமாறு இறைவன் கட்டளையிட்டு இருப்பதிலிருந்து அறிஞர்கள் பல நுட்பங்களை கூறியிருக்கிறார்கள் ,
அந்த இடத்தில் வெறுங்காலாக பாதரட்சை இல்லாது இருத்தல், இறைவனுக்குப் பணிவை தெரிவித்துக் கொள்வதும் , தக்க மரியாதை செய்வதுமாகும்.
மேலும் நபிகளார் இரு பாதங்களும் அவ்வோடையின் மேற்புறத்தில் படுவதால் சிறப்படையவும்

அப்பூமியிலுள்ள பரக்கத்து அவருக்குச் சேருவதற்காகவும் இறைவன் இவ்வாறு கட்டளையிட்டிருக்கலாம்.
ஆனால் , நபி (ஸல்) அவர்கள் மிஹ்ரஃஜுக்குச் சென்ற போது அவர்களது இரு பாதங்களது காலணிகளிலுள்ள தூசிகளைக் கொண்டு அல்லாஹ்வின் அர்ஷ் சிறப்படைய வேண்டுமென்று , அர்ஷின் விரிப்பின் மீது காலணியுடன் வருமாறு கட்டளையிட்டான். இது என்ன விந்தை !
நபி மூஸா (அலை) பூமியிலுள்ள துவா என்கிற பள்ளத்தாக்கில் இறைவனின் தஜ்ஜல்லி வெளிப்பட்ட போது , நபி மூஸா (அலை) அவர்களின் காலணிகளை கழற்ற சொன்ன இறைவன் , நபி (ஸல்) அவர்களின் காலணி தூசி அல்லாஹ்வின் அர்ஷில் பட விரும்புகிறான் என்றால் ......
இதிலிருந்து இரு நபிமார்களின் அந்தஸ்துக்கிடையில் உள்ள பாகுபாட்டை நீங்களே அறிந்து கொள்ளலாம் .

தவிர ,கனவில் காலணியைப் பார்த்தால் அக் காலணிக்கு " மனைவி " என்று விளக்கம். எனவே மூஸா (அலை) அவர்கள் மலையடிவாரத்தில் விட்டு விட்டு வந்த தன் மனைவியையும் , பிறந்த தன் மகனையும் நினைத்துக் கொண்டிருக்காமல் , தன்பால் முன்னோக்குமாறு இறைவன் கட்டளையிட , அதை சூசகமாக " உமது இரு காலணிகளையும் கழற்றுவீராக !" என்று கூறப்பட்டிருப்பதாக கராயிபுத் தஃப்ஸீரில் குறிப்பிடப்பட்டுள்ளது .

ஆக நெருப்பிலும் , செருப்பிலும் நிறைய வித்தியாசம் இருக்கிறது ! புரிந்து அறிந்து கொண்டோரிடம் நீங்கள் தெரிந்து அறிந்து கொள்ளுங்கள் .
ர.ரா

திருத்தி எழுதிய தீர்ப்புகள் .
திருக்குர்ஆனின் 17-வது ஜுஸ்வு
(இக்தரப லின்னாஸி )



ஒரு தினம் நபி தாவூத் (அலை) அவர்களிடம் இரு மனிதர்கள் வந்தனர் . ஒருவர் விவசாயி. மற்றவர் ஆட்டு மந்தைக்காரர் .
" இவரின் ஆடுகள் இரவில் என்னுடைய நிலத்தில் புகுந்து விளைந்தவற்றை எல்லாம் மேய்ந்து அதை அழித்து கெடுத்துவிட்டது " என்றார் விவசாயி .
அவ்வாறு நடந்தது உண்மைதான் எனத் தெரிந்த தாவூத் நபி , தீர்ப்பு வழங்குகையில் ....
" ஆடுகளை அவற்றிற்கு உரியவர் , விவசாயிடம் அப்படியே ஒப்படைத்து விட வேண்டும் " என்று தீர்ப்பு கூறிவிட்டார்கள் .
வாதி , பிரதிவாதி இருவரும் வெளியே வந்தனர். அங்கு நின்று கொண்டிருந்த தாவூத் நபியின் மகனார் 17 வயதான சுலைமான் (அலை) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி, "என்ன தீர்ப்பு வழங்கப்பட்டது ? " என்று கேட்டார்கள் .
அவர்கள் தீர்ப்பு விவரத்தைச் சொன்னார்கள் .
அதற்கு நபி சுலைமான் (அலை) அவர்கள் : " நான் நீதிபதியாக இருந்தால் இவ்வாறில்லாமல் இரு தரப்பினருக்கும் இலகுவான வகையில் வேறு வகையாகத் தீர்ப்பு வழங்கியிருப்பேன் " என்றார்கள்

இது தகப்பனார் தாவூத் நபிக்கு தெரிந்தது.
அவர்கள் மகனையும், வாதி, பிரதி வாதியும் அழைத்து மகனிடம், "அத்தகைய தீர்ப்பு என்ன ?"
" ஆடுகள் வேளாண்மையை அழித்து விட்டதால், ஆட்டுக்கு சொந்தக்காரன் , அந்த வேளாண் பூமியில் விவசாயம் செய்து ஆடுகள் மேய்வதற்கு முன்னர் அவ்விவசாயம் எப்படியிருந்ததோ, அந் நிலைக்கு வந்ததும் அப்படியே அதை திருப்பி வேளாண்மைக்காரனிடம் , ஒப்படைக்க வேண்டும் .
அதுவரையில் பயிரை அழித்த ஆடுகளை வேளாண்மைக்காரன் வைத்து வளர்த்துக் கொண்டு அவற்றின் பாலையும் , குட்டிகளை ஈன்றால் அவற்றையும் உபயோகித்து கொள்ளலாம் . விவசாய நிலம் திருப்பி பெறப்பட்டதும் ஆடுகளை திரும்ப கொடுத்து விட வேண்டும் .இது என்னுடைய தீர்ப்பாகும் " என்று சுலைமான் நபி கூறினார்கள் .
விவசாயம் பாதித்ததால் , ஆடுகளையே கொடுத்து விட வேண்டும் என்பது தாவூது நபியின் தீர்ப்பு .
ஒரு விவசாயத்தின் பலன்தான் நஷ்டமடைந்திருக்கிறதே தவிர அந்த பூமியே நஷ்டமடைந்து விடவில்லை. அதனால் ஆடுகளின் பயனைத்தான் விவசாயி அனுபவிக்க வேண்டுமே தவிர மொத்த ஆடுகளையும் தனக்குச் சொந்த மாக்கிக் கொள்ளக் கூடாது என்பது சுலைமான் நபியின் தீர்ப்பு . சரி தானே ?
இந்த தீர்ப்பை தாவூத் நபியும், வாதியும் , பிரதிவாதியும் மனதார ஏற்றுக் கொண்டார்கள் .

وَدَاوٗدَ وَسُلَيْمٰنَ اِذْ يَحْكُمٰنِ فِى الْحَـرْثِ اِذْ نَفَشَتْ فِيْهِ غَنَمُ الْقَوْمِ وَكُنَّا لِحُكْمِهِمْ شٰهِدِيْنَ ۙ
தாவூதையும் ஸுலைமானையும் (நபியாக அனுப்பி வைத்தோம்.) ஒருவருடைய ஆடுகள் மற்றொருவரின் பயிரை மேய்ந்துவிட்டது பற்றி (தாவூத், சுலைமான் ஆகிய) இருவரும் தீர்ப்புக் கூற இருந்த சமயத்தில் அவர்களுடைய தீர்ப்பை நாம் (கவனித்துப்) பார்த்துக் கொண்டிருந்தோம்.
(அல்குர்ஆன் : 21:78)

முந்தைய நபிமார்களின் சட்டமும், தீர்ப்பும் இறுதி நபி (ஸல்) அவர்களின் சட்டத்திலும் கடைப்பிடிக்க வேண்டுமென்ற கட்டாயம் எதுவும் கிடையாது .
இறுதி நபி (ஸல்) அவர்களின் மார்க்கச் சட்டங்கள் தனித்தன்மை வாய்ந்தவை : நிலையானவை. அதே அந்த வழக்கு என்றால் அது திருத்தி எழுதிய தீர்ப்புகளாக இருக்கும் .
இப்போதை சட்டம் என்னவென்றால் , ஆடு, மாடுகளுக்குரியவன் , அவற்றுடன் இல்லாதிருக்கையில் , அவை இரவிலோ , பகலிலோ அடுத்தவரின் விவசாயத்தில் புகுந்து அழித்தால் , அக்கால்நடைகளுக்குரியவன் அதற்குப் பொறுப்பாளி அல்ல , என ஹனபி சட்டப் பிரிவை சார்ந்தோர் கூறுகின்றனர் .

**" வாயில்லா ஜீவன்கள் செய்யும் குற்றம் தள்ளி விடப்பட வேண்டியதாகும் " என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் ( புகாரி, முஸ்லிம் )**
" ஆனால் இரவில் புகுந்து
அக்கால்நடைகள் அழித்தால் அவற்றிற்குரியவன் பொறுப்பாளியாவான் ; பகலிலாயின் பொறுப்பாக மாட்டான் " - என ஷாபிஈ சட்டப் பிரிவைச் சார்ந்தோர் கூறுகின்றனர் .
ர.ரா

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் மீது அவதூறு .
திருக்குர்ஆனின் 18 வது ஜுஸ்வு ( கத்அஃப்லஹ )



அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பயணம் புறப்பட விரும்பினால் தம் துணைவியரிடையே எவரைப் பயணத்தில் தம்முடன் அழைத்துச் செல்வது எனத் தீர்மானித்திட சீட்டுக் குலுக்கிப் போடுவது வழக்கம். அவர்களில் எவரது பெயருள்ள சீட்டு வருகின்றதோ அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு செல்வார்கள்.

இவ்வாறே அவர்கள் தாம் மேற் கொண்ட **பனூ முஸ்த-க்** என்ற ஒரு போரின் போது எங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட் டார்கள். அதில் எனது பெயருள்ள சீட்டு வந்தது. ஆகவே, நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பயணம் புறப்பட்டுச் சென்றேன். இது பெண்கள் கடைப்பிடிக்க வேண்டிய பர்தா எனும் ஹிஜாபின் சட்டம் அருளப்பட்ட பிறகு நடந்ததாகும். அப் பயணத்தின் போது நான் எனது ஒட்டகச் சிவிகையில் வைத்து சுமந்து செல்லப்படுவேன். அதில் நான் இருக்கும் நிலையிலேயே கீழே இறக்கி வைக்கவும்படுவேன்.
நபி (ஸல்) அவர்கள் அந்தப் போர் முடிந்து வெற்றியுடன் திரும்பிக் கொண்டிருந்த நிலையில் நாங்கள் மதீனாவை நெருங்கிய போது இரவு வேளையில் ஓரிடத்தில் தங்கும்படி அறிவிப்புச் செய்தார்கள்.

அவர்கள் தங்கும்படி அறிவிப்புச் செய்த போது நான் (சிவிகையிலிருந்து) எழுந்து இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக மறைவிடம் தேடி படையைக் கடந்து தனியாகச் சென்றேன். என் இயற்கைத் தேவையை நான் முடித்துக் கொண்ட பின் முகாமை நோக்கிச் சென்றேன்.
அப்போது என் கழுத்திலிருந்த யமன் நாட்டு ழஃபாரி நகர முத்து மாலையொன்று அறுந்து விழுந்து விட்டது. ஆகவே நான் திரும்பிச் சென்று எனது மாலையைத் தேடலானேன். அதைத்

துழாவிக் கொண்டி ருந்தது, நான் சீக்கிரம் திரும்பிச் சென்று படையினருடன் சேரவிடாமல் என்னைத் தடுத்து விட்டது.
எனக்காகச் சிவிகையை ஒட்டகத்தில் கட்டும் குழுவினர் என் சிவிகைக்குள் நான் இருப்பதாக எண்ணிக் கொண்டு அதைத் தூக்கிச் சென்று நான் பயணம் செய்து வந்த ஒட்டகத்தின் மீது வைத்துக்கட்டிவிட்டனர்.

அந்தக் காலக்கட்டத்தில் பெண்கள்
மெலிந்தவர்களாக இருந்தனர். உடல் கனக்கும் அளவுக்கு அவர்களுக்கு சதைபோட்டிருக்கவில்லை. அப்போதைய பெண் சிறிதளவு உணவையே உண்பாள். ஆகவே, அந்தச் சிவிகையைத் தூக்கிய போது அது கனமில்லாமல் இருந்ததை அம்மக்கள் வித்தியாசமாகக் கருதவில்லை. மேலும், நான் அப்போது வயது குறைந்த இளம் பெண்ணாக வேறு இருந்தேன்.
எனவே, அவர்கள் ஒட்டகத்தைக் கிளப்பி அதில் நானிருப்பதாக நினைத்தபடி நடக்கலாயினர். படை கடந்து சென்ற பிறகு காணாமற்போன எனது மாலை கிடைத்து விட்டது. நான் அவர்கள் முகாமிட்டிருந்த இடத்திற்கு வந்தேன். அங்கிருந்த அனைவரும் சென்றுவிட்டிருந்தனர். அங்கு அவர்களில் அழைப்பவரும் இருக்கவில்லை; பதிலளிப்ப வரும் இருக்கவில்லை. நான் ஏற்கெனவே தங்கியிருந்த இடத்தை நாடிப் போனேன். நான் காணாமல் போயிருப்பதை அறிந்து படையினர் நிச்சயம் என்னிடம் திரும்பி வருவார்கள் என்று நான் கருதினேன். நான் எனது இடத்தில் அமர்ந்திருக்க என் கண்ணில் உறக்கம் மேலிட்டு விட நான் தூங்கிவிட்டேன்.

படை சென்றதற்குப் பின்னால் படையினர் முகாமிட்ட இடத்தில் வறவிட்டுச் சென்ற பொருள்களை எடுத்துச் செல்வதற்காக ஸஃப்வான் பின் முஅத்தல் அஸ்ஸுலமி அத்தக்வானீ என்பார் இரவின் பிற்பகுதியில் புறப்பட்டு நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் அதிகாலையில் தவறவிடப்பட்ட பொருள்களைத் தேடுவதற்காக வந்து சேர்ந்தார்.
அவர் அங்கே தூங்கிக் கொண்டிருந்த ஒரு மனிதனின் உருவத்தை என்னைப் பார்த்தார். ஆகவே, என்னிடம் வந்தார். என்னைப் பார்த்ததும் அவர் அடையாளமும் கண்டு கொண்டார். பர்தாவுடைய சட்டம் அருளப்படுவதற்கு முன்னர் அவர் என்னைப் பார்த்திருந்தார்.
அவர் என்னை அறிந்து கொண்டு இன்னா-ல்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஊன் நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள் மேலும், நாம் அவனிடமே திரும்பிச் செல்ல விருக்கிறோம் என்று அவர் கூறிய சப்தத்தைக் கேட்டு நான் கண்விழித்தேன். உடனே உறக்கத்தில் விலகியிருந்த எனது மேலங்கி யால் முகத்தை மறைத்துக் கொண்டேன்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் என்னிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர் இன்னா-ல்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன் என்று கூறியதைத் தவிர வேறெதையும் அவரிடமிருந்து நான் செவி யேற்கவுமில்லை. பிறகு அவர் தமது ஒட்டகத்தை மண்டியிடச் செய்து நான் ஏறிக் கொள்வதற்கு ஏதுவாக அதன் முன்னங் கால்களை தமது காலால் மிதித்துக் கொள்ள, நான் அதில் ஏறிக் கொண்டேன். அவர் நானிருந்த ஒட்டகத்தை நடத்திச் செல்லலானார்.

இறுதியில் படையினர் மதிய ஓய்வுக்காக நடுப்பகல் நேரத்தில் ஓரிடத்தில் தங்கிவிட்ட பின்னர் நாங்கள் அவர்களை வந்தடைந்தோம். இப்போது எங்கள் இருவரையும் கண்டு அவதூறு பேசி என் விஷயத்தில் அழிந்தவர்கள் அழிந்து போனார்கள். என் மீது அவதூறுப் பிரசாரம் செய்ததில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டி ருந்தவன் அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் எனும் நயவஞ்சகர்களின் தலைவன் ஆவான்.
பிறகு நாங்கள் மதீனா வந்தடைந்தோம். அங்கு வந்து ஒரு மாதகாலம் நான் நோயுற்று விட்டேன்.
மக்களோ அவதூறு கற்பித்தவர்களின் சொல்லைப் பரப்பிக் கொண்டு இருந்தார்கள். இந்த அவதூறு பற்றி எதுவுமே எனக்குத் தெரியாது.

நான் நோயுறும் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வழக்கமாகக் காட்டுகின்ற பரிவை இம்முறை நான் நோயுற்றிருந்த போது அவர்களிடம் காண முடியாமல் போனதை எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. அவர்கள் வருவார்கள்; சலாம் சொல்வார்கள்; பிறகு எப்படி இருக்கிறாய் என்று கேட்பார்கள். பிறகு திரும்பிச் சென்று விடுவார்கள். அவ்வளவுதான். இது தான் எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. என்னைப் பற்றி வெளியே பேசப்பட்டு வந்த அந்தத் தீய சொல் பற்றி ஒரு சிறிதும் உடல் நலம் தேறுவதற்கு முன் எனக்குத் தெரியாது.
நோயிலிருந்து குணமடைந்த பின் நானும் என்னுடன் மிஸ்தஹின் தாயாரும் நாங்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்தி வந்த மனாஸிஉ எனப்படும் புறநகர் பகுதியை நோக்கிச்

சென்றோம். நாங்கள் இரவு நேரங்களில் மட்டும் இவ்வாறு செல்வோம். எங்கள் வீடுகளுக்கு அருகிலேயே கழிப்பிடங்களை அமைத்துக் கொள்வதற்கு முன்னால் நாங்கள் இவ்வாறு புறநகர்ப் பகுதிகளுக்கு சென்று கொண்டிருந்தோம்.

கழிப்பிடம் நோக்கி வெளியே செல்லும் எங்களது இந்த வழக்கம் முந்தைய அரபுகளின் வழக்கத்தை ஒத்ததாயிருந்தது. அப்போது நாங்கள் எங்கள் வீடுகளுக்கு அருகிலேயே கழிப்பிடங்கள் அமைப்பதைத் தொந்தரவாகக் கருதிவந்தோம்.

நானும் உம்மு மிஸ்தஹும் நடந்தோம். அவர் அபூ ருஹ்ம் பின் முத்த-ப் பின் அப்தி மனாஃப் அவர்களின் புதல்வியாவார். அபூபக்ர் (ரலி) அவர்களின் தாயின் சகோதரியான (ராயித்தா) பின்த் ஸக்ர் பின் ஆமிர்தான் உம்மு மிஸ்தஹின் தாயாராவார். உம்மு மிஸ்தஹின் புதல்வரே மிஸ்தஹ் பின் உஸாஸா (பின் அப்பாத் பின் முத்த-ப்) ஆவார்.
உம்மு மிஸ்தஹும் நானும் எங்கள் இயற்கைத் தேவைகளை முடித்துக் கொண்டு எனது வீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது உம்மு மிஸ்தஹ் தனது ஆடையில் இடறிக் கொண்டார். உடனே அவர், மிஸ்தஹ் நாசமாகட்டும் என்று தம் புதல்வரைச் சபித்தவராகக் கூறினார். நான், மிக மோசமான சொல்லைச் சொல்லிவிட்டீர். பத்ருப் போரில் கலந்து கொண்ட ஒரு மனிதரையா ஏசுகின்றீர்கள்? என்று கூறினேன்.

அதற்கு அவர், அம்மா! அவர் என்ன சொன்னார் என்பதை நீங்கள் கேள்விப்படவில்லையா? என்று கேட்டார். என்ன சொன்னார்? என நான் வினவ, அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன அபாண்டத்தை அப்போது அவர் எனக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு எனது நோய் இன்னும் அதிகரித்து விட்டது.
நான் எனது வீட்டுக்குத் திரும்பி வந்த போது என் கணவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து எனக்கு சலாம் சொல்லிவிட்டு, எப்படி இருக்கிறாய்? என்று கேட்டார்கள்.

அப்போது நான் என் தாய் தந்தையரிடம் செல்ல எனக்கு அனுமதி தருவீர்களா? என்று கேட்டேன். உண்மையிலேயே அப்படியொரு வதந்தி உலவுகின்றதா என்று விசாரித்து என் மீதான அவதூறுச் செய்தியை என் பெற்றோரிடமிருந்து அறிந்து உறுதிப்படுத்திக் கொள்ள அப்போது நான் விரும்பினேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். உடனே நான் என் பெற்றோரிடம் வந்து சேர்ந்தேன்.

என் தாயாரிடம், அம்மா! மக்கள் என்னைப் பற்றி என்ன பேசிக்
கொள்கிறார்கள்? என்று கேட்டேன். என் தாயார், என் அன்பு மகளே! உன் மீது இந்த விஷயத்தைப் பெரிதுபடுத்திக் கொள்ளாதே! அல்லாஹ்வின் மீதாணையாக! சக்களத்திகள் பலரும் இருக்க, தம் கணவரிடம் பிரியத்துக் குரியவளாக இருக்கும் அழகொளிரும் பெண்ணைக் குறித்து அவளுடைய சக்களத்திகள் அதிகமாக வதந்திகள் பேசத் தான் செய்வார்கள். அவ்வாறு பேசாமலிருப்பது பெரும்பாலும் குறைவேயாகும் என்று கூறினார்.

உடனே நான், சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூயவன்.) இப்படியா மக்கள் பேசி விட்டார்கள்! என்று வியப்புடன் சொன்னேன். அன்றிரவு காலை வரை நான் அழுதேன். என் கண்ணீரும் நிற்கவில்லை; உறக்கமும் என்னைத் தழுவவில்லை. காலை நேரம் வந்த போதும் அழுதேன்.
இதற்கிடையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் மனைவியை அதாவது என்னைப் பிரிந்து விடுவது குறித்து ஆலோசனை கேட்பதற்காக
அலீ பின் அபீ தாப் அவர்களையும், உஸாமா பின் ஸைத் அவர்களையும் அழைத்தார்கள். அத்தருணத்தில் வஹீ வேத அறிவிப்பு- தாற்காலிகமாக நின்றுபோயிருந்தது.
உஸாமா பின் ஸைத் (ரலி) அவர்களோ நான் நிரபராதி எனத் தாம் அறிந்துள்ளதையும் நபி (ஸல்) அவர்களின் உள்ளத்தில் குடும்பத்தார் மீது இருந்த பாசத்தில் தாம் அறிந்துள்ளதையும் வைத்து ஆலோசனை கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே! தங்களுடைய துணைவியாரிடம் நல்ல குணத்தைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை என்று அப்போது உஸாமா சொன்னார்கள்.
அலீ அவர்களோ நபி (ஸல்) அவர்களின் மனவேதனையைக் குறைக்கும் விதமாக அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் உங்க ளுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்த வில்லை. ஆயிஷா அன்றிப் பெண்கள் நிறையப் பேர் இருக்கின்றனர். பணிப்பெண் பரீரா இடம் கேட்டால், அவள் உங்களிடம் உண்மையைச் சொல்வாள் என்று கூறினார்கள்.
ஆகவே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் பணிப் பெண்ணான பரீராவை அழைத்து, பரீராவே! ஆயிஷாவிடம் உனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தும் செயல் எதையாவது நீ பார்த்திருக்கிறாயா? என்று கேட்டார்கள்.

அதற்கு பரீரா, தங்களைச் சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீதாணையாக! அவர், தம் வீட்டாரின் குழைத்த மாவை அப்படியே விட்டுவிட்டு உறங்கிப் போய்விடுவார். வீட்டிலுள்ள ஆடு வந்து அதைத் தின்றுவிடும். அத்தகைய விபரமும் வயதும் குறைந்த இளம்பெண் என்பதைத் தவிர அவரைக் குறை சொல்லக் கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை என்று பதில் கூறினார்.

அன்றைய தினம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் பின் உபை பின் சலூலுக்கு எதிராக உதவி கோரி எழுந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரை மேடையில் (மிம்பரில்) இருந்தவாறு முஸ்லிம் மக்களே! என் வீட்டார் விஷயத்தில் வதந்தி கிளப்பி எனக்கு மன வேதனையளித்த ஒரு மனிதனுக்கெதிராக எனக்கு உதவிபுரிபவர் யார்? ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! என் வீட்டாரிடம் நல்லதையே நான் அறிவேன். அவர்கள் அவதூறு கிளப்பிய நயவஞ்சகர்கள் ஒரு மனிதரை என் வீட்டாருடன் இணைத்து அவதூறு கூறியுள்ளனர். அவரைப் பற்றி நான் நல்லதையே அறிவேன். நான் இருக்கும் போது தான் அவர் என் வீட்டிற்கு வந்திருக்கின்றார். தனியாக வந்ததில்லை என்று கூறினார்கள்.
உடனே பனூ அப்தில் அஷ்ஹல் கூட்டத்தைச் சேர்ந்த சஅத் பின் முஆத் அல் அன்சாரி (ரலி) அவர்கள் எழுந்து நின்று, அல்லாஹ்வின் தூதரே! அவனுக்கெதிராகத் தங்களுக்கு நான் உதவுகிறேன். அவன் எங்கள் அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் அவனது கழுத்தைத் துண்டித்து விடுகிறோம். எங்கள் சகோதரர்களான கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்தவனாக அவன் இருந்தால் என்ன செய்ய வேண்டுமென்று தாங்கள் எங்களுக்கு உத்தரவிடுங்கள். தங்கள் உத்தரவை நாங்கள் செய்து முடிக்கிறோம் என்று கூறினார்கள்.

உடனே சஅத் பின் உபாதா எழுந்தார். இவர் கஸ்ரஜ் குலத்தின் தலைவராவார். இவர் அதற்கு முன் நல்ல மனிதராகத் தான் இருந்தார். ஆயினும், குலமாச்சர்யம் அவரை உசுப்பிவிடவே, அவர் சஅத் பின் முஆத் அவர்களைப் பார்த்து, அல்லாஹ்வின் மீதணையாக! தவறாகச் சொல்லிவிட்டீர்! அவனை நீர் கொல்லமாட்டீர். அவனைக் கொல்ல உம்மால் முடியாது என்று கூறினார்.

உடனே உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் எழுந்து நின்றார். இவர் (அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த) சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் தந்தையின் சகோதரர் மகன் ஆவார். அவர் சஅத் பின் உபாதா அவர்களிடம் நீர்தாம் தவறாகப் பேசினீர்! அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றேதீருவோம். நீர் ஒரு நயவஞ்சகர். அதனால்தான் நயவஞ்கர்களின் சார்பாக வாதிடுகின்றீர்! என்று சொன்னார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உரை மேடைமீது நின்று கொண்டிருக்க, அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு குலத்தாரும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து சண்டையிட்டுக் கொள்ளத் தயாராகிவிட்டனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேடையிலிருந்து இறங்கி) அவர்கள் மௌனமாகும்வரை அவர்களை அமைதிப்படுத்திக் கொண்டிருந்தார்கள். பிறகு தாமும் அமைதியாகி விட்டார்கள்.

அன்றைய நாள் முழுவதும் நான் அப்படியே இருந்தேன். என் கண்ணீரும் ஓய வில்லை; என்னை உறக்கமும் தழுவவில்லை. காலையானதும் என் தாய் தந்தையர் என் அருகே இருந்தார்கள். நானோ இரண்டு இரவுகள் ஒரு பகல் (முழுக்க) தூக்கம் என்னைத் தழுவாமலும் கண்ணீர் ஓயாமலும் அழுது விட்டிருந்தேன். என் ஈரல் பிளந்து விடுமோ என்று என் பெற்றோர் எண்ணிக் கொண்டிருந்தனர்.

நான் அழுது கொண்டிருக்க, என்னருகில் என் தாய் தந்தையர் அமர்ந்து கொண்டிருந்த போது, அன்சாரிப் பெண்ணொருத்தி வந்து என்னிடம் (உள்ளே வர) அனுமதி கேட்டாள். நான் அவளுக்கு அனுமதியளித்தவுடன் என்னுடன் சேர்ந்து அவளும் அழுதபடி அமர்ந்து கொண்டாள். நாங்கள் இவ்வாறு இருக்கையில், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து சலாம் கூறிவிட்டு, அமர்ந்தார்கள். என்னைப் பற்றி அவதூறு சொல்லப்பட்ட நாளிலிருந்து அவர்கள் என்னருகே அமர்ந்ததில்லை. ஒரு மாதகாலம் வரை என் விஷயத்தில் அல்லாஹ்விட மிருந்து தீர்ப்பு எதுவும் அவர்களுக்கு வஹீயாக அருளப்படாமலேயே அவர்கள் இருந்து வந்தார்கள்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஏகத்துவ உறுதி மொழி கூறி, இறைவனைப் புகழ்ந்து விட்டு, ஆயிஷா! உன்னைக் குறித்து இன்னின்னவாறு எனக்குச் செய்தி வந்தது. நீ நிரபராதியாக இருந்தால், அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று வஹீயின் மூலம் அறிவித்து விடுவான். ஒருக்கால் நீ குற்றமே எதுவும் செய்திருந்தால், அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரி அவன் பக்கம் திரும்பிவிடு! ஏனெனில், அடியான் தனது பாவத்தை

ஒப்புக் கொண்டு மனம் திருந்தி பாவமன்னிப்புக் கோரினால், அவனது கோரிக்கையை ஏற்று அல்லாஹ் அவனை மன்னிக்கிறான் என்று சொன்னார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது பேச்சை முடித்த போது எனது கண்ணீர் முழுவதுமாக நின்றுபோய்விட்டிருந்தது. அதில் ஒரு துளியும் எஞ்சியிருப்பதாக நான் உணரவில்லை.
அப்போது நான் என் தந்தையார் அபூபக்ர் (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சொன்னதற்கு பதில் கூறுங்கள்! என்று சொன்னேன். அதற்கு என் தந்தையார், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர் களிடம் என்ன பதில் சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை என்று கூறினார்கள்.
பிறகு நான் என் தாயார் உம்மு ரூமான் இடம், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு பதில் கூறுங்கள்! என்று சொன்னேன். அதற்கு என் தாயார், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை என்று கூறினார்கள். அதற்கு நான், நானோ வயது குறைந்த இளம் பெண். குர்ஆனிலிருந்து நிறையத் தெரியாதவள். இந்நிலையில் மக்கள் என்னைப் பற்றிப் பேசிக் கொண்ட இந்தச் செய்தியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். அது உங்கள் மனங்களில் பதிந்து போய் அதை உண்மை என்று நீங்கள் நம்பிவிட்டீர்கள் என்பதை அல்லாஹ்வின் மீதாணையாக நான் அறிவேன். ஆகவே, உங்களிடம் நான் குற்றமற்றவள் என்று கூறினால், -நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும்- அதை நீங்கள் நம்பப் போவதில்லை. நான் குற்றம் ஏதேனும் புரிந்திருப்பதாக ஒப்புக் கொண்டால், -நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும்- நான் சொல்வதை அப்படியே உண்மை என்று ஏற்று என்னை நம்பி விடுவீர்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! (எனக்கும்) உங்களுக்கும் நபி யூசுஃப் (அலை) அவர்களின் தந்தை நபி யாகூப் -(அலை) அவர்களையே உவமானமாகக் காண்கிறேன். (அதாவது:) (இதைச்) சகித்துக் கொள்வதே நல்லது; நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம்தான் நான் பாதுகாப்புக் கோரவேண்டும் **(12:18)**
என்று கூறினேன். பிறகு (வேறு பக்கமாகத்) திரும்பிப்படுத்துக் கொண்டேன்.

அப்போது நான் குற்றமற்றவள் என்பதையும் மேலும், அல்லாஹ் நான் குற்றமற்றவள் என நிச்சயம் அறிவிப்பான் என்பதையும் நன்கறிவேன். ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! ஓதப்படுகின்ற வஹீயை வேத அறிவிப்பை என் விஷயத்தில் அல்லாஹ் அருள்வான் என்று நான் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. அல்லாஹ் என் தொடர்பாக ஏதேனும் ஓதப்படுகின்ற ஒன்றைச் சொல்கின்ற அளவுக்கு நான் உயர்ந்தவள் அல்ல என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. மாறாக, அல்லாஹ் என்னைக் குற்றமற்றவள் என அறிவிக்கும் ஒரு கனவை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது உறக்கத்தில் காண்பார்கள் என்றே நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் வீட்டில் அமர்ந்திருந்த இடத்திலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எழுந்திருக்கவுமில்லை. வீட்டார் எவரும் வெளியே செல்லவுமில்லை. அதற்குள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மீது குர்ஆன் வசனங்கள் அருளப்படத் தொடங்கிவிட்டன. உடனே அவர்களுக்கு வேத அறிவிப்பு வருகின்ற நேரங்களில் ஏற்படும் கடுமையான சிரம நிலை அவர்களைப் பற்றிக் கொண்டது. அது கடுங்குளிர் காலமாயிருந்தும் அவர்களின் மேனியிலிருந்து வேர்வைத் துளிகள் சிறு முத்துகளைப் போல் வழியத் தொடங்கி விட்டன. அவர்களின் மீது அருளப்பட்ட இறைவசனத்தின் பாரத்தினால்தான் அவர்களுக்கு வியர்வை அரும்பி வழியுமளவுக்கு இந்தச் சிரமநிலை ஏற்பட்டது.

அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு விலகியவுடன் மகிழ்ச்சியுடன் சிரித்தவாறே அவர்கள் பேசிய முதல் வார்த்தை ஆயிஷா! மாண்பும் மகத்துவமுமிக்க அல்லாஹ் உன்னை குற்றமற்றவள் என்று அறிவித்து விட்டான் என்பதாகவே இருந்தது.

உடனே என் தாயார் அல்லாஹ்வின் தூதரிடம் எழுந்து செல்! என்று என்னிடம் கூறினார்கள். அதற்கு நான் அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் நான் செல்ல மாட்டேன். மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ்வையே புகழ்ந்து, அவனுக்கே நன்றி செலுத்துவேன் என்று சொன்னேன்.
அப்போது அல்லாஹ், அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தாம் என்று தொடங்கும் (24:11-20) பத்து வசனங்களை அருளியிருந்தான். என் குற்ற மற்ற நிலை தொடர்பாக அல்லாஹ் இதை அருளிய போது என் தந்தை அபூபக்ர் சித்தீக் (ரலி) அவர்கள்,

அல்லாஹ்வின் மீதாணையாக! என் மகள் ஆயிஷா குறித்து மிஸ்தஹ் அவதூறு கூறிய பின்பு ஒரு போதும் அவருக்காக நான் சிறிதும் செலவிடமாட்டேன் என்று சத்தியமிட்டுக் கூறினார்கள். மிஸ்தஹ் பின் உஸாஸா தம் உறவினர் என்பதாலும், அவர் ஏழை என்பதாலும் அவருக்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் செலவிட்டுவந்தார்கள். அப்போது அல்லாஹ் உங்களில் செல்வம் மற்றும் தாயாளகுணம் படைத்தோர் தங்கள் உறவினர்களுக்கோ ஏழைகளுக்கோ அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ எதுவும் வழங்க
மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம். அவர்களால் தங்களுக்கு ஏதேனும் வருத்தம் ஏற்பட்டிருந்தால் அவர்கள் அதனை மன்னித்து பிழைகளைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடட்டும்! அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கருணையுடை யோனுமாய் இருக்கின்றான் எனும் (24:22ஆவது) வசனத்தை அருளினான்.

அபூபக்ர் (ரலி) அவர்கள், ஆம்! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பளிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன் என்று கூறிவிட்டு, மிஸ்தஹ் அவர்களுக்கு ஏற்கெனவே தாம் செலவிட்டு வந்ததைத் திரும்பவும் தொடரலானார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்குச் செய்யும் இந்த உதவியை ஒரு போதும் நான் நிறுத்தமாட்டேன் என்றும் சொன்னார்கள்.

குர்ஆனில் எனது கற்பொழுக்கம் குறித்த வசனங்கள் அருளப்படுவதற்கு முன்னால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் விஷயத்தில் தம்முடைய இன்னொரு துணைவியாரான ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் விசாரித்திருந்தார்கள்.
"ஸைனபே! நீ ஆயிஷா குறித்து என்ன அறிந்திருக்கிறாய்? அல்லது பார்த்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், அல்லாஹ்வின் தூதரே! என் காதையும் என் கண்ணையும் (அவற்றின் மீது பழி சுமத்தாமல்) நான் பாதுகாத்துக் கொள்கிறேன். ஆயிஷாவைக் குறித்து நான் நல்லதையே அறிவேன் என்று கூறினார்கள்.
ஸைனப் அவர்கள்தாம் நபியவர்களின் துணைவியரில் எனக்குள்ள அழகிலும் நபி (ஸல்) அவர்களின் அன்பிலும் எனக்கு போட்டியாக இருந்தவர். ஆயினும், அல்லாஹ் அவரை இறையச்சமுடைய பேணுதலான பண்பையளித்துப் பாதுகாத்திருந்தான். ஆனால், ஸைனபுக்காக அவருடைய சகோதரி ஹம்னா என்னுடன் மோதிக் கொள்ளலானார். என் விஷயத்தில் அவதூறு பேசி அழிந்து போனவர்களுடன் அவரும் அழிந்து போனார்.
ர.ரா

எதன் பொருட்டால் மழை பொழிகிறது ?
திருக்குர்ஆனின் 19-வது ஜுஸ்வு
(வகாலல்லதீன )



மழை எவ்வாறு ஏற்படுகின்றது எனில், முதலில் கடலில்இருந்தும் பிற நீர்நிலைகளில் இருந்தும், நீரானது கதிரவனின்வெப்பத்தால் நீராவியாகி மேலெழுந்து சென்று மேகங்களை அடைகின்றது. அப்படி மேலெழுந்து சென்று மேகங்களை அடையும் பொழுது குளிர்வடைந்து நீராக மாறுகின்றது. பின்னர் இந்த நீர்தாங்கிய மேகங்களில் (கார்முகில்களில்) இருந்து நீரானது துளிகளாக, திவலைகளாக பூமியின்மேற்பரப்பில் விழும் போது மழையானது ஏற்படுகிறது.

மழை வீழும் போது மொத்த நீரும் நிலத்தை அடைவதில்லை. அதில் ஒரு பகுதி நீராவியாகி விடுகிறது. பாலைவனம்போன்ற பகுதிகளில் மொத்த நீரும்ஆவியாகிவிடுவது உண்டு. ஒரு இடத்தில் மழை அதிகமாகப் பெய்யும் காலம், அவ்விடத்திற்குரிய மழைக்காலம் என அழைக்கப்படுகின்றது.

மழை பெய்யச் செய்யும் பாக்டீரியா

"அமெரிக்காவின் மொன்டானா மாநில பல்கலைக்கழக விஞ்ஞானிகள் மழை பெய்விக்கும் பாக்டீரியாவை கண்டுபிடித்துள்ளனர்.
இதன் மூலம் வறண்ட பகுதிகளிலும் மழை பெய்விக்க முடியும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. தாவரங்கள் மேல் படரும் பாக்டீரியா காற்று மூலம் விண்ணுக்குச் செல்கிறது. இந்தப் பாக்டீரியா மீது உருவாகும் ஐஸ் பல்கிப் பெருகுகிறது. இந்த ஐஸ்கட்டிகள் மழை மேகங்களாக மாறுகின்றன. சில குறிப்பிட்ட வெப்பநிலையில் மழையாக பொழிகின்றன.
இந்த பாக்டீரியாக்கள் உலகம் முழுவதும் எல்லா பகுதிகளிலும் காணப்படுகின்றன. மழை பெய்யும் காலங்களில்தான் இந்த பாக்டீரியாக்கள் பெருகி வளர்கின்றன.
இவை 83 டிகிரி சென்டிகிரேட் வெப்பநிலைக்கு உட்பட்ட இடத்தில் மட்டுமே வளர முடியும். தற்போது உலகம் வெப்பமயமாகி வருவதால் இந்த பாக்டீரியாக்கள் அழியும் நிலை கூட ஏற்படலாம். எனவே இந்த பாக்டீரியாக்களை செயற்கை முறையில் உருவாக்குவது குறித்தும் விஞ்ஞானிகள் ஆய்வு செய்து வருகின்றனர்.
இப்படி மழை பொழிவதை விஞ்ஞானம் காரணம் காட்டுகிறது . ஆனால் குர்ஆனில் ...
மழை பொழியும் அளவை ஒவ்வொரு வருடத்திலும் மலக்குகள் அறிகிறார்கள். மழையின் அளவு வித்தியாசப்படாது எனினும் மழை பெய்யும் இடம்தான் வித்தியாசப்பட்டிருக்கும் .
எந்த வருடமும் மற்றைய வருடத்தைக் காட்டிலும் அதிகமான மழை பெய்வதில்லை .குறைவான மழையும் பெய்வதில்லை .அதாவது ஒவ்வொரு வருடமும் ஒரே அளவாகத்தான் பொய்கிறது .
எனினும் ஜனங்கள் பாவங்களைச் செய்தால் அம்மழையை வேறொரு சமுகத்துக்கு அல்லாஹ் மாற்றி விடுகிறான் . எல்லா ஜனங்களும் பாவம் செய்தால் அந்த வருடத்தின் மழையை கடல்களுக்கும் , காடுகளுக்கும் மாற்றி விட்டு மக்களின் நிலப்பரப்பில் வறண்ட பஞ்சத்தை ஏற்படுத்துகிறான்.

وَلَقَدْ صَرَّفْنٰهُ بَيْنَهُمْ لِيَذَّكَّرُوْا ۖ فَاَبٰٓى اَكْثَرُ النَّاسِ اِلَّا كُفُوْرًا
அவர்கள் நல்லுணர்ச்சி பெறும் பொருட்டு இவ்விஷயத்தைப் பலவாறாக அவர்களுக்கு எடுத்துரைத்தோம். எனினும், மனிதர்களில் பெரும்பாலானவர்கள் மிக்க நன்றி கெட்டவர்களாகவே இருக்கின்றனர்.
(அல்குர்ஆன் : 25:50)

ஜைத் பின் காலித் (ரலி) அறிவிக்கிறார்கள் :
" ஒரு தினம் பெருமானார் (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா என்னுமிடத்தில் காலை நேரத் தொழுகையைத் தொழுது முடித்ததும் மனிதர்களை நோக்கி,
" உங்களுடைய இரட்சகன் என்ன கூறுகின்றான் என நீங்கள் அறிவீர்களா?
" அல்லாஹ்வும் , அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள் "
" என்னுடைய அடியார்களில் என்னை விசுவாசங் கொண்டவரும் , என்னை நிராகரிப்பவரும் காலையில் எழுந்திருக்கின்றனர் "
" அல்லாஹ்வின் அருளினால் நாம் மழை பொழிவிக்கப்பட்டோம் எனக் கூறியவர் , என்னை விசுவாசங் கொண்டவர். நட்சத்திரத்தை நிராகரித்தவர் "
" இன்னின்ன நட்சத்திரமாக மாறுதலால் மழை பொழிவிக்கப்பட்டோம் எனக் கூறியவர் , என்னை நிராகரித்து விட்டு நட்சத்திரத்தை விசுவாசங் கொண்டவர் என்று அல்லாஹ் கூறுகின்றான் என
நபி (ஸல்) அவர்கள் விளக்கினார்கள் .
(புகாரி, முஸ்லிம்)

*இப்பொழுது புரிகிறதா* எதன் பொருட்டால் மழை பொழிகிறது ?
எதன் பொருட்டால் மழை நிராகரிக்கப்படுகிறது ? நீங்கள்தான் சொல்ல வேண்டும் .
ர.ரா

குர்ஆன், இன்ஜில் மற்றும் தவ்ராத்
திருக்குர்ஆனின் 20-வது ஜுஸ்வு
( அம்மன் கலக்க )



اِنَّ هٰذَا الْقُرْاٰنَ يَقُصُّ عَلٰى بَنِىْۤ اِسْرَآءِيْلَ اَكْثَرَ الَّذِىْ هُمْ فِيْهِ يَخْتَلِفُوْنَ

நிச்சயமாக இந்தக் குர்ஆன், இஸ்ராயீலின் சந்ததிகள் எவ்விஷயத்தில் தர்க்கித்துக் கொண்டிருக்கிறார்களோ அவைகளில் பெரும்பாலானவற்றை அவர்களுக்கு விவரித்துக் கூறுகிறது.
(அல்குர்ஆன் : 27:76)

" தேவன் தாம் செய்த தம்முடைய கிரியை ஏழாம் நாளிலே நிறைவேற்றி தாம் உண்டாக்கின தம்முடைய கிரியைகளை எல்லாம் முடித்த பின்பு ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார் "
பழைய ஏற்பாடு **ஆதியாகமம் 2 : 2 ( தவ்ராத்)**

"நிச்சயமாக நாம்தான் வானங்களையும், பூமியையும் அதற்கு மத்தியில் உள்ளவைகளையும் ஆறே நாள்களில் படைத்தோம். அதனால் நமக்கு யாதொரு களைப்பும் (சோர்வும்) ஏற்பட்டு விடவில்லை ". (அல்குர்ஆன் : 50:38)

பின்பு தேவன் ; " நமது சாயலாகவும் தமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக "
ஆதியாகமம் 1 : 26

"அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை "
(அல்குர்ஆன் : 42:11)

" ஆயிரம் தலைமுறைகளுக்குக் கிருபை செய்கிறவரும் பிதாக்களுடைய அக்கிரமத்தை அவர்களுடைய பின்னடி யார் பிள்ளைகளின் மடியிலே சரிக்கட்டுகிறவருமாகிய சேனைகளின் கர்த்தர் என்னும் நாமுமுள்ள மகத்துவமும் வல்லமையுமுள்ள தேவனே
- ஏரேமியா 32 : 18
இதில் மூதாதையர்கள் செய்த அக்கிரமத்தை அவர்களுடைய பிள்ளைகளின் மடியில் சுமத்தப்படுவதாக தவ்ராத்தில் கூறப்பட்டுள்ளது .
"எவன் வழி தவறினானோ அவன் வழி தவறியதெல்லாம் அவன் தனக்குத்தான் என்றும் தனது பாவத்தைச் சுமக்கும் ஒருவன் மற்றவனின் பாவத்தை சுமந்து கொள்ளமாட்டான் "
அல்குர்ஆன் (17 : 15)

" எந்த ஓர் ஆத்மாவுக்கும் அது சம்பாதித்தன் நன்மைதான் அதற்குண்டு ; அது சம்பாதித்தன் தீமைதான் அதற்கு உண்டு
அல்குர்ஆன் ( 2 : 286)

“ எனக்கு முன்னே வந்தவர்கள் எல்லாரும் கள்ளரும் , கொள்ளைக்காரருமாயிருக்கிறார்கள் . ஆடுகள் அவர்களுக்குச் செவி கொடுக்கவில்லை ” என்று ஈஸா நபி சொன்னதாக ,
யோவான் 10 : 8

“ திருக்குர்ஆனோ நிச்சயமாக அவர்கள் (நபிமார்கள்) நம்மிடம் நேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் . சிறப்பானவர்கள் ”
திருக்குர்ஆன் ( 38 : 47 )

நபி லூத் (நபி ) அவர்களைப் பற்றி மிகவும் ஆபாசமாக ஆதியாகமத்தில் கூறப்பட்டுள்ளது
“ இவ்விதமாக லோத் ( லூத்) தின் குமாரத்திகள் இருவரும் தங்கள் தகப்பனாலே கர்ப்பவதியானார்கள் ”
ஆதியாகமம் 19 : 30

இவை போன்று எத்தனை எத்தனையோ தவறுகள் அவற்றில் காணப்படுகின்றன
மாற்றப்படாத வேதங்களாக அவை இருப்பின் இத்தகைய தவறுகள் அதில் காணப்படாது .
அப்துல்லாஹ் பின் சலாம் போன்ற யூதர்களிலுள்ள தலைவர்களுக்கு உண்மையை எடுத்துக் காட்டி இஸ்லாத்தின்பால் அவர்களைக் கொண்டு வந்தது .இன்றும் வேற்றுமை பட்டுக் கொண்டிருக்கும் அநேகருக்கு திருக்குர்ஆன் உண்மையை எடுத்துக் காட்டி தன்பால் ஈர்த்துக் கொண்டு வருவதைக் காணலாம் .

ஆதலால் , நபியே , நீர் உண்மையின் மீதே இருக்கின்றீர் .உமக்கு அருளப்பட்ட திருக்குர்ஆன் வேதமும் தெளிவான உண்மையாகும் . இதனை நீர் அவர்களுக்குப் போதித்துக் கொண்டிரும்
ஆனால் வீண் பிடிவாதம் கொண்டிருப்போரை நீர் திருத்த முடியாது. அவர்களுக்குக் கூறுவது செத்த பிணத்திற்குக் கூறுவது போன்றதாகும் .

ரோம் வெற்றி
திருக்குர்ஆனின் 21வது ஜுஸ்வு (உத்லுமா ஊஹிய )



அல்லாஹ் கூறுகிறான்: 'அலிஃப் லாம் மீம், ரோம் (பாரசீகர்களால்) வெற்றிகொள்ளப்பட்டுவிட்டது. அருகிலுள்ள பூமியில் அவர்(ரோமர்)கள் தங்களுடைய தோல்விக்குப்பின் விரைவில் வெற்றியடைவார்கள். சில வருடங்களிலேயே அவர்கள் (வெற்றிகொள்வார்கள்) (வெற்றி-தோல்வி அளிக்கும்) அதிகாரம் (இதற்கு) முன்னரும், (இதற்குப்) பின்னரும் அல்லஹ்வுக்கே உரியது. (ரோமர்கள் வெற்றியடையும்) நாளில் முஃமீன்கள் மகிழ்ச்சியடைவார்கள்"
(அல்குர்ஆன் 30: 1-4)

யார் இந்த ரோமர்கள்?
'அர்ரூம்' என்பது ஹளரத் இப்ராஹீம் (அலை) அவர்களது புதல்வாரன ஹளரத் இஸ்ஹாக் (அலை) அவர்களது பேரரான ரூம் என்பவரது சந்ததியினர் யாவரையும் குறிக்கும். 'ரூம்' என்பவரது தந்தையின் பெயர் 'ஐஸ்' என்பதாகும். இவர் ஹளரத் யாகூப் (அலை) அவர்களது சகோதரர் ஆவார். இவருக்கு முன்னர் ஒருவர் 'ரூம்' என்ற பெயர் உள்ளவராக இருந்தார். இவர் ஹளரத் நூஹ் (அலை) அவர்களது புதல்வாரன 'யாபிது' என்பவரது பேரர் ஆவார். இவரது தந்தையின் பெயர் 'யூனான்' என்பதாகும். கிரீஸ் தேசத்துக்கு 'யூனான்' என்று பெயர். ஹளரத் நூஹ் (அலை) அவர்களது பேரரான 'யூனான்' என்பவர் இங்கு குடியேறி வாழ்ந்ததால் இவரது பெயர் இந்நாட்டுக்கு ஏற்பட்டது போலும். இந்நாட்டில் வாழ்கின்ற யாவருக்கும் 'உரோமர்' என்றும் 'யூனானியர்' என்றும் பொதுப்பெயர் உண்டு.
(தஃப்ஸீருல் ஹமீது ஃபீ தஃப்ஸீரில் குர்ஆனில் மஜீத்)

மேலும், 'அர்ரூம்' என்பது கிழக்கு ரோமர்களான அன்றைய பைஸாந்தியரைக் குறிக்கிறது. அரபியரை ஒட்டி மத்திய கிழக்கு நாடுகளில் மாபெரும் பேரரசை நிறுவி ஆட்சி புரிந்துவந்த இவர்கள், வேதக்காரர்களான 'கிறித்தவர்கள்' ஆவர். இவர்களின் அண்டை நாட்டினரான பாரசீகர்கள் அக்னி வழிபாடு செய்யும் 'மஜூசிகளாக' இருந்தனர். கி.பி. 610-ஆம் ஆண்டில் கிழக்கு ரோமர்கள்மீது பாரசீகர்கள் போர் தொடுத்து அன்றைய கிழக்கு ரோம் (பைஸாந்திய) நாட்டின் பல பகுதிகளை கைப்பற்றிவிட்டனர். அப்போதெல்லாம், நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் வழங்கப்பட்டுவிட்டது. திருக்குர்ஆன் இறைவேதம் என்பதையும், நபிகளார் இறைத்தூதர் என்பதையும் நிரூபிக்கும் வகையில் அல்லாஹ் இந்த அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்களில் ஓர் அறிவிப்பை வெளியிட்டான்.

கிழக்கு ரோமர்கள் தற்போதைக்கு பாரசீகர்களால் தோற்கடிக்கப்பட்டுவிட்டாலும், இன்னும் சில ஆண்டுகளில் ரோமர்கள் வெற்றிவாகை சூடுவார்கள் என்பதே அந்த அறிவிப்பாகும். அவ்வாறே கி.பி. 624-ல் கிழக்கு ரோமானியர் வெற்றியும் கண்டனர். அதே ஆண்டில் முஸ்லிம்கள் வரலாற்றுச் சிறப்புமிக்க பத்ரு போரில் வெற்றிவாகை சூடினர். இதனால், இறைநம்பிக்கையாளர்களுக்கு இரட்டை மகிழ்ச்சி ஏற்பட்டது. பின்னர் முஸ்லிம் கலீஃபாக்கள் கிழக்கு ரோமர்களையும் பரசீகர்களையும் தோற்கடித்து வெற்றிக்கொடி நாட்டியது பின்னாளில் நடந்த நிகழ்வாகும்.

ரோமர்களுக்கும் பாரசீகர்களுக்கும், நபி (ஸல்) அவர்களது காலத்தில் யுத்தம் நிகழ்ந்தது. ரோமர்களும் பாரசீகர்களும் அரபு நாட்டின் எல்லைப் புறத்தில் ஆட்சி புரிந்துக்கொண்டிருந்தனர். அரபு நாட்டின் வடக்குப்பக்கத்திலுள்ள சிரியா, பாலஸ்தீனம், டிரான்ஸ் ஜோர்டான் முதலிய நாடுகள் பல அரபு சிற்றரசர்களது ஆதிக்கத்தின் கீழ் இருந்தன. இச்சிற்றரசர்கள் மீது ரோமச் சக்கரவர்த்திக்கு செல்வாக்கு இருந்தது. ரோமச் சக்கரவர்த்தியின் ஆதரவின் பேரில்தான் அவர்கள் ஆட்சி புரிந்து, சக்கரவர்த்திக்கு கப்பங் கட்டிக் கொண்டிருந்தனர். அரபு நாட்டின் வடகிழக்கு பிரதேசத்தில் பாரசீகர்களுக்கு ஆதிக்கம் இருந்தது. இவ்விருவரும் அக்காலத்தில் 'வல்லரசுகளாக' இருந்தனர். இவ்விருவருக்கும் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் யுத்தம் மூண்டது. இந்த யுத்தத்தில் ரோமர்கள் தோல்வியுண்டனர். பாரசீகர்கள் வெற்றி பெற்றனர்.

இந்த திருவசனத்தை அல்லாஹ் இறக்கியபோது, அபூபக்கர் ஸித்தீக் ரளி அவர்கள் வெளியே வந்து, மக்காவின் பகுதியில், (அலிஃப் லாம் மீம், குலிபதிர் ரூம் என்ற வசனத்தை) சப்தமிட்டு (ஓதிக்காட்டினார்கள்). குரைஷிகள் சிலர், அபூபக்கரே! உமது தோழர், நிச்சயமாக ரோம் பாரஸீகத்தை சில ஆண்டுகளில் வெற்றிக்கொள்ளும் என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார். இது விஷயத்தில் நமக்கு மத்தியில் ஒரு தவணையை ஏற்படுத்துவீராக! அதனை குறித்து நாம் ஒரு பந்தயம் வைத்துக்கொள்ளலாமே? என்றனர். அதற்கு அபூபக்கர் ரளி அவர்கள் சம்மதித்தார்(சரி என்றார்)கள்.

இந்த பந்தயம் கட்டுதல் ஹராமாக்கப்படுவதற்கு முன்பு நடந்ததாகும். அபூபக்கர் ரளி அவர்களும் முஷ்ரிகுகளும் பந்தயம் கட்டினார்கள். அபூபக்கர் ரளி அவர்களிடம் 'பில்வு' (சில ஆண்டு) என்பதற்கு எத்துணை ஆண்டு என்றார்கள். அதற்கு அபூபக்கர் (ரளி) மூன்றிலிருந்து ஒன்பது ஆண்டுகள் என்றார்கள். அதற்கவர்கள், நமக்கு மத்தியில் நடுநிலையான ஒரு ஆண்டை பந்தயமாக வைப்பீராக! என்றனர்.

அதற்கு அபூபக்கர் ரளி அவர்கள் (சரி) ஆறு ஆண்டை பந்தயமாக கணக்கு வைத்துக்கொள்ளலாம் என்றார்கள். ஆறு ஆண்டுகள் முடிந்தவுடன் முஷ்ரிகுகள் பந்தயமாக கட்டப்பட்டதை எடுத்துக்கொண்டார்கள்.

முஸ்லிகளில் சிலர் கூட, அல்லாஹ் 'பில்வு சினீன்'-சில ஆண்டுகள் என்றுதான் சொல்கிறான். ஏன் இவர் ஆறு ஆண்டு என்று நிரணயித்தார் என்று குறை பேசினார்கள். ஏழாம் ஆண்டு துவங்கியது, ரோமானியம் பாரசீகத்தை (கி.பி. 624-ல்) வெற்றிகொண்டுவிட்டது.
(இந்த விஷயம் உண்மையானதால்) பலர் அப்போது இஸ்லாத்தை ஏற்றார்கள். (திர்மிதி – 3194)

(மற்றொரு அறிவிப்பில்), இவ்வாயத்தை இறைவன் அருளிய பொழுது ஹளரத் அபூபக்கர் சித்தீக் (ரளி) அவர்கள் 'காஃபிர்களிடம் சென்று, உங்கள் சகோதரர்(பாரசீகர்)கள் (ரோமார்களை) வென்றுவிட்டார்கள் என்று சந்தோசப்படுகிறீர்கள். (எல்லைகடந்து) சந்தோசப்படாதீர்கள்! எங்கள் நபியவர்கள் சொன்னதுபோல இறைவனின் மீது ஆணையாக (விரைவில் ரோமர்கள்) பாரசீகர்களை வீழ்த்துவார்கள் என்று கூறினார்கள். அப்பொழுது, உபை பின் கலஃப் அல் ஜுஹமீ என்பவன் 'பொய்யுரைக்கிறீர் என்றான்.

அபூபக்கர் (ரளி) அவர்கள், 'அல்லாஹ்வின் விராதியே! நீதான் மகா பொய்யன் என்றார்கள். நமக்கிடையில் ஒரு தவணையை ஏற்படுத்துவீராக! அதனைக் குறித்து நான் உம்மிடம் பந்தயம் கட்டுகிறேன்' என்றான். அதன்படி நம் இருவருக்கு மத்தியில் பத்து வாலிபமான ஒட்டகைகளை, தோற்றவர் வென்றவருக்குக் கொடுக்க வேண்டும் என பந்தயம் வைத்து, மூன்று வருடம் என்பதாக தவணையையும் ஏற்படுத்தினார்கள்.

பின்னர், ஹளரத் அபூபக்கர் (ரளி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் விஷயத்ததை அறிவித்த பொழுது, 'பிள்வுன்' என்பது, மூன்றுக்கும் ஒன்பதுக்கும் இடையில் உள்ளது. இத்தகைய சந்தேகமான சந்தர்ப்பங்களில் இவற்றில் நீளமானதை தவணையாக்க வேண்டும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

எனவே, அபூபக்கர் (ரளி) அவர்கள் உபை பின் கலஃபை சந்தித்தபோது, என்ன தோற்றிவிட்டீர் போல் தெரிகிறதே என்றான். அதற்கு அபூபக்கர் (ரளி) அவர்கள் இல்லை, பந்தயத்தின் கால அவகாசத்ததையும் பரிசின் எண்ணிக்கையையும் சற்று அதிகமாக்க நாடுகிறேன் என்றார்கள். அதன்படி, ஒன்பது வருட தவணையும் நூறு ஒட்டகை பரிசும் என்பதாகப் பந்தயங் (மாற்றிக்) கட்டப்பட்டது.
பின்னர், அபூபக்கர் (ரளி) அவர்கள் திருமக்காவை ஹிஜ்ரத் செய்து புறப்பட்ட பொழுது, இப்பந்தயம் வீணாகிவிடுமென உபை பின் கலஃப் பயந்தான். அப்பொழுது, ஹளரத் அபூபக்கர் (ரளி) அவர்களது புதல்வாரன அப்துல்லாஹ் (ரளி) அவர்கள் தங்களது தந்தைக்குப் பதிலாக பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.
பின்னர், உஹதுக் போருக்கு காஃபிர்கள் புறப்பட்டனர். அப்பொழுது, அபூபக்கர் (ரளி) அவர்களின் புதல்வாரன அப்துல்லாஹ் (ரளி) அவர்கள் அவனி(உபை பின் கலஃபி)டம் சென்று பந்தயத்தைக்கூறித் இறைமீது ஆணையாக உன்னை விடமாட்டேன்
என தடுக்கவே, அப்பந்தயத்துக்கு வேறொருவனைப் பிணையேற்கச் செய்து விட்டு, உஹதுப் போருக்கு சென்றான்.

அந்தப் போரில் நபி (ஸல்) அவர்களால் அவன் காயம் அடைந்து திரும்ப வந்து மரணித்தான். பின்னர் இவ்வாயத்து அருளப்பட்டு, ஏழாமாண்டின் ஆரம்பத்தில் ரோமர்களுக்கும் பாரசீகர்களுக்கும் மீண்டும் யுத்தம் தொடங்கி ஹுதைபிய்யா நாளில் பாரசீகர்களை ரோமர்கள் வீழ்த்தி வெற்றிவாகை சூடினார்கள்.
(தஃப்ஸீருல் பகவீ – இமாம் தீபீ)

ஹளரத் அபூபக்கர் (ரளி) அவர்கள் உபை பின் கலஃபின் வாரிசுகளிடம் பந்தயத்தில் கூறப்பட்டபடி நூறு ஒட்டகைகளை வாங்கி நபி (ஸல்) அவர்களிடம் வந்து இதனைக் குறித்து விசாரித்தார்கள். அவற்றை தர்மம் செய்யுமாறு கட்டளையிட்டார்கள். இதற்குப் பிறகுதான் சூதாட்டத்தையும் மதுவையும் குறித்த விலக்கள்கள் அருளப்பட்டன. தவிர, இவ்வாயத்தில் 'ரோமர்கள்' வெற்றியடைவதைக் குறித்த முன்னறிக்கை இருப்பதாலும், இம்முன்னறிக்கையின்படி 'ரோமர்கள்' வெற்றி பெற்றதாலும் இவ்வயாத்து நபி (ஸல்) அவர்களது நபித்துவத்தை மெய்ப்பிக்கும் ஆதாரங்களில் ஒன்றென்றும் கூறப்படுகிறது. (தஃப்ஸீருல் ஹமீது ஃபீ தஃப்ஸீரில் குர்ஆனில் மஜீத்)
ர.ரா

தன்னை நபி என வாதிட்ட பொய்யர்கள்.

திருக்குர்ஆனின் 22 வது ஜுஸ்வு

(வமன் யக்னுத் )




مَا كَانَ مُحَمَّدٌ اَبَآ اَحَدٍ مِّنْ رِّجَالِكُمْ وَلٰـكِنْ رَّسُوْلَ اللّٰهِ وَخَاتَمَ النَّبِيّٖنَ وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَىْءٍ عَلِيْمًا

(நம்பிக்கையாளர்களே!) உங்களிலுள்ள ஆண்களில் ஒருவருக்கும் முஹம்மது (நபி அவர்கள்) தந்தையாக இருக்க வில்லை. (ஆகவே, அவர் ஜைதுக்கு எவ்வாறு தந்தையாவார்?) எனினும், அவர் அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு (இறுதி) முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார். (ஆகவே, அவருக்குப் பின்னர் யாதொரு தூதரையும் அனுப்பமாட்டான்.) அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

(அல்குர்ஆன் : 33:40)

'' எனக்கும், எனக்கு முன் சென்ற நபிமார்களுக்கும் உதாரணம் அழகாக அலங்கரித்து ஒரு வீட்டைக் கட்டி விட்டு ஒரு மூலையில் செங்கல் அளவிற்கு இடத்தை விட்ட ஒரு மனிதனைப் போன்று. மக்கள் அந்த வீட்டைச் சுற்றிப் பார்த்து ஆச்சரியம் அடைந்து 'அந்த செங்கல் பதிக்கப்பட்டு இருக்கக்கூடாதா?என்று கேட்கலானார்கள். நான் தான் அந்த செங்கல்! நானே நபிமார்களின் முத்திரையானவன் " என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: புகாரி (3535)

وَمَاكَانَلِبَشَرٍ اَنْيُّكَلِّمَهُاللّٰهُاِلَّاوَحْيًااَوْمِنْوَّرَاۤئِحِجَابٍاَوْيُرْسِلَرَسُوْلًافَيُوْحِيَبِاِذْنِهٖمَايَشَآءُ ؕاِنَّهٗعَلِىٌّحَكِيْمٌ

அல்லாஹ் எந்த மனிதரிடத்திலும் வஹீயாகவோ, அல்லது திரைக்கப்பால் இருந்தோ;அல்லது தான் விரும்பியதைத் தன்அனுமதியின் மீது வஹீயை அறிவிக்கக்கூடிய ஒருதூதரை அனுப்பியோஅன்றி (நேரிடையாகப்) பேசுவதில்லை; நிச்சயமாக அவன் உயர்ந்தவன்; ஞானமுடையவன்.

அல்குர்ஆன் 42:51

اِنْهُوَاِلَّاوَحْىٌيُّوْحٰىۙ

அது அவருக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி வேறில்லை அல்குர்ஆன் (53:4)

நமது நபி ஸல் அவர்களை இறுதி நபியாக கியாமத் நாள் வரைக்கும் வரும் மனித சமூகத்திற்கு நபியாக அனுப்பியுள்ளான் நம்முடைய நபியவர்கள் ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கோ குறிப்பிட்ட நகரத்திற்கோ அல்லது குறிப்பிட்ட காலத்திற்கோ நபியாக அனுப்ப படவில்லை மாறாக ஒட்டுமொத்த மனித சமூகத்திற்கும் முழு உலகத்திற்கும் இறுதிநாள் வரைக்கும்

நபியாக அனுப்பபட்டுள்ளார்கள் நபி (ஸல் )அவர்களுக்கு பிறகு வேறு நபி கிடையாது என்பதற்கு குர்ஆனிலும் ஹதீசிலும் ஏராளமான சான்றுகள் உள்ளன

اَلْيَوْمَ اَكْمَلْتُ لَـكُمْ دِيْنَكُمْ وَاَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِىْ وَرَضِيْتُ لَـكُمُ الْاِسْلَامَ دِيْنًا‌ فَمَنِ اضْطُرَّ فِىْ مَخْمَصَةٍ غَيْرَ مُتَجَانِفٍ لِّاِثْمٍ‌ فَاِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ

இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை பரிபூர்ணமாக்கிவிட்டேன்; மேலும் நான் உங்கள் மீது என் அருட்கொடையைப் பூர்த்தியாக்கிவிட்டேன்; இன்னும் உங்களுக்காக நான் இஸ்லாம் மார்க்கத்தையே (இசைவானதாகத்) தேர்ந்தெடுத்துள்ளேன்"

(அல்-குர்ஆன்5:3)

பெரும் பொய்யர்களான "தஜ்ஜால்கள்"ஏறத்தாழ முப்பது பேர் தோன்றாத வரை உலக முடிவு நாள் வராது. அவர்களில் ஒவ்வொருவனும் தன்னை இறைத்தூதர் என வாதிடுவர். "மேலும் நான் நபிமார்களில் இறுதியானவன் எனக்குப் பின் நபி கிடையாது"என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழி) நூல்: புகாரி, முஸ்லிம், திர்மதி, அபூதாவூத்)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காதமன் நபியீனாக நபிமார்களின் முத்திரையாக அனுப்பப்பட்டிருப்பது அன்னாரின் பிரத்யேகமான, பூரணத்துவம் பெற்ற, உயர்ந்த ஸ்தானத்தை வெளிப்படுத்துகிறது. ஏனெனில், எந்த ஒரு காரியமும் ஒரு நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஆரம்பித்து, தொடர்ந்து,முடிவை அடைகிறது. காரியத்தின் இறுதி நிலையான'முடிவு'என்பது, எந்த நோக்கத்திற்காக காரியம் ஆரம்பிக்கப்பட்டதோ, அக்காரியம் முழுமை பெற்று, அதன் நோக்கமும் நிறைவேறிவிட்டது என்பதையே காட்டுகிறது.

( மஆரிபுல்குர்ஆன், பாகம்– 7, பக்கம்– 161. )

பொய்யன் முஸைலமா பனூஹனீஃபா கோத்திரத்தைச் சேர்ந்தவனும், நஜ்துப் பிரதேசத்தின் யமாமாப் பகுதியினை சார்ந்தவன்தான் பொய்யன் முஸைலமா இறைத்தூதர் (ஸல்) அவர்களுடைய தூதுத்துவத்தில் தனக்கும் பங்கு இருப்பதாக வாதிட்டான்

யமாமாப் பகுதி மக்களுக்கு இஸ்லாத்தின் தூதை தெளிவாக எடுத்துரைக்க எடுக்கப்பட்ட முயற்சிகளையும் இந்த முஸைலமா தனது வாதத் திறமையினால் முறியடித்தான். மேலும், தொழுகைகக்காக அழைக்கப்படும் அதானிலும் இவன் மாற்றம் செய்தான்.

இன்னும் மதுபானத்தையும், விபச்சாரத்தையும் ஆகுமானவைகளாக அறிவித்தான். இதன் காரணமாக, கவரப்பட்ட மக்கள்,இந்த வழிகேடனைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள்,

இன்னும் இவ்வாறு பின்பற்றுபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே சென்றது. அந்தப்பகுதியெங்கும் இவனைப் பிரபலப்படுத்தியது. இன்னும் இவன் பெண் தூதுவராகத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்ட சஜாவை மணந்து கொண்ட பின், தன்னுடைய தூதுத்துவம் முன்னைக்காட்டிலும் வலுவடைந்திருப்பதாகவும் இவன் கூற ஆரம்பித்துவிட்டான்.

இவனை எதிர்த்துப் போர் புரிய முதலில் . இக்ரிமா (ரலி) அவர்களையும், அவர்களை அடுத்து ஷரஹ்பில் பின் ஹஸ்னா (ரலி) அவர்களது தலைமையிலும் படைகள் அனுப்பப்பட்டன ஆனால், இந்த இரு படைகளையும் முஸைலமா தோற்கடித்தான். அதன்பின்பு கலீபாஅபுபக்கர் (ரலி) அவர்கள், காலித் பின் வலீத் (ரலி) அவர்களது தலைமையில் ஒரு படையைத் தயார் செய்து, முஸைலமாவை எதிர்த்துப் போர் புரிய அனுப்பி வைத்தார்கள்

கடுமையான யுத்தத்திற்கு பிறகு ஹம்ஸா (ரலி) அவர்களைக் கொன்ற அதே வஹ்ஸி (ரலி) அவர்கள், தான் இஸ்லாத்திற்கு முன்னிருந்த பொழுது ஹம்ஸா (ரலி) அவர்களைக் கொன்றதனை ஈடுசெய்யும் பொருட்டு, தன் கையிலிருந்த வேல்கம்பை முஸைலமாவை நோக்கி வீசினார். அதனை சமாளிக்க இயலாத முஸைலமா கீழே வீழ்ந்தபொழுது, அன்ஸாரிகளில் உள்ள இளைஞரொருவர், அவனது கழுத்தை வெட்டி சாய்த்தார்.

பொய்யன் அஸ்வத் அல்-அன்ஸி

யமனில் பனூ மத்ஹிஜ் என்றொரு கோத்திரம் இருந்தது. அக்கோத்திரத்தைச் சேர்ந்த அப்ஹாலா பின் கஅப் என்றொருவன் இருந்தான். கட்டுமஸ்தான ஆள், கருப்பாய் அவலட்சணமான உருவம். அவனுக்குத் தொழில் குறி சொல்வதும் சூனியம் செய்வதும். எந்தக் காலத்தையும் போன்று அந்தக் காலத்திலும் அதற்கென்று ஒரு வாடிக்கையாளர் கூட்டம் இருந்தது. அதனால் அதில் அவன் வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது.

தனது அகோர உருவத்தை மறைக்க அவன் ஓர் உபாயம் செய்தான். கம்பீரமாய் ஒரு போர்வை போர்த்திக் கொண்டு, முக்கால் முகத்தை மறைத்தாற்போல் திரை அணிந்து, ஒருவகையான போலி தேஜசுடன் மக்கள் மத்தியில் தோன்றுவான்.

அவனது கரிய நிறத்தின் காரணத்தால் அவனது உண்மைப் பெயர் மறைந்து புதுப் பெயர் தோன்றியது, அஸ்வத் அல்-அன்ஸி. அஸ்வத் என்றால் அரபு மொழியில் கருப்பு. அன்ஸ் என்பது அவனது குலம். அதனால் அன்ஸுக் குலத்துக் கருப்பன்.

ஹிஜ்ரீ 10ஆம் ஆண்டு. திடீரென்று ஒருநாள் அஸ்வத் அல்-அன்ஸிக்கு அந்த யோசனை தோன்றியது. முஸைலமாவிற்கு தோன்றிய அதே கண்றாவி யோசனைதான். இவனே ஒரு சோதிடன்தானே, அதனால் நல்ல நாள், நேரம், நட்சத்திரம் எல்லாம் பார்த்து "இன்றிலிருந்து நானும் ஒரு நபி" என்று அறிவித்து விட்டான்.

தன்னுடைய கோத்திரத்தினரை அழைத்து மனதில் தோன்றிய சில வாசகங்களை அவர்களுக்கு ஒப்புவித்து, "இவையெல்லாம் குர்ஆன் வசனங்கள். அல்லாஹ் என்னையும் ஒரு தூதுவனாக தேர்ந்தெடுத்து இவற்றை எனக்கு அனுப்பியுள்ளான். ஆகையினால் இன்றிலிருந்து நானும் ஒரு நபி."என்று கூறினான்

கைஸ் இப்னு ஹுபைரா எனும் தன்னுடைய தோழரை அழைத்தார்கள் நபியவர்கள். அவருடன் மற்றும் சில தோழர்களையும் தேர்ந்தெடுத்து, "யமனுக்கு உடனே புறப்பட்டுச் சென்று, அங்குள்ள முஸ்லிம்களுடன் இணைந்து இவன் பிரச்சனைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும்" என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டது.

யமன் முஸ்லிம்களுக்கு ஒரு கடிதமும் நபியவர்கள் சொல்லி வரையப்பட்டது.

அக்கடிதத்தை எடுத்துக் கொண்டு மதீனத்துக்குழு யமனுக்குக் கிளம்பியது

அங்குசென்று ஃபைரோஸ் அத்-தைலமி (ரலி). அல்-அப்னாவைச் சார்ந்த சஹாபியிடம் நபி (ஸல் )அவர்களின் கடிதத்தை கொடுத்தார்கள் சந்தர்பத்தை எதிர்பார்த்துகொண்டிருந்த ஃபைரோஸ் அத்-தைலமி (ரலி) அவர்களும் அங்கிருந்த முஸ்லிம்களும் மகிழ்ச்சியடைந்தவர்களாக அதற்கான திட்டத்தை கடுமையான முறையில் தீட்டி கடுமையான முயற்சிக்கு பின்பு ஃபைரோஸ் அத்-தைலமி (ரலி)அவர்கள் அஸ்வத் அல்-அன்ஸி உறங்கிக் கொண்டிருந்த அறைக்குள் நுழைந்தார்கள் . நன்றாகக் குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருந்தான் அஸ்வத். நேராய் அவனை நெருங்கியவர், கத்தியாலேயே அவனது தொண்டைக் குழியில் குத்தினார். அறுக்கும்போது ஓர் ஒட்டகம் அலறுவதைப்போல பலமான ஓலமும் கதறலும் எழுந்தது மிகக்கேவலமான நிலையில் மரணமடைந்தான்

அல் முக்தார் இப்னு அபீ உபைத் அஸ்ஸகபீ

கூபாவில் அல் முக்தார் இப்னு அபீ உபைத் அஸ்ஸகபீ என்பவன் (அஹ்லுல் பைத்) நபிகளாரின் குடும்பத்தாரை அதிகம் நேசிப்பவனாகவும், நபிகளாரின் பேரப் பிள்ளை உஸைன் (ரலி) கொலை செய்யப் பட்டதை கடுமையாக எதிர்ப்பவனாகவும் , தன்னைக் காட்டிக் கொண்டு தனக்குப் பின்னால் ஒரு கூட்டத்தை உருவாக்கிக் கொண்டு, பிறகு அம்மக்களின் செல்வாக்கை கண்டு தன்னை நபி எனக் கூறி தனக்கு ஜிப்ரீல் (அலை) வஹீ கொண்டு வருவதாகவும்

வாதிட்டான். கூபாவில் அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) ஆட்சியாளராக இருந்தபோது இவனும் கொல்லப்பட்டான்.

பனூ அஸத் கூட்டத்திலிருந்து துலைஹா இப்னு குவைலித் அல் அஸதி என்பவனும் தன்னை நபி என வாதிட்டான். பிறகு மனம் திருந்தி இஸ்லாத்திற்குத் திரும்பினார்.

அப்துல் மலிக் பின் மர்வானுடைய ஆட்சிக்காலத்தில் ஹாரிஸ் என்பவன் தன்னை நபி என வாதிட்டான். அவனும் கொல்லப் பட்டான். (நூல் பத்ஹுல் பாரி)

## பொய்யன் மிர்ஸா குலாம் அஹ்மது

ஆங்கிலேயர்களின் காலனிய ஆட்சிக்காலத்தில் தங்களை எதிர்க்கும் இந்திய முஸ்லிம்களிடம் குழப்பங்களை ஏற்படுத்தி அவர்களின் மார்க்கத்தை விட்டும் குறிப்பாக முஸ்லிம்களின் வீரதீரமிக்க ஜிஹாது சிந்தனைகளிலிருந்தும் அவர்களை அகற்றி அதனால் தாங்கள் முஸ்லிம்களின் எதிர்ப்புகளிலிருந்து சுலபமாக தப்பித்துக் கொள்ளலாம் என்ற ஆங்கிலேய ஆதிக்கவாதிகளின் சதி வேலையின் மூலம், ஒருங்கினைந்த இந்தியாவில் பஞ்சாப் மாகானத்தில் உள்ள காதியான் என்ற ஊரில் வசித்து வந்த, ஆங்கிலேயர்களின் கைப்பாவையாக விளங்கிய மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி **(1839-1908 CE)** என்பவனால் தோற்று விக்கப்பட்ட **(1876 CE)** மதம்தான் காதியானி .

இவனும் தனக்கு இறைவனிடத்திலிருந்து வஹீ வருவதாக உளறிகொண்டிருந்தான்

பொய்யர்களும், அவர்களின் உளறல்களும்

கலீஃபாஅபுபக்கர் (ரலி ) அவர்கள் முஸைலமாவினுடைய போதனைகள்தான் என்ன? சற்றுகூறுங்கள்பார்ப்போம் என்று முஸைலமா கொல்லப்பட்ட செய்தியை கொண்டு வந்த தூதுவரிடத்தில் கேட்டார்கள் .

இதோ அதனுடைய நகல் என்னிடமிருக்கின்றது என்று கூறிய அவர் கலீஃபாஅபுபக்கர் (ரலி) அவர்களது முன்னிலையில் அதனை வாசித்துக் காண்பிக்க ஆரம்பித்தார் :

“ஓ.. தவளையே..! இதுவேதமாகும். குடிப்பவரைத் தடுக்காதீர்கள், தண்ணீரைஅசுத்தமாக்காதீர்கள். இந்த உலகத்தின் பாதி நமக்குரியது, மற்ற பாதி குறைஷிகளுக்குரியது. ஆனால் குறைஷிகள் மிகவும் கொடூரமானவர்கள்''.இதனைக் கேட்ட அபுபக்கர் (ரலி) அவர்கள் இறைவனைப் புகழ்ந்தவர்களாக, உங்கள் இரக்கப்படுவதைத் தவிர வேறு வழியில்லை என்று கூறிய அபுபக்கர் (ரலி) அவர்கள், இதுதான் உங்களது வேதவசனங்களா? இதில் எந்த தெய்வீகத்தன்மையும் இல்லையே..! இவ்வாறிருக்கும்பொழுது, எதுதான் சத்தியத்திலிருந்து உங்களைப் பாதை மாற்றிச் சென்றது?

தபரி,3ம்,பாகம்,பக்.254.

காதியனியின் உளறல்களில் சில

"நபி (ஸல் ) அவர்களுக்கு ஏற்பட்ட வெற்றி சிறியது மிர்சாவிற்கு ஏற்படுகின்ற வெற்றி அபாரமானது (ரூஹாணி ஹஜாயின் பக்கம் 16,பக்கம் 288 )

"மிர்ஸா காதியானிகளை ஏற்றுக் கொள்ளாதவர்கள் நரக

வாசிகள் " (ரூஹாணி ஹஜாயின் பக்கம்11,பக்கம் 62 )

"என்னை ஏற்காதவர்கள் ஹராமில் பிறந்தவர்கள் "(ரூஹாணி ஹஜாயின் பக்கம் 9,பக்கம் 31 )

எனக்கு மாறு செய்பவர்கள் பன்றிகள் அவர்களின் மனைவிமார்கள் நாய்களைவிட இழிவானவர்கள் (ரூஹாணி ஹஜாயின் பக்கம் 14,பக்கம் 53 )

"நான் எனது கஷ்பில் அல்லாஹ்வாக இருக்க கண்டேன் .மேலும் நான் அல்லாஹ்தான் என உறுதியும் கொண்டேன்" (ரூஹாணி ஹஜாயின் பக்கம் 13,பக்கம் 103 )

" இந்த ஆங்கிலேர்களின் ஆட்சின் கீழ் கிடைக்கும் நிம்மதி மதினாவில் கூட கிடைக்காது"

" நான் திரும்ப திரும்ப கூறுகின்றேன் இஸ்லாத்தில் இரண்டு பக்கங்கள் உள்ளது ஒன்று இறைவனுக்கு வழிபடுவது , இரண்டாவது அநியாயக்காரர்களிடமிருந்து அபயமளித்த இந்த ஆங்கிலேர்களுக்கு வழிபடுவது " (ரூஹாணி ஹஜாயின் பக்கம் 6,பக்கம் 380 )

பெரும் பொய்யர்களான ஏறத்தாழ முப்பது பேர் தோன்றாத வரை உலக முடிவு நாள் வராது.

இன்னும் எத்தனை பேர் வர வேண்டியதிருக்கிறது ...என்பதை அல்லாஹ்வே அறிவான் .

ர.ரா

முத்திரையிடப்பட்ட மதுவும் , மூடி திரையிடப்பட்ட மாதும்
திருக்குர்ஆனின் 23 வது ஜுஸ்வு
(வமாலிய )



காடு காடாக அலைந்த ஆதிமனிதன் விவசாயம் செய்யக் கற்றுக் கொண்டதன் பலனாக நிலையாக வாழ ஆரம்பித்தான் .

அறுவடை செய்த தானியத்தை தண்ணீரில் ஊறவிட்டபோது அது புளித்தது தற்செயலாக நடந்த ஒன்று . அது தான் வெறித்தன்மையைக் கொடுத்த முதல் பானம் பீர்.
முளைவிட்ட தானியத்தில் தண்ணீரை ஊற்றி ,சுடவைத்து புளிக்கவைத்தபோது பீரின் சுவை இன்னும் கூடி வெறித்தன்மையும் அதிகமாகியது .

( பீர் தான் மனிதன் கண்டுபிடித்த முதல் பானம்)
பீருக்கு அடுத்தபடியாக மனிதன் கண்டுபிடித்த பானம் வைன் .இது பழச்சாறைப் புளிக்கவைத்துக் கிடைப்பது வைன் . வைனைக் காய்ச்சி வடிகட்டினால் கிடைப்பது பிராந்தி .
பீரைக் காய்ச்சி வடிகட்டும்போது கிடைப்பது விஸ்கி

கரும்புச் சக்கையிலிருந்து வீரியமிக்க மது செய்யலாம் என்பதை 1657 -ல் ரம்புல்லியன் என்பவர் கண்டுபிடித்தார் .
குடித்தவுடன் வெறிக்கச் செய்யும் அந்த மதுவின் பெயர் ரம் . கண்டுபிடித்தவர் பெயர் ரம்புல்லியன் .

அடிமைகளைப் பிடிப்பவர்களுக்கு ரம் விலையாகத் தரப்பட்டது . ரம்மை உற்பத்தி செய்யும் அடிமைகளுக்கு சம்பளமும் ரம் .
1886 ம் ஆண்டு பெம்பர்டன் என்ற அமெரிக்கர் தலைவலிக்கு மருந்து கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார் . அவருடைய முயற்சிகள் எல்லாமே தோல்வியில் முடிந்தாலும் அவர் தளராது பல்வேறு விதமான ஆராய்ச்சிகளைத் தொடர்ந்தார் . ஒரு நாள் ,தென் அமெரிக்காவில் கிடைக்கும் கொக்கோ இலை (உண்ணும் போது மயக்கம் தருவது ), மேற்கு ஆப்ரிக்காவின் கோலாநட் ( இதுவும் போதைப் பொருள் தான் ) இவை இரண்டையும் சேர்த்து ஒரு பழுப்பு நிற பானத்தைத் தயாரித்தார் .அது தான் ' கொக்கோ கோலா '.
இப்படி மது உலகம் முழுக்க ஆளத் தொடங்கியது .
சரி குர்ஆன் கூறும் மதுவைப் பற்றிப் பார்ப்போம் .

عَلٰى سُرُرٍ مُّتَقٰبِلِيْنَ
கட்டில்களில் ஒருவர் மற்றொருவரை முகம் நோக்கி (உல்லாசமாகப் பேசிக்கொண்டு) உட்கார்ந்திருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 37:44)

يُطَافُ عَلَيْهِمْ بِكَاْسٍ مِّنْ مَّعِيْنٍ ۙ‏
மிகத் தெளிவான ஊற்றுக்களின் பானம் நிறைந்த குவளைகள் அவர்களைச் சுற்றிக்கொண்டே இருக்கும்.
(அல்குர்ஆன் : 37:45)

بَيْضَآءَ لَذَّةٍ لِّلشّٰرِبِيْنَ
(அது) மிக்க வெண்மையானதாகவும், குடிப்பவர்களுக்கு மிக்க இன்பமானதாகவும் இருக்கும்.
(அல்குர்ஆன் : 37:46)

لَا فِيْهَا غَوْلٌ وَّلَا هُمْ عَنْهَا يُنْزَفُوْنَ
அதில் போதையே இருக்காது; அதனால், அவர்களுடைய அறிவும் நீங்கிவிடாது.
(அல்குர்ஆன் : 37:47)

يَطُوْفُ عَلَيْهِمْ وِلْدَانٌ مُّخَلَّدُوْنَۙ‏
என்றென்றுமே குழந்தைகளாக இருக்கக்கூடிய சிறுவர்கள் (பணி செய்ய எந்நேரமும்) இவர்களைச் சுற்றிக்கொண்டே இருப்பார்கள்;
(அல்குர்ஆன் : 56:17)

بِاَكْوَابٍ وَّاَبَارِيْقَ ۙ وَكَاْسٍ مِّنْ مَّعِيْنٍۙ‏
இன்பமான பானம் நிறைந்த குவளைகளையும், கெண்டிகளையும், கிண்ணங்களையும் தூக்கிக் கொண்டு (அவர்களைச் சுற்றிக்கொண்டே இருப்பார்கள்.)
(அல்குர்ஆன் : 56:18)

لَّا يُصَدَّعُوْنَ عَنْهَا وَلَا يُنْزِفُوْنَۙ‏
(அப்பானங்களால்) இவர்களுக்குத் தலை நோயும் ஏற்படாது; இவர்கள் புத்தியும் மாறாது.
(அல்குர்ஆன் : 56:19)

இவ்வசனங்களில் சுவனவாசிகளுக்கு வழங்கப்படும் பானங்களும் அவற்றின் தன்மைகளும் கூறப்படுகின்றன . மிகத் தெளிவான பானங்கள் நிரம்பிய குவளைகள் . குவளைகள் என்றாலே பானம் நிரம்பியதை குறித்து பேசப்படும் பானமற்றவற்றிற்கு குவளைகள் எனக் கூறப்படுவதில்லை .அதை பாத்திரம் என்று கூறப்படும் .இது அரபி மொழியின் இலக்கிய மரபாகும்.

இவ்வுலக மது அருந்துவது தடுக்கப்பட்டுள்ளது. இதில் போதையும் . மனிதனின் அறிவையும் , நிதானத்தன்மையும் போக்கும். மயக்கம் , தலைவலி , வயிற்று வலி , வாந்தி போன்ற உடல் நலத்தை கெடுத்து போதையுற்று புலம்பிக் கொண்டிருக்க மாட்டார்கள் .
சுவனவத்தில் தெளிவான பானம் என்பது மதுவாகும். இங்குள்ள மது வெண்மையானது . இவ்வுலகில் மது வெண்ணிறமானதாக இல்லை. இந்த வெண்ணிறத்தில் மது உண்டாக்கப்பட மாட்டாது . சுவன மது பானத்திற்கு மது என்று கூறப்பட்டாலும் , அது முற்றிலும் இவ்வுலக மதுவில் இருந்து வேறுபட்டது.

يُسْقَوْنَ مِنْ رَّحِيْقٍ مَّخْتُوْمٍۙ
முத்திரையிடப்பட்டிருக்கும் கலப்பற்ற திராட்சை ரசம் அவர்களுக்குப் புகட்டப்படும்.
(அல்குர்ஆன் : 83:25)

خِتٰمُهٗ مِسْكٌ‌ ؕ وَفِىْ ذٰلِكَ فَلْيَتَنَافَسِ الْمُتَنَافِسُوْنَ
அது கஸ்தூரியால் முத்திரையிடப்பட்டிருக்கும். (பானத்தை) ஆசைகொள்ள விரும்புவோர் அதனையே ஆசை கொள்ளவும்.
(அல்குர்ஆன் : 83:26)

وَ مِزَاجُهٗ مِنْ تَسْنِيْمٍۙ
அதில் "தஸ்னீம்" என்ற (வடிகட்டிய) பானமும் கலந்திருக்கும்.
(அல்குர்ஆன் : 83:27)
சுவன மது கிண்ணங்களில் ஊற்றப்பட்டு சுவனத்தைச் சுற்றி சுற்றி வரும் .மிக்க அழகிய சிறுவர்களான பணியாளர்களால் சுவனவாசிகளிடம் கொண்டு வரப்படும் .
குழந்தை தொழிலாளர்களை இஸ்லாம் அனுமதிக்கிறதா ? என்று யாரும் கேட்டு விடாதீர்கள் . சுவனத்து சிறுவர்கள் மானிடப் பிறவி எடுத்தவர்கள் அல்ல , இச்சிறுவர்களும் மலக்குமார்கள் போன்ற படைப்பை உடையவர்கள். ஆனால் சிறுவர்கள் .

وَعِنْدَهُمْ قٰصِرٰتُ الطَّرْفِ عِيْنٌۙ
அவர்களிடத்தில் கீழ் நோக்கிய, அடக்கமான பார்வையையுடைய (ஹூருல் ஈன் என்னும்) கண்ணழகிகளும் இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 37:48)

كَاَنَّهُنَّ بَيْضٌ مَّكْنُوْنٌ
அவர்களின் நிறம் (இறக்கைகளில்) மறைக்கப்பட்ட (நெருப்புக் கோழியின் இலேசான மஞ்சள் வர்ணமுடைய) முட்டைகளைப் போலிருக்கும்.
(அல்குர்ஆன் : 37:49)

وَحُوْرٌ عِيْنٌۙ
(அங்கு இவர்களுக்கு) "ஹூருல் ஈன்" (என்னும் கண்ணழகி களான மனைவி)களும் இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 56:22)

كَاَمْثَالِ اللُّـؤْلُـوِالْمَكْنُوْنِ
அவர்கள் பேணிப் பாதுகாக்கப்படும் முத்துக்களைப் போல் இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 56:23)

اِنَّاۤ اَنْشَاْنٰهُنَّ اِنْشَآءًۙ
(அவர்களுடன், கண்ணழகிகளாகிய ஹூருல் ஈன் என்னும் கன்னியர்களும் இருப்பார்கள். அவர்கள் ஒருவராலும் பெற்றெடுக் கப்பட்டவர்கள் அல்லர்.) நிச்சயமாக நாம் அவர்களைச் (சொந்தமாக இவர்களுக்கெனப் புதிதாகவே) படைத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 56:35)

فَجَعَلْنٰهُنَّ اَبْكَارًا
கன்னியர்களாக அவர்களைப் படைத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 56:36)

عُرُبًا اَتْرَابًا
அவர்கள் தன் கணவனையே காதலிக்கும் சம வயதுடையவர்கள்.

(அல்குர்ஆன் : 56:37)

فِيْهِنَّ قٰصِرٰتُ الطَّرْفِۙ لَمْ يَطْمِثْهُنَّ اِنْسٌ قَبْلَهُمْ وَلَا جَآنٌّ
அவைகளில், கீழ் நோக்கிய பார்வைகளையுடைய (அழகிய) கன்னிகைகளும் இருப்பார்கள். இவர்களுக்கு முன்னர், அவர்களை யாதொரு மனிதனும் ஜின்னும் தீண்டி இருக்கமாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 55:56)

كَاَنَّهُنَّ الْيَاقُوْتُ وَالْمَرْجَانُ
அவர்கள், சிகப்பு மாணிக்கத்தைப்போலும் பவளங்களைப் போலும் இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 55:58)

فِيْهِنَّ خَيْرٰتٌ حِسَانٌ
அவைகளில், சிறந்த குணம் படைத்தவர்களான அழகிகள் உள்ளனர்.
(அல்குர்ஆன் : 55:70)

حُوْرٌ مَّقْصُوْرٰتٌ فِى الْخِيَامِ
அவர்கள்தாம், ஹூர் (என்னும் கண்ணழகிகளாகிய கன்னிப்பெண்)கள். அவர்கள், (முத்து பவளங்களாலான) கூடாரங்களில் வசித்திருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 55:72)

لَمْ يَطْمِثْهُنَّ اِنْسٌ قَبْلَهُمْ وَلَا جَآنٌّ
இவர்களுக்கு முன்னர் அப்பெண்களை, யாதொரு மனிதனும் ஜின்னும் தீண்டியதில்லை.
(அல்குர்ஆன் : 55:74)

مُتَّكِـــِٕيْنَ عَلٰى رَفْرَفٍ خُضْرٍ وَّعَبْقَرِىٍّ حِسَانٍ
(அவர்களின் கணவர்கள்) சிறந்த பசுமையான, இரத்தினக் கம்பளங்களில் திண்டு தலையணைகளின் மீது சாய்ந்தவர்களாக இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 55:76)

சுவர்க்க வாசிகளுக்காக நிர்ணயிக்கப்பட்ட மனைவியர் தங்களுடைய கணவர்களைத் தவிர மற்றவர்களை ஏறிட்டுப் பார்க்க மாட்டார்கள் .பார்வையைக் கீழ் நோக்கியே வைத்திருப்பார்கள் பதிவிரதைகளான அவர்கள் தங்களுடைய கணவர்களைத் தவிர்த்து வேறு யாரையும் நோக்கமாட்டார்கள் .

அவர்களுடைய கண்கள் அனைவரையும் கவர்ந்திழுக்கும் காந்த சக்தியுடையது நீண்ட பருத்த அழகிய கண்களை உடையவர்கள் .
அவர்கள் மறைக்கப்பட்ட முட்டைகளைப் போன்றிருப்பார்கள்.

அரபியர் அழகிய பெண்களை வெண்மையும், தெளிவும் கொண்ட முட்டைக்கு ஒப்பிட்டுவர் .
இப் பெண்களை " சிப்பினுள் மறைக்கப்பட்ட முத்துக்களைப் போன்றிருப்பர் " குர்ஆன் ( 56 : 58)

சிப்பியினுள் உள்ள முத்தைப் போன்று வெண்மையாகவும் , அதே சமயம் மறைக்கப்பட்டிருப்பது போல் பிற ஒருவரால் தீண்டடப்படாமல் இவர்களும் பாதுகாப்பாக மறைத்து வைக்கப்பட்டவர்கள் .

மேலும் தீக்கோழியின் முட்டைக்கு ஒப்பிடப்படுகிறது. தீக்கோழி தனது முட்டையைப் புழுதியால் கெட்டு விடாமல் தன் இறக்கையினுள் பத்திரமாக பாதுகாத்து வைத்திருக்கும் .
முட்டையினுடைய வெண்மை நிறமும் ,இலேசான மஞ்சள் நிறமும் அப்படியே அழகாக காட்சியளிக்கும் .

இதே போன்று இப் பெண்களும் பாதுகாக்கப்பட்டு , அம் முட்டையின் வெண்மை வெளிர் மஞ்சள் போன்று இருப்பார்கள் .
ஆனால் சுவர்க்கத்திலுள்ள இன்பங்கள் இவ்வுலக இன்பங்களுடன் பெயரளவில் ஒத்திருக்கின்றனவேயன்றி , யதார்த்தத்தில் இங்குள்ள இதே பொருட்கள்தாம் அங்கும் இருக்கின்றன என்பது இல்லை .

மேலும் எந்தக் கண்ணும் பார்த்தது இல்லை .எந்தக் காதும் கேட்டதில்லை அப்படி சுவர்க்கம் இருக்கும் என்பதாக ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது .
மதுவைப் பற்றியும் மாதுவைப் பற்றியும் சொல்லும் போதே ஓர் இனம் புரியாத மயக்கம் இருக்கத்தான் செய்யும் போல !
ர.ரா

"எங்களிடமிருந்து உங்களுக்கு என்ன வேண்டும் ? "
திருக்குர்ஆனின் 24 வது ஜுஸ்வு
(பமன் அழ்லமு)



நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை ஹம்ஸா (ரலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியதால் , முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கிற்று. அந்த சமயத்தில் " ஹாமீம் ஸஜ்தா " என்ற 41-வது சூரா அருளப்பட்டது.

" நாங்கள் கேட்கும் அத்தாட்சிகளை
(17 : 90 - 93 ) நீங்கள் கொண்டு வர வேண்டும் " என்று நபிகளாரை கூப்பிட்டு கேட்ட மக்கத்து குறைஷிகள் , இந்த தடவை 'உத்பா பின் ரபிஆ ' என்ற குறைஷி தலைவர்களுள் ஒருவரை நபிகளாரிடம் அனுப்பி வைத்தனர் .

உத்பா பெருமானார் (ஸல்) அவர்களின் அருகில் அமர்ந்து , " என்னுடைய சகோதரரின் புதல்வரே ! நீர் நம்மிடையே சிறந்தவராகவும், உயர் குடும்பத்தைச் சார்ந்தவராகவும் இருக்கின்றீர். உமது கூட்டத்தினரிடையே ஒரு பெரிய காரியத்தைக் கொண்டு வந்திருக்கிறீர் "
"இதனால் குறைஷிகளிருடைய ஐக்கியத்தைக் குலைத்து விட்டீர் . அவர்களுடைய கடவுள்களையும் நித்திக்கின்றீர் .மூதாதையர் கொண்டு வந்த மார்க்கத்தை புறந்தள்ளி விட்டு, அவர்களையெல்லாம் மதிக்காமல் நடக்கின்றீர் " .

"ஆகையால், நான் உமக்குச் சில திட்டங்களைக் கூறுகிறேன். அவற்றை நீர் ஏற்பீர் என எதிர்ப்பார்க்கிறேன் "
அதற்கு பெருமானார் (ஸல்) அவர்கள் ,
" அபுல் வலீதே ! ( இது உத்பாவின் புனைப்பெயர்) நீர் கூறும் , நான் செவியேற்கிறேன் "
அப்பொழுது அவர் " எனது சகோதரரின் புதல்வரே ! நீர் இப்பொழுது கொண்டு வந்திருக்கும் இக்காரியத்தின் மூலம் மிகுந்த பொருளைச் சேர்த்து , எங்களை எல்லாம் விட பெரிய செல்வந்தராக நீர் ஆவதற்குரிய ஆசைப்பட்டால் ,பொருளை நாங்கள் சேகரித்து உமக்கு கொடுக்கின்றோம் "
" அல்லது நீர் பதவியை விரும்பினால் உம்மையே எங்களுடைய தலைவராக ஏற்றுக் கொள்கிறோம். உம் உத்தரவு இன்றி எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டோம் "
" அல்லது நீர் ஓர் அரசராக ஆக வேண்டும் என்று விரும்பினால், நாங்கள் உம்மை மன்னராகவே முடிசூட்டி ஏற்றுக் கொள்கிறோம் "

" அல்லது உம்மால் தடுக்க முடியாத ஒரு நோய் உம்மில் இருந்தால் , சிறந்த மருத்துவர்களை அழைத்து மிகுந்த பொருள் செலவு செய்து , உம்மை நாங்கள் சுகப்படுத்தி விடுகிறோம்" என்று கூறினார்.
இவை அனைத்தையும் மிகுந்த அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த பெருமானார் (ஸல்) அவர்கள் அவரை நோக்கி," அபுல் வலீதே , முடித்து விட்டீர்களா ? "
"ஆம்"
"நான் கூறுவதையும் கேளுங்கள் "
" சரி "
பெருமானர் (ஸல்) அவர்கள் ஹாமீம் ஸஜ்தா சூராவின் முதல் வசனத்தில் ஆரம்பித்து 37 வது வசனத்தில் வரக்கூடிய ஸஜ்தாவை வரை ஓதி , உடனே ஸஜ்தாவும் செய்தார்கள் .
உத்பா தம் இரு கைகளையும் முதுக்குப் பின்னால் ஊன்றியவராகக் கேட்டுக் கொண்டே வந்தார் .
ஓதி ஸஜ்தா செய்து விட்டு , " அபுல் வலீதே, கேட்டீரல்லவா ? உமக்கு இதுதான் பதிலாகும் "
உத்பா எழுந்து தன் கூட்டத்தாரிடம் சென்றார். அவர்கள் அருகில் அமர்ந்தார் . "அபுல் வலீதே .. அங்கு என்ன நடந்தது ?"
" அல்லாஹ்வின் மீது ஆணையாக .நான் இதுவரை கேட்டிராத ஒரு வார்த்தையே கேட்டேன். அது சூன்யமும் இல்லை , கவியும் இல்லை ,குறியும் இல்லை "
" குறைஷியரே ! எனது வார்த்தையை தயவு செய்து கேளுங்கள் .அந்த மனிதரை அவர் நிலையிலேயே விட்டு விடுங்கள் .நான் கேட்ட அந்த வாக்கு நிச்சயமாக எதிர்காலத்தில் முக்கியச் சிறப்பே ஏற்படுத்தும் என்று நான் கருதுகிறேன் "
" எதிர்காலத்தில் அரபியர் அவரை வென்றால் , நீங்கள் உங்களுடைய சகோதருக்கு எதிராக நின்று அவரைத் தடுத்து விடலாம் .ஆனால் மற்றவர்கள் அவரை அணைத்துக் கொள்வார்கள் "
" ஆனால் அவர் அரபியரை வென்று விட்டால் , அப்பொழுது அவருடைய ஆட்சி உங்களுடைய ஆட்சிதான் .அவருக்குக் கிடைக்கும் கண்ணியம் உங்களுக்கும் கிடைக்கும் . அப்போது நீங்கள் மனிதர்களிலேயே சிறந்தவர்களாகி விடுவீர்கள் " என்று உத்பா கூறினார் .
இதைக் கேட்ட குரைஷித் தலைவர்கள் "அபுல் வலீதே ! அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர் தம்முடைய நாவினால் உமக்கு செய்வினை செய்து விட்டார் " என்று ஒருமித்துக் கூறினர்
அதற்கு உத்பா , " இது என்னுடைய கருத்தாகும். இதற்கு மேல் உங்களுக்கு என்னத் தோன்றுகிறதோ அதை செய்யுங்கள் " என்று கூறி எழுந்து போய்விட்டார்.
ஆதாரம் : இப்னு கதீர் , ஹக்கானி தன்தாவீ , குர்துபி
ர.ரா

அல்லாஹ் பேசும் விதங்கள்
திருக்குர்ஆன் 25 வது ஜுஸ்வு
(இலைஹியுரத்து )



وَمَا كَانَ لِبَشَرٍ اَنْ يُّكَلِّمَهُ اللّٰهُ اِلَّا وَحْيًا اَوْ مِنْ وَّرَآئِ حِجَابٍ اَوْ يُرْسِلَ رَسُوْلًا فَيُوْحِىَ بِاِذْنِهٖ مَا يَشَآءُ اِنَّهٗ عَلِىٌّ حَكِيْمٌ
" எந்த மனிதரிடமும் வஹீயின் மூலமாகவோ அல்லது திரைக்கு அப்பால் இருந்தோ அல்லது மலக்காகிய ஒரு தூதரை அனுப்பியோ அல்லாமல் அவரிடம் அல்லாஹ் (நேருக்கு நேர் ) பேசுவதில்லை . அ(ந்த மலக்கான)வர் அவன் விருப்பமான கட்டளையை (மனிதனுக்கு)

அறிவிக்கின்றான். (ஏனென்றால்) நிச்சயமாக அவன் மிக மேலானவனும் மிக ஞானமுடைய வனுமாவான் " . (அல்குர்ஆன் : 42:51)

மூன்று வழிமுறைகளின்றி அல்லாஹ் யாருடனும் நேரிடையாக இவ்வுலகில் பேசியதில்லை.
1 ) வஹீ மூலமாக :
யாருடைய இடைத் தூதுமின்றி கனவின் மூலமோ , இதயத்தில் ஞானத்தை உதிக்க வைப்பதின் மூலமோ நடைபெறும் .
நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு அவர்களுடைய மகனை அறுத்துப் பலியிடுமாறு கனவில் அறிவிக்கப்பட்ட சம்பவமும் ,
நபி மூஸா (அலை) அவர்கள் கைக்குழந்தையாக இருக்கும்பொழுது , குழந்தையை நதியில் வீசி விடுமாறு குழந்தையின் தாய்க்கு இதயத்தில் உதிக்குமாறு செய்த சம்பவமும் இதற்கு உதாரணங்களாகும் .

2) அல்லது திரைக்கப்பாலிருந்து :
நபி மூஸா (அலை) அவர்கள் சினாய் மலைப்பகுதியில் ஒரு மரத்தின் அருகிலிருந்து திரைமறைவாக இறைவனின் சப்தத்தைக் கேட்டார்கள் . அல்லாஹ்வை அவர்கள் நேரில் பார்க்கவில்லை என்பது இதற்கு உதாரணங்களாகும் .

3) அல்லது இடைத்தூதராக ஒரு மலக்கை அனுப்பி :
நபிமார்களுக்கு ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மூலம் இறைவன் அறிவித்திருப்பது இதற்கு உதாரணமாகும் .
இந்த ஜிப்ரயீல் (அலை) தூதர் , அவன் நாடியதை அவனுடைய அனுமதி கொண்டு யாருக்கு அறிவிக்க வேண்டுமோ அவருக்கு அறிவிப்பார் .
இம் மூன்று முறைகளில்லாமல் அல்லாஹ் யாருடனும் நேரில் பேசியதே இல்லை.
நேருக்கு நேர் பேசுவது மனிதர்களின் தன்மையாகும் . இதிலிருந்து அவன் மிக்க உயர்த்தவன் . அவனுடைய செயல்களில் அவன் தீட்சண்ணிய
ஞானமுடையவன் .
எங்கிருந்து இந்த குர்ஆன் உமக்கு அறிவிக்கப்பட்டதென்றால், இது நம்முடைய கட்டளையின் பிரகாரம் நம் நாட்டப்படி அறிவித்தோம். மூன்று முறைகளின்படி நாம் அறிவித்தோம். இம்முறைகள் திருக்குர்ஆனையும் , இதர சட்டத் திட்டங்களையும் குறிக்கும் .

1 ) ஆரம்பத்தில் பெருமானார் (ஸல்) அவர்களுக்குக் கனவின் மூலமே வஹீ அறிவிக்கப்பட்டிருக்கிறது என்பதாக ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் (புகாரி , முஸ்லிம்)
2 ) இன்ன காரியம் பற்றிய விவரம் என் மனத்தில் போடப்பட்டது. அதன் மூலம் அது எனக்குச் சட்டமாக்கப்பட்டுள்ளது. அல்லது தடுக்கப்பட்டுள்ளது என நபிகளார் கூறி இருப்பது ஹதீஸ்களில் காணப்படுகின்றன. இது தெளிவான ஞானோதயமாகும்.
3) ஐங்காலத் தொழுகைகள் கூட மிஃராஜின் போது திரைமறைவில் அறிவிக்கப்பட்டவைதான் .
திருக்குர்ஆன் ஜிப்ரயீல் (அலை) மூலம் வஹீயாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. இது மலக்கின் மூலம் உள்ள வஹீயாகும்

مَا ضَلَّ صَاحِبُكُمْ وَمَا غَوٰى
(நம்முடைய தூதராகிய) உங்களுடைய தோழர் வழி தவறி விடவுமில்லை; தவறான வழியில் செல்லவுமில்லை.
(அல்குர்ஆன் : 53:2)

وَمَا يَنْطِقُ عَنِ الْهَوٰى
அவர் தன் இஷ்டப்படி எதனையும் கூறுவதில்லை.
(அல்குர்ஆன் : 53:3)

اِنْ هُوَ اِلَّا وَحْىٌ يُّوْحٰىۙ
இது அவருக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி (வேறு) இல்லை.
(அல்குர்ஆன் : 53:4)

عَلَّمَهٗ شَدِيْدُ الْقُوٰىۙ
(ஜிப்ரீல் என்னும்) வலுவான ஆற்றலுடையவர் இதனை அவருக்குக் கற்றுக் கொடுக்கின்றார்.
(அல்குர்ஆன் : 53:5

அந்த 3 கேள்விகள்

திருக்குர்ஆனின் 26 -வது ஜுஸ்வு
(ஹாமீம்)



قُلْ اَرَءَيْتُمْ اِنْ كَانَ مِنْ عِنْدِ اللّٰهِ وَكَفَرْتُمْ بِهٖ وَشَهِدَ شَاهِدٌ مِّنْ بَنِىْۤ اِسْرَآءِيْلَ عَلٰى مِثْلِهٖ فَاٰمَنَ وَاسْتَكْبَرْتُمْ اِنَّ اللّٰهَ لَا يَهْدِى الْقَوْمَ الظّٰلِمِيْنَ

(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "(யூதர்களே! இவ்வேதம்) அல்லாஹ்விடம் இருந்தே வந்திருக்க, அதனை நீங்கள் நிராகரித்து விட்டீர்களே! (உங்கள் இனத்தைச் சார்ந்த) இஸ்ராயீலின் சந்ததிகளிலுள்ள ஒருவர், இதைப்போன்ற ஒரு வேதம் வர வேண்டியதிருக்கின்றது என்று சாட்சியம் கூறி, அதனை அவர் நம்பிக்கை கொண்டுமிருக்க, நீங்கள் பெருமைகொண்டு (இதனை நிராகரித்து) விட்டால், (உங்களுடைய கதி) என்னவாகும் என்பதை கவனித்தீர்களா? நிச்சயமாக அல்லாஹ் (இத்தகைய) அநியாயக்கார மக்களை நேரான வழியில் செலுத்தமாட்டான்."
(அல்குர்ஆன் : 46:10)

மேற்கண்ட வசனத்தில் இஸ்ரவேல் மக்கள் ஒரு சாட்சி என்று இங்கு கூறப்படுபவர் பெருமானர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் ஸலாம் என்பவரே எனப் பெரும்பாலான விரிவுரையாளர்கள் குறிப்பிடுகின்றனர்.
அப்துல்லாஹ் பின் ஸலாம் இஸ்லாத்தை தழுவியதற்கு காரணம் , நபிகளார் மதீனா வந்ததும் அப்துல்லாஹ் பின் ஸலாம் , பெருமானாரின் சமூகம் வந்து நான் உங்களிடம் 3 கேள்விகளை கேட்டு , அதற்குரிய பதிலை நபியேயல்லாமல் வேறெவரும் அறியார் ,

1) உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் எது?
2) சில குழந்தைகள் தந்தையைப் போலவும் சில தாயைப் போலவும் உருவாவதற்குக் காரணம் என்ன ?
3) சுவனத்தின் முதல் உணவு எது ?

1) உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் , "கீழை நாட்டில் தோன்கிற நெருப்பு மேல் நாடு வரை பரவி பின் உலகம் அழியும் "
2)சில குழந்தைகள் தந்தையைப் போலவும் சில தாயைப் போலவும் உருவாவதற்குக் காரணம், கணவன் மனைவி உடலுறவின் போது யாருடைய விந்து, இந்திரியம் முந்துதோ அவர்களின் சாயலில் குழந்தை பிறக்கும்
3) சுவனத்தின் முதல் உணவு , மீனின் சினை
இப்பதில்களை செவியேற்றதும் " நீங்கள் நிச்சயமாக அல்லாஹ்வின் திருத்தூதராக இருக்கின்றீர்கள் என சாட்சியம் கூறுகிறேன் " என்று மொழிந்து இஸ்லாத்தை ஏற்றார்கள் .
பின்னர் அவர் பெருமானரை நோக்கி ,
" அல்லாஹ்வின் தூதரே ! யூதர்கள் அவதூறு செய்யும் கூட்டத்தினர் ஆவார்கள் . என்னைப் பற்றி அவர்களிடம் விசாரிப்பதற்கு முன்னர் நான் இஸ்லாத்தைத் தழுவியதை அவர்கள் அறிந்தார்களானால் , என்னைப் பற்றி பொய்யான விஷயங்களை உங்களிடம் கூறுவார்கள்"

அச்சமயம் யூதர்கள் அங்கு வந்தனர் அவர்கள் வருவதைத் தெரிந்த அப்துல்லாஹ் பின் ஸலாம் , வீட்டினுள் சென்று மறைந்து கொண்டார்.

அந்த யூதர்களை நோக்கி, " உங்களில் அப்துல்லாஹ் பின் ஸலாம் எத்தகைய தன்மையுடையவர் ? " என்று நபிகளார் விசாரித்தார்கள்.
" அவர் எங்களிற் மிகச் சிறந்த அறிஞர் ; சிறந்த அறிஞரின் புதல்வர் ; மேற்குலத்தார் , மேற்குலத்தாரின் மகன் "

" அப்துல்லாஹ் பின் ஸலாம் இஸ்லாத்தைத் தழுவிட்டால், நீங்கள் எந்த முடிவுக்கு வருவீர்கள் ? "
" அல்லாஹ் அவரை அச்செய்கையிலிருந்து காப்பாற்றுவானாக ! "
இந்நிலையில் உள்ளே மறைந்திருந்த அப்துல்லாஹ் பின் ஸலாம் , திருக்கலிமாவை ஓதிக் கொண்டே வெளியே வந்தார் .

இதனைக் கண்ணுற்ற யூதர்கள் , " அவர் நம்மில் மிகக் கெட்டவர் ; கெட்டவரின் குமாரர் " என்று ஆத்திரத்தோடு கூறிச் சென்றனர் .
ர.ரா

**Rahmath Rajakumaran**
அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி)அவர்களின் சிறப்புகள்.
1615. நான் மதீனாவின் (மஸ்ஜிதுந்நபவீ) பள்ளிவாசலில் (நபித்தோழர்கள் சிலருடன்) அமர்ந்திருந்தேன்.
அப்போது ஒருவர் தம் முகத்தில் சிரம் பணிந்(து சஜ்தா செய்)ததற்கான அடையாளத்துடன் உள்ளே வந்தார். மக்கள், 'இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்" என்று கூறினார்கள். அவர் இரண்டு ரக்அத்துகள் தொழுதார். அவற்றை (அதிக நேரம் எடுக்காமல்) சுருக்கமாகத் தொழுதார். பிறகு அவர் வெளியேற, நான் அவரைப் பின்தொடர்ந்து சென்று,
'நீங்கள் பள்ளி வாசலுக்குள் நுழைந்தபோது மக்கள், 'இவர் சொர்க்கவாசி' என்று கூறினர்" என்றேன்.
அதற்கு அவர் கூறினார்: அல்லாஹ்வின் மீதாணையாக! தமக்குத் தெரியாததைக் கூறுவது எவருக்கும் முறையல்ல. ஏன் அவ்வாறு (மக்கள் பேசிக் கொள்கிறார்கள்) என்று உங்களுக்கு இதோ தெரிவிக்கிறேன்.
அதாவது, நான் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் கனவொன்று கண்டேன். அதை அவர்களிடம் விவரித்தேன். நான் ஒரு பூங்காவில் இருப்பது போன்று கண்டேன் – அறிவிப்பாளர் கூறுகிறார்: அம்மனிதர் அதன் விசாலத்தையும் பசுமையையும் வர்ணித்தார் – அதன் நடுவே இரும்பாலான தூண் இருந்தது. அதன் அடிப்பகுதி பூமியில் இருந்தது. மேற்பகுதி வானத்தில் இருந்தது. அதன் மேற்பகுதியில் பிடி ஒன்று இருந்தது.
என்னிடம், 'இதில் ஏறு" என்று சொல்லப்பட்டது. நான், 'என்னால் இயலாதே" என்று சொன்னேன். அப்போது என்னிடம் பணியாள் ஒருவர் வந்து என் ஆடையைப் பின்னாலிருந்து உயர்த்தி விட்டார். உடனே நான் (அதில்) ஏறினேன்.
இறுதியில் அதன் மேற்பகுதிக்கு நான் சென்றுவிட்டபோது அந்தப் பிடியை நான் பற்றினேன். உடனே என்னிடம், 'நன்கு பற்றிப் பிடித்துக் கொள்" என்று சொல்லப்பட்டது. (நான் அதைப் பற்றினேன்.) அந்தப் பிடி என் கையில் இருக்க (திடுக்கிட்டு) நான் விழித்தெழுந்தேன்.
நபி (ஸல்) அவர்களிடம் அதை நான் விவரித்தபோது, 'அந்தப் பூங்கா இஸ்லாமாகும். அந்தத் தூண் இஸ்லாம் எனும் தூணாகும். அந்தப் பிடி பலமான (இறை நம்பிக்கை என்னும்) பிடியாகும். எனவே, நீங்கள் இறங்கும் வரை இஸ்லாத்திலேயே நிலைத்து நிற்பீர்கள்" என்று நபியவர்கள் பதிலளித்தார்கள் (இப்படிச் சொன்ன) அந்த மனிதர் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) தாம்.
புகாரி 3813 கைஸ் பின் உபாத் (ரலி)

சந்திரன் பிளந்து விட்டது !
திருக்குர்ஆனின் 27 வது ஜுஸ்வு
(காலஃபமா )



اِقْتَـرَبَتِ السَّاعَةُ وَانْشَقَّ الْقَمَرُ
மறுமை நெருங்கிவிட்டது. (அதற்கு அத்தாட்சியாக) சந்திரனும் பிளந்து விட்டது.
(அல்குர்ஆன் : 54:1)

وَاِنْ يَّرَوْا اٰيَةً يُّعْرِضُوْا وَيَقُوْلُوْا سِحْرٌ مُّسْتَمِرٌّ
எனினும், அவர்கள் எந்த அத்தாட்சியைக் கண்டபோதிலும் (அதனைப்) புறக்கணித்து "இது சகஜமான சூனியந்தான்" என்று கூறுகின்றனர்.
(அல்குர்ஆன் : 54:2)

وَكَذَّبُوْا وَاتَّبَعُوْۤا اَهْوَآءَهُمْ وَكُلُّ اَمْرٍ مُّسْتَقِرٌّ
அன்றி, அதனை பொய்யாக்கி தங்களது சரீர இச்சைகளையே பின்பற்றுகின்றனர். (அவர்கள் எதனை புறக்கணித்தாலும் வர வேண்டிய) ஒவ்வொரு விஷயமும் (அதனதன் நேரத்தில்) உறுதியாகி விடும்.
(அல்குர்ஆன் : 54:3)

1969 - ஜூலை 21 பூமியில் அமெரிக்க ஹூஸ்டன் விண்வெளி நிலையத்தில் எல்லா விஞ்ஞானிகளும் பரபரப்புடன் இருக்க,
அங்கே, பூமியிலிருந்து 2, 38, 855 மைல் தூரத்திலுள்ள சந்திரனின் மிக அருகில் கொலம்பியா விண்வெளிக்கலம் சுற்றி சுற்றி வர அந்த விண்வெளிக்கலத்தில் இருந்து "ஈகிள் " என்னும் சிறு விண்வெளிக் கப்பல் வெளிப்பட்டு சந்திரனின் தரையைத் தொட்டு நிற்கிறது .

அதிலிருந்து விண்வெளி வீரர் நீல் ஆம்ஸ்ட்ராங் வெளிப்பட்டு .நிலவில் தன் காலடியைப் பதித்து, "எனக்கு இது ஓர் அடி எடுத்து வைத்த சம்பவம் தான் , ஆனால் மனித குலத்திற்கோ மாபெரும் முன்னேற்றம் " என்று சொல்லி திகைக்கச் செய்தார். உலக மக்கள் அல்லோலப்பட்டு ஆர்ப்பரித்து சந்தோஷத்தை கொண்டாடினார்கள்

சந்தேகப்பட்டு, "இதெல்லாம் இப்படியெல்லாம் நடந்திருக்குமா ? என்று அப்போலோ விண்வெளிக் கப்பலுக்கு இன்ஜின் தயாரித்துக் கொடுத்த கம்பனியில் வேலை பார்த்த 72 வயசான

பில்கேஸிங் நம்ப மறுக்கிறார் . அமெரிக்க விண்வெளி விஞ்ஞானிகள் "பில்கேஸிங் வீட்டிலே கூட அடிக்கடி சந்தேகப்படும் ஆளு" என்று கிண்டலடித்தனர்.

நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்வதற்கு 5 ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் ..
அபுஜஹில் , அல் ஆசிப், வலீது இப்னு முஹைறா, அஸ்வத் இப்னு முத்தாப், நழ்ர் இப்னு ஹாரிஸ் இவர்கள் அத்தனை பேரும் நபி (ஸல்) அவர்களின் அற்புதங்களைப் பற்றி, வேதங்கள் தெரிந்த ஒரு யூதனிடம் வினவுகின்றனர்.

அவன் , "முஹம்மதுடைய மாயங்கள், சித்து விளையாட்டுகள் மண்ணில்தான் பலிக்கும் . விண்ணில் முடியாது.
உடனே **அபுஜஹில்** தலைமையில் இக் கூட்டம் " மினா "" என்ற இடத்தில்
நபி (ஸல்) அவர்களை சந்தித்து . "இன்று முழு பௌர்ணமி நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்றால் இந்த முழு நிலவை இரண்டாக பிளக்க வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆள்காட்டி விரலினால் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள் .இதற்கு சாட்சியாக நீங்கள் இருங்கள் என்று நபித் தோழர்களான **அனஸ் இப்னு மாலிக் (ரலி), அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி),**

**அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோர்களைப் பார்த்து சொன்னார்கள்**
சந்திரன் இரண்டாக பிளந்தது .பின் நபி (ஸல்) அவர்கள் அதே ஆள்காட்டி விரலாலேயே பிளந்த சந்திரனையும் சேர்த்தும் வைத்தார்கள்

உடனே அவர்கள் மண்ணையும் தாண்டிய அற்புத சூனியம் என்றும் , நாங்கள் இன்னும் சந்தேகத்தில்தான் இருக்கிறோம் என்று பில்கேஸிங் என்ற விஞ்ஞானி சந்தேகப்பட்ட மாதிரி சந்தேகப்பட்டார்கள்.
அமெரிக்க விண்வெளி ஆய்வு நிலையமான நாஸா அப்போல்லோ 10, மற்றும் அப்போல்லோ 11 விண்கலம் அனுப்பிய புகைப்படத்தில் சந்திரனின் முகத்தில் ஆங்காங்கே அம்மன் தழும்பு மாதிரி பள்ளங்கள் தெரிந்தாலும் கவனத்தை மிக ஈர்த்தது சந்திரனைச் சுற்றி ஒரு வட்ட வடிவ பள்ளமான தடயம் தான். இந்த வடிவ பள்ளத்தை "Racky Belt" என்றழைக்கிறது. (இந்த பெயரில் வலைதளத்தில் தேடவும்)

இதுவரை நாம் பார்த்துக் கொண்டிருக்கும் வட்ட நிலா கொஞ்ச காலத்திற்கு முன் இரண்டாகப் பிளந்து மறுபடியும் சேர்க்கப்பட்டுள்ளதாக தெரிகிறது .
யார் பிளந்தது என்று நாஸா தேட ஆரம்பித்தது .நிலவின் இந்த வட்ட வடிவ பள்ள ஆராய்ச்சிக்காக ரிக்கா **$ 100,000,000,000** டாலர் செலவழிக்க உள்ளது

எகிப்து நாட்டு நில இயல் வல்லுநர் **Dr ஜக்லோவுல் அன்னாஜர்** தொலைக்காட்சியின் பேட்டியின் போது 1400 வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவத்தைச் சொல்லி,
"மறுமை நாள் நெருங்கி விட்டது. (அதனை அறிவிக்க சந்திரனும் பிளந்து விட்டது.
குர்ஆன் ( 54 : 1-3) என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்

இன்னும் கூட அநேகர் சந்திரன் பிளந்து விட்டதா என்ற சந்தேகம் இருக்கிறது..
நபி (ஸல்) அவர்களின் ஆட்காட்டி விரலின் பதிவுகளைக் கூட அவர்களைக் கௌரவப்படுத்துவதற்காக பரிசுத்தமாக விண்வெளியில் அதுவும் சந்திரனில் பாதுகாக்கின்றான் போலும்.

நீங்கள் நன்றாக உற்று நோக்குங்கள் .. நபி (ஸல்) அவர்களின் ஆள்காட்டி விரலின் ரேகையைக் கூட இன்ஷா அல்லாஹ் நாளைய விஞ்ஞானம் தேடிக் கண்டு பிடிக்கலாம் .
ர.ரா

ஓர் இரகசிய கடிதம் .
திருக்குர்ஆனின் 28 வது ஜுஸ்வு
(கத்ஸமி அல்லாஹ் )



திரு மக்காவை விட்டு புலம் பெயர்ந்து திரு மதீனாவில் முஸ்லிம்கள் குடியேறிய பின்னர் 'ஸாரா ' என்னும் இணைவைத்து வணங்கும் பெண் ஒருத்தி மதீனா வந்தாள் . நபிகளார் , அவளை நோக்கி ,
" நீ இஸ்லாத்தைத் தழுவி மதீனாவில் குடியேற வந்தாயா ? "
" இல்லை "
" பின் ஏன் வந்தாய் ? "
" வறுமை என்னை வாட்டுகிறது .கடும் பசிக்குள்ளாகி உள்ளேன் "

இவள் அரபு நாட்டில் பாடகி , இறந்தவர் வீட்டுப் பெண்களுடன் சேர்ந்து கொண்டு ஒப்பாரி வைத்தழுபவளுங்கூட .
அப்பெண்ணிற்கு உதவி செய்ய பனீ அப்துல் முத்தலிப் மக்களைத் தூண்டினார்கள். ஆடை , உணவு , வாகனம் முதலியவற்றை வழங்கினார்கள் .

நபிகளார் திரு மக்காவின் மீது படையெடுப்பதற்குரிய ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்த சமயம் அது.
**அவள் ஹாதிபு பின் அபீபல்தஆ** என்பவரிடம் வந்தாள். அவர் 10 தினார் , ஆடைகள் வழங்கியதோடு , மக்காவாசிகளுக்கு ஓர் இரகசிய கடிதம் அதில் , " திருமக்காவாசிகளுக்கு ஹாதிபு பின் அபீபல்தஆ எழுதிக் கொள்வது , நபிகளார் உங்கள் மீது படையெடுக்க தயாராகி வருகிறார்கள் ஜாக்கிரதை " - என்று எழுதி அவள் வசம் கொடுத்து மிகவும் பாதுகாப்பாக அதனை மக்காவாசிகளிடம் சேர்த்து விட வேண்டினார் .
கடிதம் பெற்றதும் ஸாரா என்ற அந்த பெண் குதிரையேறி மறைந்து விட்டாள். ஜிப்ரயீல் (அலை) அவர்கள் இந்த சம்பவத்தை வஹீ மூலமாக நபிகளாருக்கு தெரித்து விட்டார்கள் !

நபிகளார் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) மற்றும் சில தோழர்களை அழைத்து , "நீங்கள் குதிரைகளின் மீதேறி மக்கா நோக்கி செல்லும் பாதையில் " காக் " என்னுமிடத்தில் ஒரு பெண் பிரயாணி போய்க் கொண்டிருப்பாள். அவளிடம் கடிதம் ஒன்றிருக்கும் .அதை கேட்டவுடன் அவள் கொடுத்து விட்டால், அவளை ஒன்றும் செய்ய வேண்டாம். இல்லையேல் அவளைக் கொன்று விடுங்கள் "

நபிகளார் குறிப்பிட்ட காக் இடத்தில் அவளை கண்டு கடிதத்தைக் கேட்டனர் . ' 'தன்னிடம் எந்த கடிதமும் கிடையாது " என அவள் சத்தியம் செய்தாள்.
அலீ (ரலி) அவர்கள் வாளை உருவி , கடிதத்தை எடுக்கிறாயா அல்லது உன்னை கொன்று விடவா ? " உடனே அவள் கூந்தலின் உள்ளிருந்து கடிதத்தை எடுத்துக் கொடுத்தாள் .
கடிதத்தைப் பெற்றுக் கொண்டு , அவளை அப்படியே விட்டு விட்டு கடிதத்தை நபிகளாரிடம் ஒப்படைக்கப்பட்டது .
ஹாதிபைக் கூப்பிட்டு , " இக்கடிதத்தைப் பற்றி நீர் அறிவீரா ? "
"ஆம் .அறிவேன் "
"ஏன் இவ்வாறு எழுதினீர் ? "
"அல்லாஹ்வின் மீது பிரமாணமாக, நான் இஸ்லாத்தைத் தழுவிய பின்பு மதம் மாறி விட வேண்டுமென்றோ, திரு மக்காவைத் துறந்து வந்த பின்னர், மக்காவாசிகளுடன் தொடர்பையும், அன்பையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்றோ இவ்வாறு நான் எழுதவில்லை .

மக்காவைத் துறந்து விட்டு இங்கு குடியேறி வந்திருக்கும் யாவருக்கும் மக்காவில் உறவினர் இருக்கின்றனர் .
நானோ அவர்களில் மிக்க எளியவன் என் எளிய உறவினரும் அவர்கள் மத்தியில் வாழ்கின்றனர் .
இக்கடிதம் காரணமாக அவர்கள் தங்களுக்கு ஒரு பாதுகாப்பைத் தேடிக் கொள்ளவே அவ்வாறு எழுதினேன் .
அல்லாஹ் அவர்களுக்கு ஒரு தண்டனையை வழங்கத்தான் செய்வானென்றும் , அப்பொழுது எனது கடிதம் அவர்களைப் பாதுகாத்துவிட முடியாதென்றும் , நான் அறிந்துதானிருக்கின்றேன் .
நபிகளார் (ஸல்) அவர்கள் அவரது வாக்கைச் செவியுற்றதும், அவரது வாக்குமூலத்தை ஏற்றுக் கொண்டார்கள்
அருகிலிருந்த உமர் (ரலி) அவர்கள், ஆத்திரத்துடன் , " அல்லாஹ்வின் தூதரே ! இந்நயவஞ்சகனின் சிரசைத் துண்டிக்க எனக்கு அனுமதி கொடுங்கள்"
நபிகளார் (ஸல்) அவர்கள் , உமர் (ரலி) அவர்களை அமரச்செய்து , "பத்ரு யுத்தத்தில் கலந்து கொண்டவர்களான முஸ்லிம்களை இறைவன் நன்குணர்ந்து அவர்களை நோக்கி, " நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள் .நான் உங்களை நிச்சயமாக மன்னித்து விட்டேன் " என்று அவன் கூறியிருப்பது உமரே, உமக்குத் தெரியாதா ? என்று கூறினார்கள் .

கடிதம் எழுதிய ஹாதிபு பத்ரு யுத்தத்தில் கலந்து கொண்டவர். அப்பொழுதுதான்
**" அல்மும்தஹினா - (பரிசோதித்தல்)** என்ற சூரா அருளப்பட்டது .

"நம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் விரோதமாக இருப்பவர்களை நீங்கள் நேசர்களாக எடுத்துக்கொண்டு, அன்பின் அடிப்படையில் (ரகசியமாகக் கடிதம் எழுதி) அவர்களிடம் உறவாட வேண்டாம். உங்களிடம் வந்த சத்திய (வேத)த்தை நிச்சயமாக அவர்கள் நிராகரித்துவிட்டனர். நீங்கள் உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டீர்கள் என்பதற்காக உங்களையும் (நம்முடைய) தூதரையும் (உங்கள் இல்லங்களிலிருந்து) வெளியேற்றினார்கள். (நம்பிக்கையாளர்களே! நீங்கள்) என்னுடைய திருப்பொருத்தத்தை விரும்பி, என்னுடைய பாதையில் போர்புரிய மெய்யாகவே நீங்கள் (உங்கள் இல்லங்களிலிருந்து) வெளியேறி யிருந்தால், அவர்களுடன் நீங்கள் இரகசியமாக உறவாடிக் கொண்டிருப்பீர்களா? நீங்கள் மறைத்துக் கொள்வதையும், இன்னும் நீங்கள் வெளிப்படுத்துவதையும் நான் நன்கறிவேன். (இவ்வாறு) உங்களில் எவரேனும் செய்தால், நிச்சயமாக அவர் நேரான பாதையிலிருந்து தவறிவிட்டார்.
(அல்குர்ஆன் : 60:1)

அவர்களுக்கு சமயம் கிடைத்தால் (பகிரங்கமாகவே) அவர்கள் உங்களுக்கு எதிரியாகி, தங்களுடைய கைகளையும் உங்கள் மீது நீட்டி, தங்கள் நாவாலும் உங்களுக்குத் தீங்கிழைப்பார்கள். அன்றி, நீங்களும் (நம்பிக்கையை விட்டு) நிராகரிப்பவர்களாக ஆகிவிடவேண்டும் என்றும் அவர்கள் விரும்புகின்றனர்.
(அல்குர்ஆன் : 60:2)

(அவர்களுடன் இருக்கும்) உங்களுடைய சந்ததிகளும், உங்களுடைய பந்துத்துவமும் மறுமை நாளில் உங்களுக்கு யாதொரு பயனுமளிக்காது. (அந்நாளில் அல்லாஹ்) உங்களுக்கிடையில் பிரிவினையை ஏற்படுத்திவிடுவான். நீங்கள் செய்பவைகளை அல்லாஹ் உற்று நோக்கியவனாக இருக்கின்றான்."
(அல்குர்ஆன் : 60:3)
ர.ரா

வலீது இப்னு முகீரா
திருக்குர்ஆனின் 29 -வது ஜுஸ்வு
( தபாரக்)



நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதுச் செய்தியை எத்தி வைக்க ஆரம்பித்தவுடன், அந்தப் பிரச்சாரத்திற்கு எதிராக கவிதை இயற்ற, அந்தப் பிரச்சாரத்தை முடக்க இறைநிராகரிப்பாளர்கள் முனைந்தார்கள். அதற்கு அவர்கள் தேர்ந்தெடுத்த நபர்தான்
வலீத் இப்னு முகைரா.

அவனை விட சிறந்த கவிஞர் அன்றைய மக்கா புழுதியில் வேறு எவரும் இருந்திடவில்லை. எனவே அண்ணல் நபிகளாரின் அழகிய பிரச்சாரத்தை முடக்கும் பொறுப்பை அவரிடமே கொடுத்தார்கள் மக்கா காஃபிர்கள்.
வலீத் இப்னு முகீரா நேரடியாக அண்ணல் நபிகள் (ஸல்) அவர்களிடம் சென்றான் . அவ்வமயம் அண்ணலார் திருக்குர்ஆனின் சில வசனங்களை ஓதிக் கொண்டிருந்தார்கள். எதேச்சையாக அதனைக் கேட்க ஆரம்பித்த வலீத் இப்னு முகீரா அதன் இனிமையிலும், கருத்தாழத்திலும் இலயித்துப் போனான் . ஒன்றும் பேசாமல் திரும்பி வந்தான் .
அன்றைய மக்காவில் ஓர் அவையில் பனீ மக்ஸூம் கோத்திரத் தலைவர்களும், வியாபாரப் பிரமுகர்களும், தனவந்தர்களும்,மக்கா பிரமுகர் சமூகத்தில் முக்கியமானவர்கள் பலரும் கூடியிருந்தனர்.
கூட்டத்திலிருந்து **வலீத் இப்னு முகீரா** எழுந்து நின்றான் . அனைவரையும் தீர்க்கமாகப் பார்த்தான் . அன்றைய அரேபிய மண்ணில் மிகப் பிரபலமான கவிஞர் அவர். கூடியிருந்த அனைவரும் அவரையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தனர். வலீத் இப்னு முகீரா உரையாற்ற ஆரம்பித்தான் :

“சமுதாயப் பிரமுகர்களே! தனவந்தர்களே! அது நீங்கள் சொல்வதைப்போல் ஒரு கவிதையோ, கற்பனையோ அல்ல. அதை நான் என் இரு காதுகளாலும் கேட்டேன்.

அவை நிச்சயமாக மனிதர்களின் வார்த்தைகள் அல்ல : அது ஜின்களின் வார்த்தைகளும் அல்ல . சத்தியமாக அதற்கு ஓர் இனிமையும், தனிப்பட்ட ஒரு கவர்ச்சியும் இருந்து கொண்டு இருக்கின்றன.

கூட்டத்தில் சிறு சலசலப்பு. ஒருவர் எழுந்து, “அப்படியென்றால் அது குறித்து உங்கள் கருத்து என்ன?” என்று கேட்டார். கேட்டவரின் குரலில் படபடப்பு தெரிந்தது.

**வலீத் இப்னு முகீரா** மௌனமாக இருந்தான். என்ன சொல்லப்போகிறானோ என்ற எண்ணத்தில் அனைவரது கண்களும் அவனையே மொய்த்தன. வலீத் மீண்டும் தன் உரையைத் தொடர்ந்தான் :
**“அது இனிமையானது. சுவையான தேனைப் போன்றது.** உன்னதமான உரைநடை கொண்டது. அதன் மேற்பரப்பு மலையை விட உயரமானது. அதன் அடிப்பரப்பு கடலை விட ஆழமானது. ஆதலால் அது வெற்றியின் சிகரத்தை அடைந்தே தீரும். அதனை வெல்ல யாராலும் முடியாது.”
"**அல்லாஹ்வின் மீது பிரமாணமாக வலீத்**
மதம் மாறி விட்டார் .திண்ணமாக குரைஷி வர்க்கமே இதனால் மதம் மாறி விடும் " என்று கூக்குரலிட்டனர் .

மற்றொரு கொடிய விரோதி அபூஜஹல் , " நீங்கள் சற்று மௌனமாக இருங்கள் நான் வலீதை நம்முடைய வழிக்கு கொண்டு வருகிறேன் " என்று கூறி வலீது வீட்டிற்குச் சென்றான் .
வலீதைக் கண்ட அபூஜஹல் , கவலை தோய்ந்த முகத்தோடு அவன் அருகில் அமர்ந்தான் .

" எனது சகோதரனின் புதல்வரே ! நீர் ஏன் கவலையுற்றவராக காணப்படுகிறீர் ? " என்று வலீத் கேட்க,
" சிறிய தந்தையே ! குறைஷி வம்சத்தினர் , உமது அந்தஸ்தை உத்தேசித்து உமக்குப் பொருளுதவி புரிகின்றனர் .இந்நிலையில் நீர் முஹம்மதின் வார்த்தைகளை மிக அழகியவை என்று கூறியதுடன், அதன் பால் சாய்த்தும் விட்டீராம் .

**இப்னு அபீகப்ஷா (அதாவது நபி (ஸல்)** இடமும் , அபீகுஹாபாவின் புதல்வர் (அபூபக்கர்) இடமும் அடிக்கடி நீர் சென்று அவர்களது மிச்ச மீதி உணவைப் பெறுகிறீராம் .
இதைக் கேட்டதும் வலீத் மிக்க சினம் கொண்டான் .

" நான் பொருளாலும் , மக்கட்பேற்றாலும் மிகுந்தவன் , முஹம்மதும் , அவரது கூட்டத்தினரும் அன்றாடம் வயிற்றை நிரப்புவதற்கு உணவுக்குத் திண்டாடும் போது, மிச்ச உணவு அவர்களிடம் எங்ஙனம் இருக்க முடியும் இது குறைஷிகளுக்குத் தெரியாதா ? என்று கூறி குறைஷிகளின் சபைக்கு அபூஜஹ்லுடன் வந்தான் .
" குறைஷிகளே ! முஹம்மதைப் பைத்தியக்காரர் எனக் கூறுவதற்கு , உங்கள் யாருடைய கழுத்தையாவது அவர் நெரித்துக் கொல்லக் கண்டிருக்கிறீர்களா ? "
" இல்லை"
"அவர் குறிக்காரர் எனக் கூறும் நீங்கள், எங்குக்காவது குறி சொல்லி இருக்கிறாறா ?"
" இல்லை "
" அவர் புலவர் என்று கூறுகின்றீர்களே , ஏதாவது கவிதையைப் புனைந்துப் பாடியுள்ளாரா ? "
" இல்லை "
" பொய்யரென்று கூறுகிறீர்களே , அவர் பொய்யுரைத்ததை எப்பொழுதாவது நீங்கள் கேட்டிருக்கிறீர்களா ? "
" இல்லை "
குறைஷிகள் யாவரும் வலீதை நோக்கி,
" அவ்வாறாயின் அவரைக் குறித்து நீர் என்னதான் கூறுகின்றீர் ? "
வலீத் சிறிது நேரம் சிந்தித்து விட்டு, "அவர் சூனியக்காரரன்றி வேறல்லர் "
கணவனுக்கும் , மனைவிக்கும் மத்தியில் அவர் பிளவையுண்டாக்குவதை நீங்கள் காணவில்லையா ? இது குனியக்காரரின் தன்மைதானே ! அவர் கூறும் வார்த்தைகளும் குறிகாரர்களால் எடுத்துக் காட்டப்படும் சூனியமல்லாது வேறன்று " என்று கூறி விட்டான்.
இவனைக் குறித்தே இறைவன் ....

ذَرْنِىْ وَمَنْ خَلَقْتُ وَحِيْدًا ۙ
(நபியே! நீங்கள் சிபாரிசுக்கு வராது) என்னையும் (அவனையும்) விட்டுவிடுங்கள். அவனை நான் தனியாகவே படைத்தேன்.
(அல்குர்ஆன் : 74:11)
وَّجَعَلْتُ لَهٗ مَالًا مَّمْدُوْدًا ۙ
பின்னர், நான் அவனுக்கு ஏராளமான பொருளையும் கொடுத்தேன்.
(அல்குர்ஆன் : 74:12)
وَّبَنِيْنَ شُهُوْدًا ۙ
எந்நேரமும் அவனுடன் இருக்கக்கூடிய மக்களையும் (நான் அவனுக்குக் கொடுத்தேன்).
(அல்குர்ஆன் : 74:13)
وَّمَهَّدْتُّ لَهٗ تَمْهِيْدًا ۙ
அவனுக்கு வேண்டியவை எல்லாம் ஏற்கனவே அவனுக்காக தயார்படுத்தியும் வைத்தேன்.
(அல்குர்ஆன் : 74:14)
ثُمَّ يَطْمَعُ اَنْ اَزِيْدَ ۙ
பின்னும் நான் அவனுக்கு (மறுமையில்) இன்னும் அதிகமாகவும் கொடுப்பேன் என்றும் எதிர்பார்க்கின்றான்.
(அல்குர்ஆன் : 74:15)
كَلَّا ؕ اِنَّهٗ كَانَ لِاٰيٰتِنَا عَنِيْدًا
அவ்வாறு ஆகக்கூடியதல்ல. ஏனென்றால், நிச்சயமாக அவன் நம்முடைய வசனங்களுக்கு எதிரியாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 74:16)

سَاُرْهِقُهٗ صَعُوْدًا
அதிசீக்கிரத்தில் அவனை ஒரு கஷ்டமான சிகரத்தில் ஏற்றி விடுவேன்.
(அல்குர்ஆன் : 74:17)
اِنَّهٗ فَكَّرَ وَقَدَّرَۙ
நிச்சயமாக அவன் (இந்தக் குர்ஆனைப் பற்றி மிக மிகக்) கவனித்து (ஒரு பொய்யைக்) கற்பனை செய்தான்.
(அல்குர்ஆன் : 74:18)
فَقُتِلَ كَيْفَ قَدَّرَۙ
அவன் அழிந்துபோவான்; என்னதான் கற்பனை செய்துவிட்டான்!
(அல்குர்ஆன் : 74:19)
ثُمَّ قُتِلَ كَيْفَ قَدَّرَۙ
பின்னும் அவன் அழிந்துபோவான்; என்னதான் கற்பனை செய்துவிட்டான்!
(அல்குர்ஆன் : 74:20)
ثُمَّ نَظَرَۙ ?
(ஒன்றுமில்லை.) பின்னும், (அதனைப் பற்றிக்) கவனித்தான்.
(அல்குர்ஆன் : 74:21)
ثُمَّ عَبَسَ وَبَسَرَۙ
பின்னர் (தன் இயலாமையைப் பற்றி முகம்) கடுகடுத்தான்; (முகம்) சுளித்தான்.
(அல்குர்ஆன் : 74:22)
ثُمَّ اَدْبَرَ وَاسْتَكْبَرَۙ
பின்னர் புறங்காட்டிச் சென்றான். (எனினும், பின்னும்) கர்வம் கொண்டான்.
(அல்குர்ஆன் : 74:23)
فَقَالَ اِنْ هٰذَاۤ اِلَّا سِحْرٌ يُّؤْثَرُۙ
ஆகவே "இது மயக்கக்கக்கூடிய சூனியமேயன்றி வேறில்லை" என்றும்,
(அல்குர்ஆன் : 74:24)
اِنْ هٰذَاۤ اِلَّا قَوْلُ الْبَشَرِ
"இது மனிதர்களுடைய சொல்லேயன்றி வேறில்லை" என்றும் கூறினான்.
(அல்குர்ஆன் : 74:25)
سَاُصْلِيْهِ سَقَرَ
ஆகவே, நாம் அவனை நரகத்தில் எறிவோம்.
(அல்குர்ஆன் : 74:26)
وَمَاۤ اَدْرٰٮكَ مَا سَقَرُ
(நபியே!) அந்த நரகம் என்னவென்று நீங்கள் அறிவீர்களா?
(அல்குர்ஆன் : 74:27)
لَا تُبْقِىْ وَ لَا تَذَرُ
அது எவரையும் மிச்சம் வைக்காது; விடவுமாட்டாது.
(அல்குர்ஆன் : 74:28)
لَوَّاحَةٌ لِّلْبَشَرِ
அது (எரித்து) மனிதனுடைய கோலத்தையே மாற்றிவிடும்.
(அல்குர்ஆன் : 74:29)
ர.ரா

**Rahmath Rajakumaran**
வலீத்தின் மூக்கு யானையின் துதிக்கை போன்று சற்று நீளமாக தொங்கியவாறு இருக்கும் .பத்ரு யுத்தத்தின் போது அன்சாரி (மதீனா ஸஹாபியானவர்) வாளினால் காயப்படுத்தி விட்டார். யுத்தம் முடிந்து மக்கா திரும்பிய வலீத் , அக்காயத்திற்கு எவ்வளவோ பரிகாரம் செய்தும் அது குணமடையாமல் அதே நோயினாலேயே இறந்து போனான் .
سَنَسِمُهٗ عَلَى الْخُرْطُوْمِ
(என்றென்றும் இருக்கக்கூடியவாறும், அனைவரும் அறியக்கூடியவாறும்) துதிக்கைப் (போன்ற ) அவனுடைய மூக்கில் அதிசீக்கிரத்தில் ஒரு அடையாளமிடுவோம்.
(அல்குர்ஆன் : 68:16)

நெருப்புக் குண்டத்தவர்கள்.
(இது ஒன்றும் கற்பனைக்கதை அல்ல , திருக்குர்ஆன் கூறும் உண்மைச் சம்பவம் )
திருக்குர்ஆனின் 30-வது ஜுஸ்வு
(அம்ம ஜுஸ்வு )



முற்காலத்தில் பனீ இஸ்ரவேலர்களில் ஓர் அரசன் இருந்தான். அரச சபையில் குறி சொல்லும் வயோதிகன் ஒருவனும் இருந்தான் .

**ஒரு நாள் குறிகாரன் :** " மன்னரே ! எனக்கு அந்திம காலம் நெருங்கி விட்டதால் , நல்ல புத்தி தீட்சண்யமுடைய ஒரு சிறுவனைக் கொடுத்தால் அவனுக்கு நான் கற்ற சூனியத் தொழிலைக் கற்றுக் கொடுக்கிறேன் "

அரசன் அப்படி ஒரு சிறுவனை தேர்ந்தெடுத்து சூனியக்காரரிடம் சூனியம் கற்க அனுப்பி வைத்தான் .
சூனியக்காரன் வீட்டிற்கு செல்லும் வழியில் ஒரு ஞானி வீடு இருந்தது. அச்சிறுவன் அந்த ஞானியின் உபதேசங்களை கேட்டு விட்டு தாமதமாகவே சூனியக்காரனிடம் செல்லலனான் .
தாமதமாக வருவதை கண்டித்து அச்சிறுவனை சூனியக்காரன் அடித்து துன்புறுத்தினான்.
சூனியக்காரனின் துன்புறுத்தலை அந்த ஞானியிடம் சிறுவன் சொல்ல , ஞானி சிறுவனிடம் , "தாம் வரும் வழியில் ஒரு புலி வந்து தன்னை வழிமறித்ததால் தாமதமாகி விட்டது " என்று சூனியக்காரனிடம் சொல்லுமாறு கூறினார்.

உண்மையிலேயே புலி வழிமறித்து மனிதர்களுக்கு இடையூறு செய்து கொண்டிருக்க, இச்சிறுவன் "ஞானி சிறந்தவரா ? சூனியக்காரன் சிறந்தவனா என்பதை நான் அறியேன் "யா அல்லாஹ் ! சூனியக்காரனது காரியத்தைப் பார்க்கினும் ஞானியின் காரியம் உனக்கு அதிகப் பிரியமாக இருக்குமாயின் , மனிதர்களுக்கு தடையை ஏற்படுத்தும் இந்த புலியை கொன்று விடுவாயாக ! " என்று பிரார்த்தித்து கல்லை எறிந்தான். புலி கல்லடிப் பட்டு இறந்தது .
இந்த விஷயம் ஞானிக்கு தெரிந்தது. சிறுவனை அழைத்து , " அருமைப் புதல்வரே !... இன்று நீ என்னிலும் சிறந்தவன். நான் அறிந்த காரியம் உன்னிலிருந்து வெளியாயிற்று . இதனால் வெகு விரைவில் நீ சோதனைக்கு உள்ளாக்கப்படுவாய் அந்த சோதனையில் நீ என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே ! " என்று ஞானி எச்சரித்தார் .

அன்று முதல் சிறுவனிடம் பிறவிக்குருடர், முடவர் ,வெண்குஷ்டரோகி, கருங்குஷ்டரோகி ஆகியோர்கள் வந்து சிறுவன் கூறும் அல்லாஹ்வை விசுவாசித்து குணமடைந்து சென்றனர் .
அரச சபையில் உள்ள கண் தெரியாத குருட்டு அமைச்சர் பெருஞ் செல்வத்தைப் பாத காணிக்கையாகக் கொடுத்து கண் பார்வையை மீட்டித் தர வேண்டினார் .

அதற்கு அந்த சிறுவன் " நான் எதையும் குணப்படுத்த முடியாது. குணப்படுத்துபவன் அல்லாஹ்தான் நீங்கள் அல்லாஹ்வை ஈமான் கொண்டால் நான் பிரார்த்திக்கிறேன் . அல்லாஹ் குணப்படுத்துவான் " என்று கூறினான். அதன்படி கண் பார்வையைப் பெற்றார்.
கண் பார்வை பெற்றதும் அரச சபைக்கு அமைச்சர் சென்றார். அரசன் எப்படி கண் பார்வை கிடைத்ததுப் பற்றி விசாரித்தான் .

" அல்லாஹ்தான் " என்றார்.
அதற்கு அரசன் " என்னைத் தவிர்த்து உனக்கு வேறு இறைவன் இருக்கிறானா ? "
" எனக்கும் இறைவனாக , உனக்கும் இறைவனாக உள்ள ஒரே அல்லாஹ் " என்று அமைச்சர் பதில் கூறினார். அரசன் அவரை சிறையில் அடைத்து கொடுமைப்படுத்த , அவர் சிறுவனைக் காட்டிக் கொடுத்தார் .

அச்சிறுவனை பிடித்து துன்புறுத்த, "நான் யாரையும் எப்போதுமே குணப்படுத்தியதில்லை. குணப்படுத்துவதெல்லாம் அல்லாஹ்தான் " என்றான். அரசன் சிறுவனைக் கொடுமைப்படுத்த , சிறுவன் ஞானியைக் காட்டிக் கொடுத்தான் .

உடனே ஞானியைக் கட்டி இழுத்து வந்து , மதம் மாற அரசன் வற்புறுத்தினான். அதற்கு ஞானி மறுக்கவே , உடனே ரம்பம் கொண்டு உச்சியிலிருந்து உடல் இரண்டு துண்டாகப் பிளக்கப்பட்டது.

பின்னர் அமைச்சரையும் மதம் மாற வற்புறுத்த அவரும் மறுக்கவே அவரையும் ரம்பத்தால் இரண்டாக பிளக்கப்பட்டார் .

பின்னர், அச் சிறுவனை அவனையும் மதம் மாற வற்புறுத்த , அதற்கு மறுப்புத் தெரிவிக்க , மலையில் இருந்து சிறுவனை உருட்டி விட ஆணைப் பிறப்பித்தான் .
சிறுவனை மலை உச்சியில் உருட்டி விட முயலும் போது , " யா அல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!
என்று பிரார்த்தித்தான் . உடனே மலையில் நில நடுக்கம் ஏற்பட்டு சிறுவனைத் தவிர்த்து மற்ற பணியாளர்கள் மலையிலிருந்து உருண்டு இறந்தனர் .
சிறுவனை மீண்டும் அரசன் பிடித்து விசாரிக்க , " அல்லாஹ் அவர்களை விட்டு என்னைக் காப்பாற்றினான் " என்று கூற , சிறுவனை படகில் ஏற்றி நடுக் கடலில் கொண்டு போய் கடலில் போட முயற்சிக்கும் போது,

" யாஅல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!
என்று பிரார்த்தித்தான்.
அப் படகு கவிழ்ந்து சிறுவனைச் தவிர்த்து அனைவரும் கடலில் முழ்கி இறந்தனர் .

அரசன் சிறுவனைப் பிடித்து " உன்னை கொல்வதற்காக மற்றவர்கள் இறந்து போகிறார்கள். எனவே உன்னைக் கொல்வதற்கு நீயே ஓர் உபாயத்தை சொல் " என்றான்.
" நான் கூறுவதுபோல் நீ செய்யாத வரையில் என்னை நீ கொல்ல முடியாது "

அரசன் , " என்ன செய்ய வேண்டும் ?"
" மனிதர்களை யாவரையும் ஒரு இடத்தில் ஒன்று கூட்ட வேண்டும் என்னைக் கழுவிலேற்றி , எனது அம்புக் கூட்டிலிருந்து ஒரு அம்பை எடுத்து, நாணிலேற்றி , " பிஸ்மில்லாஹி ரப்பில் குலாம் " அதாவது இந்தச் சிறுவனின் ரப்பாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் எய்கின்றேன்" என்று அவ்வம்பை எய்ய வேண்டும். என் மரணத்தை என் இறைவன் தர முடியுமே தவிர , உன்னால் முடியாது " _என்று கூறினான்.

சிறுவன் கூறிய வண்ணம் திறந்த வெளியில் அவ்வூரில் உள்ளவர்கள் யாவரையும் ஒன்று கூட்டி , அவனைக் கழுவிலேற்றி, அவனது அம்பை எடுத்து , அவன் கூறியவாறே கூறி எய்தப்பட்டது .
அவ்வம்பு சிறுவனின் கண்ணுக்கும் , செவிக்கும் இடையில் உள்ள பொட்டில் தைத்தது . அவன் அந்த இடத்தில் கையை வைத்த வண்ணம் இறந்தான் .
இதனைப் பார்த்த மக்கள் யாவரும்

" இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் . இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் " என்று கூறினார்கள்.
உடனே , அரசன் பெரிய பெரிய பள்ளங்களில் நெருப்புக் குண்டங்களை உண்டாக்கி , மனிதர்கள் மதம் மாறவில்லை என்றால் நெருப்புக் குண்டத்தில் வீசி எறியச் சொன்னான் .
அப்படி எறிக்கப்பட்டவர்கள் 20 ஆயிரம் என்றும் 70 ஆயிரம் என்றும் காணக் கிடைக்கிறது .

அதில் ஒரு பெண் தன் கைக்குழந்தையுடனும் மற்ற இரண்டு குழந்தைகளுடனும் நெருப்பில் குதிக்க தாமதித்த போது , கைக்குழந்தை " என் தாயே ! நீங்கள் சத்தியத்தில் இருக்கின்றீர்கள் "

என்றதும் , அவளது முதல் மகனை நெருப்பில் வீசப்பட்டது . அவள் ஈமானில் உறுதியாக இருந்தாள் அடுத்து இரண்டாவது மகனை நெருப்பில் வீசப்பட்டது .அப்போதும் ஈமானில் உறுதியுடன் , இறுதியாக தன் கைக் குழந்தையுடன் நெருப்பினுள் உறுதியான ஈமானுடன் வீழ்ந்தாள் .

இவ்வரலாற்றை மையப்படுத்தி திருக்குர்ஆனில் இறைவன் .....

قُتِلَ اَصْحٰبُ الْاُخْدُوْدِۙ
அகழுடையவர்கள் (பள்ளக் கிடங்குடையவர்கள் )அழிக்கப்பட்டார்கள்
(அல்குர்ஆன் : 85:4)

النَّارِ ذَاتِ الْوَقُوْدِۙ
அது, விறகுகள் போட்டெரித்த நெருப்பு (அகழ் நெருப்பு )
(அல்குர்ஆன் : 85:5)

اِذْ هُمْ عَلَيْهَا قُعُوْدٌ ۙ
அதன் முன் அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில்,
(அல்குர்ஆன் : 85:6)

وَّ هُمْ عَلٰى مَا يَفْعَلُوْنَ بِالْمُؤْمِنِيْنَ شُهُوْدٌ
நம்பிக்கையாளர்களை (நெருப்புக் கிடங்கில் போட்டு) நோவினை செய்வதை அவர்கள் (வேடிக்கையாகப்) பார்த்துக் கொண்டுமிருந்தார்கள்.
(அல்குர்ஆன் : 85:7)

وَمَا نَقَمُوْا مِنْهُمْ اِلَّاۤ اَنْ يُّؤْمِنُوْا بِاللّٰهِ الْعَزِيْزِ الْحَمِيْدِۙ
(நம்பிக்கை கொண்ட) அவர்களில் யாதொரு குற்றத்தையும் அவர்கள் காணவில்லை. எனினும், மிக்க புகழுடையவனும், (அனைவரையும்) மிகைத்தவனுமாகிய அல்லாஹ்வை அவர்கள் நம்பிக்கை கொண்டதையே அவர்கள் குற்றமாகக் கண்டனர்.
(அல்குர்ஆன் : 85:8)

الَّذِىْ لَهٗ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اللّٰهُ عَلٰى كُلِّ شَىْءٍ شَهِيْدٌ
வானங்கள், பூமியின் ஆட்சி அவனுக்குறியதே! (அவனை நம்பிக்கை கொண்டதற்காகவே அவர்களை நெருப்பில் எறிந்தனர்.) அல்லாஹ்வோ, (இவர்கள் செய்த) அனைத்தையும் அறிந்தவனாகவே இருந்தான்.
(அல்குர்ஆன் : 85:9)

இவ்வுண்மைச் சம்பவம் நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 90 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்தது .
உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் வேறு ஒரு காரியத்திற்காக பூமியைத் தோண்டிய போது , தனது பொட்டில் அம்புக் காயமுள்ள இடத்தில் தனது விரலை வைத்த வண்ணம் அடக்கப்பட்ட ஒரு சிறுவனின் பிரேதம் தோண்டி எடுக்கப்பட்டது. கையை அவ்விடத்தை விட்டு அகற்றிய போது . காயத்திலிருந்து இரத்தம் வெளிவருவதும் ,கையை விட்டால் அது அக்காயத்தை அடைத்துக் கொள்வதுமாக இருந்தது.

இதனைப் பார்த்த நபித்தோழர்கள் **கலீஃபா உமர் (ரலி)** அவர்களுக்கு விஷயத்தை தெரிவித்து , மறு உத்தரவுக்கு காத்திருந்தனர் .
கலீஃபா அவர்கள் " இந்தச் சிறுவன் நெருப்பு குண்டங்களில்
சம்பந்தப்பட்டவன் .அவனை அப்படியே வைத்திருங்கள் கியாமத்து நாள் வரை இறைவன் அவனை உயிர்ப்பிக்கும் வரை அப்படியே அடக்கம் செய்யுங்கள் .

ர.ரா

"கலங்காதிரு மனமே " என்னும் தொடர்
இன்ஷா அல்லாஹ்.
ர.ரா
Date: 22-5- 2019
எண்ணமே வாழ்வு
(கலங்காதிரு மனமே O1)




" மனித வாழ்வின் இன்ப, துன்பங்களுக்கு காரண கர்த்தா யார் ?"
அதே மனிதனே ஆவான் . அவன்தான் தன்னுடைய இன்ப துன்பங்களை உண்டு பண்ணவும், நிலை நிறுத்தவும் செய்கிறான் என்றால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா ?
இன்ப, துன்பங்கள் வெளியில் இருந்து அவன் மீது திணிக்கப்படுவதில்லை ! அவை அவனுடைய உள்ளிலிருந்தே அவனுக்காக உண்டாகின்றன ! அவற்றிற்கு காரணம் அவனுடைய எண்ணமே ஆகும். அவை செயல்களின் பலன்களாகும்.

அப்போ, செயல்கள் என்றால் என்ன ?
அது எண்ணங்களின் பிரதிபலிப்பே ஆகும் .
எண்ணங்களை நாம் நம்முடைய கட்புலனால் பார்க்க இயலாத பொழுது அவற்றின் பிரதிபலிப்பாகிய செயல்களை நாம் நம்முடைய
கட்புலனால் பார்க்க இயலுகிறது.
கண்ணுக்குத் தெரியாத மின்சாரமும் அதனைக் கொண்டு இயங்கும் இயந்திரமும் போல எண்ணங்களும் செயல்களும் .
" எண்ணம் எவ்வளவு வன்மையுடன் உடலை ஆட்சி செய்கின்றது என்பதை எண்ணிப் பார்க்கும் பொழுது எனக்குப் பெரும் வியப்பே ஏற்படுகிறது " _ என்று கூறினான் கவிஞன் கதே.
கதே கூறியது முற்றிலும் உண்மை .உடல் இதயத்தின் ஊழியன்தான் .இதயம் எதை எண்ணுகின்றதோ , இதயத்தில் எந்த எண்ணம் தானாகவே உதிக்கின்றதோ அதன் பிரதிபலிப்பை நீங்கள் அடுத்த கணமே உங்கள் உடலின் காணலாம் என்கிறார்கள் மனதத்துவ ஆய்வாளர்கள் .
அது தீயதாயின்" உங்களின் உடலினுள்ளே ஓர் இறைச்சித் துண்டு உள்ளது. அது நல்லதாயின் நீங்களும் நல்லவர்களே ,

நீங்களும் தீயவர்களே " என்பதாக 1400 வருடத்திற்கு முன்பே பெருமானார் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் .
இவ்வுலகில் பிறக்கும் ஒவ்வொருவருக்கும் இறைவன் "வாழ்க்கை " என்னும் ஒரு கல்லை கொடுக்கிறான் .
கொலைஞனாக வாழ்வை தொடங்க எண்ணுகிறவன் , அதனை தன்னுடைய கொலைத் தொழிலுக்கு ஏற்ற கன்னம் வைப்பதற்குரிய கருவியாக உருவாக்கி கொள்கிறான் .
ஒரு சிற்பி தன் முன் வைக்கப்பட்டிருக்கும் சலவைக் கல் மீது தன்னுடைய குறிக்கோளை மனத்திற்கு கொண்டு முன்யோசனையுடனும், எச்சரிக்கையுடனும் , நிதானத்துடனும்

தன்னுடைய சிற்றுளியைக் கொண்டு மெது மெதுவாக அடித்துச் செதுக்கி எழில் மிகும் சிற்பத்தை உருவாக்கி விடுகிறான் .
வாழ்க்கை என்னும் கல் உங்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது அந்த கல்லை நீங்கள் எப்படி உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள் ?
ர.ரா
**Rahmath Rajakumaran**
وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهٖ نَفْسُهٗ وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ
நிச்சயமாக நாம்தான் மனிதனை (முதன் முதலாகவும்) படைத்தோம். அவன் மனதில் உதிக்கும் எண்ணத்தையும் நாம் அறிவோம். பிடரியிலுள்ள இரத்த நரம்பைவிட நாம் அவனுக்கு மிக சமீபமாகவே இருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 50:16)

நோய் எங்கே போச்சு ?
(கலங்காதிரு மனமே 02 )




உடலிலுள்ள கோடிக்கணக்கான அணுக்களும் ஒன்றோடொன்று இணைத்துப் பிணைக்கப் பட்டிருக்கின்றன .உடலின் ஓர் அணுவுக்குத் துன்பம் நிகழின் உடல் முழுவதும் தான் துன்புறுகிறது.

வயிற்று வலியோ , பல் வலியோ ஏற்படின் வயிறோ பல்லோ மட்டுமா துன்புறுகிறது ? உடல் முழுவதும் தான் துன்புறுகிறது. காரணம் உடல் எண்ணத்தைச் சார்ந்திருக்கிறது .
எண்ணம் எவ்வளவு தூரம் உடல் நிலையைப் பாதிக்கின்றது என்பதற்கு ...
பாதிரியார் ஒருவர் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டார் .

" என்ன செய்கிறது ?"
" நான் மூன்று பொய்ப் பற்களை சேர்த்துக் கட்டியிருந்தேன் அவற்றை கழற்றி வைக்க மறந்து விட்டு ஓரிரவு உறங்கி விட்டேன்.விடியற் காலை
எழுந்து பார்க்கும்போதுதான் தெரிந்தது , தூக்கத்தில் பல் செட்டை விழுங்கி விட்டேன் .
"மூன்று பற்கள் சேர்ந்த பல் செட் தானே அது ஒன்றும் செய்யாது

"இல்லை டாக்டர் அந்த பல் செட் என் குடலில் சிக்கி அறுத்துக் கொண்டிருக்கிறது. இதனால் எனக்கு கடுமையான வயிற்று வலி
டாக்டர் அவருடன் வெகு நேரம் பேசிக் கொண்டே பொய்ப் பற்கள் வயிற்றை ஒன்றும் செய்யாது என்கிற எண்ணத்தை அவருக்கு ஊட்டினார் .

அவர் கேட்பதாக இல்லை. வயிற்றை அறுத்து அதனால் பயங்கரமான வயிற்று வலி என்பதை திரும்ப திரும்ப சொல்லிக் கொண்டே இருந்தார் .
சற்று நேரம் கழித்து அவருக்கு ஒரு போன் அவர் மனைவியிடமிருந்து வந்தது.
" உங்களுடைய பல் செட் கிடைத்துவிட்டது. அது படுக்கையின் கீழே அவை மறைந்து கிடந்தன
"அவ்வளவுதான் பாதிரியாரின் உடலிலே ஒரு மின் ஆற்றல் ஊடுருவிப் பாய்ந்தது .
மருத்துவமனை படுக்கையில் இருந்து குதித்தெழுந்தார் .உடைகளை அணிந்து கொண்டு மருத்துவமனை கட்டணத்தை செலுத்தி வேகமாக வெளியேறினார் .

" பாதர் ... உங்க வயிற்று வலி என்னாச்சி ? "
" வயிற்று வலியா ? ...எனக்கா ? போயே போச்சு .

ர.ரா
எண்ணத்தின் வலிமை
(கலங்காதிரு மனமே 03)




உடற்பயிற்சி செய்யும் பொழுது கூட எதையாவது மனதில் எண்ணிக் கொண்டு உடற்பயிற்சி செய்வதை விட உடல் வலுவுற வேண்டும் , தசைக் கட்டிகள் இறுகி அழகுற வேண்டும் என்ற எண்ணத்தை உடற்பயிற்சியின்போது கண்ணாடியைப் பார்த்து உடலில் எண்ணத்தைக் குவித்தால், நிச்சயம் உடல் வலிவுடனும் ,அழகாகவும் இருக்கும்.

கொல்லனின் புஜங்களை விட உடற்பயிற்சி செய்வோரின் புஜங்கள் உருண்டு திரண்டு வலுடன் இருக்கும்.
காரணம் கொல்லன் இரும்பின் மீது சம்மட்டியை அடிக்கும் போது இரும்பு தான் விரும்பிய வண்ணம் நெட்டையாகவோ , தட்டையாகவோ ஆகவேண்டும் என்ற எண்ணத்தை சம்மட்டி அடியிலும் அந்த இரும்பிலுமே இருக்குமே யொழிய சம்மட்டி அடிப்பதால் தன் புஜங் உருண்டு திரண்டு அழகாக வலுவுற வேண்டும் என்று அவன் அணுவேனும் எண்ணுவதில்லை.
இதே விஷயத்தை காலையிலும் மாலையிலும் நடை பயிற்சி செய்யும் நண்பர்கள் கூட வருகிற நண்பனிடம் அரட்டை அடித்து எண்ணத்தை நடைப் பயிற்சியில் வைக்காமல் பேச்சில் வைத்தால் நடை பயிற்சி வீணே .

இதே விஷயத்தை இறைவனை தொழுவும் போது , இறைவன் நம்மைப் பார்ப்பதாக மனதில் எண்ணிக் கொண்டால் , தொழுகையின் முழுப் பயனை அடைந்த திருப்தி மனதிற்கு கிடைக்கும் .

தொழுகையில் இரண்டாவது ரக்க ஆத்தில் மொட்டை மாடியில் காயப்போட்ட உப்புக் கண்டத்தைப் பற்றி இடி இடித்ததும் மழை ஞாபகத்திற்கு வந்தால்,அந்த தொழுகையின் நிலை என்னவாகும் ?

பள்ளிவாசலில் இமாம் ஜமாத்தோடு தொழுகை நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது பக்கவாத்தியத்தோடு செல்போன் ரிங்டோன் அடித்தால் மொத்த ஜமாத்தின் தொழுகை என்னவாகும் ?

எண்ணத்தை ஒருமுகப்படுத்தி செய்யும் செயலில் கவனத்தை குவித்தால் நிச்சயம் பலன் கிடைக்கும் . அது உடற்பயிற்சியானாலும் சரி , ஆத்ம பயிற்சியானாலும் சரி ....இது எண்ணத்தின் வலிமை

இதை சூஃபிகளும் , ஞானிகளும் மிகச் சுலபமாக கைக் கொண்டு ஏழாவது வானத்திற்கு மேலே சிறகடிக்கிறார்கள்
நாம் நமது எண்ணத்தை சிதறியடித்து அதன் வலிமையை தெரியாமல், இலட்சியத்தை அடைய முடியாமல் தவிக்கிறோம் .

அகத்தின் அழகு
( கலங்காதிரு மனமே 04 )



நீங்கள் உங்கள் மனதில் எதை எண்ணுகின்றீர்களோ அது உங்களுடைய உடலில் அதன் சாயலைப் பதித்து விடுகிறது .

உங்களுடைய முகமும், உடலும் உங்களுடைய உள்ளத்தில் மறைந்து கிடக்கும் எண்ணங்களின் விளம்பரப் பலகைகள் என்பதை நீங்கள் அறிவில்லை. இதனைத்தான் அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்கள் .

ஒரு ஊரில் மீன் பிடிப்பவன் ஒருவன் இருந்தான். தினம் இவன் மீன் பிடிக்கும்போது ஏராளமான மீன்கள் அவனுக்கு அகப்படுவது உண்டு.

இதைப் பார்த்த மற்றொருவன் தானும் மீன் பிடிக்கக் கிளம்பினான்.

அவன் வைத்திருப்பது போன்று தூண்டில் அதே மாதிரி முள் அதே மாதிரி மீன் இரை அவனே மாதிரி உடுப்புகள் கூட வாங்கிக்கொண்டான் .

அவன் உட்காரும் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டான் அவன் ஒரு பாட்டை மீன் பிடிக்கும் போது முணுமுணுப்பான் அதேயும் அப்படியே முணுமுணுத்தான் .

ஆனால் பாவம் ஒரு மீன்கூட அவனுடைய தூண்டிலில் விழவில்லை !
பல நாள் முயன்று பார்த்தும் ஒரு மீன் கூட கிடைக்கவில்லை . ஒரு நாள் அவ்வழியே போன ஒரு **வழிப்போக்கனிடம்** இதுபற்றி சொன்னான் .

அதற்கு **வழிப்போக்கன்** புன்னகை பூத்தவாறு "அவன் வைத்திருப்பதைப் போன்று எல்லாப் பொருட்களையும் வாங்கினாய் ஆனால் ஒன்று மட்டும் இல்லை . நீ அவனல்ல ! அவன் மனம் உன்னிடம் இல்லை எண்ணத்தைக் கொண்டுதான் அவனவன் வாழ்க்கை அமைகிறதே தவிர பொருட்களைக் கொண்டல்ல ! என்று கூறிவிட்டு வழிப்போக்கன் இப்போது சத்தமாகவே சிரித்தான்
ர.ரா

அதுவாக மாறி விடு
(கலங்காதிரு மனமே 5)




நபிஸல் அவர்கள் தம் தோழர்களோடு இருக்கும் போது . .
"உங்களில் எவராவது சொர்க்கத்திற்கு சென்று வந்தது உண்டா ?"
அனைவரும் திகைத்தனர் .
அங்கிருந்த அப்துல்லாஹ் இப்னு உமர் ரலி உடனே கையை உயர்த்தியவராக
"யா ரசூல்லாஹ் ! நான் சென்றுள்ளேன்" என்றார் .

அருகில் இருந்து இதனைக்
கவனித்துக் கொண்டு இருந்த அவரது தந்தை உமர் (ரலி ) தமது தலையில் கை வைத்தவராக திடுக்கிட்டு மகனைப் பார்க்கிறார்கள்.
நபி (ஸல் ) அவர்கள் "உங்களில் சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியது உண்டா ?"
அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி ) அவர்கள் "யா ரசூல்லாஹ் ! நான் அருந்தியிருக்கிறேன் "
உமர் (ரலி )அவர்கள் 'எனது மகன் எழுந்து செல்லாமல் மானத்தை வாங்கப் போகிறானே என்று எண்ணினார்கள்

நபி (ஸல் )அவர்கள் மீண்டும் "உங்களில் எவராவது சொர்க்கத்தின் உணவை சுவைத்தது உண்டா ? "
அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி )அவர்கள் "நான் சுவைத்திருக்கிறேன்" என்றார்கள்
'நம்முடன் உலகில் உயிருடன் இருக்கிறார் இவர் மட்டும் எப்படி சொர்க்கம் சென்றிருக்க முடியும் ? ' என்று அனைவரும் திகைத்தனர்

நபி (ஸல் ) அவர்கள் "அப்துல்லாஹ்வே ! உங்கள் விளக்கத்தை மக்களிடம் கூறுங்கள் "
அப்துல்லாஹ் இப்னு உமர் கூறினார்கள் : " யா ரசூல்லாஹ் ! சொர்க்கத்தை நேரில் கண்ட செய்தியை தாங்கள் எங்களிடம் கூறினீர்கள்.

அப்போது நானும் உங்களுடன் நுழைந்ததாகவே உணர்ந்தேன்.
சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியதைத் தாங்கள் குறிப்பிட்ட போது நானும் அதிலிருந்து நீர் அருந்தியதாகவே உணர்ந்தேன் .

சொர்க்கத்துப் பழங்களை உண்டதைக் குறித்து தாங்கள் கூறிய போது நானும் உங்களுடன் உண்டதாகவே உணர்ந்தேன்" என்றார்கள்.

மனதின் இரட்டை நிலை
(கலங்காதிரு மனமே 06 )



மனித மனத்தின் முக்கியமான இயல்பு அது எப்போதுமே பிரிந்து பிரிந்துதான் இயங்குகிறது .

'மரத்தைத் தறிக்க வேண்டுமென்றால் மனம் உளியாகவும் , சுத்தியலாகவும் ஒரே சமயம் மாறும் '
'தன் மனம் ஒரு செயலை செய்யும்போது அச்செயலை வேறு ஒரு மனம் அதை வேடிக்கைப் பார்க்கிறது '

" ஒரு கிளி பழம் தின்கிறது.பிறிதொன்று
அதைப் பார்க்கிறது " எத்தகைய கொடூரத்தை தான் செய்யும் போதும் தன்னில் ஒரு பகுதி அதில் ஈடுபடுவதில்லை என்பதை மனவியல் ஆய்வாளர்கள் நிரூபித்திக்கிறார்கள் .
தியானத்தில் கூட மனம் இரட்டை நிலை கொள்கிறது . ஒரு மனம் முனைகொண்டு ஆழம் நோக்கிச் செல்லும்போது , அதிலிருந்து பிரிந்தது போல இன்னொரு மனம் பரவி விரிந்து செல்கிறது .
மனதின் ஒவ்வொரு செயல்பாடும் அதற்கு நேர் எதிரான இன்னொரு செயல்பாட்டால் தடுக்கப்பட்டுகிறது .

மனதின் விசையின் பெரும் பகுதியை மனமே உண்டு விடுகிறது. மனம் ஓயாது மனதுடன் போராடுகிறது . மனம் மனதை முடிவின்றி உண்டுகொண்டிருக்கிறது யோக மரபில் , தன் வாலைத் தான் விழுங்கும் பாம்பு உருவமாக அதை அமைத்திருக்கிறார்கள்.
நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா ? பெரும்பாலான சமயங்களில் நீங்கள் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள் . நீங்கள் யாருடனாவது பேசிக் கொண்டோ அல்லது அவர்கள் பேசுவதைக் கவனித்துக் கொண்டோ இருக்கும் போதும் , நீங்கள் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள் .

பத்திரிக்கைகளைப் படித்துக் கொண்டிருக்கும் போதும் , TV பார்த்துக் கொண்டிருக்கும் போதும் நீங்கள் சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள் .
பழைய நினைவுகளை அசை போடும் போதும் நீங்கள் சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள். வருங்காலத்தில் என்ன செய்யலாம் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கும் போதும் நீங்கள் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள்.

வகுப்பறையில் ஆசிரியர் பாடம் எடுத்துக் கொண்டிருக்கும் போதும் நீங்கள் வேறு ஒரு தளத்தில் சிந்தித்திக் கொண்டிருக்கிறீர்கள் .
இறைவனை முன் நோக்கி தொழும் போது கூட, நீங்கள் இன்னொரு மனதால் சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள்.
குர்ஆனில் ஒரு வசனத்தை படித்துக் கொண்டிருக்கும் போது நீங்கள் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள்.
وَمَا تَكُوْنُ فِىْ شَاْنٍ وَّمَا تَتْلُوْا مِنْهُ مِنْ قُرْاٰنٍ وَّلَا تَعْمَلُوْنَ مِنْ عَمَلٍ اِلَّا كُنَّا عَلَيْكُمْ شُهُوْدًا اِذْ تُفِيْضُوْنَ فِيْهِ وَمَا يَعْزُبُ
"நீங்கள் என்ன நிலைமையில் இருந்தபோதிலும், குர்ஆனிலிருந்து நீங்கள் எ(ந்த வசனத்)தை ஓதியபோதிலும், (உங்களுடைய காரியங்களில்) நீங்கள் எதைச் செய்தபோதிலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போதே உங்களை நாம் கவனிக்காமல் இருப்பதில்லை"
(அல்குர்ஆன் : 10:61)

எண்ணங்களின் அலைவரிசை

(கலங்காதிரு மனமே 07 )



செடியானது வித்திலிருந்து முளைப்பது போன்று மனிதனுடைய செயலும் அவனுடைய எண்ணத்திலிருந்து தான் உண்டாகின்றது . வித்தில்லாது எவ்வாறு செடி இல்லையோ , அதுபோன்றுதான் எண்ணமில்லாது செயலுமில்லை .

எண்ணங்களுக்கு காந்த சக்தி இருக்கிறது என்றால் நீங்கள் நம்புவீர்களா ? நம்பித்தான் ஆக வேண்டும் .

நீங்கள் சிந்திக்கும் போது உங்கள் எண்ணங்கள் குறிப்பிட்ட அலை வரிசையில் பிரபஞ்சத்தினுள் அனுப்பப்படுகின்றன . அவை அதே அலைவரிசையிலுள்ள அனைத்து விஷயங்களையும் காந்தமெனக் கவர்ந்திழுக்கின்றன.

பிரபஞ்சத்திற்கு அனுப்பப்படும் ஒவ்வொன்றும் அதன் மூலத்திற்கு திரும்பும் என்பது நியதி. அந்த மூலம் #நீங்கள்தான் .

அதை இப்படிப் பார்க்கலாம். தொலைக்காட்சி நிலையத்தின் ஒளிபரப்புக் கோபுரம் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்ட அலைவரிசைகளில் ஒளிப்பரப்புகிறது.

அந்த அலைவரிசை உங்களுடைய தொலைக்காட்சிப் பெட்டியில் குறிப்பிட்ட படங்களாக தெரிகின்றன.

குறிப்பிட்டப் படக்காட்சியைப் பார்க்க, குறிப்பிட்ட அலைவரிசையைத் நீங்கள்தான் தேர்ந்தெடுக்க வேண்டும்.

அதேபோல நீங்களும் ஒரு மனித ஒளிபரப்புக் கோபுரம்தான் .இன்று உலகில் இருக்கும் எந்தவொரு தொலைக்காட்சி ஒளிபரப்புக் கோபுரத்தையும் விடவும் உங்களுடையது மஹா சக்தி வாய்ந்தது.

உங்களுடைய ஒளிபரப்பு உங்களது வாழ்வைப் படைக்கிறது. இந்த உலகைப் படைக்கிறது .

நீங்கள் ஒளிபரப்பும் உங்களது எண்ணத்தின் அலைவரிசை நகரங்களுக்கு அப்பால், நாடுகளுக்கும் அப்பால் , ஏன் இவ்வுலகிற்கும் அப்பால் சென்றடைகிறது . அது பிரபஞ்சமெங்கும் எதிரொலிக்கிறது.

ர.ரா

உங்கள் மனம் எப்படி இயங்குகிறது ?
(கலங்காதிரு மனமே 08 )



உங்கள் மனம் வெளிமனம் , ஆழ்மனம் என்று பிரிந்து செயல்படுகிறது . வெளிமனம் கொண்டுள்ள உங்கள் சிந்தனைக்கு ஏற்ப ஆழ்மனம் செயல்படுகிறது.
ஆழ்மனத்திற்கு சட்ட திட்டங்கள், கோட்பாடுகள் இவை பதியும்படி செய்து விட்டால் பின்னே அதை பயன்படுத்தும் போது ஆழ்மனம் செயல்படுத்தும்.

உதாரணமாக , சின்ன வயதில் வாய்ப்பாடு என்று இரண்டாம் வாய்ப்பாடில் இருந்து 16 ஆம் வாய்ப்பாடு வரை மனப்பாடமாக்கி விட்டால் , பின்னால் கணிதம் போடும் போது 800 ரூபாய் சம்பளம் 9 நாளைக்கு என்று கணக்குப் போடும்போது ரூ 7200 என்று மிக எளிதாக ஆழ்மனம் எடுத்துக் கொடுக்கும் . இது வெளி மனத்தால் சிந்தித்து செயல்படுத்தியது இல்லை .இது ஆழ்மனத்தின் பதிவால் நடைமுறைப்படுத்தியது .

எண்ணங்கள் ஆழ்மனத்திற்கு அனுப்பப்படும் போது மூளையினுள்ள உயிரணுக்களில் பதிவுகள் நிகழ்கின்றன என்று உளவியலாளரும் மனநல மருத்துவரும் குறிப்பிடுகின்றனர்.
ஒரு கருத்தை உங்கள் ஆழ்மனம் ஏற்றுக் கொண்டுவிட்டால் , அதை நடைமுறைப்படுத்த உடனே அது செயலில் இறங்கிவிடும் . நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுவதும் சேகரித்து வைத்திருக்கும் ஒரு துளி அறிவையும் உங்கள் நோக்கத்தை நிறைவேற்ற ஆழ்மனம் செயல்படும் .

உதாரணத்திற்கு கோல்டன் கேட் பாலம்
**(Golden Gate Bridge)**
பசிபிக் பெருங்கடலில் உள்ள சான் பிரான்சிஸ்கோ விரிகுடாவிற்கும் இடையில் இடத்தில் உள்ள கோல்டன் கேட் சந்தியின் மீது கட்டப்பட்டுள்ள ஒரு தொங்குபாலம் ஆகும்.

இப்பாலத்தின் மொத்த நீளம் 1.7 மைல்கள் ஆகும். 1937-ல் கட்டிமுடிக்கப்பட்ட போது இதுவே உலகின் மிகப்பெரிய தொங்குபாலமாக இருந்தது. இதற்கு முன்மாதிரியான தொங்கு பாலம் அப்போது இல்லை. மேலும் இப்பாலமே சான் பிரான்சிஸ்கோவின் சின்னமாக விளங்கியது.
கோல்டன் கேட் பாலம் போக்குவரத்து
6 வழிப்பாதை, நடப்போர், மிதிவண்டிகள் தாண்டுவது என பிரிக்கப்பட்டுள்ளது

கோல்டன் கேட் பாலம் கட்டப்படுவதற்கு முன்னால் சான் பிரான்சிஸ்கோ மற்றும் மாரின் மாகாணத்தை இணைக்கும் ஒரே வழி பசிபிக் பெருங்கடலில் படகு சவாரி செய்வதுதான்.
ஸ்ட்ராஸ் என்னும் பொறியாளர் கோல்டன் கேட் பாலத்தின் வடிவம் மற்றும் கட்டுமானப்பணியின் தலைமை பொறுப்பு வகித்தார்.
உலகின் மிகப் பெரிய முதல் தொங்கு பாலம் அதுவும் கடலின் மேல்புறத்தில் தொங்க வேண்டும் . வானகங்கள் தொங்கும் பாலத்தில் செல்ல வேண்டும் .

இதற்காக ஸ்ட்ராஸ் முதற்படியாக கணிதக் கோட்பாடுகளையும் , பாரம் தூக்குத் திறனையும் , அழுத்தப் பிரயோகங்களையும் பற்றி புரிந்து கொள்ள வேண்டியிருந்தது .

இரண்டாவதாக , விரிகுடாவிற்குக் குறுக்காக அமையவிருந்த அந்த உயரிய பாலத்தைக் குறித்து தன் ஆழ்மனதில் அதற்கான காட்சியை உருவாக்கிக் கொண்டார்.

மூன்றாவதாக கோட்பாடுகளைச் செயல்படுத்தி ஏற்கனவே நிரூபிக்கப்பட்டிருந்த மற்ற வழிமுறைகளை இப்பாலத்திற்கு ஏற்றவாறு நடைமுறைப்படுத்தினார் .
இம் மூன்று விஷயங்களும் பூர்த்தி செய்யப்பட்டப் பிறகு , அப்பாலம் உருப்பெற்றது. தலைமுறை தலைமுறையாக வாகனங்கள் அப்பாலத்தில் கடந்து சென்று வருகின்றன.
உங்களுடைய எல்லா அனுபவங்களும் , நிகழ்வுகளும் , சூழ்நிலைகளும், செயல்களும் உங்கள் எண்ணங்களைச் செயல் வடிவமாக்கும் உங்கள் ஆழ்மனத்தால் உருவாக்கப்படுகின்றன .

ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : நீங்கள் சந்திக்கும் விளைவுகள் , நீங்கள் நம்பிக் கொண்டிருக்கும் விஷயங்களால் ஏற்படுவதில்லை ; மாறாக, உங்கள் ஆழ்மனத்தில் பதித்திருக்கும் நம்பிக்கையினால்தான் ஏற்படுகின்றன.

காலம் என்பது மாயை
(கலங்காதிரு மனமே 09 )



"காலம் என்பது மாயை " என்று விஞ்ஞான ரீதியாக சொன்னவர் ஐன்ஸ்டீன் . இதை முதல் முறையாக நீங்கள் கேள்விப்பட்டீர்கள் என்றால், அதை உள்வாங்கிக் கொள்வதில் சிரமம் இருக்கலாம் .
இருந்தாலும் ஒன்று சொல்றேன் . கவனமாக கேளுங்கள் .
" எல்லாமே ஒரே சமயத்தில் நிகழ்கின்றன " _ என்பதாக குவாண்டம் இயல்பியலாளர்களோடு ஐன்ஸ்டீனும் சேர்ந்து சொல்றாங்க .
ஆதி முதல் அந்தம் வரை ......

وَمَا مِنْ غَآئِبَةٍ فِى السَّمَآءِ وَالْاَرْضِ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
வானத்திலோ பூமியிலோ மறைவாக இருக்கும் எதுவுமே "லவ்ஹுல் மஹ்ஃபூள்" என்னும் அவனுடைய தெளிவான குறிப்புப் புத்தகத்தில் பதியப்படாமலில்லை.
(அல்குர்ஆன் : 27:75)

ஒரு பேச்சுக்கு ' காலம் என்று ஒன்று இல்லையென்று வைத்துக் கொண்டால் , வருங்காலத்தில் வேண்டும் என்று நீங்கள் விரும்பும் அனைத்தும் ஏற்கனவே இருக்கிறது ' என்று உங்களால் உணர முடியும் . அனைத்தும் ஒரே சமயத்தில் நிகழ்கிறது என்றால் நீங்கள் விரும்பும் விஷயங்களோடு உங்களின் ' பிரதி ' ஏற்கனவே இருக்கிறது என்று அர்த்தப்படும் .
இன்னும் எளிமையாக சொல்றேன் .
கஃபாவை கட்டி முடித்ததும் , " இறைவா ! ஜனங்கள் யாருமே இல்லாத இந்த பாலைவனத்தில் உலக மக்களான உன் அடியார்கள் எப்படி இந்த கஃபாவிற்கு வருவார்கள் ? " என்று நபி இப்ராஹீம் (அலை ) கேட்க ,

" நீங்கள் கூப்பிடுங்கள். அவர்களை கொண்டு வந்து சேர்ப்பது என் பொறுப்பு
என்று இறைவன் கூறினான் .

நபியவர்களும் , கஃபா மீதேறி அழைத்தார்கள் . நபியவர்களின் துஆ நிறைவேற 5000 வருஷங்கள் ஆயிற்று .
' ரோம் வெற்றி பெறும் ' என்று குர்ஆனில் இறைவன் சொன்ன போது,
'பிள்வுன்' என்ற வார்த்தை பிரயோகப்படுத்தப்பட்டிருக்கிறது.
'பிள்வுன்' என்றால் 3 முதல் 9 வருடம் என்று அர்த்தம் . ஏழாம் வருடத்தில் ரோம் வெற்றி பெற்றது .
நீங்கள் விரும்புவதை உங்களிடம் கொண்டுவந்து சேர்க்கப் பிரபஞ்சத்திற்கு ஒரு சொடுக்குப் போடும் நேரம் மட்டுமே போதும். உங்களுக்கு இந்த அனுபவம் தாமதமாகிறது என்றால், அது ஏற்கனவே கிடைத்து விட்டது என்று நீங்கள் நம்புகிற மனத்தில் அறிந்துள்ள , உணர்ந்துள்ள இடத்தை அடைவதில் உள்ள தாமதம்தான் அதற்குக் காரணமாக இருக்க முடியும்.

وَمَاۤ اَمْرُنَاۤ اِلَّا وَاحِدَةٌ كَلَمْحٍ بِالْبَصَرِ
மேலும், நமது கட்டளை ஒரே ஒரு கட்டளையாகவே இருக்கின்றது. கண் இமைக்கும் நேரத்திற்குள் அது அமலுக்கு வந்துவிடுகின்றது.
(அல்குர்ஆன் : 54:50)

உங்களுக்கு என்ன வேண்டுமோ அந்த அலைவரிசைக்குச் செல்ல வேண்டியது நீங்கள்தான் பின் அது கண்டிப்பாக தோன்றும்.
பிரபஞ்சம் , அனைத்தையும் முயற்சி ஏதுமின்றித்தான் செய்கிறது . ஒரு புல் வளர்வதற்குச் சிரமப்படுவதில்லை முயற்சி ஏதும் அதற்குத் தேவைப்படுவதில்லை. அப்படியொரு மாபெரும் வடிவமைப்பு அது.

ءَاَنْتُمْ اَشَدُّ خَلْقًا اَمِ السَّمَآءُ ‌ؕ بَنٰٮهَا
(மனிதர்களே!) நீங்கள் பலமான படைப்பா? அல்லது வானமா? அவன்தான் அவ்வானத்தைப் படைத்தான்.
(அல்குர்ஆன் : 79:27)

எல்லாமே உங்கள் மனதில் என்ன ஓடிக் கொண்டிக்கிறது என்பதைப் பொறுத்தது. நாம் அதற்கு எந்த இடத்தை அளிக்கிறோம் என்பதில் இருக்கிறது .

' இது பெரியது , இதற்குக் காலம் பிடிக்கும் .இது மிகச் சிறியது. இதற்கு ஒரு மணி நேரம் போதும் " இவையெல்லாம் நாம் வரையறுத்திருக்கும் விதிகள். பிரபஞ்சத்தைப் பொருத்தவரை விதிகள் எதுவும் அதற்குக் கிடையாது .

இப்போது அது உங்களிடம் இருப்பதாக உணரும் உணர்வுகளை அளியுங்கள் : .
அது எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும் ; பிரபஞ்சம் அதை உங்களிடம் கொண்டுவந்து சேர்க்கும் .

புரியுதா ? நீங்கள் கேட்ட துஆ உங்களுக்கு எப்படி நிறைவேறியது என்பதை யோசித்துப் பாருங்கள். புரியும் .

இதுதான் விஞ்ஞானம் சொல்லும் 'காலம் என்பது மாயை '
ர.ரா

ஒரே ஒரு பிரபஞ்ச மனம் .
( கலங்காதிரு மனமே 10 )



இன்றைய தினத்தில் இருந்து 15 மில்லியன் வருஷம் அதாவது 1500 கோடி வருஷங்களுக்கு முன் ஓர் அதிரடி , மஹா வெடிப்பு **( Big Bang)** ஏற்பட்டது. அதற்கான தடயங்கள் இன்னும் காணக் கிடக்கின்றன .

ஒன்றுமே இல்லாத சூன்யத்தில் இருந்து எல்லாமே வந்து , ஒன்றாகி ஒருமித்த புள்ளி ( Singularity ) யாகி அதன் பின்
வெடித்திருக்கிறது . நம்ப முடிகிறதா ?

اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَـتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ اَفَلَا يُؤْمِنُوْنَ
(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் ஒன்றாக இருந்ததை நாமே பிரித்தமைத்தமைத்தோம் .
(அல்குர்ஆன் : 21:30)

வெடித்து சிதறிய பிரபஞ்சம் அன்றிலிருந்து விரிவடைந்து விரிவடைந்து பெரியதாகிக்கொண்டே வந்திருக்கிறது . இதற்கும் Red Shift போன்ற பௌதீக ஆதாரங்கள் உள்ளன .

وَ السَّمَآءَ بَنَيْنٰهَا بِاَيْىدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ
(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 51:47)

வெடிப்பதற்கு முன் வானமும் பூமியும் எங்கே இருந்தது ? அதாவது வானமும் பூமியும் படைப்பதற்கு முன் எங்கே இருந்தது ? இதற்கு விஞ்ஞானத்தில் பதில் இல்லை . ஆனால் ஆன்மீகத்தில் பதில் இருக்கிறது . அவைகள் அல்லாஹ்வின் எண்ணத்தில் இருந்தது.
இப்போது விஞ்ஞானம் கூறுவதைப் பாருங்கள் . " பிரபஞ்சம், எண்ணத்திலிருந்துதான் வெளிப்படுகிறது என்பதையும் , நம்மைச் சுற்றி இருக்கும் பருப்பொருட்கள் அனைத்தும் உருமாற்றமடைந்த எண்ணங்களால்தான் உருவானவை என்பதையும் குவாண்டம் இயக்கவியல் உறுதி செய்துள்ளது அதை அண்டவியலும் இதை நிரூபித்துள்ளது.
ஒரே ஒரு பிரபஞ்ச மனம் மட்டும்தான் உண்டு. அது இல்லாத இடம் என்று எதுவும் கிடையாது.அது எல்லாவற்றிலும் நிறைந்துள்ளது .

அந்த மனம் அனைத்தும் அறியும் . அனைத்து ஞானமாய், அனைத்து முழுமையாய், எல்லாவற்றிலும் , எல்லா இடத்திலும் ஒரே நேரத்தில் நிலைகொண்டுள்ளது. அனைத்தும் அந்த ஒரே ஒரு பிரபஞ்ச மனம்தான் என்றால், அது எல்லா இடத்திலும் வியாபித்துள்ளது என்றால் , அது உங்களுக்குள்ளும் இருக்கிறது என்றுதானே பொருள் ?

قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ ثُمَّ سَوّٰىهُ وَنَفَخَ فِيْهِ مِنْ رُّوْحِهٖ وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَالْاَفْــِٕدَةَ
பின்னர், (படைப்பாகிய) அதனைச் செப்பனிட்டுத் தன்னுடைய "ரூஹை" அதில் புகுத்தி (உங்களை உற்பத்தி செய்கிறான்.) உங்களுக்குக் காதுகள், கண்கள், உள்ளங்கள் ஆகியவற்றையும் அவனே அமைக்கிறான். இவ்வாறு இருந்தும் உங்களில் நன்றி செலுத்துபவர்கள் வெகு சிலரே!
(அல்குர்ஆன் : 32:9)

உங்களைப் பொறுத்தவரை இந்தப் புரிதலால் என்ன பயன் ?
சொல்றேன், வருங்காலத்தில் நிகழ இருக்கும் அனைத்து அறிவும், அனைத்துப் புதிய கண்டுபிடிப்புகளும், அனைத்துக் கண்டறிதல்களும் , சாத்தியக் கூறுகளாகப் பிரபஞ்ச மனத்தில் ,மனிதமனம் தன்னை நோக்கி அதை இழுத்துக் கொள்வதற்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன .
வரலாற்றில் நிகழ்ந்துள்ள அனைத்துக் கண்டுபிடிப்புகளும் , படைப்புகளும் , அந்தந்த நபர்கள் அறிந்திருந்தார்களோ இல்லையோ அப்பிரபஞ்ச மனத்திலிருந்துதான் அவர்களை நோக்கிக் கவர்ந்திழுக்கப் பட்டுள்ளன .

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اِذَا قَضٰٓى اَمْرًا فَاِنَّمَا يَقُوْلُ لَهٗ كُنْ فَيَكُوْنُ
(அல்லாஹ்) வானங்களையும், பூமியையும் முன் மாதிரியின்றி (இல்லாமையிலிருந்து), தானே உண்டாக்கினான்; அதனிடம் “குன்” - ஆகுக- என்று கூறினால், உடனே அது ஆகிவிடுகிறது.
(அல்குர்ஆன் : 2:117)

முதலில் உங்கள் தேவைகளை கண்டுபிடியுங்கள் .பின் அக்கண்டுபிடிப்பை எப்படி நிகழ்த்துவது என்று யோசியுங்கள் .உங்களை அந்த பிரபஞ்ச மனம் தேர்ந்தெடுத்ததால்தான் உங்களுக்கு அந்த தேவை உங்களுக்கு வேண்டும் என்று உங்கள் எண்ணத்தில் உதயமானது. உங்கள் தேவைக்குரிய அத்தனை சாத்தியக்கூற்றையும் பிரபஞ்ச மனம் தன்னகத்தே கொண்டுள்ளது. பிறகு என்ன ? உங்கள் தேவை வடிவமைக்கப்பட்டு உங்கள் முன் உருப்பெற்று இருக்கிறது.

وَمَا تَشَآءُوْنَ اِلَّاۤ اَنْ يَّشَآءَ اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ
எனினும், அகிலத்தாரின் இறைவனாகிய அல்லாஹ் நாடினாலன்றி, நீங்கள் விரும்பமாட்டீர்கள் . (அல்குர்ஆன் : 81:29)
கணக்கிலடங்காத கருத்தாக்கங்கள், நீங்கள் கண்டுபிடித்து நிஜமாக்கப்படுவதற்காக அந்த பிரபஞ்ச மனம் காத்துக் கொண்டிருக்கின்றன.
படைப்பாளிகள் தங்கள் படைப்புக்காக பாராட்டப்படும் போது அவர்கள் மறக்காமல் சொல்வது "அல்ஹம்தில்லாஹ் - எல்லா புகழும் அல்லாஹ்விற்கே ! " என்று
ர.ரா

எல்லோருக்கும் மூலம் ஒரே ஒரு ஆத்மா .
(கலங்காதிரு மனமே 11)



பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்பானவை.
நாம் எல்லோரும் ஒருவரோடு ஒருவர் இணைக்கப்பட்டுள்ளவர்கள் . அங்கு பிரிக்க முடியாத ஒரே ஆற்றல் தளம் உள்ளது.

நீங்கள் எந்த வழியில் பார்த்தாலும் இறுதியில் ஒன்றுதான் மிஞ்சும் , அது நாம் அனைவரும் ஒருவருக்கு ஒருவர் தொடர்புடையவர்கள் .
நாம் அனைவரும் ஒரே ஆற்றல் தளத்தின் ஒரு பகுதி . அல்லது ஓர் உயரிய மனத்தின் அல்லது ஒரே அக உணர்வு நிலையின் அல்லது ஒரே படைப்பியக்க மூலத்தின் ஒரு பகுதியே. அதை எந்தப் பெயர் கொண்டு வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நாம் அனைவரும் ஒன்றுதான் .

وَ هُوَ الَّذِىْۤ اَنْشَاَكُمْ مِّنْ نَّفْسٍ وَّاحِدَةٍ فَمُسْتَقَرٌّ وَّمُسْتَوْدَعٌ قَدْ فَصَّلْنَا الْاٰيٰتِ لِقَوْمٍ يَّفْقَهُوْنَ
(மனிதர்களே!) உங்கள் அனைவரையும் ஒரே ஆத்மாவில் இருந்து உற்பத்தி செய்து பின்னர் (உங்கள் தந்தையிடம்) தரித்திருக்கச் செய்து (உங்கள் தாயின் கர்ப்பத்தில்) ஒப்படைப்பவனும் அவனே! சிந்தித்து உணரக்கூடிய மக்களுக்கு (நம்முடைய) வசனங்களை நிச்சயமாக விவரித்தோம். (அல்குர்ஆன் : 6:98)

மற்றொருவரைப் பற்றிய உங்களது எதிர்மறை எண்ணங்கள் அப்படியே திரும்பி வந்து உங்களை ஏன் பாதிக்கிறது என்பது உங்களுக்கு இப்போது புரிந்திருக்கும் .
ஏனெனில் நாம் அனைவரும் எதிர்மறை எண்ணங்களையும் , உணர்வுகளையும் வெளிப்படுத்தி அவற்றை உங்களை நோக்கி வரவழைத்தால் ஒழிய , உங்களுக்கு நீங்களே தீங்கு விளைவித்துக் கொள்ள முடியாது .

எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கக் கூடிய சுதந்திர மனம் உங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. ஆனால் எதிர்மறை எண்ணங்களை எண்ணி, எதிர்மறை உணர்வுகளைக் கொண்டிருந்தால், நீங்கள் மூலத்திலிருந்தும் , அனைத்து நன்மைகளிலிருந்தும் விலகி விடுகிறீர்கள்.

ذٰ لِكَ بِمَا قَدَّمَتْ يَدٰكَ وَاَنَّ اللّٰهَ لَـيْسَ بِظَلَّامٍ لِّلْعَبِيْدِ
(அங்கு அவர்களை நோக்கிக் கூறப்படும்:) இவை ஏற்கனவே உங்கள் கைகள் செய்தனுப்பிய செயல்களின் பலன்தான். நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களில் எவருக்கும் (தண்டனையைக் கூட்டியோ, நன்மையைக் குறைத்தோ) அநியாயம் செய்பவனன்று.
(அல்குர்ஆன் : 22:10)

எதிர்மறையான உணர்ச்சிகள் ஒவ்வொன்றையும் குறித்து யோசித்துப் பார்த்தால், அவை பயத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதை உணர்வீர்கள் .மற்றவர்களிடம் இருந்து உங்களை விலக்கிப் பார்க்கும் எண்ணத்தால்தான் அவை ஏற்படுகின்றன. இதனால் மனச் சஞ்சலமும் , மனக் குழப்பமும் ஏற்படும் எனவேதான் மன அமைதி , சாந்தியை ஏற்படுத்தும் வார்த்தைகளை பிரயோகப்படுத்துமாறு இறைவன் கட்டளை இடுகிறான் .
وَاِذَا جَآءَكَ الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِاٰيٰتِنَا فَقُلْ سَلٰمٌ عَلَيْكُمْ كَتَبَ رَبُّكُمْ عَلٰى نَفْسِهِ الرَّحْمَةَ‌ ۙ اَنَّهٗ مَنْ عَمِلَ مِنْكُمْ سُوْٓءًۢا بِجَهَالَةٍ ثُمَّ تَابَ مِنْۢ بَعْدِهٖ وَاَصْلَحَۙ فَاَنَّهٗ غَفُوْرٌ رَّحِيْمٌ
(நபியே!) நம்முடைய வசனங்களை நம்பிக்கை கொண்டவர்கள் உங்களிடம் வந்தால் (நீங்கள் அவர்களை நோக்கி "ஸலாமுன் அலைக்கும்) உங்கள் மீது சாந்தியும், சமாதானமும் நிலவுவதாக! உங்களுடைய இறைவன் (உங்களுக்கு) அருள் புரிவதைத் தன்மீது கடமையாக்கிக் கொண்டான். நிச்சயமாக உங்களில் எவரேனும் அறியாமையின் காரணமாக (யாதொரு) பாவத்தைச் செய்துவிட்டு, பின்னர் அதற்காக கைசேதப்பட்டு (அதில் இருந்து விலகி) நற்செயல்களைச் செய்தால் (அவருடைய குற்றங்களை இறைவன் மன்னித்து விடுவான். ஏனென்றால்) நிச்சயமாக அவன் மிக மன்னிப்பவனும், கிருபையுடையவனுமாக இருக்கின்றான்" என்று கூறுங்கள்.
(அல்குர்ஆன் : 6:54)
ர.ரா
**Rahmath Rajakumaran**
இறைஞானிகள் இதற்கும் மேல் ஒரு படி மேலே போய் ....
முஹ்யத்தீன் இப்னு அரபி ( ரஹ்) அவர்கள் கவிதையாகப் பாடுகிறார்கள் .
" வெவ்வேறு படிமங்களுக்கு
என் இதயம் திறந்தே கிடக்கிறது .
இது கிறிஸ்துவ சந்நியாசிகளின்
துறவு மடம் :
சிலைகள் கொலுவிருக்கும்
கோயில் :
அரபு நாட்டு மான்களின்
மேய்ச்சல் வெளி ;

ஹஜ் பயணிகளுக்கு இது
கஃபா பள்ளி :
தவ்ராத்தின் வரைபலகையும்
இதுவே :
குர்ஆன் வேதமும்
இதுவே :
நான் அன்பு எனும் மதத்தையே
அனுஷ்டிக்கிறேன்
அதன் பயணம் எத்திசையை
நோக்கி அடியெடுத்தாலும் சரியே :
அன்பு எனும் மதமே
என்னுடையது
அதுவே என் நம்பிக்கை .
இப்போதும் ஆதி தாய் நம்மிடையே கொலுவிட்டிருக்கிறாள் நம்மிடையே உள்ள சகோதரத்துவத்தில் நெகிழ்து போகிறாள் என்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடிகிறதா ?
ரஹ்மத் ராஜகுமாரன்

## அலாவூதீனும் அற்புத விளக்கும்
(கலங்காதிரு மனமே 12 )




உங்களுக்கு அலாவூதீனும் அற்புத விளக்கும் கதை நினைவிருக்கிறதா ?
அலாவூதீன் விளக்கை எடுத்து தேய்த்தவுடன் அதிலிருந்து ஒரு பூதம் கிளம்பும் .அப்பூதம் எப்போதும் ஒன்றே ஒன்றைத்தான் கூறும் :
" தங்கள் கட்டளை என் பாக்கியம் ! "
இப்பொழுது இந்த உருவகக் கதையை எடுத்து நமது வாழ்வில் பொருத்திப் பார்க்கலாம் . அலாவூதீன் தனக்கு வேண்டியதை எப்போதும் விளக்கைத் தேய்த்து பூதத்திடம் கேட்கிறான் என்பதை நாம் நினைவுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

விளக்கு என்பது உருவகப்படுத்தப்பட்ட துஆ ( வேண்டுதல்) , பூதம் என்பது அதை செய்து முடிக்கும் பிரபஞ்சம் .
இந்த பிரபஞ்சத்தை " பிரம்மம் " என்றோ
" இறைவன் " என்றோ அல்லது வேறு எந்த அடைமொழி வேண்டுமானாலும் கொடுத்துக் கொள்ளுங்கள் .
உங்களுடைய வாழ்க்கையில் நீங்கள் கையில் எடுத்து விளக்கை தேய்த்து , நீங்கள் இட்ட ஒவ்வொரு கட்டளையையும் இந்த பூதம் நிறைவேற்றியுள்ளது என்பதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா ?
அது எப்போதும் உங்களுடனேயே இருந்து வந்துள்ளது . நீங்கள் சிந்திக்கும் ,பேசும், செய்யும் ஒவ்வொன்றையும் அப்பூதம் கவனமாகக் கேட்டுக் கொண்டும் , பார்த்துக் கொண்டும்தான் இன்னும் இருக்கிறது .

நீங்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயல்களையும் நீங்கள் விரும்புகிறீர்கள் என்றும் , அது முடிவு எடுத்து நடைமுறைப்படுத்தப்படுத்த தயாராகி விடுகிறது .

" நீங்கள் என்ன நிலைமையில் இருந்தபோதிலும், குர்ஆனிலிருந்து நீங்கள் எ(ந்த வசனத்)தை ஓதியபோதிலும், (உங்களுடைய காரியங்களில்) நீங்கள் எதைச் செய்தபோதிலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போதே உங்களை நாம் கவனிக்காமல் இருப்பதில்லை.
பூமியிலோ, வானத்திலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் (நபியே!) உங்களது இறைவனுக்குத் தெரியாமல் தவறிவிடுவதில்லை. இவற்றைவிட சிறிதோ அல்லது பெரிதோ (எதுவாயினும்) அவனுடைய விரிவான பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமலில்லை.
(அல்குர்ஆன் : 10:61)

நீங்கள் விரும்புவது ஏற்கனவே உங்களுடையதாகி விட்டதாக நினைத்துக் கொள்ளுங்கள் . பின் அது தானாக வரட்டும் என்று காத்திருங்கள் . அதைக் குறித்து எரிச்சலடையாதீர்கள், கவலை கொள்ளாதீர்கள். அது நம்மிடம் இல்லையே என்று எண்ணாதீர்கள் .அது உங்களுடையது என்று உங்களுக்குச் சொந்தமானது என்று எண்ணுங்கள் .
தேவைப்படும் போது , மக்கள் , சந்தர்ப்பங்கள் மற்றும் நிகழ்வுகள் மூலமாக பிரபஞ்சத்தை உங்களுக்குச் சாதமாக இயங்க வைக்கத் துவங்கிறது .
நபியே! உங்களுடைய முகம் (பிரார்த்தனை செய்து) அடிக்கடி வானத்தை நோக்குவதை நாம் காண்கிறோம். ஆதலால், நீங்கள் விரும்பும் கிப்லா(வாகிய மக்கா)வின் பக்கமே நாம் உங்களை நிச்சயமாகத் திருப்புகின்றோம்.
எனவே, நீங்கள் (தொழும்போது மக்காவிலுள்ள) "மஸ்ஜிதுல் ஹராமின்" பக்கமே உங்களுடைய முகத்தைத் திருப்புங்கள்.
(நம்பிக்கையாளர்களே!) நீங்களும் எங்கிருந்தபோதிலும் (தொழுகையில்) அதன் பக்கமே உங்களுடைய முகங்களைத் திருப்புங்கள்.
வேதம் கொடுக்கப்பட்ட (யூதர்களும், கிறிஸ்த)வர்களும் (நீங்கள் மக்காவின் திசையளவில் திரும்பிய) "இது தங்கள் இறைவனிடமிருந்(து வந்)த உண்மை(யான உத்தரவு)தான்" என நிச்சயமாக அறிவார்கள்.
(ஏனென்றால், அவ்வாறே அவர்களுடைய வேதத்தில் இருக்கின்றது. எனவே, உண்மையை மறைக்கும்) அவர்கள் செயலைப்பற்றி அல்லாஹ் பராமுகமாயில்லை.
(அல்குர்ஆன் : 2:144)

அதிகாலை என்பது மாற்றத்தின் நேரம்
(கலங்காதிரு மனமே 13)



நாள் ஒன்றிற்கு நம் மனத்தில் சுமார் அறுபதாயிரம் எண்ணங்கள் தோன்றுவதாக மன இயல் ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர் . நம் மனதில் தோன்றும் அனைத்து எண்ணங்களையும் கண்காணிப்பது என்பது இயலாத காரியம
அந்த அறுபதாயிரம் எண்ணங்களையும் கட்டுப்படுத்த முற்பட்டால் நாம் எவ்வளவு களைப்படைந்து விடுவோம் என்று உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா ?

அதற்கு ஒரு சுலபமான வழி இருக்கிறது அதுதான் நம்முடைய உணர்வுகள் .நாம் என்ன நினைத்து கொண்டு இருக்கிறோம் என்பதை நம் உணர்வுகள் நமக்கு காட்டிக் கொடுத்து விடும் .
உணர்வுகளின் முக்கியத்துவத்தை குறைத்து மதிப்பிட்டு விட முடியாது உங்கள் வாழ்க்கையை உயர்வாக்க உதவும் மிகச் சிறந்த ஒரு கருவிதான் உங்களது உணர்வுகள்.
உங்களிடம் இரண்டு விதமான உணர்வுகள் இருக்கின்றன. விரும்பத்தக்க நல்ல உணர்வுகள் , விரும்பத்தகாத மோசமான உணர்வுகள் .

நீங்கள் நன்றாக இருப்பதாக உணர்கிறீர்களா , மோசமாக இருப்பதாக உணர்கிறீர்களா ...என்று உங்களைத் தவிர வேறு எவராலும் கூற இயலாது.
நீங்கள் என்ன சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை விட எப்படி உணர்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதற்கு ஏற்றவாறே நீங்கள் கவர்ந்திழுக்கும் விஷயங்களும் இருக்கும்.
நீங்கள் ஒரு நாளை நல்லதாகத் துவக்கி, ஒரு மகிழ்ச்சியான உணர்வோடு இருந்தால், அந்த உணர்வு நிலையில் மாற்றம் உண்டாக்கும் எதையும் அனுமதிக்காதவரை ஈர்ப்பு விதிப்படி, தொடர்ந்து அந்த மகிழ்ச்சி உணர்வை நிலைத்திருக்கச் செய்ய உதவும் எண்ணங்களை நீங்கள் எண்ண வேண்டும் .

இதற்கு இஸ்லாம் எளிய முறைகளை பின்பற்றச் சொல்லுகிறது .
உலகில் பல மாற்றங்களை அல்லாஹ் அதிகாலை நேரத்திலேயே செய்கின்றான்.
நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் இவ்வாறு துஆ கேட்டார்கள்.

" யா அல்லாஹ்..! எனது சமூகத்திற்கு அதிகாலை நேரத்தில் அருள்வளத்தை நல்குவாயாக!" (அபூதாவூத்)
"அதிகாலை நேரத்திற்கும் சூரிய உதயத்திற்கும் இடையே இறைவன்(ரிஸ்க் எனும்) வாழ்வாதாரத்தை வழங்குகின்றான்". (நூல்: பைஹகீ)

அதிகாலைத் தொழுகைக்குச் செல்லும் ஒருவரைப் பார்த்து இறைவன் வியக்கும் காட்சியை நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு விவரிக்கின்றார்கள்.

"படுக்கை, போர்வை, மனைவி மக்களின் அரவணைப்பு அத்துணையும் உதறிவிட்டு அதிகாலையில் எழும் மனிதனைப் பார்த்து இறைவன் வியப்படைகின்றான்.
வானவர்களிடம் கேட்கின்றான்: "வானவர்களே...! எனது இந்த அடியானைப் பாருங்கள்...! படுக்கை, போர்வை, மனைவி, மக்கள் அத்தனையையும் உதறிவிட்டு அதிகாலையில் எழுந்து விட்டான். எதற்காக...? என்ன வேண்டும் இந்த அடியானுக்கு..? எனது அருள்மீது ஆசை வைத்தா...? அல்லது எனது தண்டனைக்குப் பயந்தா...?
பின்னர் வானவர்களிடம் அல்லாஹ் கூறுகிறான்: "உங்களை சாட்சி வைத்துக் கூறுகின்றேன் . அவன் ஆசைப்பட்டதை நான் அவனுக்கு நிச்சயம் கொடுப்பேன். அவன் எதைப் பயப்படுகின்றானோ அதிலிருந்து நிச்சயம் அவனுக்கு நான் பாதுகாப்புக் கொடுப்பேன்." (நூல்: அஹ்மத்)
" யார் ஸுபுஹ் தொழுகையைத் தொழுகின்றாரோ அவர் அல்லாஹ்வின் பாதுகாப்பில் இருக்கின்றார்." (நூல்: தபராணி)

நபி(ஸல்) அவர்கள் கூறியதாக அபு உமாமா(ரழி) அறிவிக்கின்றார்கள். யார் உளூ செய்தபின் பள்ளிவாசலுக்கு வந்து ஃபஜ்ருக்கு முன் இரண்டு ரக்அத் தொழுது பின்னர் ஃபஜ்ரு தொழுகையையும் தொழுகின்றாரோ அவர் நன் மக்களின் பட்டியலிலும், அல்லாஹ்வின் தூதுக் குழுவினரின் பட்டியலிலும் எழுதப்படுகின்றார்.

அல்லாஹ்வின் தூதுக்குழுவினர் என்பது அல்லாஹ்வின் விருந்தாளிகள் . இது
எவ்வளவு பெரிய சிறப்பு...!
ஒவ்வொரு நாளும் வானவர்கள் இரு தடவை இந்தப் பூமிக்கு வருகை தருகின்றார்கள்; அவர்கள் அனைவரும் அஸர் தொழுகையிலும் ஸுபுஹ் தொழுகையிலும் சந்தித்துக் கொள்கின்றார்கள்.
பணி முடிந்துத் திரும்பும் வானவர்களிடம் அனைத்தையும் அறிந்து வைத்திருக்கும் அல்லாஹ் கேட்கின்றான் ."எனது அடியார்களை எந்த நிலையில் சந்தித்தீர்கள்? எந்நிலையில் விட்டு வந்தீர்கள்?"
அதற்கு வானவர்கள் கூறுவார்கள். "அவர்கள் தொழுகையில் இருக்கும் நிலையில் சந்தித்தோம். தொழுகையில் இருக்கும் நிலையில் விட்டு வந்தோம்." (நூல்: திரிமிதி)

உலகில் பெரும் மாற்றங்களை எல்லாம் அதிகாலை நேரத்திலேயேதான் அல்லாஹ் ஏற்படுத்தி உள்ளான்.
உலகில் அழித்து நாசமாக்கப்பட்ட சமூகங்கள் எல்லாம் அதிகாலை நேரத்தில்தான் அழித்து ஒழிக்கப்பட்டிருக்கின்றன.
ஹூத் (அலை) அவர்களின் ஆத் கூட்டத்தை அழித்ததைக் குறித்து அல்லாஹ் கூறுகிறான்: இறுதியில் அவர்களின் நிலைமை என்னவாயிற்று எனில் அவர்கள் வசித்த இல்லங்களைத் தவிர வேறு எதுவும் அதிகாலையில் தென்படவில்லை" குர்ஆன் (46:25)
ஸாலிஹ் நபி (அலை) அவர்களின் சமூகக் கூட்டத்தைக் குறித்து இறைவன் குறிப்பிடுகிறான்: "திடுக்குறச் செய்கின்ற ஒரு நிலநடுக்கம் அவர்களைப் பிடித்துக் கொண்டது. அதிகாலையில் அவர்கள் தம் இல்லங்களில் முகங்குப்புற (உயிரற்றவர்களாக) வீழ்ந்து கிடந்தார்கள்"
குர்ஆன் (7:91)

ஷீஐப் (அலை) அவர்களின் கூட்டத்தைக் குறித்து இறைவன் கூறுகின்றான்: "இறுதியில், ஒரு கடும் நிலநடுக்கம் அவர்களைப் பிடித்தது. அவர்கள் தம் வீடுகளிலேயே அதிகாலையில் குப்புற வீழ்ந்து மடிந்தார்கள்" குர்ஆன் (29:37)

ஆகவேதான், மக்கத்து சமூகமும் நபி (ஸல்) செய்தியை ஏற்றுக் கொள்ளாமல் ஏளனம் செய்தபோது , அல்லாஹ்வின் எச்சரிக்கை இவ்வாறு இருந்தது:
"என்ன, இவர்கள் நம்முடைய தண்டனைக்காக அவசரப்படுகின்றார்களா? அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடுமாயின், எவர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டு விட்டதோ அவர்களுக்கு அந்நாளின் அதிகாலை மிகவும் கெட்டதொரு நாளாகி விடும்" குர்ஆன் (37:176,177)
இப்போது கூறப்பட்ட அத்தனை குர்ஆன் வசனங்களிலும் ஸுபுஹ் என்னும் அரபி சொல்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.
புரிந்து கொள்ளுங்கள் , 'அதிகாலை என்பது மாற்றத்திற்கான நேரம் '
ர.ரா

**Rahmath Rajakumaran**

அதிகாலை விழிப்பவரா நீங்கள்... நிச்சயம் நேர்மறையான மனிதர் தான்!
அதிகாலை விழித்தெழுவதன் மூலம், 'நாம் தேடும் அந்த கூடுதல் காலம் இலவசமாகக் கிடைக்கும். கூடவே, உடலுக்கும் மனதுக்கும் பல நன்மைகளையும் கொடுக்கும்' என்கிறது மருத்துவ அறிவியல்.
எண்ணங்களை நிர்ணயிக்கும் அதிகாலை:
சூரியன் உதிக்கும்போது கண்விழிப்பதும், சூரியன் மறைந்ததும் தூக்க உணர்வு ஏற்படுவதும், நமது மரபணுக்களில் பதிந்து தொடர்ச்சியாய் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சுழற்சி.
இதுவே நமது உடலின் செயல்பாடுகளுக்கு முக்கிய காரணியாக இருக்கும் 'சர்காடியன் ரிதம்' (Circadian rhythm), முறைப்படி நடப்பதற்கான அடிப்படையும் கூட. சர்காடியன் சுழற்சி முறையாக இருந்தால், நேர்மறை எண்ணங்கள் (Positive thinking) அதிகரிக்கும் என்கிறது ஆய்வு.
உறக்கத்தை முழுமையாக அனுபவித்து, அதிகாலையில் விழிப்பவர்களுக்கு நேர்மறை எண்ணங்கள் அதிகரிப்பதற்கு இதுவே காரணம்.
தாமதமாக எழுபவர்களுக்கு மனச்சோர்வு (Depression) ஏற்படுவதற்கான வாய்ப்புகள் பலமடங்கு அதிகரிக்கிறதாம். அதிகாலையில் கண்விழிப்பவர்களுக்கு முடிவு எடுக்கும் திறன் (Decision making capacity) சிறப்பாக இருக்கும். உடலில் ஹார்மோன்களின் செயல்பாடுகளும் சீராக நடைபெறும். மாணவர்களின் அறிவாற்றலும் பெருகும். மன அழுத்தம் குறையும்... என அதிகாலை விழிப்பதன் நன்மைகளைப் பற்றி ஆய்வுகள் எடுத்துரைக்கின்றன.
அதிகாலையில் எழுபவர்கள், கூடுதல் ஆற்றலுடனும் புத்துணர்வுடனும் செயல்படுவதாகவும், நீண்ட நாள்கள் மகிழ்ச்சியாக வாழ்வதாகவும் உறக்கம் சார்ந்த ஆராய்ச்சி தெரிவிக்கிறது.

கனவு காணுங்கள்.
(கலங்காதிரு மனமே 14 )



ஜான் அஸரப் என்கிற சாதாரண நபரை மனவியல் வல்லுநராக மாற்றிய சம்பவத்தை அவரே கூறுகிறார் :

1995-ல் நான் "அகக்காட்சிப் பலகை" என்ற ஒன்றை உருவாக்கினேன். நான் சாதிக்க விரும்புவற்றை, படங்களாக ஆக்கி அப்பலகையில் ஒட்டுவேன். ஒவ்வொரு நாளும் அலுவலகத்தில் உட்கார்ந்து கொண்டு , அப்பலகையைப் பார்த்து "அகக் காட்சிப்படைப்பை " உருவாக்கத் துவங்குவேன் .அந்த இலட்சியத்தை ஏற்கனவே பெற்றுவிட்ட மனநிலைக்கு உண்மையிலேயே நுழைவேன் .

அடுத்து ஐந்து வருடங்களில் 3 வீடுகளுக்கு குடிபெயர்ந்தேன் . என்னுடைய சாமான்களையெல்லாம் அட்டைப் பெட்டிகளில் போட்டு ஓரிடத்தில் வைத்தேன் .
பின்னர் கலிபோர்னியா வந்தடைந்து இந்த வீட்டை வாங்கினேன் . வீட்டைப் புதுப்பித்தேன் . கொண்டு வந்த பொருட்களில் அந்த அட்டைப் பெட்டியும் இருந்தது .பெட்டியைப் பிரித்து என் மகன் அகக் காட்சி பலகைப் பற்றி விசாரித்தான் . சொன்னேன் .
அந்தப் பலகையில் 5 வருடத்திற்கு முன்னால் ஒரு அழகிய வீட்டின் படத்தை ஒட்டியிருந்தேன் . அவனுக்கு அப்படத்தை காண்பித்தேன் . ஆனால் அந்த வீட்டுப் படத்தைப் பார்த்து நான் ரொம்பவும் ஆச்சரியப்பட்டு போனேன் .காரணம் அந்த படத்தில் இருந்த ' அதே வீட்டைத்தான்

'வாங்கி புதுப்பித்து , குடிபுகுந்துள்ளேன் என்பது கடந்த ஐந்து ஆண்டிகளில் அந்த அகப் பலகையை பார்க்காததால் எனது கனவு இல்லத்தை மறந்து போனேன்.

ஆனால் என்னிடம் இருந்த ஈர்ப்பு விதி என் அகக் காட்சிப் படைப்பினை உள்வாங்கி , என் இலட்சிய வீட்டை அது தேடி தன் முழு ஆற்றலையும் அது பயன்படுத்தி என் கனவை நனவாக்கி இருக்கிறது .
உலகையே மாற்றும் சக்தி உங்களுக்குள் இருக்கிறது ! உங்களது கற்பனைக் காட்சி பௌதீக வடிவத்தைப் பெறுவதை எந்தச் சக்தியாலும் தடுத்து நிறுத்த முடியாது. அதை முதலில் பிறப்பித்த உங்களைத் தவிர . - ஜெனிவீவ் பெகரென்ட்
"கனவு காணுங்கள்! ஆனால் கனவு என்பது நீ தூக்கத்தில் காண்பது அல்ல... உன்னை தூங்க விடாமல் செய்வதே கனவு.".. என்றார் இந்தியாவின் முன்னாள் குடியரசுத் தலைவர் அப்துல் கலாம்...
" கற்பனைதான் எல்லாம் கற்பனைதான். அது வாழ்க்கையில் வரப்போகும் வசந்தங்களின் முன்னோட்டம் " என்கிறார் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் .

'' நபி(ஸல்) அவர்களுக்குத் துவக்கத்தில் இறைச்செய்தி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளிலேயே வந்தது "என்று ஆயிஷா(ரலி) கூறினார்கள் .
கனவு காணுங்கள் ! ஆனால் கனவு என்பது நீ தூக்கத்தில் காண்பது அல்ல... உங்களை தூங்க விடாமல் செய்வதே கனவு.

ர.ரா

ஆரோக்கியத்திற்கான ரகசியம்
(கலங்காதிரு மனமே 15)


உண்மையில் நமது உடல் நமது எண்ணங்களால் உருவான ஒன்றுதான்.

நமது எண்ணங்களும் , உணர்ச்சிகளும் நமது உடலின் பௌதீகத் தன்மையையும், அதன் அமைப்பையும் , இயக்கத்தையும் எவ்வளவு தூரம் உண்மையில் தீர்மானிக்கிறது என்பதை மருத்துவ அறிவியலில் இப்போது நாம் புரிந்து கொள்ளத் துவங்கியுள்ளோம்.

இயற்கையாக நாம் எல்லோரும் 'சுயப் பிணிநீக்கம் ' என்னும் அடிப்படைத் திட்டத்தோடுதான் பிறந்துள்ளோம் .
உங்களுக்கு ஒரு காயம் ஏற்பட்டால் , அது தானாகவே சரியாகிவிடுகிறது. உங்களுக்கு ஒரு நுண்ணுயிரித் தாக்குதல் ஏற்படும் போது, உடலின் நோய்த்தடுப்பு அமைப்பு அந்த நுண்ணுயிரியை அழித்து , நோயைக் குணமாக்குகிறது . நோய்த் தடுப்பு அமைப்பின் நோக்கமே உங்களை குணமாக்குதல்தான் .

ஆரோக்கியமான உணர்வுபூர்வமான நிலையில் இருக்கும் ஓர் உடலில் வியாதியால் குடியிருக்க முடியாது.
உங்களது உடல் ஒவ்வொரு நொடியிலும் இலட்சக்கணக்கான உயிரணுக்களைக் களைந்து கொண்டிருக்கிறது. அதே போல இலட்சக்கணக்கான உயிரணுக்களை உற்பத்தி செய்து கொண்டும் இருக்கிறது .

உண்மையில் நமது உடலின் பகுதிகள் ஒவ்வொன்றும் தினமும் புதுப்பிக்கப்பட்டு வருகின்றன. சில பகுதிகள் ஓரிரு மாதங்களை எடுத்துக் கொள்கின்றன. ஒரு சில பகுதிகள் ஒரு சில வருடங்களை எடுத்துக் கொள்கின்றன . ஒரு சில வருடங்களில் நாம் ஒவ்வொருவரும் புத்தம் புதிய பௌதீக உடல் ஒன்றைக் கொண்டிருக்கிறோம் !

அறிவியல் நிரூபித்துள்ளபடி , ஒரு சில வருடங்களுக்குள் நமது மொத்த உடல் முற்றிலும் மாற்றி அமைக்கப்படுகிறது என்றால் .சீர்கேடும் , வியாதியும் எப்படித் தொடர்ந்து வருடக்கணக்காக நம் உடலில் வாசம் புரிய முடியுமா ?

நாம் ஏற்றத்தாழ்வான கண்ணோட்டம் கொண்டிருப்பதையோ , நாம் அன்புடனும், நன்றியுடனும் இல்லை என்பதையோ நாம் அறிந்து கொள்ள உதவ நமக்குத் தகவல் அளிக்கும் விதமாகவே நோயை நமது உடற்கூறு உருவாக்கிறது .
நம்முடைய வாழ்வில் இடம்பெற்றுள்ள எதிர்மறைகள் அனைத்தையும் , அவை எந்த வடிவத்தில் இருந்தாலும் , அன்பும் நன்றியுணர்வும் கரைத்து விடும் என்று டாக்டர் டிமார்ட்டினி கூறுகிறார்

அன்பும், நன்றியுணர்வும் மலைகளை இடம் பெயரச் செய்ய வல்லது ; கடலைப் பிரிக்க வல்லது. அற்புதங்களை படைக்கவல்லது . அது வியாதிகளை விரட்டி அடிக்க வல்லது. இதற்கு நல்ல உதாரணம் நபி ஐயுப் (அலை) அவர்களின் வரலாற்றில் உள்ளது.

ஐயுப் (அலை) அவர்களுக்கு சோதிக்கப்பட்ட நோய்
ஒவ்வொரு நாள் காலையிலும்
"ஐயூபே! எவ்வாறு இருக்கிறீர்?" என்று அசரீரி முழங்கும்.அதற்கு அவர்கள், "மகிழ்ச்சியுடன், சோதனையை நுகர்ந்து கொண்டிருக்கின்றேன்" என்று மறுமொழி பகர்ந்து வந்தார்கள்.
உடலைச் சொரியும் பொழுது புழுக்கள் கீழே விழின் அவர்கள் அவற்றை எடுத்துத் தம்முடைய புண்களிலயே விட்டு, புழுக்களே! நன்றாக என் உடலைத் தின்னுங்கள்! உங்களுடைய உணவை இறைவன் என் உறுப்புகளில் ஆக்கி வைத்துள்ளான்.ஆதலில் எனக்கு இறைவன் நலன் நல்கும் வரையில் உங்களுடைய வேலையை நீங்கள் ஒழுங்குடன் செய்து வாருங்கள்" என்று கூறுவர்.
நபியவர்களின் மனைவி ரஹ்மா மட்டும் இன்பத்தில் இருந்தது போல் துன்பத்திலும் பங்கு கொண்டார்கள்......

இக்கொடுமையினைக் கண்ட நபியின் மனைவி ரஹ்மா அவர்கள், "இத்துன்பத்திலிருந்து மீள இறைவனிடம் இறைஞ்சக் கூடாதா?'' என்றனர்.

"நலமாகவும் - வளமாகவும் எண்பது ஆண்டுகள் வாழ்ந்துவிட்டேன். இதனால் இறை சோதனையிலிருந்து மீள அல்லாஹ்விடம் இறைஞ்ச நாணமுறுகிறேன்'' என்றனர் ஐயூப் நபி.
நபியவர்கள் இறைவனை பரிபூரணமாக வணங்கவும், அவனை எண்ணி துதிக்கவும் இயலவில்லையே...?'' என்று தான் வருந்தி கண்ணீர் விட்டு அழுதார்களேத் தவிர நோயை நினைத்து ஒரு போதும் அழவே இல்லை
அவர்களின் உடலில் 12000 ம் புழுக்கள் இருந்து அவர்களுக்கு வேதனை செய்து வந்தன.
இதைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறும் போது 12000 த்தை எளிதில் வென்று விட முடியாது என கூறினார்கள்.

இறுதியாக, ஐயூப் நபியின் பொறுமையையும், துன்பத்தில்கூட தன்னை நினைத்து வருந்தியும், தன்னால் முடிந்த வரை வணங்கி வழிபட்டதையும் ஏற்றுக்கொண்டு, இறைவன் வானவர் தலைவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களை அனுப்பி, நபி ஐயூப் (அலை)அவர்களுக்கு ஏற்பட்டிருந்த நோயை குணப்படுத்தும்படி ஏவினான் என்பது வரலாறு.
அன்பும், நன்றியுணர்வும் நபியவர்களை சுகப்படுத்தியது அல்லவா ?
ர.ரா

படைப்பு எப்போதும் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது.
(கலங்காதிரு மனமே 16 )



உங்களுக்குத்தான் நிறம், ருசி , வாசனை , சப்தம் என்ற பேதங்களே தவிர அறியப்படும் பொருளுக்கு இல்லை.
இனிப்பும் , கசப்பும் ,குளிர்ச்சியும் உஷ்ணமும் ,பச்சையும் , சிவப்பும்
உங்களுடைய அபிப்பிராயங்களே தவிர
உண்மையானவை இல்லை
வெளிச்சம் , வெப்பம் , நிறம், உருவம் , இயக்கம் இன்னும் பொருட்களின்
மற்றெல்லாக் குணங்களும்
உங்கள் குறைபட்ட புலன்களால் அறிகின்றீர்களேத் தவிர புலனறிவுக்கு அப்பால் அப்பொருட்கள் பொருட்களே இல்லை

சக்தியும் , பொருளும் , அணுவும் அண்டமும் இப்பிரபஞ்சமும்
உங்கள் மனத்தின் படைப்பே தவிர உங்கள் மனோவிகாரத்தைக் களைந்து விட்டால் இப்பிரபஞ்சமே இல்லை .

எனவே 'மனம் ' என்ற ஒன்று இல்லாமல் பிரபஞ்சம் என்று ஒன்று இருக்க முடியாது என்று குவாண்டம் இயற்பியல் கூறுகிறது .எதை நாம் உணர்ந்து கொண்டிருக்கிறோமோ அதையே மனம் வடிவமைத்துக் கொண்டிருக்கின்றது !

ஈர்ப்பு விதி எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறது . நீங்கள் அனைத்தையும் உங்களை நோக்கிக் கவர்ந்திழுக்கிறீர்கள் .
வேலை, சந்தர்ப்பங்கள் , ஆரோக்கியம் , செல்வச் செழிப்பு , கடன் , நீங்கள் ஓட்டிக் கொண்டிருக்கும் இந்தக் கார் , நீங்கள் வசித்து வரும் சமூகம் போன்ற எல்லாவற்றையும் நீங்கள் ஒரு காந்தம் போல கவர்ந்திழுக்கிறீர்கள். இதனால்தான் இவைகள் உங்களுடன் இருக்கின்றன. உங்களது மொத்த வாழ்க்கை உங்களின் மூலையில் ஓடும் எண்ணங்களின் வெளிப்பாடுதான் .

உங்களது இன்றைய சிந்தனை உங்களது நாளைய வாழ்க்கை . உங்கள் வாழ்வை நீங்கள் உங்கள் சிந்தனையால் படைக்கிறீர்கள். நீங்கள் எப்போதும் சிந்தித்துக் கொண்டே இருப்பதால் எப்போதும் படைத்துக் கொண்டே இருக்கிறீர்கள் .

நீங்கள் எவற்றைக் குறித்து அதிகமாகச் சிந்திக்கிறீர்களோ அல்லது எவற்றில் அதிகக் கவனம் செலுத்துகிறீர்களோ அவைகள் உங்களது வாழ்வாக மலரும் .
படைப்பு எப்போதும் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. ஒருவர் ஒவ்வொரு முறை சிந்திக்கும்போதும் அல்லது நீண்ட நாட்களாகப் பழக்கப்பட்ட விதத்தில் யோசிக்கும் போதும் ,

அவர்கள் படைப்பு இயக்கத்தில் ஈடுபட்டுள்ளனர் . அத்தகைய எண்ணங்களில் இருந்து ஏதாவது ஒன்று உருவாகப் போவது நிச்சயம் .

وَّالْخَـيْلَ وَالْبِغَالَ وَالْحَمِيْرَ لِتَرْكَبُوْهَا وَزِيْنَةً‌ ؕ وَيَخْلُقُ مَا لَا تَعْلَمُوْنَ
குதிரைகள், கோவேறு கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் ஏறிச் செல்வதற்காகவும் (உங்களுக்கு) அலங்காரமாகவும் (அவன் படைத்திருக்கிறான்.) இன்னும் நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைப்பான்.
(அல்குர்ஆன் : 16:8)

وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا عِنْدَنَا خَزَآٮِٕنُهٗ وَمَا نُنَزِّلُهٗۤ اِلَّا بِقَدَرٍ مَّعْلُوْمٍ
ஒவ்வொரு பொருளின் பொக்கிஷங்களும் நம்மிடமே இருக்கின்றன. எனினும், அவற்றை அந்தந்தக் காலத்தில் அவற்றிற்குக் குறிப்பிட்ட அளவில் தான் நாம் இறக்கி வைக்கிறோம்.
(அல்குர்ஆன் : 15:21)
ர.ரா

**Rahmath Rajakumaran**
وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا عِنْدَنَا خَزَآٮِٕنُهٗ وَمَا نُنَزِّلُهٗۤ اِلَّا بِقَدَرٍ مَّعْلُوْمٍ
ஒவ்வொரு பொருளின் பொக்கிஷங்களும் நம்மிடமே இருக்கின்றன. எனினும், அவற்றை அந்தந்தக் காலத்தில் அவற்றிற்குக் குறிப்பிட்ட அளவில் தான் நாம் இறக்கி வைக்கிறோம்.
(அல்குர்ஆன் : 15:21)

நீங்கள் காந்தம் ; கவர்ந்திழுக்கிறீர்கள்
(கலங்காதிரு மனமே 17 )




முதல் படியை நம்பிக்கையுடன் எடுத்து வையுங்கள் . மொத்த மாடிப்படியையும் நீங்கள் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. வெறுமனே முதல் படியை நம்பிக்கையுடன் எடுத்து வையுங்கள் மாடியில் இருப்பீர்கள் .

நீங்கள் இரவில் சென்று கொண்டிருக்கும் ஒரு காரைக் கற்பனை செய்து கொள்ளுங்கள் . அக்காரின் விளக்கு வெளிச்சம் இருநூறு அடி தொலைவு வரைதான் தெரியும் .
ஆனால் அதன் உதவியுடன் , இருட்டில் உங்களால் திருநெல்வேலிருந்து சென்னை வரை சென்றுவிட முடியும். ஏனெனில் உங்களுக்குத் தெரிய வேண்டியதெல்லாம் அடுத்த இருநூறு அடிகள் மட்டும்தான் .

அப்படித்தான் வாழ்க்கையும் நம் கண்
முன் விரிகிறது. அதற்கு அடுத்த இருநூறு அடி என்று நம்பினால் போதும் , உங்கள் வாழ்க்கை தொடர்ந்து உங்கள் கண்முன் விரிந்து கொண்டே வரும் . இறுதியாக நீங்கள் எங்கு சென்று அடைய வேண்டும் என்று விரும்பினீர்களோ அவ்விடத்தை அடைந்து விடுவீர்கள் .

ஏனெனில் நீங்கள் விரும்பியிருந்தது அதைத்தானே ?
நீங்கள் எதுவும் இல்லாத நிலையிலிருந்தும் கூட துவங்கலாம் அதிலிருந்து , வழி ஏதுமற்ற அந்த நிலையிலிருந்து , ஒரு வழி நிச்சயம் பிறக்கும்.

உங்களுக்குத் தேவையான அனைத்தையும் நீங்கள் காந்தம் மாதிரி கவர்ந்திழுக்கிறீர்கள் . அது பணம் என்றால் , அதையும் கவர்ந்திழுப்பீர்கள் அது ஒரு குறிப்பிட்ட தங்க வைர ஆபரணம் என்றால் அதையும் உங்களை நோக்கி ஈர்ப்பீர்கள் .

நீங்கள் எதைக் கவர்ந்து இழுக்கிறீர்கள் என்பதில் நீங்கள் கவனமாக இருக்க வேண்டும் . நீங்கள் விரும்பியவற்றின் உருவத்தை மனத்தில் இருத்திக் கொள்ளும் போது , அவற்றை நோக்கி நீங்கள் கவரப்படுகிறீர்கள் . அது உங்களை நோக்கி கவரப்படுகின்றன. அவை உங்களுடன் , உங்கள் மூலமாகப் பௌதீக யதார்த்தத் தளத்தை வந்தடைகின்றன.
தாகம் உள்ளவன் தண்ணீரைத் தேடுகிறான் . தண்ணீரும் தாகமுடையவனைத் தேடுகிறது !
தண்ணீரைத் தேடாதே ; தாகத்தைத் தேடு . தாகம் இருக்கும் இடத்திற்கு தண்ணீர் தானாக வரும் !
மௌலானா ரூமி (ரஹ்)
நீங்கள் அனைத்தையும் உங்களை நோக்கி இழுக்கும் ஒரு காத்தம் என்பதை நினைவில் வைத்திருங்கள் . உங்களுக்கு என்ன தேவை என்பதைத் தெளிவாக உங்கள் மனத்தில் இருத்தும் போது அப்பொருளை உங்கள் வசம் ஈர்க்கும் காந்தமாகவே நீங்கள் மாறி விடுகிறீர்கள் .

பதிலுக்கு நீங்கள் விரும்பும் பொருள் உங்களை நோக்கி காந்தசக்தியால் கவரப்படுகின்றன. நீங்கள் விரும்பியவை உங்களிடம் வந்து சேருகின்றன. நீங்கள் பெரிய காந்தமாக மாறுவதற்கு , உங்களிடம் நம்பிக்கை , விசுவாசம் மற்றும் அக அறிதல் ஆகியவற்றின் சக்தியை இதற்கு ஊட்டுகிறீர்கள் .

قَالَ يٰۤاَيُّهَا الْمَلَؤُا اَيُّكُمْ يَاْتِيْنِىْ بِعَرْشِهَا قَبْلَ اَنْ يَّاْتُوْنِىْ مُسْلِمِيْنَ
(ஸுலைமான் தன் மந்திரிகளை நோக்கி) "சன்றோர்களே! அவர்கள் கட்டுப்பட்டவர்களாக என்னிடம் வந்து சேருவதற்கு முன்னதாகவே அவளுடைய சிம்மாசனத்தை என்னிடம் கொண்டு வருபவர் உங்களில் யார்?" என்று கேட்டார்.
(அல்குர்ஆன் : 27:38)

قَالَ عِفْرِيْتٌ مِّنَ الْجِنِّ اَنَا اٰتِيْكَ بِهٖ قَبْلَ اَنْ تَقُوْمَ مِنْ مَّقَامِكَ‌ وَاِنِّىْ عَلَيْهِ لَقَوِىٌّ اَمِيْنٌ
அதற்கு ஜின்களிலுள்ள "இஃப்ரீத்" (என்னும் ஒரு வீரன்) "நீங்கள் இந்தச் சபையை முடித்துக்கொண்டு எழுந்திருப்பதற்கு முன்னதாகவே அதனை நான் கொண்டு வந்துவிடுவேன். நிச்சயமாக நான் இவ்வாறு செய்ய மிக்க சக்தியும் நம்பிக்கையும் உடையவன்" என்று கூறினான்.
(அல்குர்ஆன் : 27:39)

قَالَ الَّذِىْ عِنْدَهٗ عِلْمٌ مِّنَ الْكِتٰبِ اَنَا اٰتِيْكَ بِهٖ قَبْلَ اَنْ يَّرْتَدَّ اِلَيْكَ طَرْفُكَ‌ فَلَمَّا رَاٰهُ مُسْتَقِرًّا عِنْدَهٗ قَالَ هٰذَا مِنْ فَضْلِ رَبِّىْ لِيَبْلُوَنِىْٓ ءَاَشْكُرُ اَمْ اَكْفُرُ‌ وَمَنْ شَكَرَ فَاِنَّمَا يَشْكُرُ لِنَفْسِهٖ‌ وَمَنْ كَفَرَ فَاِنَّ رَبِّىْ غَنِىٌّ كَرِيْمٌ
(எனினும், அவர்களில்) வேத ஞானம் பெற்ற ஒருவர் (இருந்தார். அவர் ஸுலைமான் நபியை நோக்கி) "நீங்கள் கண்மூடித் திறப்பதற்குள் அதனை நான் உங்களிடம் கொண்டு வந்துவிடுவேன்" என்று கூறினார். (அவ்வாறே கொண்டு வந்து சேர்த்தார்.) அது தன் முன் (கொண்டு வந்து வைக்கப்பட்டு) இருப்பதை (ஸுலைமான்) கண்டதும், "இது நான் அவனுக்கு நன்றி செலுத்துகின்றேனா இல்லையா என்று என்னைச் சோதிப்பதற்காக என் இறைவன் எனக்குப் புரிந்த பேரருளாகும். எவன் (இறைவனுக்கு) நன்றி செலுத்துகிறானோ அவன் தனக்கே நன்மை செய்து கொள்கிறான். எவன் நன்றியை நிராகரிக்கின்றானோ (அதனால் என் இறைவனுக்கு யாதொரு நஷ்டமுமில்லை.) நிச்சயமாக என் இறைவன் (எவருடைய) தேவையற்றவனும், மிக்க கண்ணியமானவனாகவும் இருக்கிறான்" என்று கூறினார் .
(அல்குர்ஆன் : 27:40)
நீங்கள் காந்தம் ; கவர்ந்திழுக்கிறீர்கள்

பற்றாகுறைவில் இருந்து வற்றாவளம் எப்படி ?
(கலங்காதிரு மனமே 18 )




பிரபஞ்சத்தை ஒரு பொருட்பட்டியலாகப் பாவித்தால், எல்லா பொருட்களும் அள்ள அள்ள பிரபஞ்சத்திலிருந்து தீர்ந்துவிடுமா ?
தீர்ந்து போகாது . எல்லோருக்கும் போதுமான அளவிற்கும் அதிகமாகவே நன்மை பயக்கும் விஷயங்கள் இங்கு நிறையவே இருக்கின்றன என்பதுதான் உண்மை.
மனித குலத்தின் மனத்தில் புகுந்து , விஷக் கிருமியாய்ச் செயல்படும் பெரிய பொய் ஒன்று , இங்கு உலா வந்து கொண்டிருக்கிறது . அது ....

எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய அளவில் மாபெரும் எண்ணிக்கையில் சிறப்பான விஷயங்கள் இங்கு இல்லை.
பற்றாக்குறை பரவலாக உள்ளது . கட்டுப்பாடுகள் கடுமையாக நிலவுகின்றன. தட்டுப்பாடுகள் தாராளமாக இருக்கின்றன "என்பதுதான் அந்தப் பொய் .
இந்த மாபெரும் பொய் .மக்கள் பயத்திலும், பேராசையிலும், கஞ்சத்தனத்திலும் வாழ அது வழிவகுத்துள்ளது.
அந்தப் பயம் பேராசை, கஞ்சத்தனம் , மற்றும் பற்றாக்குறை குறித்த எண்ணங்கள் அவர்களது வாழ்வனுபவங்களாக ஆகிவிடுகின்றன.

உண்மை என்னவென்றால் எல்லோருக்கும் போக மீதியிருக்கும் அளவு , நல்லவைகள் கொட்டிக் கிடக்கின்றன.
போதுமானதற்கும் மேலாகப் படைப்புமிக்க கருத்துக்கள் உலவுகின்றன. போதுமானதற்கும் மேலாகச் சக்தி நிலவுகிறது. போதுமானதற்கும் மேலாக அன்பு நிறைந்திருக்கிறது போதுமானதற்கும் மேலாக மகிழ்ச்சி கொலுவீற்றிருக்கிறது.
தன்னுடைய எல்லையற்ற சக்தியை அறிந்துள்ள ஒரு மனத்திலிருந்துதான் இவையனைத்தும் பிறக்கின்றன !

போதுமான அளவு இல்லை என்று நாம் எண்ணுவதற்குக் காரணம் வெளியில் பார்க்கப்படுவை அனைத்துமே வெளியில் இருந்துதான் வருகிறது என்று நாம் கருதுவதால்தான் .
அப்படி நினைத்தால் பற்றாக் குறைகளையும் , கட்டுப்பாடுகளையும்
தான் நீங்கள் பார்ப்பீர்கள் .இவைகள் கூட எல்லாமே புறத்திலிருந்து வருவதில்லை .அகத்திலிருந்து புறப்படும் சிந்தனையிலிருந்தும் , அக உணர்விலிருந்தும்தான் வருகின்றன என்பதை நீங்கள் இப்போது அறிவீர்கள் .

உங்கள் மனம்தான் எல்லாவற்றின் படைப்புச் சக்தியாக விளங்குகிறது அப்படி இருக்கும் போது பற்றாக்குறையும் , தட்டுப்பாடும் எவ்வாறு சாத்தியம் ? சாத்தியமே இல்லை .
உங்கள் சிந்தனை திறனுக்கு எல்லை இல்லை .அதே போல சிந்தனை மூலம் நீங்கள் சிருஷ்டிக்கக் கூடிய பொருட்களுக்கும் எல்லை இருக்க முடியாது அல்லவா ? இதை உண்மையில் ஆழமாக அறிந்திருக்கும் பட்சத்தில் , தனது எல்லையற்ற இயல்பை உணர்ந்திருக்கும் ஒரு மனத்திலிருந்துதான் நீங்கள் சிந்திக்கிறீர்கள் . அதனால் நீங்கள் சிருஷ்டிக்கிறீர்கள்.

நபித்தோழராகிய ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்கள் :
“அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் பாரசீக நாட்டில் இருந்த போது எங்களை எதிரிகள் தாக்க வருவதாக இருந்தால் எங்களைச் சுற்றி அகழ் தோண்டிக் கொள்வோம். அவ்வாறே இங்கும் செய்யலாம்” என ஸல்மான் ஃபார்ஸி (ரழி) கூறினார்கள். இதற்கு முன் இது அரபியர்களுக்குத் தெரியாத ஒரு புதிய போர் திட்டமாக அது இருந்தது.

இத்திட்டத்தை கேட்டவுடன் இதை அங்கீகரித்து, அதை நிறைவேற்ற நபி (ஸல்) அவர்கள் ஆர்வம் காட்டினார்கள். “ஒவ்வொரு 10 நபர்கள் கொண்ட குழு குழுவாக 40 முழம் அகழ் தோண்ட வேண்டும்” என்று நபியவர்கள் பணித்தார்கள்.

முஸ்லிம்கள் மிகுந்த உற்சாகத்துடன் அகழ் தோண்டுவதில் ஈடுபட்டார்கள். நபியவர்கள் முஸ்லிம்களுக்கு ஆர்வமூட்டி வந்தார்கள். அப்போது கடுமையான பசி பட்டினிக்கு ஆளாகி இருந்தும் முஸ்லிம்கள் சுறுசுறுப்பாக அகழ் தோண்டுவதில் ஈடுபட்டிருந்தனர்.
மேலும், நபித்துவத்தின் பல அத்தாட்சிகளும் அகழ் தோண்டிக் கொண்டிருக்கும் போது ஏற்பட்டன.

நபி (ஸல்) அவர்கள் கடுமையான பசியில் இருப்பதைப் பார்த்த ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ஒரு சிறிய ஆட்டை அறுத்தார்கள். அவர் மனைவி ஒரு படி தொலி கோதுமையை அரைத்து ரொட்டி சுட்டார்கள். பின்பு ஜாபிர் நபியவர்களைச் சந்தித்து தங்களின் சில தோழர்களுடன் உணவருந்த வருமாறு கூறினார்கள்.
ஆனால், நபியவர்கள் ஆயிரத்திற்கு மேற்பட்ட தோழர்களுடன் ஜாபின் வீட்டுக்கு வருகை தந்தார்கள்.
ஜாபிர் (ரலி) மனைவி செய்வது அறியாது திகைத்த போது , நபியவர்கள் 'சட்டியை அவசியவத்திற்கு மட்டும் திறந்து மற்றபடி மூடி வைக்கச் சொன்னார்கள் . அப்படியே செய்யப்பட்டது . அனைவரும் உணவருந்திச் சென்றனர். ஆனால், சமைக்கப்பட்ட சட்டியில் இருந்த ஆணமும் குறையவில்லை, சுட்ட ரொட்டியும் குறையவில்லை. (ஸஹீஹுல் புகாரி)
இதே அகழ் யுத்தத்தின் போது நுஃமான் இப்னு பஷீன் சகோதரி சிறிதளவு பேரீத்தம் பழத்தைத் தனது தந்தைக்காகவும் தாய்மாமாவுக்காகவும் எடுத்து வந்தார்.

அவர் நபி (ஸல்) அவர்களைக் கடந்து சென்றபோது, நபியவர்கள் அவரைத் தன்னருகில் அழைத்து அவரிடம் இருந்த பேரீத்தம் பழத்தை வாங்கி ஒரு துணிக்குமேல் பரத்தினார்கள். பின்பு அகழ் தோண்டிக் கொண்டிருந்தவர்களை அழைத்து சாப்பிடுங்கள் என்றார்கள்.
அவர்கள் சாப்பிட்டுக் கொண்டே இருந்தார்கள். பேரீத்தம் பழம் குறையாமல் அதிகரித்துக் கொண்டே இருந்தது. அனைவரும் சாப்பிட்டு சென்று விட்ட பின்பும் அது குறைவின்றி இருந்தது. (இப்னு ஹிஷாம்)
தனது எல்லையற்ற இயல்பை உணர்ந்திருக்கும் ஒரு பெரிய மனத்திலிருந்துதான் நீங்கள்

சிந்திக்கிறீர்கள் . அததட்டுங்கள் திறக்கப்படும் .

கேளுங்கள் கொடுக்கப்படும்.

(கலங்காதிரு மனமே 19)



உங்கள் வாழ்க்கை முழுவதும் பிரபஞ்சம் உங்களுக்கு பதிலளித்துக் கொண்டேதான் இருக்கிறது ; உங்கள் கேள்விக்கு மட்டும் அல்ல , அது உங்கள் ஆணைக்கும் செவிசாய்க்கிறது ! உங்களைச் சுற்றியுள்ள அனைத்தையும் குறித்து நீங்கள் விழிப்புணர்வோடு இருங்கள் . அது பேசும். அது பேசிக் கொண்டேதான் இருக்கிறது .

உங்கள் நினைவில் வைத்திருக்க வேண்டும் என்பதை நினைவில் வைத்திருங்கள் .அது குறித்து விழிப்புணர்வோடு இருங்கள் .
ஏனெனில் நாளின் ஒவ்வொரு கணத்திலும் , உங்கள் கேள்விகளுக்கான பதில்கள் உங்களுக்கு அனுப்பப்பட்டுக் கொண்டேயிருக்கின்றன .

எந்தெந்த வழிகளில் அவை வரும் என்று சொல்ல முடியாது . அவை கணக்கில் அடங்காது .
உங்கள் கவனத்தை ஈர்க்கும் ஒரு பத்திரிக்கைத் தலைப்பாக அது இருக்கலாம் ;
அல்லது வேறு யாராவது பேசும்போது தெறித்த வார்த்தைகளாக கூட அது இருக்கலாம் ;
அல்லது வானொலியில் ஒலிக்கும் ஒரு பாடலாக இருக்கலாம் ;
அல்லது உங்களை கடந்து செல்லும் லாரியின் விளம்பர வாசகமாக அது இருக்கலாம் .
உங்கள் கேள்விக்குரிய பதில்கள் உங்களைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டே இருக்கின்றன .
இந்தக் கேள்வி இந்த பிரபஞ்சத்திடம் நீங்கள் கேட்ட கேள்வி , அது உங்களுக்கு வெறும் கேள்வியாக இருக்கலாம் ; ஆனால் பிரபஞ்சத்திற்கோ அது ஆணை
அது செய்து முடித்தே தீரும்.
கோடையில் வற்றிவிடும் எகிப்து நைல் நதிக்கு கன்னிப் பெண் நரபலி கொடுத்த பின்பே நதி பெருக்கெடுத்து ஓடும் ஒரு வழக்கமாக அக்காலத்தில் இருந்தது .

இஸ்லாமிய ஆட்சி எகிப்தில் நடைபெற்றுக் கொண்டிருந்தது .அதுவும்
உமர் ரலி அவர்களின் ஆட்சி காலம்.
கலீபா உமர் (ரலி) அவர்கள் நைல் நதிக்கு கடிதம் எழுதினார்கள் :
" நைலே . . . ! வற்றாத ஜீவ நதியாக காலமெல்லாம் ஓடுவதாக இருந்தால் ஓடட்டும் ; இல்லையேல் நைல் இவ்வுலகிற்கு வேண்டாம் "
. . என்று எழுதி அந்த கடிதத்தை நைல் நதியின் கரையில் கட்டி வைக்கப்பட்டது அன்றிரவு அட மழை அடித்தது . நைல் பெருக்கெடுத்து ஓடியது. ஓடியது இன்று வரை ஓடிக்கொண்டே இருக்கிறது .
அன்றைய தினத்தில் இருந்து வற்றாத ஜீவ நதியாக நைல் இன்றும் ஓடிக் கொண்டிருக்கிறது .
தட்டுங்கள் திறக்கப்படும் .
கேளுங்கள் கொடுக்கப்படும் .
ர.ரா

மண்டி கிடக்கும் மனவெளி (Mindscape or Mind Space )
(கலங்காதிரு மனமே 20 )

ரூடிரக்கர் என்பவர் " மனவெளி **(Mindscape or Mind Space )** என்று ஒன்று இருக்கிறது . அங்கே கணித உண்மைகள் , விஞ்ஞான விதிகள் , இதுவரை கண்டறியப்படாத யுக்திகள் இவைகளெல்லாம் வசிக்கின்றன. மன வெளியில் இருந்துதான் நாம் ஒவ்வொன்றாகக் கண்டறிகிறோம் " என்கிறார்.

சில சமயம் இம்மாதிரியான உண்மைகளின் தரிசன விளக்கம் சட்டென்று சற்றும் எதிர்பாராமல் நிகழ்கின்றன .
இளம் விஞ்ஞானி கார்ல் காஸ் **(Carl Gauss)** ஒரு முக்கியமான கணக்கு விடை கிடைக்காமல் மாதக்கணக்கில் தவிர்த்திருக்கிறார். ஒரு நாள் சட்டென்று மின்னலடித்தாற் போல் விடை கிடைத்தது என்று அவரே எழுதியிருக்கிறார் .

விஞ்ஞானிகள் கண்டுபிடித்த விதிகளெல்லாம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த மனவெளியில் கேட்பாரற்று கிடந்தன . அதை ஒரு நியூட்டனோ , ஒரு டால்டனோ , ஒரு ஐன்ஸ்டீனோ அதனுள் பிரவேசித்து , அதை எடுத்துச் சொன்னார்கள் . நோபலையும் பெற்றார்கள் .
உலகில் இவர்கள் புவி ஈர்ப்பு விசை விதியையோ , ஒளியியல் விதியையோ சொல்வதற்கு முன் அந்த விதிகள் எங்கிருந்தன ? நீங்கள் யோசித்தீர்களா ?
அவைகளெல்லாம் இந்த மன வெளியில்தான் மண்டிக் கிடந்தன. இன்னும் கோடான கோடி விதிகள் நம்மை சந்திக்க இன்னும் காத்திருக்கின்றன .

ஒருமுறை பத்து அறிஞர்கள் அலி (ரலி) அவர்களிடம் வந்து "அறிவு, செல்வத்தை விட சிறந்ததா?'' என்ற ஒரே கேள்வியைக் கேட்டு பத்து பதில்களைத் தருமாறு வேண்டினர்.
அலி (ரலி) அளித்த பதில்கள்.

1. அறிவு இறைதூதர்களின் வாரிசுகளுக்கு உரியது. செல்வம் செருக்குற்ற பிர்அவ்னிடமிருந்து பெறப்படுவது.
2. செல்வத்தை நீங்கள் பாதுகாக்கிறீர்கள். அறிவு உங்களைப் பாதுகாக்கிறது.
3. செல்வருக்குப் பகைவர்கள் பலர் இருப்பர். அறிஞர்கள் நண்பர்களைப் பெற்றிருப்பர்.
4. செல்வம் கொடுக்க குறையும். அறிவு கொடுக்க கொடுக்க கூடும்.
5. செல்வன் கருமிஆவதும் உண்டு. அறிஞன் தாராள தன்மையில் குறைய மாட்டான்.
6. செல்வம் திருடப்படும். அறிவைக் களவாட முடியாது.
7. மறுமையில் செல்வம் கேள்வி கணக்கிற்கு உள்ளாகும். அறிவின் செலவு சிறப்பு பெறும்.
8. செல்வம் காலத்தால் அழியும். அறிவு காலத்தை வெல்லும்.
9. அறிவால் செல்வம் பெருகும். செல்வம் அறிவை அழிக்கும்.
10. அறிவால் அல்லாஹ்வை அறியலாம். செல்வச் செருக்கு இறைவனிடமிருந்து விலக்கி வேதனையில் வீழ்த்தும்.

அலி (ரலி) அவர்களிடம் ஒருவர் "ஒரு வீட்டில் ஒருவனை அடைத்து சன்னலோ கதவோ வேறு வகை வழி எதுவுமின்றி சுவர் எழுப்பி மூடிவிட்டால் அவனுக்கு உணவு எவ்வழியில் வரும்?'' என்று ஏளனமாக கேட்டார்.
அலி (ரலி) "இறப்பு எவ்வழியாக வருமோ அவ்வழியாக உணவும் வரும்'' என்று கேள்வி கேட்டவன் திகைக்கும் வண்ணம் மிகைக்கும் பதிலைக் கூறினார்கள்.
ஒரு நாத்திகன் "மறுமை இல்லை' என்று வாதிட்டான். அலி (ரலி) "உன் வாதப்படி மறுமை இல்லையேல் இருவரும் தப்பிப்போம். என் அறிவுக்கு எட்டிய மறுமை இருந்தால் நான் தப்பிப்பேன். நீ தண்டிக்கப்படுவாய்'' என்ற பதிலைக் கேட்டு நாத்திகன் மறுமையை நம்பினான்.

கேள்வி: குட்டி போடும் பிராணிகள் எவை? முட்டையிட்டு குஞ்சு பொறிப்பவை எவை? என்பதை எப்படி அறிவது?
பதில்: எப்பிராணிகள் வெளிப்புறத்தில் காதுகளைப் பெற்றிருக்கிறதோ அவை குட்டிபோடும் பிராணிகள். உட்புறத்தில் காதுகளை உடைய பிராணிகள் முட்டையிட்டு குஞ்சு பொறிப்பவை.
கேள்வி: கிழக்கிற்கும் மேற்கிற்கும் உள்ள தொலைவு எவ்வளவு?
பதில்: ஒருநாளில் சூரியன் எவ்வளவு தொலைவைக் கடக்கிறதோ அவ்வளவே கிழக்கிற்கும் மேற்கிற்கும் உள்ள தொலைவு.

கேள்வி: மனிதன் சார்ந்து நிற்பவனா? பிற துணையின்றி சுயமே செயல்படும் சுதந்திரமானவனா?
பதில்: அலி (ரலி) கேள்வி கேட்டவனை ஒரு காலைத் தூக்கி கொண்டு நிற்க சொன்னார்கள். நின்றான். இன்னொரு காலையும் தூக்கிக் கொண்டு நிற்க சொன்னதும் எப்படி முடியும்? என்று இயலாமையை இயம்பினான் வியப்புறு கேள்வி கேட்டவன். இதுவே சுய சுதந்திரத்திற்கும் சார்ந்து நிற்பதற்கும் உரிய விளக்கம் என்றார்கள் அலி (ரலி).

கேள்வி: ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள எண்களால் மீதமின்றி வகுபடும் எண் எது?
பதில்: மாதத்தின் நாள்கள் 30. வாரத்தின் நாள்கள் 7. மாதங்கள் 12. இவற்றின் பெருக்கலே உன் கேள்விக்கு விடை.
ஒரு பெண் அழுது அலறிக்கொண்டு ஓடி வந்தாள். அவளின் குழந்தை ஒன்று நீர்க்குழாயின் மீது ஏறி அமர்ந்து இறங்க மறுக்கிறது. சொல்வதை சைகையைப் புரியும் வயதில்லை. பாலைக் காட்டினாலும் காலை இறக்கவில்லை செய்வது அறியேன், செப்புங்கள் வழியை என்று பதறினாள்.
அலி (ரலி) கூரை வரை இன்னொரு குழந்தையை கொண்டு செல்லுங்கள். மற்றொரு குழந்தையை பார்த்ததும் மேலிருக்கும் குழந்தை கீழிருக்கும் குழந்தையின் பக்கம் வரும். பரிதவித்த தாய் மற்றொரு குழந்தையை கூரை வரை கொண்டு சென்றாள். குழாய் மேலிருந்த குழந்தை கூரைக்குத் தவழ்ந்து வந்தது.

கேள்வி: என் உடன் பிறந்தவன் இறந்து விட்டான். அறுநூறு திர்ஹங்கள் அவனின் சொத்து. அவனின் தங்கையாகிய எனக்குரிய பங்கு ஒரு திர்ஹம் தானா? (அக்குடும்ப உறுப்பினர்களை அலி (ரலி) அறிந்திருந்தார்).
பதில்: உன் உடன் பிறந்தவன் அறுநூறு திர்ஹம்களையும் இரு பெண் மக்களையும் , தன் தாயையும் , மனைவியையும் , பன்னிரண்டு சகோதரர்களையும் , உன்னையும் விட்டுச் சென்றான் .
அந்த அறுநூறு திர்ஹம்களில் இரண்டு பெண் மக்களுக்கும் அல்லாஹ் சொல்லியபடி நானூறும் , தாய்க்கு நூறும் , மனைவிக்கு எழுபத்தைந்தும் , சகோதரர்கள் பன்னிரண்டு பேர்களுக்கும் இருபத்து நான்கும் , உனக்கு ஒரு திர்ஹம் வருகின்றன " என்றார்கள்

கேள்வி: யானையின் எடையை எவ்வாறு அறியலாம்? (நவீன கணக்கிடும் கருவிகள் இல்லாத காலத்தில்...)
பதில்: யானையை கப்பலில் ஏற்றுங்கள், ஏற்றியதும் கப்பல் கடலில் அமிழும் அளவைக் குறித்துக் கொள்ளுங்கள். யானையை இறக்கி விடுங்கள். யானையை ஏற்றியபொழுது கப்பல் கடலில் அமிழும் வரை கற்களைப் போடுங்கள். அக்கற்களை எடுத்து எடை போடுங்கள். அந்த கற்களின் எடையே யானையின் எடை.

கேள்வி: என் தலையில் எத்தனை உரோமங்கள் உள்ளன?
பதில்: நான் கூறுவதை எண்ணி சரிபார்க்க உங்களால் முடியுமா?
கேட்டவர்: முடியாது.
பதில்: உங்களால் உறுதிசெய்து கொள்ள முடியாத கேள்விகளைக் கேட்காதீர்கள்.
அலி (ரலி) அவர்கள் அறிவார்ந்த பதில்களால் மக்களுக்கு அறிவூட்டியவாறு நாமும் அறிவை ஆக்கவழியில் பயன்படுத்தி பயனுற ஊக்கம் ஊட்ட வேண்டும்.
இத்துடன் "கலங்காதிரு மனமே ! " தொடர் பதிவு நிறைவு பெறுகிறது .

**Rahmath Rajakumaran**

கலங்காதிரு மனமே ! பதிவுகள் பதிப்பித்துக் கொண்டிருக்கும் தருணத்தில் அநேக நண்பர்கள் , "இந்த விஷயங்கள் எந்த நூலிலிருந்து ஆய்வு செய்தீர்கள் ? அதையெல்லாம் குறிப்பிட்டால் என்ன ? " இது மாதிரி அதிகம் கேள்வி கேட்டனர் . சிலர் வருத்தப்படவும் செய்தார்கள் .

1) ஆழ்மனத்தின் அற்புத சக்தி
– டாக்டர் ஜோஸப் மர்ஃபி
2) எண்ணமே வாழ்வு
அப்துற் - றஹீம்
3) மனத்தை வெல்லுவாய் ! மனிதனாகுவாய் ! !
அப்துற் - றஹீம்
4) The Secret
Rhonda Byrne
5) நிஜங்கள்
ருத்ரன்
மற்றும் கலீபாக்கள் வரலாறு , நபி (ஸல்) வாழ்கை வரலாறு , புகாரி , முஸ்லீம்
மற்றும் இணைய தளத்தின் செய்திகள் மற்றும் இணைய தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்யப்பட்ட படங்கள் .

கலங்காதிரு மனமே ஒவ்வொரு பதிவிலும் மேற்கண்ட புத்தகத்தின் ஓரிரு வரிகளோ , அல்லது கருத்துக்கள் மட்டுமே கவர்ந்திழுத்து என் சொந்த நடையில் உங்களுக்கு தந்துள்ளேன் .
ஆகையால் ஒவ்வொரு பதிவும் பல புத்தகங்கள் , இணையம் , மற்றும் பல வரலாற்று ஆவணங்களை தொட்டுத் தழுவி இருப்பதால் அந்தந்த பதிவின் கீழ் ஆதார நூற்கள் சொல்ல என்னால் இயலவில்லை .
நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என நினைக்கிறேன் .




மருத்துவ டைரி குறிப்புகள் 1
(ஒப்பந்த உறுதி மொழி )



" மனிதாபிமான அடிப்படையில் சேவை செய்வதுதான் என்னுடைய பிரதான நோக்கமாக இருக்கும். அதன் மூலம் கிடைக்கும் பணமோ, இதர சலுகைகளோ எனக்கு இரண்டாம் பட்சம்தான் .
மிரட்டலுக்குப் பயந்தோ, அரசியல் செல்வாக்குக்கு அடிபணிந்தோ , சாதி , மத ரீதியான பாகுபாடு பார்த்தோ என் நோயாளிகளை புறக்கணிக்க மாட்டேன் .
அவர்களுக்கு சிகிச்சை அளிக்க நான் ஒரு போதும் மறுக்க மாட்டேன் .மனிதத் தன்மைக்கு விரோதமாக எப்போதுமே நடக்க மாட்டேன் .
என்னிடம் வரும் நோயாளிகளை தேவையற்ற பரிசோதனைகள் செய்து கொள்ள பரிந்துரைக்க மாட்டேன்.
லேபரட்டரிக்கு பரிந்துரை செய்யவோ ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்களிடம் உயர் சிகிச்சைக்கு அனுப்பவோ கமிஷன் வாங்க மாட்டேன்.
நோயாளிகளை என்னிடம் ஈர்த்து வருவதற்கு ஏஜெண்ட்கள் யாரையும் நியமிக்க மாட்டேன் .
எம்.பி,பி.எஸ் முடித்துவிட்டு மருத்துவக் கல்லூரியிலிருந்து வெளியில் வரும் ஒவ்வொரு டாக்டரும் இந்திய மருத்துவ கவுன்சிலில் இப்படி ஓர் உறுதிமொழியை படித்துக் கையொழுத்திட்டுத் தர வேண்டும் .
அதன் பிறகே அந்த டாக்டருக்குப் பதிவுஎண் தரும் .இதைப் பெற்ற பிறகே அவர் முழுமையான டாக்டராகி நோயாளிகளுக்குச் சிகிச்சை தரலாம். இந்த உறுதிமொழியில் கையெழுத்திடாத எந்த ஒரு நபரும் டாக்டராக பிராக்டீஸ் செய்ய முடியாது.

ஆனால் ... நெஞ்சைத் தொட்டுச் சொல்லச் சொல்லுங்கள் , எத்தனை டாக்டர்கள் இந்த உறுதி மொழியைக் கடைப்பிடிக்கிறார்கள் ?
மரணப் பயத்தோடு கடவுளுக்கு அடுத்து இந்த மருத்துவர்தான் என்று நம்பும் நோயாளியின் உடல் வேதனையைப் பரிசோதிப்பதைவிட , நோயாளியின் பாக்கெட்டின் கனத்தை தங்களின் எக்ஸ்-ரே கண்களால் அளந்து பார்க்கும் டாக்டர்கள் எத்தனை பேர் ?
தேவையற்ற சோதனைகளை செய்ய வைத்து , தவிர்க்கக் கூடிய ஆபரேஷனை கட்டாயப்படுத்தி செய்து , அந்த நோயாளிகளை நடைபிணமாக்கி , நிரந்தரக் கடனாளியாக்கி , சக்கையாகத் தூக்கியெறியும் மருத்துவமனைகள்தான் எத்தனை ?
1956 -ல் இந்திய மருத்துவ கவுன்சில் ஆரம்பிக்கப்பட்ட போது ,டாக்டர்களுக்கு சில நடத்தை விதிகளை நிர்ணயித்து 46 வருடங்களுக்குப் பிறகு 2002 மார்ச் மாதம்தான் அவை திருத்தப்பட்டு , கடுமையான சில விதிகள் சேர்க்கப்பட்டன.
முன்பெல்லாம் " ஒரு டாக்டர் தப்பு செய்வது தெரிந்தால் கூட, தொழில் விசுவாசம் காரணமாக அதை இன்னொரு டாக்டர் காட்டிக் கொடுக்கக் கூடாது " என்று விதி இருந்தது .
இப்போது அதை மாற்றி , " ஊழல் புரியும்
திறமையற்ற , நெறிமுறை தவறிய டாக்டர்களை எவ்வித பயமுமின்றி அம்பலப்படுத்துவது இன்னொரு டாக்டரின் கடமை " என்று பச்சைக்கொடி காட்டியிருக்கிறார்கள் .
இதன் அடிப்படையில் மக்களிடையே விழிப்பு உணர்வு ஏற்படுத்த பல்வேறு பயிற்சி முகாம்கள் நடத்தி வரும் டாக்டர் சேதுராமன் இதற்காக சக டாக்டர்களுடன் இணைந்து EQUIP என்ற அமைப்பையும் இருக்கிறார் . இந்த **EQUIP Society வெளியிட்ட " Trick Or Treat "** ஆங்கிலப் புத்தகம் பெரும் பரபரப்பைக் கிளப்பியது .

الَّذِيْنَ يَنْقُضُوْنَ عَهْدَ اللّٰهِ مِنْۢ بَعْدِ مِيْثَاقِهٖ وَيَقْطَعُوْنَ مَآ اَمَرَ اللّٰهُ بِهٖۤ اَنْ يُّوْصَلَ وَيُفْسِدُوْنَ فِى الْاَرْضِ اُولٰٓٮِٕكَ هُمُ الْخٰسِرُوْنَ
இ(த் தீய)வர்கள் அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தத்தை, அது உறுதிப்படுத்தப்பட்ட பின்னர் முறித்து விடுகின்றனர். அல்லாஹ் ஒன்றிணைக்கப்பட வேண்டும் என்று கட்டளை இட்டதைத் துண்டித்து விடுவதுடன் பூமியில் குழப்பத்தையும் உண்டாக்குகிறார்கள்; இவர்களே தாம் நஷ்டவாளிகள்.
(அல்குர்ஆன் : 2:27)
ர.ரா

**Rahmath Rajakumaran**
" The Doctor's Dilemma " என்ற நாடகத்தை எழுதிய பெர்னாட்ஷா அதன் முன்னுரையில் ...
- மரணமில்லாத பெருவாழ்வு வாழ வேண்டும் என நினைக்காதீர்கள் .அதில் உங்களுக்கு எப்போதுமே வெற்றி கிடைக்காது .
_ உடலும் மனமும் ஆரோக்கியமாக இருக்கும் போ்தே உழைப்புக்கும் சிந்தனைக்கும் அவற்றை நல்ல முறையில் உபயோகிங்கள் .
- ஒரு சமுதாயம் நல்ல முறையில் இருக்க எத்தனை டாக்டர்கள் தேவையோ முடிவு செய்யுங்கள் .அதிகமாகவோ குறைவாகவோ உருவாக்காதீர்கள் . தரக்குறைவான டாக்டரை விட ஆபத்தான விஷயம் வேறெதுவும் இல்லை .
- குணப்படுத்த முடியாத எந்த ஒரு நோயையும் குணமாக்குவேன் அந்த திறமை எனக்கு மட்டும் இருக்கிறது என்று யாராவது சொன்னால் நம்பாதீர்கள் .அவர்கள் போலிச் சாமியார்களை விட மோசமானவர்கள் .
- உலகில் நடைபெறும் சமூக விரோத செயல்களிலேயே மிக மோசமானது , நோயின் வேதனையோடு பரிதவித்து வரும் அப்பாவிகளிடம் சிகிச்சை என்ற பெயரில் அநியாயமாகப் பணம் பறிப்பதுதான் .

எய்ட்ஸ்ம் , எலிஸா டெஸ்ட்டும்
மருத்துவ டைரி குறிப்புகள் 2




விஷம் குடித்துத் தற்கொலைக்கு முயன்ற இளைஞனை விசாரித்ததில் ,
அவனுக்குக் காதல் தோல்வியும் இல்லை. பரீட்சையில் ஃபெயிலாகவும் இல்லை.
"பிறகு எதற்கு தற்கொலைக்கு நீ ஏன் முயன்றே ? "
"எங்க காலேஜில் ரத்த தான முகாம் நடந்தது .நானும் ஆர்வத்தோடு இரத்த தானம் செய்தேன் . சில நாட்கள் கழித்து அந்த முகாம் நடத்திய தனியார் இரத்த வங்கியிலிருந்து போன் பண்ணி என்னை அழைத்தார்கள் .நானும் போனேன் .
" உங்கள் இரத்தத்தில் ஹெச்.ஐ.வி (HIV) பாஸிடிவ் . எய்ட்ஸ் நோய்க்கான அறிகுறி இருக்கிறது " என்றார்கள் .
" எனக்கு எந்தக் கெட்டப் பழக்கமும் இல்லை. பெண்கள் தொடர்பு சுத்தமாக இல்லை. ஆபரேஷுக்காக தானமாக இரத்தம் பெற்று ஏற்றிக் கொண்டதும் இல்லை. அப்படி இருந்தும் எனக்கு எப்படி எய்ட்ஸ் . இப்படி ஒரு மோசமான நோயோடு வெட்கக்கேடோடு எப்படி வாழ்வது … எனவே செத்துப் போயிடலாமென முடிவு எடுத்தேன் "
அவனை கவுன்சிலிங் செய்த டாக்டர் மீண்டும் HIV டெஸ்ட் செய்ய HIV நெகடிவ் எய்ட்ஸ் இல்லை என்று வந்தது .
எய்ட்ஸ்க்கு பொதுவாக " எலிஸா " டெஸ்ட் என்ற பரிசோதனை செய்வார்கள் . இந்த டெஸ்ட் 100 பேருக்கு டெஸ்ட் எடுத்தால் ஐந்து பேருக்கு இருப்பதாக தவறான முடிவுகளை காட்டக் கூடியது. ஆனால் சில இரத்த வங்கிகள் இதுபற்றியெல்லாம் கவலைப்படுவது இல்லை . தானம் பெறும் இரத்தம் HIV பாஸிடிவ் என்று தெரிந்தால் , அதை உறுதிப்படுத்தும் சோதனைகள் செய்யாமல் அவசரப்பட்டு தானம் கொடுத்தவரிடம் சொல்லக் கூடாது என்ற கட்டுப்பாடு இருந்தும் கூட தெரியப்படுத்தி , இது மாதிரி சிலர் தற்கொலைக்கு வழி வகுத்து விடுகிறார்கள் .
சில இளைஞர்கள் உடலுறவு கொள்ளாமல் விபச்சாரத்தின் பக்கம் நெருங்கி ,அப்படி இப்படியுமாக இருந்ததால் HIV தொற்று நமக்கு ஏற்பட்டு இருக்கலாம் என எண்ணி இந்த தவறான முடிவுக்கு ஆளாகலாம் .
இதனால்தான் இஸ்லாம்

وَلَا تَقْرَبُوا الزِّنٰٓى اِنَّهٗ كَانَ فَاحِشَةً وَسَآءَ سَبِيْلًا
(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் விபசாரத்திற்கு நெருங்கவும் வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக அது மானக்கேடானதாகவும், தீய வழியாகவும் இருக்கிறது.
(அல்குர்ஆன் : 17:32)

"விபச்சாரத்திற்கு நெருங்குதல் " என்றால் , இதுபோன்ற கேடுகெட்ட காட்சிகளைப் பார்த்துப் பார்த்து ரசிப்பது, குழைந்து குழைந்து பேசுவது, கணவன் மனைவி அல்லாத ஆண் பெண் இருவர் கொஞ்சுவது , இரவில் போர்வையை போர்த்திக் கொண்டு விடிய விடிய செல்போனில் பேசுவது , பின் தனிமையில் சந்திப்பது போன்றவைதான்.
கணவனிடம் மனைவி கொஞ்சுவதற்குப் பெயர் இல்லறம். குடும்பவியல். ஆனால் சம்பந்தமே இல்லாத ஒரு ஆண் பெண்ணிடமோ,பெண் ஒரு ஆணிடமோ கொஞ்சுவது விபச்சாரத்திற்கு நெருங்குதல் ஆகும்.

இப்படியே நெருங்கி, நெருங்கி கடைசியில் எதை விபச்சாரம் என்று இறைவன் சொல்கிறானோ, எதை இந்தச் சமூகமும் விபச்சாரம் என ஒத்துக் கொள்கிறதோ அதில் விழுந்துவிடுகிற நிலையைப் பார்க்கிறோம்.
அதனால்தான் விபச்சாரத்தின் பக்கம் கூட நெருங்காதே! அப்படி நெருங்குவது அருவருக்கத்தக்கதும் கெட்ட வழியுமாகும் என்று இறைவன் எச்சரிக்கிறான்.
ர.ரா

கண் அறுவை சிகிச்சை
(மருத்துவ டைரி குறிப்புகள் 3)



1993 -ல் ஹைதராபாத்தில் மிகவும் பிரபல மருத்துவமனையில் ரஷ்யக் கண்டுபிடிப்பு என்று சொல்லி நவீன ரக கண் அறுவை சிகிச்சை முறை ஒன்றை அறிமுகம் செய்தது .
கிட்டப்பார்வை குறைபாடு உள்ளவர்களுக்கு லேசர் சிகிச்சை மூலம் நிவாரணம் தரும் முயற்சி அது. இந்த சிகிச்சையில் கொஞ்சம் ரிஸ்க்கும் இருந்தது.
அதாவது லேசர் சிகிச்சை தரும் போது கண்ணில் பாதிப்பு ஏற்பட்டு வடுக்கள் தோன்ற வாய்ப்பு உண்டு. இதனால் கண் பார்வையே பறிபோகிற அபாயம் இருந்தது. கண்ணாடி போட்டுக் கொண்டு கொஞ்சம் அவஸ்தையோடு பார்தவர்கள் கூட " உள்ளதும் போச்சுடா நொள்ளைக் கண்ணா " என்று முழுக்குருடாகி விடுகிற ஆபத்து !
ஆனால் இந்த ரிஸ்க்கை ஆரம்பத்தில் அந்த ஹைதராபாத் மருத்துவமனை மக்களுக்கு குறிப்பிடவில்லை .

ஆர்ப்பாட்டமான விளம்பரங்களோடு லேசர் சிகிச்சை பிரிவு திறக்கப்பட உடனே பத்திரிக்கைகள் லேசர் அறுவை சிகிச்சையை தூக்கி உச்சாணி கொப்பில் வைத்து கொண்டாடின
" கிட்டப்பார்வைக் குறைபாட்டுக்காக கண்ணாடி போடுபவரா நீங்கள் ? ச்சே.. உங்கள் கண்ணாடியைத் தூக்கி எறியுங்கள் " என்றெல்லாம் லேசர் புராணம் பத்திரிக்கைகள் பாடின.
ஆனால் , சில மாதங்களிலே ரிஸ்க் வெளியே ஆரம்பித்தது . லேசர் சிகிச்சை செய்து கொண்ட சிலருக்கு கண் பார்வை பறிபோனது .

புகழ்ந்த இதே பத்திரிக்கைகள் " லேசர் சிகிச்சை மிக ஆபத்தானது . ஏகப்பட்ட பணம் செலவழித்து ஓரளவு நன்றாக இருக்கும் கண்ணை யாராவது குருடாக்கி கொள்வார்களா ? " என்று கடுமையாக வசை பாடின. பின்பு லேசர் சிகிச்சைக்கு யாருமே அந்த ஹைதராபாத் மருத்துவமனைக்கு வராததால் அந்த அறுவை சிகிச்சைப் பிரிவையே மூடப்பட்பட்டது .
ஆனால் முதன் முதலில் இதற்கான அறுவை சிகிச்சையை இந்திய

மருத்துவர் முனிவர் சுசுருதா சுமார் 3000 வருடங்களுக்கு முன் உருவாக்கியதாகத் தெரிகிறது.
இந்திய அறுவை சிகிச்சை முறையில் "ஜபமுகி சாலகா " என்ற சிறப்புக்கருவி, ஓர் வளைந்த ஊசி, மூலம் கண் வில்லையை பெயர்த்தெடுத்தனர்
பின்னர் சூடான வெண்ணெயில் ஊறவைத்துக் கட்டுப் போட்டனர்.இந்த முறை வெற்றிகரமாக அமைந்தாலும் சுசுருதா இதனை தேவையேற்பட்டால் மட்டுமே பயன்படுத்த அறிவுரைத்தார்.

கிரேக்க மருத்துவர்களும் மெய்யியலாளர்களும் இந்த அறுவை சிகிட்சையைக் காண இந்தியாவிற்கு வந்தனர். இந்தமுறை சீனாவிலும் அறிமுகப்படுத்தப்பட்டது.
தொன்மையான உரோமாவில் கண்புரை மற்றும் சிகிட்சை குறித்த குறிப்புகள்
கி. பி 29 ஆம் ஆண்டு இலத்தீன் கலைகளஞ்சிய ஆசிரியர் ஔலஸ் கார்னியலஸ் செல்சஸ் எழுதிய
**தெ மெடிசன் (De Medicinae)** புத்தகத்தில் உள்ளன கண் மருத்துவத்துறையில் உரோமானியர்கள் சிறந்து விளங்கினர்.

ஈராக்கிய கண்மருத்துவர் அம்மர் இபின் அலி உறுஞ்சுதல் முறையில் முதன்முதலில் புரையெடுத்தார். ஓர் வெறுமையான உலோக உறுஞ்சுகுழலை கண்ணின் மேல் வைத்து தோலினடி **(hypodermic)** ஊசி மூலம் புரையை உறிஞ்சினார்.
கி.பி 1000 ஆம் ஆண்டில் அவர் எழுதிய **Choice of Eye Diseases** என்ற புத்தகத்தில் தாம் எவ்வாறு தோலினடி ஊசியைக் கண்டுபிடிக்கும்போது ஓர் விபத்தாக கண்புரை வெளியேற்றத்தை கண்டறிந்ததாக விளக்கியுள்ளார்.

நபி யஃகூப் அலை அவர்கள் தமது மகனான யூசுஃப் நபியை சிறு வயதில் தவறவிட்டதால் கவலையில் அழுதழுது கண்ணீர் சிந்தாத நாளில்லை இதனால் அவர்களின் கண் பார்வையை இழந்தார்கள்
சிறு வயதில் காணாமல் போன யூசுஃப் நபி அவர்கள் எகிப்தின் அரசவையில் வளர்ந்து அரசின் பொது விநியோகத் திட்டத்தை செயல்படுத்திய போது அவரது உடன் பிறந்த சகோதரர்களைக் காணுகிறார் தந்தையை அழைத்து வருமாறு பணிக்கிறார் தந்தைக்கு பார்வை பறி போய்விட்டது என்கிறார்கள் சகோதரர்கள் , அப்போது நபி யூசுஃப் அவர்கள் " நீங்கள் என்னுடைய இந்தச் சட்டையைக் கொண்டு போய் என் தந்தை முகத்தில் போடுங்கள் அதனால் இழந்த பார்வையை அடைந்து விடுவார்கள் பின்னர் நீங்கள் உங்க குடும்பத்திலுள்ள அனைவரையும் அழைத்துக் கொண்டு என்னிடம் வாருங்கள் என்று கூறி அனுப்பினார்
குர்ஆன் (12 : 93)

இந்த வசனத்தை திரும்ப திரும்பப் படித்த எகிப்து நாட்டு டாக்டர் அப்துல் பாசித் முஹம்மது அவர்கள் மனிதனின் வியர்வை துளிகளை ஆய்வு செய்து அதிலிருந்து Secretions of human sweat gland லிருந்து மிகவும் பயனுள்ள எந்த பக்க விளைவும் இல்லாத ஒரு மருந்தை கண்டு பிடித்தார் அந்த மருந்தைக் கொண்டு 250 கண்புரை நோயாளிகளுக்கு தினமும் இரண்டு முறை என இரண்டு வாரம் சிகிச்சை தந்தார் 99 சதவிகிதம் வெற்றி கிடைத்தது

பின்னர் அந்த மருந்தை அமெரிக்க மற்றும் ஐரோப்பிய நாடுகளில் பதிவு செய்தார் அந்த மருந்தை சுவிஸ் நாட்டைச் சேர்ந்த பன்னாட்டு நிறுவனம் அவருடன் ஒப்பந்தம் செய்து கொள்ள முன் வந்தது அதற்கு அவர் இந்த மருந்து பாட்டலில் . . "இது திருக்குர்ஆன் மருந்து **medicine of holy Quran** என்ற வாசகத்தை கண்டிப்பாக பதிய வேண்டும் என்ற நிபந்தனையுடன் அந்த மருந்து அமெரிக்க மற்றும் ஐரோப்பிய நாடுகளில் கடும் கிராக்கியுடன் விற்பனையாகிறது

ஆதாரம் அர் . ராயா என்ற அரபு இதழ்
தமிழில் " எழுச்சி முரசு " ஜூன் 2014
ர.ரா

சிசேரியன் ஆப்ரேஷன்
(மருத்துவ டைரி குறிப்புகள் 3)



**" partogram "** என்ற ஒரு பரிசோதனையை கர்ப்பிணிப் பெண்களுக்கு செய்கிறார்கள். அதாவது பிரசவ நேரத்தில் கருவிலிருக்கும் குழந்தையின் இதயத்துடிப்பு , கர்ப்பப்பை சுருங்கி விரியும் விதம் , குழந்தை சரியான பொஸிஷனில் இருக்கிறதா அல்லது பொஸிஷன் இல்லாமல் இருக்கிறதா இவற்றைக் கண்காணித்துத்தான் குழந்தை சுகப்பிரசவத்தில் பிறக்குமா , சிசேரியன் செய்ய வேண்டுமா என்று டாக்டர்கள் முடிவு செய்கிறார்கள் .

இப்படி பரிசோதித்தப் பின் சுகப்பிரசவத்தின் மூலம் குழந்தை பிறக்க வாய்ப்புகள் இருந்தும் , கர்ப்பிணித் தாய்மார்களின் அடிவயிற்றைக் கிழித்து சிசேரியன் முறையில் குழந்தையை வெளியே எடுப்பது, சில டாக்டர்கள் செய்யும் துரோகச்செயல் இதற்கு மருத்துவ ரீதியான காரணம் எதுவுமில்லை .
பின்னே ஏன் கத்தியை அடிவயிற்றில் சொருக வேண்டும் ? எல்லாம் பணம் மட்டுமே காரணம் என்பதை மஹாராஷ்டிராவில் நடத்தப்பட்ட ஓர் ஆய்வு நிருபித்துள்ளது.

பொதுவாக ஒரு மருத்துவமனையில் 100 குழந்தைகள் பிறக்கின்றன என்றால் , அதில் 70 சுகப்பிரசவங்களும் 30 சிசேரியனாக இருக்கும் என்று பல்வேறு புள்ளி விவரங்களின் அடிப்படையில் வந்த ஒரு கணக்கு இது.
ஆனால் 1987 வருடத்தில் இருந்து மும்பை தனியார் மருத்துவமனைகளில் 90 சதவிதம் பிரசவங்கள் சிசேரியனாக உயர்ந்தது , வெறும் 10 பேருக்குத்தான் சுவப் பிரசவமா ? இது கொடுமை ,பெரும் சர்ச்சையைக் கிளம்பியது.
உடனே தனியார் மருத்துவமனை நிர்வாகிகளின் கூட்டத்தைக் கூட்டினார்கள் . பெண்களின் அடிவயிற்றை தறிகெட்ட விதமாக அறுக்கப்படும் இந்த பிரச்சனை குறித்து சீரியஸான விவாதம் நடந்தது .

கடைசியில் " சுகப்பிரசவத்துக்கும் , சிசேரியனுக்கும் ஒரே கட்டணத்தை நிர்ணயித்தால் சிசேரியன் செய்வது குறைய வாய்ப்பிருக்கிறது " என்று முடிவு எடுத்து , எல்லாவகை பிரசவங்களுக்கும் கட்டணம் ஐயாயிரம் ரூபாய் என நிர்ணயம் செய்யப்பட்டது.
என்ன ஆச்சரியம் ? அடுத்த சில நாட்களிலேயே 90 சதவிகிதமாக இருந்த சிசேரியன் 40 சதவிகிதத்துக்கு குறைந்து விட்டது .இதனால் பணம்தான் மருத்துவமனை குறி என்பது பட்டவர்த்தனமாகப் புரிய வைத்தது .

ஆனாலும் இந்த சந்தோஷம் அதிக நாள் நீடிக்கவில்லை . சுகப்பிரசவத்துக்கு குறைந்தது மூன்று மணி நேரம் ஆகும் . ஆனால் அரை மணி நேரத்தில் சிசேரியன் ஆப்ரேஷனை முடித்து விடலாம் .ஆக ஒரு சுகப்பிரவசத்தை உற்று உற்று பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதில் ஆறு சிசேரியன்களை செய்து முடிக்கலாம் . எனவே பழையபடி சிசேரியன் மீண்டும் 90 சதவிகிதத்திற்கு உயர்ந்து போய்விட்டது.

அடுத்து சிசேரியன் ஆப்ரேஷனைப் பற்றி சுகாதாரப் பணிகள் துணை இயக்குநர் (சைதை சுகாதார மாவட்டம்) ராஜசேகரன் கூறியதாவது: " தரம் உயர்த்தப்பட்ட ஆரம்ப சுகாதார நிலையங்களில் சுகப்பிரசவம், சிசேரியன் செய்வதற்கேற்ற ஆபரேஷன் தியேட்டர், டாக்டர்கள், நர்ஸ்கள் அனைவரும் உள்ளனர். இங்கு தினமும் 2 முதல் 5 சிசேரியன் செய்யப்படுகிறது.

நந்திவரம் ஆரம்ப சுகாதார நிலையத்தில் கடந்த 2014 வருடம் ஜூலை 16-ம் தேதி ஒரே நாளில் 10 சிசேரியன் செய்து டாக்டர்கள் சாதனை படைத்துள்ளனர். ஆரம்ப சுகாதார நிலையத்தில் ஒரே நாளில் 10 சிசேரியன் என்பது மாபெரும் சாதனை. காரணம் மறுநாள் ஆடி மாதம் பிறப்பதால், முன்கூட்டியே குழந்தை பெற்றுக்கொள்ள கர்ப்பிணிப் பெண்கள் விருப்பம் தெரிவித்ததாக சொல்லப்படுகிறது. நவீன கம்ப்யூட்டர் காலத்தில் கூடவா சடங்கு சம்பிரதாயம்? இந்த கொடுமையை எங்கு போய் சொல்ல ?
நபி (ஸல்) அவர்கள் தாயின் பிறப்புறுப்பு வழியாக பிறக்காமல் , தாயின் விலா வயிற்று வழியாகப் பிறந்ததாக ஒரு தகவல் சொல்லப்படுகிறது .இது பற்றி பல ஆலீம்களிடம் கேட்டதற்கு , " "அப்படித்தான் நாங்களும் கேள்வி பட்டிருக்கிறோம் " என்கிறார்கள் .
நண்பர்கள் ஆதாரம் இருந்தால் தரவும் .
ர.ரா

இயற்கை கண்ணுக்கு மாற்று ஒரு போதும் கிடையாது .
(மருத்துவ டைரி குறிப்புகள் 4)



இயற்கையான உறுப்புகளை அகற்றிவிட்டு, செயற்கை உறுப்புகளை பொருத்திக் கொள்ளும் கலாசாரம் இப்போது பெருகி விட்டது .
இயற்கையான இறைவனின் படைப்புக்கு எந்த செயற்கையும் சரியான மாற்றாக ஒரு போதும் முடியாது .
சிலருக்கு விழிலென்ஸில் புகைமண்டலம் போல படியும். இதனால் பார்வை குறைபாடு ஏற்படும். . இதை கண்புரை நோய் **( Cataract )** என்பர்.

இது முதியோர்களுக்கு வரும் பொதுவான பிரச்சனை இது .இந்த நோய் முற்றிப் போகிற நிலையில் அறுவை சிகிச்சைதான் செய்ய வேண்டும் .
கண்ணுக்குள் இருக்கும் இயற்கைப் படைப்பான விழிலென்ஸை அகற்றிவிட்டு , அதற்குப் பதிலாக செயற்கையான பிளாஸ்டிக் லென்ஸை பொருத்துவார்கள் .ஒரு கண்ணுக்கு லென்ஸ் மாற்ற 8 ஆயிரம் ரூபாய் வரை செலவாகும் .

ஆனால் 40 வயதுக்குப் பிறகு பலருக்கு தூரப் பார்வை குறைபாடு அத்தனை சீரியஸானது அல்ல , விழி லென்ஸ் சுருங்கி விரியும் தன்மையை இழந்து , இறுகி விடுவதால் வரும் பிரச்சனை இது. இதை சாளேசுரம் என்பர் . இதற்கு சரியான பவர் கண்ணாடி அணிந்தாலே போதும். அதிக பட்சம் 300 ரூபாயில் முடிகிற பிரச்சனை இது .

பவர் கண்ணாடியை பரிந்துரைத்து அனுப்பாமல் கட்டாயப்படுத்தி ஏமாற்றி செயற்கை லென்ஸை பொருத்தி விடுகிறார்கள் சில டாக்டர்கள் .
பலருக்கு இந்த பிளாஸ்டிக் லென்ஸ் ஒத்துக் கொள்வதில்லை. கண்ணுக்குள் எப்போதுமே ஓர் உறுத்தல் இருக்கும். தலைவலி வரும் .கண்ணிலிருந்து நிரந்தரமாக நீர் வடியும் . தினமும் கண்ணுக்கு மருந்து போட்டுக் கொள்ள வேண்டிய பரிதாப நிலைக்கு தள்ளப்படுகிறார்கள் .
செயற்கையான பிளாஸ்டிக் லென்ஸ் பொருத்த உங்களிடம் கண் டாக்டர் சொன்னால், இன்னொரு டாக்டரிடம் சென்று சாளேசுரமா..., கண்புரை நோயா என்று தீர்மானித்து அதன் பின் ஆப்ரேஷனை முடிவு செய்யுங்கள் .

اَلَمْ نَجْعَلْ لَّهٗ عَيْنَيْنِۙ
(பார்க்கக்கூடிய) இரு கண்களையும், நாம் அவனுக்குக் கொடுக்கவில்லையா?
(அல்குர்ஆன் : 90:8)

قُلْ هُوَ الَّذِىْۤ اَنْشَاَكُمْ وَجَعَلَ لَـكُمُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَ الْاَفْـــِٕدَةَ‌ؕ قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ
(நபியே!) நீங்கள் கூறுங்கள்: அவன்தான் உங்களை படைத்து உங்களுக்குச் செவிகளையும், கண்களையும், உள்ளங்களையும் கொடுத்தவன். (அவ்வாறிருந்தும்) நீங்கள் வெகு சொற்பமாகவே (அவனுக்கு) நன்றி செலுத்துகின்றீர்கள்.
(அல்குர்ஆன் : 67:23)
ர.ரா

டான்சில்ஸ் _ (அடி நாக்கு அழற்சி )
(மருத்துவ டைரி குறிப்புகள் 5)




1980 வருடவாக்கில் அடிநாக்கு அழற்சிக்காக செய்யப்படும் டான்சில்ஸ் ஆப்ரேஷன் ரொம்பவும் பிரபலம்.

காது - மூக்கு - தொண்டை அறுவை சிகிச்சை நிபுணர்கள் தினமும் கத்தியும் கையுமாக ரொம்ப பிஸியாக அலைந்தர்கள். ரிஸ்க் இல்லாத ஆப்ரேஷன்தான் இது ..... ஆனால் ஆப்ரேஷனுக்காக மயக்க மருந்து தரும்போதே அது ஓவர்டோஸ் ஆகி சிலர் செத்துப்போன பரிதாபமும் நடந்தது.

"தேவையற்ற ஒரு ஆபரேஷன் உயிருக்கே உலை வைக்கிறதே ? " என்று கவலைப்பட்ட அமெரிக்க தொண்டு நிறுவனம் ஒன்று அடி நாக்கு தடித்திருந்த 100 குழந்தைகளைத் தேர்ந்தெடுத்தது.
அவர்களை முதலில் காது - மூக்கு - தொண்டை நிபுணர் ஒருவரிடம் அனுப்பியது. அவர் எல்லோரையும் பரிசோதித்துவிட்டு " இதில் 66 பேருக்கு கண்டிப்பாக ஆபரேஷன் செய்ய வேண்டும் , மீதி 34 பேருக்கு மருந்து கொடுத்துப் பார்த்து , தொடர் கண்காணிப்பில் முன்னேற்றம் ஏதும் தெரியவிட்டால் அப்புறமாக ஆபரேஷன் செய்யலாம் " என்றார் .

அவர் " ஆபரேஷன் செய்ய வேண்டும் " என்று தேர்ந்தெடுத்த 66 குழந்தைகளையும் இன்னொரு நிபுணரிடம் அனுப்பியது அந்தத் தொண்டு நிறுவனம் .

" இதில் 44 குழந்தைக்கு உடனே ஆபரேஷன் செய்ய வேண்டும் . மீதி 22 பேருக்கு ஆபரேஷன் தேவை இல்லை " என்ற இந்த இரண்டாம் நிபுணர் .
இப்படியே ஒவ்வொரு நிபுணரும் ஆபரேஷன் செய்ய வேண்டிய குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைத்து குறைத்து கடைசி நிபுணரிடம் போனது மூன்று குழந்தைகள் .
அவரோ " இதில் இரண்டு பேருக்கு கட்டாயம் டான்சில்ஸ் ஆபரேஷன் செய்ய வேண்டும் .ஒரு குழந்தைக்கு ஆபரேஷன் தேவையே இல்லை " என்று தீர்க்கமாக சொல்லிவிட்டார் .

கடைசியில் 100 குழந்தைகளை வைத்துக் கொண்டு தாங்கள் நடத்திய நாடகத்தை வெட்ட வெளிச்சமாக்கியது அந்த தொண்டு நிறுவனம்.
இப்படியெல்லாம் பணத்திற்காக ஆபரேஷன் செய்வது தொழில் தர்மா ? என்று அந்த தொண்டு நிறுவனம் பேப்பரில் பேட்டி பகிரங்கமாக கொடுத்தது . இந்த சம்பவத்திற்குப் பிறகு டான்சில்ஸ் ஆபரேஷன்களின் எண்ணிக்கை அமெரிக்காவில் தடாலடியாக குறைந்து விட்டது.
இப்போது சுலபமாக லேப்ராஸ்கோபிக் ஆபரேஷன் முறை வந்து விட்டாலும் , நிறைய பணம் சம்பாதிக்க முடிவதாலும் , பித்தப்பையும் , குடல்வாலும்தான் டாக்டர்களிடம் சிக்கி அறுபட ஆரம்பித்துள்ளன. இதுதான் 21 ஆம் நூற்றாண்டின் "பேஷன் ஆபரேஷன் "

5713. உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) கூறினார்
நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னுடைய ஆண் குழந்தையை அழைத்துச் சென்றேன். அவனுக்கு ஏற்பட்டிருந்த அடிநாக்கு அழற்சியைப் போக்க அக்கால முறைப்படி தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன்.
இதைக் கண்ணுற்ற நபி(ஸல்) அவர்கள் இந்த சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை அடி நாக்கைக் குத்தி ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்திய கோஷ்டக் குச்சியை அவசியம் பயன்படுத்துங்கள். அதில் ஏழு நோய்களுக்கு நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று (மார்புத்தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியாகும்.
அடிநாக்கு அழற்சிக்காக அதை(த் தூளாக்கி எண்ணெயில் குழைத்து) மூக்கில் சொட்டு மருந்தாக இடப்படும். விலா வலிக்காக அதை வாயின் ஒரு பக்கத்தில் சொட்டு மருந்தாகக் கொடுக்கப்படும்' என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
நபி(ஸல்) அவர்கள் (ஏழில்) இரண்டை (மட்டும்) நமக்கு விவரித்தார்கள். (மீதி) ஐந்தை விவரிக்கவில்லை' என ஸுஹ்ரீ(ரஹ்) கூற கேட்டேன்.
அறிவிப்பாளர் அலீ இப்னு மதினீ(ரஹ்) கூறினார்:
சுஃப்யான்(ரஹ்), குழந்தையின் அண்ணத்தை விரலால் அழுத்துவது குறித்து விவரிக்கையில், தம் விரலை மேல்வாயின் உட்புறத்தில் நுழைத்து அழுத்திக் காட்டினார்கள். (இதுதான் நோக்கமே தவிர, மூலத்தில் 'இஃலாக்' எனும் சொல் இடம் பெற்றிருப்பதற்காகத்) தொண்டையில் எதையும் மாட்டுவது நோக்கமாகாது.
ஸஹீஹ் புகாரி மருத்துவம்
ர.ரா

தடை செய்யப்பட்ட மருந்துகள்
(மருத்துவ டைரி குறிப்புகள் 6 )



உலகின் பல நாடுகளில் தடை செய்யப்பட்ட மருந்துகள் குவிக்கும் நாடாக இந்தியா மாறிவருகிறது என்று உச்ச நீதி மன்றம் கூறியுள்ளது.
உத்தர பிரதேச மாநிலத்தை சேர்ந்த மூன்று வயது குழந்தை சர்தாக் பர்தானுக்கு 1996 ஆம் ஆண்டு கடுமையான காய்ச்சல் வந்தது. இதற்கு மருத்துவம் பார்த்த டாக்டர் ஆர்.என்.மெக்ரோத்ரா சிப்ரோப்ளாக்சின் **( Ciprofloxacin )** என்ற மருந்தை கொடுத்தார். இந்த மருந்து கொடுத்த பிறகு, அந்த சிறுவனுக்கு எலும்பு மஜ்சை பாதிக்கப்பட்டது.
அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளில் தடை செய்யப்பட்ட சிப்ரோப்ளாக்சின் மருந்தை சிறுவனுக்கு கொடுத்ததால் பாதிப்பு ஏற்பட்டது என அவனின் பெற்றோர் உத்தர பிரதேச மாநில நுகர்வோர் பாதுகாப்பு மன்றத்தில் வழக்கு தொடுத்தனர் .

இந்த மருந்தை பயன்படுத்த தடை விதிக்கப்பட்ட அரசின் ஆணையையும் தாக்கல் செய்தனர். அத்துடன் சிறுவனுக்கு ஏற்பட்ட பாதிப்பிற்கு உரிய இழப்பீடு வழங்க வேண்டும் என்று கேட்டனர்.
இதை விசாரித்த உ.பி. மாநில நுகர்வோர் பாதுகாப்பு மன்றம் சிகிச்சை அளித்த டாக்டர் மீது எந்த குற்றமும் இல்லை என்று தீர்ப்பு வழங்கியது.
இத்தீர்ப்பை எதிர்த்து உச்ச நீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்தனர். இந்த வழக்கை நீதிபதிகள் பி.என்.அகர்வால், ஜி.எஸ்.சிங்வி ஆகியோர் அடங்கிய அமர்வு நீதி மன்றம் விசாரித்தது.
சிறுவன் சர்தாக் பர்தான் சார்பில் ஆஜரான வழக்கறிஞர் சர்வேஸ் பிஸ்ராசிய வாதிடும் போது, இந்த மருந்து பக்க விளைவுகளை ஏற்படுத்தும் என்பதால், குழந்தைகளுக்கு பயன்படுத்த தடை விதிக்கப்பட்டுள்ளது என்று வாதிட்டார்.
இவரின் வாதத்தை ஏற்றுக் கொண்ட நீதிபதிகள், சர்வதேச அளவில் தடை செய்யப்பட்ட மருந்தை கொண்டு வந்து கொட்டும் இடமாக இந்தியா மாறி வருகிறது என்ற கூறினார்கள்.
நீதிபதி சிங்வி கூறும் போது, "அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் பல மருந்துகள் தடை செய்யப்பட்டுள்ளன. இதனை தயாரிக்கும் நிறுவனங்கள் இவற்றை இந்தியாவில் கொண்டு வந்து குவிக்கின்றனர். இவை மிருகங்களுக்கு கொடுத்து மட்டும் பரிசோதிக்கப்படுவதில்லை, மனிதர்களுக்கும் கொடுத்து பரிசோதிக்கப்படுகிறது " என்று கூறினார்.
இந்தியாவில் தடைசெய்யப்பட்ட மருந்தை சிறுவனுக்கு கொடுத்ததால், அவனுக்கு பாதிப்பு ஏற்பட்டுள்ளது. இதற்கு இழப்பீடாக ரூ.1 லட்சம் வழங்க வேண்டும் என்று நீதிபதிகள் தீர்பளித்தனர்.
اِنْ تَجْتَنِبُوْا كَبٰٓٮِٕرَ مَا تُنْهَوْنَ عَنْهُ نُكَفِّرْ عَنْكُمْ سَيِّاٰتِكُمْ وَنُدْخِلْكُمْ مُّدْخَلًا كَرِيْمًا
உங்களுக்கு விலக்கப்பட்ட பெரும் பாவமான காரியங்களில் இருந்து நீங்கள் விலகிக் கொண்டால், உங்களுடைய (மற்ற) சிறிய பாவங்களுக்கு (அதனை) நாம் பரிகாரமாக்கி உங்களை (மிக்க) கண்ணியமான இடங்களிலும் நுழைவிப்போம். (அல்குர்ஆன் : 4:31)
ர.ரா

டைபாய்டு காய்ச்சல்
(மருத்துவ டைரி குறிப்புகள் 7 )



சுற்றுப்புறச் சூழல் சீர்கெடுவதால் ஏற்படுகிற தொற்றுநோய்களில் மிக முக்கியமானது, டைபாய்டு காய்ச்சல். மழைக் காலங்களில் தெருக்களில் மழைநீர் தேங்குவதால், குடிநீரும் தெருக் கழிவுகளும் கலந்து நோய்க் கிருமிகள் வாழ வசதியாகிறது. இதனால் அக்டோபர் தொடங்கி டிசம்பர் மாதம்வரை உள்ள காலத்தை டைபாய்டு காய்ச்சலுக்கான காலகட்டம் என்று சொல்கிறார்கள்.
இது, சிறு குழந்தைகள் முதல் முதியோர்வரை யாரையும் தாக்கும் தன்மை கொண்டது. என்றாலும், எங்கெல்லாம் சுத்தம் இல்லையோ, கழிப்பறை வசதி இல்லையோ, அங்கு வாழ்கிற குழந்தைகள் மற்றும் வளரிளம் பருவத்தினரை இந்த நோய் எளிதில் தாக்கிவிடுகிறது.
'சால்மோனெல்லா டைபி' **(Salmonella typhi)** எனும் பாக்டீரியா கிருமிகள், நம் குடல் திசுக்களைத் தாக்குவதால் இந்த நோய் ஏற்படுகிறது. நோயாளியின் சிறுகுடலிலும், அதை சார்ந்த நிணநீர்த் திசுக்களிலும் இந்தக் கிருமிகள் வாழ்கின்றன. நோயாளியின் மலம் மற்றும் சிறுநீர் மூலம் அவை வெளியேறுகின்றன.

இதன் காரணமாக அசுத்தமான இடங்களிலும், பொதுமக்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்தும் தெரு ஓரங்களிலும் இந்தக் கிருமிகள் கோடிக்கணக்கில் வாழ்கின்றன. இந்த இடங்களில் வாழும் ஈக்கள், இந்தக் கிருமிகளைச் சுமந்துகொண்டு வீட்டுக்கு வருகின்றன. வீட்டில் முறையாகப் பாதுகாக்கப்படாத குடிநீரிலும் உணவிலும் இவை கலந்துவிடுகின்றன. இந்த அசுத்த உணவையும் குடிநீரையும் பயன்படுத்துவோருக்கு டைபாய்டு காய்ச்சல் வருகிறது.
இந்த நோய் இன்னொரு முறையிலும் வருகிறது. ஏற்கெனவே, டைபாய்டு காய்ச்சல் வந்து குணமானவரின் குடலில் இந்தக் கிருமிகள் குறைந்தது மூன்று மாதங்கள்வரை வசிக்கும். அப்போது அந்த நபரின் மலத்திலும் சிறுநீரிலும் அவருக்குத் தெரியாமலேயே அவை வெளியேறி, அடுத்தவர்களுக்கு நோயைப் பரப்பும். இந்த நபர்களை 'நோய் கடத்துநர்கள்' (Carriers) என்கிறார்கள்.

நாட்பட்ட காய்ச்சல், உடல்வலி, தலைவலி இந்த நோயின் முக்கிய அறிகுறிகள். ஒவ்வொரு நாளும் காய்ச்சல் படிப்படியாக அதிகரிக்கும். தலைவலி கடுமையாகும். நாக்கில் வெண்படலம் தோன்றும். பசி இருக்காது. வாந்தி, வயிற்றுவலி வரும். உணவைச் சாப்பிட முடியாது. இதனால், நோயாளிக்குச் சோர்வு அதிகரித்து, மயக்கம் வரும்.
இந்தக் காய்ச்சல் குழந்தைகளைப் பாதிக்கும்போது, 'காய்ச்சல் வலிப்பு' **(Febrile Fits)** வரலாம். குடலில் ரத்தக்கசிவு ஏற்படலாம். ரத்த வாந்தி உண்டாகலாம். நோயின் தொடக்க நிலையில் சிகிச்சை பெறத் தவறினால், ரத்தத்தில் இந்தக் கிருமிகளின் நச்சுத்தன்மை அதிகரித்து, 'நச்சுக்குருதிநோய்'**(Septicaemia)** ஏற்பட்டு உயிருக்கு ஆபத்து நேரலாம்.

1889. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது அபூ பக்ர்(ரலி), பிலால்(ரலி) ஆகியோருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது.

அபூ பக்ர்(ரலி) தமக்குக் காய்ச்சல் ஏற்படும்போது, 'மரணம் தன்னுடைய செருப்பு வாரை விடச் சமீபத்தில் இருக்கும் நிலையில் ஒவ்வொரு மனிதனும் தன் குடும்பத்தாருடன் காலைப் பொழுதை அடைகிறான்!' என்ற கவிதையைக் கூறுவார்கள்.

பிலால்(ரலி) காய்ச்சல் நீங்கியதும் வேதனைக் குரலை உயர்த்தி, 'இத்கிர், ஜலீல் எனும் புற்கள் என்னைச் சூழ்ந்திருக்க, ஒரு பள்ளத்தாக்கில் ஓர் இராப் பொழுதையேனும் நான் கழிப்பேனா? 'மஜின்னா' எனும் (சுனையின்) நீரை நான் அருந்துவேனா? ஷாமா, தஃபீல் எனும் இரண்டு மலைகள் (அல்லது இரண்டு ஊற்றுகள்) எனக்குத் தென்படுமா?' என்ற கவிதையைக் கூறுவார்கள்.

மேலும், பிலால்(ரலி) 'இறைவா! **ஷைபா இப்னு ரபிஆ, உத்பா இப்னு ரபீஆ, உமய்யா இப்னு கலஃப்** ஆகியோர் எங்கள் நாட்டிலிருந்து எங்களை (அப்புறப்படுத்தி) இந்த நோய்ப் பிரதேசத்திற்கு விரட்டியது போல், அவர்களை நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்தி (சபித்து) விடுவாயாக!' என்று கூறுவார்கள்.

நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல் அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்கு! இறைவா! எங்களுடைய (அளவைகளான) ஸாவு, முத்து ஆகியவற்றில் (எங்கள் உணவில்) எங்களுக்கு நீ பரக்கத் செய்! இவ்வூரை எங்களுக்கு ஆரோக்கியமானதாக ஆக்கு! இங்குள்ள காய்ச்சலை 'ஜுஹ்ஃபா' எனும் பகுதிக்கு இடம் பெயரச் செய்!' என்று பிரார்த்தித்தார்கள்.

நாங்கள் மதீனாவிற்கு வந்தபோது, அது அல்லாஹ்வின் பூமியிலேயே நோய் நொடிகள் அதிகமான (பிரதேசமாக இருந்தது; (ஏனெனில்) **'புத்ஹான்'** எனும் ஓடையில் மோசமான (கெட்டுப்போன) தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது!

**ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 29. மதீனாவின் சிறப்புகள்**

ர.ரா

வயிற்றுவலி
(மருத்துவ டைரி குறிப்புகள் 8 )




வயிற்றுவலி என்பது மற்ற வலிகளைக் காட்டிலும் வித்தியாசமானது .இது வயிற்றை 9 பாகங்களாகப் பிரித்து எந்த இடத்தில் வலி இருக்கிறதோ அந்த இடத்தில் உள்ள உள் உறுப்பு பாதிப்படைந்திருப்பதாக கருதப்படுகிறது .

வலது விலா எலும்புகளுக்குக் கீழே அவ்வப்போது வலி, சில நேரம் எதுக்களிப்பு, கொஞ்சம் அஜீரணம்... என இருக்கும். உடனே அது வயிற்றுப் புண்ணா, குடல் புண்ணா இல்லை வேறு ஏதேனுமா என நாம் குழம்புவோம். மருத்துவரிடம் போனால், `எவ்வளவு நாளா வயிற்றுவலி' என ஆரம்பித்து, `நெஞ்சு எலும்புக்குக் கீழேயா, மார்பின் நடுப் பகுதியிலா... எங்கே எரிச்சல்?, கொஞ்சம் சாப்பிட தாமதமானால், பசி வரும்போது வலிக்குதா, சாப்பிட்டு ஒரு மணி நேரம் கழிச்சு வலிக்குதா?' என்றெல்லாம் கேள்விகள் எழுப்புவார்.

ஒருவேளை பித்தப்பைக் கல் இருந்தாலும் இருக்கலாம் என அனுமானித்து, ஸ்கேன் எடுக்கச் சொல்லும் மருத்துவர்களும் உண்டு.
முன்பெல்லாம், 'இது பித்தப்பை வீக்கமாக இருந்தாலும் இருக்கும்' என சந்தேகப்பட்டால், மருத்துவர் வயிற்றைக் கைகளால் அழுத்திப் பரிசோதனை செய்வார். மூச்சை நன்கு இழுத்துவிடச் சொல்லி, நோயாளியின் வலதுபக்க விலா எலும்புகள் முடியும் இடத்துக்குக் கீழாக விரல்களால் அழுத்திப் பார்த்து, முடிவு செய்துவிடுவார். இதற்கு `மர்ஃபி சோதனை' என்று பெயர்.
இன்றைக்கு அதைப் பலர் ஓரம்கட்டிவிட்டார்கள். நோயாளிகளை ஸ்கேனுக்கு அனுப்புகிறார்கள்.
ஆனாலும், பித்தப்பைக் கல்லுக்கான காரணம் என்ன என்று மிகத் துல்லியமாக இன்றும் நவீன மருத்துவத்தால் நிர்ணயிக்க முடியவில்லை.

நம் ஜீரண மண்டலத்தின் தன்மையே ஃபாஸ்ட் ஃபுட், ஜங்க் ஃபுட் போன்றவற்றால் குழம்பிப்போய் இருக்கிறது. அதோடு, ஜீரோ சைஸ் இடுப்பு வேண்டும் என்பதற்காக சாப்பிடாமல் இருந்து உடல் மெலிவது, நார்ச்சத்து, மக்னீசியம், கால்சியம், வைட்டமின் சி மற்றும் ஃபோலேட் எனும் உயிர்ச்சத்துக்களை உணவில் எடுத்துக்கொள்ளாதது, கொழுப்பைக் கூடுதலாகவும், நார்சத்தைக் குறைவாகவும் சாப்பிடுவது, வாரத்தில் நான்கு நாட்கள் விரதம் இருப்பது, மெலடோனின் சுரப்புக் குறைவது... என பித்தப்பை அழற்சிக்கும், கல்லுக்கும் பல காரணங்கள்.
`தொடர்வாத பந்தமிலாது குன்மம் வராது' என வயிற்றுப் புண்ணுக்கு வாதத்தையும், விலாவுக்குக் கீழ் வலி தரும் பித்தக்கல் பிரச்னைக்கு பித்தத்தையும் காரணமாகச் சொல்கிறது தமிழ் மருத்துவம்.
.முதலில் வயிற்றுவலிக்கான காரணத்தை சோதித்தறிந்து, அதற்கேற்ற சிகிச்சை பெறுவதே புத்திசாலித்தனம்.

வயிற்றுவலிக்கான காரணங்கள்!
* நடு வயிற்றிலும், வலது பக்க விலாவுக்குக் கீழும் வலி வந்தால், அது வயிற்றுப் புண்ணாகவோ, பித்தப்பைக் கல் வலியாகவோ, கணைய அழற்சி வலியாகவோ இருக்கலாம்.
* இரைப்பை, குடல் பகுதிக்குப் போகும் ரத்தக்குழாய்களில் உண்டாகும் அடைப்பு தீவிர வலியை உண்டாக்கலாம்.
* நடு வயிற்றில் எரிச்சலுடன்கூடிய வலி, வயிற்றுப் புண் சார்ந்த வலியாக இருக்கலாம்.
* விலா எலும்பில் பின் முதுகின் இரு பக்கங்களில் இருந்து முன் பக்கம் சிறுநீர்ப்பை நோக்கி வரும் வலி, சிறுநீரகக் கல்லின் வலியாக இருக்கலாம்.
* பெண்களுக்கு அடி வயிற்றின் இரு பக்கவாட்டில் வரும் வலி, சினைப்பைக் கட்டிகளின் வலியாக இருக்கலாம். அடி வயிற்றின் மையப் பகுதியில் வரும் வலி நார்க்கட்டி வலியாக இருக்கலாம்.
இவற்றைத் தாண்டி, அப்பெண்டிக்ஸ் வலி, அடினோமயோசிஸ் வலி... என வயிற்றுவலிக்குப் பல காரணங்கள் இருக்கின்றன. எல்லா வலிகளுக்குமே `ஒரு சோடா குடிச்சா, சரியாகிடும்', என்ற அலட்சியம் ஆகாது. குடும்ப மருத்துவரின் ஆலோசனையைக் கேட்டு நடப்பது முக்கியம்

6350. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.
நான் கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களிடம் (அவர்களை உடல் நலம் விசாரிக்கச்) சென்றேன். அவர்கள் (கடும் வயிற்று வலிக்குச் சிகிச்சை பெறுவதற்காகத்) தம் வயிற்றில் ஏழு முறை சூடுபோட்டிருந்தார்கள்.
அப்போது 'மரணத்தை வேண்டிப் பிரார்த்திக்க வேண்டாமென நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்திராவிட்டால் நான் மரணத்தை வேண்டிப் பிரார்த்தித்திருப்பேன்' என்று அவர்கள் கூறியதைச் செவியேற்றேன்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 80. பிரார்த்தனைகள்
மரணத்தை வேண்டி விரும்பும் அந்த அளவிற்கு வயிற்று வலியின் தாக்கம் இருக்கிறது .
ர.ரா

வலிப்பு நோய்
(மருத்துவ டைரி குறிப்புகள் 9 )



மூளை, நரம்பு தொடர்பான நோய்களில் தலைவலிக்கு அடுத்தபடியாக அதிகம் பேரைப் பாதிப்பது, வலிப்பு நோய்.
'காக்காய் வலிப்பு'என்று தவறாக அழைக்கப்படுகிற இந்த நோய் இடம், பொருள், ஏவல் பார்க்காமல் திடீரெனத் தாக்கும். இந்தியாவில் 100 பேரில் ஒருவருக்கு வலிப்பு நோய் இருக்கிறது. ஆண்டுதோறும் 10 லட்சம் பேர் புதிதாக வலிப்பு நோய் வந்து சிகிச்சை பெறுகிறார்கள்.
பிறந்த குழந்தை, இளைய வயதினர், முதியவர் என எல்லா வயதினரையும் இந்த நோய் பாதிப்பதாலும், வலிப்பு பற்றிய மூடநம்பிக்கைகள் நம் சமூகத்தில் அதிகம் என்பதாலும், இது குறித்த விழிப்புணர்வைப் பெற வேண்டியது அவசியம்.
'வலிப்பு' என்பது ஒரு நோயின் அறிகுறி மட்டுமே. இதுவே ஒரு நோயல்ல. மூளை பாதிக்கப்பட்டுள்ளது என்றோ, அதிகக் காய்ச்சல், ரத்தக் கொதிப்பு போன்றவற்றால் உடல்நிலை பாதிக்கப்பட்டுள்ளது என்றோ தெரிவிக்கும் அறிகுறியாக வலிப்பு ஏற்படுகிறது.

ஒருவருக்கு வலிப்பு வரும்போது கையும் காலும் வெட்டி வெட்டி இழுக்கும். வாயில் நுரை தள்ளும். கண்கள் மேலே சுழன்று, நாக்கு, பற்களுக்கிடையில் சிக்கி, கடிபட்டு, வாயிலிருந்து ரத்தம் வழியச் சுயநினைவை இழந்து தரையில் கிடப்பார். சில நிமிடங்களில் இது சரியாகி, பாதிக்கப்பட்டவர் கொஞ்சம் கொஞ்சமாக இயல்பு நிலைக்குத் திரும்பிவிடுவார். இந்த 'நிகழ்வு'க்குப் பெயர் 'வலிப்பு' **(Fits/Seizures/Convulsions).**

ஒருவருக்கு இரண்டு முறைக்கு மேல் வலிப்பு வந்திருக்குமானால், அவருக்கு வலிப்பு நோய் **(Epilepsy)** இருப்பதாகக் கொள்ள வேண்டும்.

மூளை மற்றும் நரம்பு செல்களில் தகவல் பரிமாற்றம் செய்வதற்கு அந்தச் செல்களுக்கிடையில் இயல்பாகவே மிகச் சிறிய அளவில் மின்சாரம் உற்பத்தியாகிறது. ஏதாவது ஒரு காரணத்தால் மூளையில் உண்டாகிற அதீத அழுத்தத்தால் இந்த மின்சாரம் அபரிமிதமாக உற்பத்தியாகி, ஒரு மின் புயல் போல் கிளம்புகிறது. அது நரம்புகள் வழியாக உடல் உறுப்புகளுக்குக் கடத்தப்படுகிறது. அப்போது உறுப்புகளின் இயக்கம் மாறுபட்டு, கை, கால்கள் உதறத் தொடங்குகின்றன. இதைத்தான் 'வலிப்பு' என்கிறோம்.
பூமியின் உள்அடுக்குகளில் உண்டாகிற அதிகப்படியான அதிர்வுகள் நிலநடுக்கத்தை ஏற்படுத்துவதைப்போல், மூளையில் உண்டாகிற மின் அதிர்வுகள் வலிப்புக்குக் காரணமாகின்றன.

தலையில் அடிபடுதல், பிறவியிலேயே மூளை வளர்ச்சிக் குறைபாடு, மூளையில் கட்டி, ரத்தக்கசிவு, ரத்தம் உறைதல், கிருமி தொற்று, புழுத் தொல்லை, மூளை காய்ச்சல், மூளை உறை அழற்சி காய்ச்சல், டெட்டனஸ் போன்றவை வலிப்பு வருவதற்கு முக்கியமான காரணங்கள். உயர் ரத்த அழுத்தம், நீரிழிவு, சிறுநீரகக் கோளாறுகள் போன்றவையும் வலிப்பு வருவதைத் தூண்டக்கூடியவையே.

வலிப்பு உள்ளவர்களின் உறவினர்களை ஆய்வுக்கு உட்படுத்தியதில் பரம்பரையாகவும் வலிப்பு வரலாம் என்று கண்டறியப்பட்டுள்ளது. கர்ப்பிணிகளுக்கு ரத்தக்கொதிப்பு இருந்தால், பிரசவக் காலத்தில் வலிப்பு வருவதுண்டு. பக்கவாதம், மூளையில் ஏற்படும் ரத்தக்குழாய் மாற்றங்கள், அல்சைமர் நோய், ரத்தத்தில் தட்டணுக்கள், சோடியம் அளவு குறைதல் போன்ற காரணங்களால் வயதானவர்களுக்கு வலிப்பு ஏற்படக்கூடும். சிலருக்கு மன உளைச்சல் காரணமாக 'பொய் வலிப்பு' **(Pseudo seizure)** வருவதும் உண்டு. பல நேரம் எந்தக் காரணத்தையும் கண்டுபிடிக்க முடியாத வலிப்புகளே அதிகமாகக் காணப்படும்.

பிறக்கும்போது ஏற்படும் ஆக்சிஜன் குறைபாடுகள், குறைப் பிரசவம், பிரசவக் காலத் தொற்றுநோய்கள், பிரசவத்தின்போது தலையில் அடிபடுதல் போன்றவற்றால் குழந்தைகளுக்கு வலிப்பு வருகிறது. இவர்களுடைய ரத்தத்தில் கால்சியம், குளுக்கோஸ், மக்னீசியம் அளவு குறைந்தாலும் வலிப்பு வரும்.
குழந்தைகளுக்குக் காய்ச்சல் காரணமாக வலிப்பு வருவதுதான் அதிகம். பெரும்பாலும் 6 மாதம் முதல் 5 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்குச் சாதாரணக் காய்ச்சலாக இருந்தால்கூட, உடலின் வெப்பம் திடீரென அதிகரித்தால் வலிப்பு வருவது உறுதி. சூடம் சாப்பிட்ட குழந்தைக்கு வலிப்பு வருவதுண்டு.

மூளையில் எந்தப் பகுதி பாதிக்கப்படுகிறதோ, அதற்கேற்ப வலிப்பின் தன்மை வேறுபடும். மூளையின் ஒரு பகுதியில் மட்டும் ஏற்படும் பாதிப்பால் வருவது 'பகுதி வலிப்பு' (Partial seizure).
நாம் அவ்வப்போதுக் காண்கிற பொதுவான வலிப்புகள் உடல் முழுவதும் பரவியிருக்கும். இந்த வகைக்கு 'முழுவீச்சு வலிப்பு' **(Generalised seizure)** என்று பெயர். இவை தவிர இன்னும் பல துணை வகைகளும் உள்ளன. வலிப்பின் வகைக்கு ஏற்பச் சிகிச்சை முறை மாறுவது மருத்துவ நியதி.
5652. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார் :
இப்னு அப்பாஸ்(ரலி) என்னிடம், 'சொர்க்கவாசியான ஒரு பெண்மணியை உங்களுக்குக் காட்டட்டுமா?' என்று கேட்டார்கள்.
நான், 'ஆம்; (காட்டுங்கள்)' என்று சொன்னேன். அவர்கள், இந்தக் கறுப்பு நிறப் பெண்மணிதாம் அவர். இவர் (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'நான் வலிப்பு நோயால் (அடிக்கடிப்) பாதிக்கப்படுகிறேன். அப்போது என் (உடலிலிருந்து ஆடை விலகி) உடல் திறந்து கொள்கிறது. எனவே, எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றார்.
நபி(ஸல்) அவர்கள், 'நீ நினைத்தால் பொறுமையாக இருக்கலாம். (இதற்கு பதிலாக) உனக்கு சொர்க்கம் கிடைக்கும். நீ விரும்பினால் உனக்குக் குணமளிக்கும்படி அல்லாஹ்விடம் நான் பிரார்த்திக்கிறேன்' என்று கூறினார்கள்.

இந்தப் பெண்மணி, 'நான் பொறுமையாகவே இருந்துவிடுகிறேன். ஆனால், (வலிப்பு வரும்போது ஆடை விலகி) என் உடல் திறந்துகொள்கிறது. அப்படித் திறந்து கொள்ளாமல் இருக்க அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார். அவ்வாறே நபி(ஸல்) அவர்கள் இப்பெண்ணுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.
...அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்
நான் உம்மு ஸுஃபரைப் பார்த்தேன். அவர் தாம் கஅபாவின் திரை மீது (சாய்ந்த படி அமர்ந்து) உள்ள கறுப்பான உயரமான இப்பெண் ஆவார்.11
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 75. நோயாளிகள்
ர.ரா

ஒற்றைத் தலைவலி
(மருத்துவ டைரி குறிப்புகள் 10 )




மனித குலத்தை பாதித்து வரும் பழமையான பாதிப்புகளில் மைக்ரேனும் ஒன்று. 1200 ஆண்டுகளுக்கு முந்தைய பழமையான எகிப்தியர் எழுத்துப்படிவங்களில் மைக்ரேன் போன்றதொரு தலைவலி பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.
மைக்ரேனுடன் தொடர்புள்ள பார்வை மங்கல் குறித்தும் வாந்தி குறித்தும் ஹிப்போக்ரட்டஸ் கூறியுள்ளார்.
ஆனால் மைக்ரேனை முதன்முதலில் கண்டுபிடித்தவர் என்ற பெயர் கிரேக்க மருத்துவர் ஏரிட்டஸ் ஆஃப் கப்படோசியாவுக்கே உண்டு. ஒரு புறம் மட்டும் வலிக்கும் தலைவலியை 2 ஆம் நூற்றாண்டில் இவர் கண்டறிந்தார். உண்மையில் மைக்ரேன் என்ற வார்த்தையே ஹெமிக்ரேனியா என்ற கிரேக்கச் சொல்லில் இருந்துதான் உருவானது.
ஹெமிக்ரேனியா என்றால் பாதி மண்டை ஓடு என பொருள். இப்பிரச்னைக்கு இடைக்காலங்களில் பல சிகிச்சைகள் உண்டு. முன் மண்டையில் துளையிட்டு அதில் பூண்டுப்பல் இரண்டையும் சேர்த்து திணித்தால் மைக்ரேன் நீங்கும் என்பது ஒரு நம்பிக்கை.
மைக்ரேன் ஏன் வருகிறது, என்ன சிகிச்சை என்பது குறித்து வரலாற்று காலங்களில் நிறைய மூட நம்பிக்கைகள் இருந்தன. மண்டையில் துளையிடுவது மூலம் அதனுள் உள்ள தீய சக்தியை வெளியேற்றி மைக்ரேனுக்கு தீர்வு காண முடியும் என்ற கொடூர நம்பிக்கை இருந்தது.
**image caption** ஒற்றைத் தலைவலி ஆரம்பத்தில் இருந்த லேசான வலி பின்னர் மண்டையை பிளக்க தொடங்கியது. கண் பார்வைகூட மங்கலாகிவிட்டது.

மைக்ரேன் தாக்குதலை சமாளிப்பதும் ஒரு தலைவலி ஆகவே இருந்தது. சாதாரண தலைவலியை ஒன்று அல்லது இரண்டு பாராசிட்டமால் மாத்திரைகள் மூலம் சமாளிக்க முடியும். ஆனால மைக்ரேன் தலைவலி மிகக் கடுமையானது.

இவ்வகை தலைவலிக்கு உறுதியான காரணங்கள் இன்றைய தேதி வரை தெரியவில்லை. ஹார்மோன் பிரச்சனை அல்லது மூளையின் அசாதாரண செயல்பாடு இதற்கு காரணமாக இருக்கலாம் என யூகிக்கப்படுகிறது.
1990 முதல்2016 வரை ஒவ்வொரு ஆண்டும் மக்களின் ஆரோக்கியம் குறித்து 195 நாடுகளில் ஆய்வு செய்யப்பட்டது. மக்களை அதிகமாக பாதிக்கும் இரண்டாவது பெரிய பிரச்சனையாக

தொடர்ந்து மைக்ரேன் திகழ்வது இதில் தெரிய வந்தது. இது உலகின் முன்னணி மருத்துவ ஆய்வுகளில் ஒன்றாக கருதப்படுகிறது.

மைக்ரேன் காரணமாக ஆண்டுக்கு இரண்டரை கோடி நாட்கள் பிரிட்டனில் மட்டும் மருத்துவ விடுப்பாக எடுக்கப்படுகிறது. உடல் அளவிலும் பொருளாதார அளவிலும் கடும் பாதிப்புகளை ஏற்படுத்தக்கூடிய மைக்ரேனுக்கு மற்ற நோய்களுடன் ஒப்பீட்டளவில் குறைவான தொகையே ஆய்வுக்கு ஒதுக்கப்படுகிறது.

மைக்ரேன் பிரச்னை ஆண்களை விட பெண்களையே அதிகம் பாதிக்கிறது. 15 ஆண்களில் ஒருவரும் 5 பெண்களில் ஒருவரும் மைக்ரேனால் பாதிக்கப்படுகிறார். இந்த வித்தியாசத்துக்கு என்ன காரணம் என்பது குறித்து 2018ம் ஆண்டு அரிசோனா பல்கலைக்கழகம் ஆய்வு நடத்தி அறிக்கை ஒன்றை வெளியிட்டிருந்தது. அதிக ஈஸ்ட்ரோஜன் அளவுக்கும் குறைவான சோடியம் புரோட்டான் எக்ஸ்சேஞ்சர் NHE1 அளவுக்கும் உள்ள தொடர்பே இந்த மாறுபாட்டிற்கு காரணமாக இருக்கலாம் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மைக்ரேன் நோயாளிகளில் ஆண்,பெண் இடையே உள்ள தனித்துவமிக்க வித்தியாசங்கள் குறித்து கண்டறிந்துள்ளார் அமெரிக்க நரம்பியல் நிபுணர் ஹரால்டு ஜி வால்ஃப். நவீன கால தலைவலி மருந்தியலின் தந்தை என இவர் அறியப்படிகிறார்.
பெண்கள் தங்களுக்கான பொறுப்புகளை ஏற்பதில் திறனற்று இருப்பதால் மைக்ரேன் வருவதாக கருதுகிறார் வால்ஃப். குறிப்பாக பாலுறவு என வரும்போது இவ்வாறு நிகழ்கிறது என்கிறார் அவர்.
தலைவலி பிரச்னைக்கும் மன ஆரோக்கியத்துக்கும் தொடர்பு இருப்பதை மறுக்க இயலாது. இதை சில ஆய்வுகள் நிரூபித்துள்ளன.
மைக்ரேனுக்கும் **bipolar disorder** எனப்படும் இரு துருவ மனச்சோர்வுக்கும் ஆழமான தொடர்புகள் இருப்பதை 2016ல் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. மைக்ரேன் உள்ளவர்களுக்கு பதட்டம் சார்ந்த மன நல பிரச்னை வருவதற்கு இரண்டரை மடங்கு வாய்ப்பு அதிகம் உள்ளது.

மன அழுத்த பிரச்னை இருப்பவர்களுக்கு மைக்ரேன் வாய்ப்புகள் மும்மடங்கு அதிக வாய்ப்புகள் உள்ளன. மைக்ரேனால் பாதிக்கப்பட்ட ஒவ்வொரு ஆறு பேரிலும் ஒருவருக்கு வாழ்வின் ஏதோ ஒரு கட்டத்திலாவது தற்கொலை எண்ணம் வந்ததாக கூறியுள்ளனர்.
ஒற்றைத் தலைவலியின் காரெக்டரும் மிகவும் வித்தியாசமானது அலறித் துடிக்கும் அளவு தலைவலி ஏற்படுவதோடு , கண் பார்வைத் திறனும் மாறுபாடுவதால் நோயாளியின் கண் முன் விந்தையான, விசித்திரமான காட்சிகள் எல்லாம் தெரியக் கூடும்

இந்த மாதிரி மாயக் காட்சிகள் கண் முன் தெரிவதைப் பார்த்து எல்லோரும் பயந்தும், விரக்தியாகிப் போயும் பேசாமல் இருக்க " லூயிஸ் கரோல்" ( 1832 - 1898) என்கிற எழுத்தாளர் மட்டும் வித்தியாசப்பட்டார்.ஒற்றைத் தலைவலியின போது தனக்குத் தோன்றும் விந்தையான காட்சிகளை வைத்து "அதிசய உலகில் ஆலிஸ் **(Alice in Wonder Land )** " என்று குழந்தைகளுக்குப் பிடித்தமான ஒரு நாவலையே எழுதிவிட்டார் உலகமெங்கும் கோடி கோடியாய் விற்ற புத்தகம்
தற்போது இந்த நாவல் மனோதத்துவ நிபுணர்களும் .கணித வல்லுநர்களும் புதிய புதிய அர்த்தங்களைக் காண்கிறார்கள் விஞ்ஞானிகள் விளங்கிக் கொள்ள முடியாத நிறைய சமன்பாடுகளுக்கு ரொம்பவும் சுளுவாக அர்த்தம் கிடைக்கிறது.
5701. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் :
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தமக்கேற்பட்ட ஒற்றைத் தலைவலியின் காரணத்தால் தம் தலையில் குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். அப்போது அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தார்கள்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 76. மருத்துவம்
ர.ரா

கண் வலி
(மருத்துவ டைரி குறிப்புகள் 11)



'மெட்ராஸ் ஐ' -யை தமிழில், 'விழி வெண்படல அழற்சி நோய்' என்று கூறலாம். இது குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரையும் பாதிக்கும். வைரஸ் மற்றும் பாக்டீரியா மூலமாக உருவாகும் ஓர் தொற்றுநோய் இது. எளிதாகப் பரவக் கூடியது. 'இன்ஜக்டிவ்ஸ் கஞ்சங்டிவிடிஸ்' **(Insectious Conjunctivitis)** என்னும் மருத்துவப் பெயர் கொண்ட இந்தக்கண் நோய்க்கு 'மெட்ராஸ் ஐ' என்று ஏன் பெயர் வந்தது?

1918-ம் ஆண்டு தமிழகம் முழுவதும் புதுவிதமான கண் நோய் ஒன்று பரவியது. குறிப்பாக சென்னை மக்கள் பெரிதும் அவதிக்குள்ளாயினர். சென்னையில் அதிகம் பேரை பாதித்ததால் ஊடகங்கள் இந்நோயை 'மெட்ராஸ் ஐ' எழுதத் தொடங்கின. ஒரு கட்டத்தில் அதுவே பெயராகிப் போனது.
இதை 'பிங்க் ஐ' என்றும் சொல்கிறார்கள். கடந்த ஆண்டு இந்த நோயின் பாதிப்பு சென்னையில் அதிகமாக இருந்தது. இந்த ஆண்டு இப்போது தான் பரவத் தொடங்கியிருக்கிறது.

" இது இரண்டு வகைகளில் உருவாகும் ஒன்று பாக்டீரியா, மற்றொன்று வைரஸ். வெயில்காலங்களில் தான் அதிகமாகப் பரவுகிறது. இப்போது சீதோஷ்ண மாற்றத்தால் மெல்ல பரவத் தொடங்கியிருக்கிறது. இந்த பாதிப்பு ஏற்பட்டால் கண்கள் மஞ்சள் நிறத்தில் மாறும். இதன் பாதிப்பு ஐந்து நாள்களுக்கு இருக்கும். தானாகவே சரியாகி விடும். நோயின் பாதிப்பு காலத்தைக் குறைக்க விரும்பினால் மருத்துவரை அணுகி ஆண்டி பயாக்டிக் மருந்துகள் எடுத்துக் கொள்ளலாம்.

'அடினோ' **(Adeno)** என்னும் வைரஸ் மூலமாகவும் இது பரவும். இதனால் பாதிக்கப்பட்டால் தொண்டை கரகரப்பு உண்டாகும். கண்களை அழுத்துவது போல் இருக்கும். வெப்பநிலை அதிகரிக்கும். மேலும் கண்கள் பொங்கியபடி இருக்கும். காதருகே நெரிகட்டிக் கொள்ளும். சில நேரங்களில், கழிவுகள் சேர்ந்து கண்கள் ஒட்டிக்கொள்ளும். இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்கு மேல் இந்தப் பாதிப்பு இருந்தால் கண்டிப்பாக மருத்துவரை அணுகுவது நல்லது. இதற்கு ஆண்டி பயாக்டிக் மட்டும் போதாது. ஸ்டீராய்டு கலந்த மருந்துகளையும் மருத்துவரின் ஆலோசனை பேரில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

இது ஒருவருக்கு வந்து விட்டால் மற்றவர்களுக்கு எளிதாகப் பரவும். இந்தப் பாதிப்புள்ளவர்கள் தொட்ட பொருளை, மற்றவர்கள் தொட்டபிறகு, கண்களில் கை வைக்கும் போது இது பரவும். கண்களை நேரடியாகப் பார்த்தால் பரவும் என்பது தவறான தகவல்.
இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்கள் கம்ப்யூட்டர், மொபைல் போன்ற ஒளிரும் திரைகளைப் பார்க்காமல் இருப்பது நல்லது. கண்களில் தூசி படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். கருப்புக் கண்ணாடி அணியலாம். அடிக்கடி குளிர்ந்த நீரில் கண்களைக் கழுவிக் கொள்வதும் நல்லது. இதனால் பாதிப்படைந்தவர்கள் அடிக்கடி கைகளை நன்றாகக் கழுவவேண்டும். அப்படிச் செய்தால் தொற்று அடுத்தவர்களுக்கு பரவாமல் இருக்கும். தனியாக ஒரு அறையில் தங்கவேண்டும். பாதிக்கப்பட்டவர்கள் பயன்படுத்திய துண்டு, கைக்குட்டை போன்ற பொருள்களை மற்றவர்கள் பயன்படுத்தக் கூடாது .

***3009. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார் :***

நபி(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது, 'நாளை நான் ஒரு மனிதரிடம் இஸ்லாமியச் சேனையின் கொடியைக் கொடுப்பேன். அல்லாஹ் அவரின் கரங்களில் வெற்றியைக் கொடுப்பான். அவர் (எத்தகையவர் எனில்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார்; அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிறார்கள்' என்றார்கள்.
மக்கள், 'நபி(ஸல்) அவர்கள் யாரிடம் கொடியைக் கொடுப்பார்கள்?' என்று தமக்குள் ('இன்னாரிடம் கொடுப்பார்கள்' என்று சிலரைக் குறிப்பிட்டுப்) பேசியபடி தங்கள் இரவைக் கழித்தார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் (இஸ்லாமியச் சேனையின்) கொடி தம் கரத்தில் கொடுக்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டபடி காலை நேரத்தை அடைந்தனர். (காலை நேரம் வந்தவுடன்)
'அலீ எங்கே?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'அலீ அவர்களுக்குக் கண் வலி' என்று சொல்லப்பட்டது. எனவே, (அலீ அவர்களை அழைத்து வரச் செய்து)

நபி(ஸல்) அவர்கள், அலீ அவர்களின் இரண்டு கண்களிலும் தம் எச்சிலை உமிழ்ந்து அவர்களுக்காக (வலி நீங்கிட) பிரார்த்தித்தார்கள். உடனே, அலீ அவர்கள் (அதற்கு முன்) தமக்கு வலியே இருந்ததில்லை என்பது போன்று குணமடைந்தார்கள்.
பிறகு நபி(ஸல்) அவர்கள் அலீ அவர்களிடம் கொடியைக் கொடுத்தார்கள். 'அவர்கள் நம்மைப் போன்று (இறைச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்த முஸ்லிம்களாக) ஆகும் வரை நான் அவர்களுடன் போர் புரிவேன்' என்று அலீ அவர்கள் கூறினார்கள்.
நபி(ஸல்) அவர்கள், '(அலீயே!) நிதானத்துடன் சென்று அவர்களின் களத்தில் இறங்குங்கள். பிறகு, அவர்களை இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும்படி அழையுங்கள். (இஸ்லாத்தை ஏற்பதால்) அவர்களின் மீது கடமையாகுபவற்றை அவர்களுக்குத் தெரிவியுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் வாயிலாக அல்லாஹ் ஒருவரை நேர்வழியில் செலுத்துவது (அரபுகளின் மிக உயர்ந்த சொத்தான) சிகப்பு ஒட்டகங்களை (தருமம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்' என்று கூறினார்கள்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 56. அறப்போரும் அதன் வழிமுறைகளும்
ர ரா

மருத்துவமனை அவலங்கள் 01
(மருத்துவ டைரி குறிப்புகள் 12 )




தமிழகத்திலுள்ள அரசு மருத்துவக் கல்லூரி மருத்துவமனை ஒன்றில் 50 வயது பெண் நோயாளி பீவிக்கு கிடைத்த அனுபவம் .
ஒரு சாதாரண விவசாயக் கூலியான பீவி சிறுநீரே கழிக்க முடியாமல் அவஸ்தைப்பட்டு மருத்துவமனைக்கு வந்தார் .
பீவிக்கு சிறுநீரகம் முழுவதும் சிறுநீர் சேர்ந்து வீங்கி இருப்பதை டியூட்டி டாக்டர் பார்த்து , பீவியை உடனே சிறுநீரகவியல்
நிபுணருக்கு பரிந்துரை செய்தார் .
சிறுநீரகவியல் நிபுணர் , பீவியை பரிசோதித்து விட்டு, " சிறுநீரகத்தில் இருந்து சிறுநீர் வெளியே வராமல் போனதற்குக் காரணம் அடைப்புதான் .

இடுப்புக் கூட்டுப் பகுதியிலோ , கருப்பையிலோ புற்றுநோய் கட்டி வந்து அதன் காரணமாகக் கூட இந்த அடைப்பு ஏற்பட்டிருக்கலாம் " என்று தன் கண்டுபிடிப்பை சொல்லி, பீவியை மகப்பேறு மருத்துவ நிபுணரிடம் அனுப்பினார் .

பீவியை பரிசோதித்த மகப்பேறு நிபுணர், " கருப்பையின் வாய் பகுதியில் புற்றுநோய் கட்டி பெரிதாக இருக்கிறது. இதனால் சிறுநீர் பாதையில் அடைப்பு ஏற்பட இதுதான் காரணம் ... " என்று கண்டுபிடித்தார் .

எல்லாம் முடிந்தது .இப்போது பீவியை யாருடைய பிரிவில் அட்மிட் செய்வது ?
"பீவியின் ரத்தத்தில் யூரியாவின் அளவு அதிகமாக இருக்கிறது .இப்போது ஆபரேஷன் செய்து , புற்றுநோய்க் கட்டியை அகற்றுவது ரிஸ்க். முதலில் அவருக்கு முதுகில் துளை போட்டு, தேங்கி இருக்கும் சிறுநீரை வெளியேற்றுங்கள் அதுவரை இது என்னுடைய பிரச்சனை இல்லை " தட்டிக் கழித்து மகப் பேறு நிபுணர் கூறிவிட ,
சிறுநீரகவியல் நிபுணரோ , " பீவியின் இரத்தத்தில் இருக்கும் யூரியா அளவைக் குறைப்பது என் வேலை இல்லை .அது , பொது மருத்துவரின் வேலை. அதைச் சரி செய்த பிறகுதான் ,தேங்கி இருக்கும் சிறு நீரை நான் அகற்ற முடியும் " என்றார்
மூன்று டாக்டர்களும் இப்படிச் தட்டிக் கழித்து சண்டை போட்டுக் கொள்ள, வலியும் வேதனையும் தாங்க முடியாத பீவி விரக்தியின் உச்சிக்கே போய் விட்டார் "நான் வீட்டில் போய் நிம்மதியாகச்
சாகிறேன் " என்றபடி அரசு மருத்துவமனையில் இருந்து வெளியேறி விட்டார் .
பீவி வீட்டுக்கு கிளம்பியதை உறுதி செய்த பின் பீவியின் சிகிச்சை ரிக்கார்டில் இப்படி எழுதினார்கள் .
" நோயாளி காணாமல் போய்விட்டார் "
பீவி இரண்டொரு நாளில் உலகத்தை விட்டே காணாமல் போய் இருப்பார்.
ஆதாரம் நூல் : " போஸ்ட்மார்ட்டம் "
டாக்டர் கே.ஆர் .சேதுராமன்
بَلْ تَاْتِيْهِمْ بَغْتَةً فَتَبْهَتُهُمْ فَلَا يَسْتَطِيْعُوْنَ رَدَّهَا وَلَا هُمْ يُنْظَرُوْنَ
அது இவர்களிடம் திடுகூறாகவே வந்து அவர்களைத் தட்டுக் கேட்டுத் தடுமாறும்படிச் செய்து விடும்; அதனைத் தட்டிக் கழித்துவிட இவர்களால் முடியாது. இவர்களுக்குச் சிறிதும் அவகாசம் கொடுக்கப்படவும் மாட்டாது.
(அல்குர்ஆன் : 21:40)
ர.ரா

மருத்துவமனை அவலங்கள் 2
(மருத்துவ டைரி குறிப்பு 13 )



"எக்ஸ்ரே " - இது பீகார் ஸ்டைல் எக்ஸ்ரே
என்னிடம் படித்த மாணவர் ஒருவர் , இப்போது பீகாரில் டாக்டராக பணிபுரிகிறார். சமீபத்தில் அவர் என்னைப் பார்க்க வந்த போது, தமிழ் நாட்டு மருத்துவமனை வேதனைகளை பகிர்ந்து கொண்டேன்.
ஆனால், அவரோ, " தமிழ்நாடு எவ்வளவோ பரவாயில்லை சார் ! பீகாரில் நிலைமை மோசம் ...." என்று சொல்லிவிட்டு , ஒரு 'ஷாக்' கான தகவலைச் சொன்னார் .
மின்சார வசதியே இல்லாத கிராமங்கள் பீகாரில் ஏராளம் .' உடம்புக்கு முடியவில்லை ' என்றால் நகர்புறங்களில் தொழில் புரியும் டாக்டர்களிடம் அவர்கள் வந்தாக வேண்டும்!
அப்படி வரும் பீகாரிகளை நகரத்து டாக்டர் ." போய் எக்ஸ்ரே எடுத்து வாங்க "
என்று பக்கத்தில் இருக்கும் சென்டருக்கு அனுப்பி வைப்பாராம் .
அந்த எக்ஸ்ரே சென்டரில் எக்ஸ்ரே இருக்கிறதோ , இல்லையோ .... ஆளுயர ஃப்ரிஜ் ஒன்று கண்டிப்பாக இருக்கும் .

மின்சார வசதியே இல்லாத கிராமத்து பார்ட்டிகள் , 'கதவை திறந்தால் லைட் எரியும் ஃப்ரிஜெ ஏதோ பெரிய மிஷின் ' என்று மிரள மிரளப் பார்ப்பார்களாம்.
ஃப்ரிஜ் முன் அந்த நபரை நிற்க வைத்து ஃப்ரிஜ் கதவை வேகமாக திறந்து , சடாரென்று மூடுவாராம் எக்ஸ்ரே (? ) டெக்னீஷியன் ஃப்ரிஜைத் திறக்கும்போது, பல்ப் எரிந்ததைப் பார்த்து எக்ஸ்ரே எடுக்கப்பட்டு விட்டதாக ஏமாந்து போவார் கிராமத்து பார்ட்டி !
ஃ ப்ரிஜின் அடிப்புறத்தில் வழியும் தண்ணீரைத் தேக்குவதற்காக இருக்கும் ட்ரேயில் ஏற்கனவே வைக்கப்பட்டிருக்கும் பழைய எக்ஸ்ரே படம் ஒன்று ரெடிமேடாக இருக்கும் .அதை எடுத்து , பார்ட்டி கையில் " சுடச்சுட " க் கொடுத்தனுப்பி விடுவராம் டெக்னீஷியன்.
இதை வைத்துக் கொண்டு சிகிச்சை தருவதாகப் பாவலா செய்வார் டாக்டர் தற்செயலாக நோயாளி குணமாகி விட்டால், அது அவரது அதிர்ஷ்டம் .

அந்த எக்ஸ்ரே படம் அடுத்த சில நிமிடங்களில் மீண்டும் அந்த எக்ஸ்ரே சென்டருக்கு வந்து, அடுத்த சுற்றுக்குத் தயாராகிவிடுமாம்.
ஆதாரம் நூல் : " போஸ்ட்மார்ட்டம் " பக் 16
டாக்டர் கே.ஆர் .சேதுராமன்
وَكَذٰلِكَ جَعَلْنَا لِكُلِّ نَبِىٍّ عَدُوًّا شَيٰطِيْنَ الْاِنْسِ وَالْجِنِّ يُوْحِىْ بَعْضُهُمْ اِلٰى بَعْضٍ زُخْرُفَ الْقَوْلِ غُرُوْرًا‌ وَلَوْ شَآءَ رَبُّكَ مَا فَعَلُوْهُ‌ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُوْنَ
இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும் மனிதரிலும், ஜின்னிலுமுள்ள ஷைத்தான்களை நாம் எதிரிகளாக்கி இருந்தோம். அவர்களில் சிலர் சிலரை ஏமாற்றுவதற்காக அழகான வார்த்தைகளை (காதில்) இரகசியமாகக் கூறிக் (கலைத்துக்) கொண்டிருந்தார்கள். உங்களுடைய இறைவன் நாடியிருந்தால் இவ்வாறு அவர்கள் செய்திருக்க மாட்டார்கள். ஆகவே, (நபியே!) நீங்கள் அவர்களையும் அவர்களுடைய பொய்க் கூற்றுகளையும் விட்டுவிடுங்கள்.
(அல்குர்ஆன் : 6:112)
ர.ரா

ஜோதிடரும் , மருத்துவரும்
(மருத்துவ டைரி குறிப்புகள் 14 )



" ராசிக் கட்டங்களைப் போட்டு சொல்லும் ஜோஸியமெல்லாம் துல்லியமானது இல்லை. எல்லாமே பொத்தாம் பொதுவான விஷயங்கள்தான் .
யார் படித்தாலும் அவர்களுக்குப் பொருந்துகிற மாதிரி சாமர்த்தியமான வார்த்தைகளில்தான் அவை எழுதப்படுகின்றன.
மக்கள் மனதைப் புரிந்து கொண்டவர்களால் எழுதப்பட்ட வார்த்தைகள் . அவை படிக்கும் ஒவ்வொருவரும் 'துல்லியமாக எனக்கு கணிக்கப்பட்ட ஜோஸியம் அது ' என்று நம்புவார்கள் ! "
பார்னம் என்ற அறிஞர் ஜோஸியத்தை இப்படி விளாசித் தள்ளினார். பிரபல ஜோஸியர்கள் அவரை எதிர்த்தனர் .
தான் சொன்னதை ஆதாரத்தோடு நிரூபித்தார் பார்னம் .
பன்னிரண்டு ராசிகளுக்கும் எழுதப்பட்ட பலன்களை தனித்தனியாக வெட்டி எடுத்தார் பார்னம் .அதில் மேலே எழுதியிருந்த ராசியின் பெயரை கத்தரித்து விட்டு , மேஷ ராசிபலனை கன்னி ராசிக்காரருக்கும் , கன்னி ராசிக்கான பலனை மிதுன ராசிக்காருக்கும் ....இப்படி எல்லாவற்றையும் மாற்றி மாற்றிக் கொடுத்தார்.

அதனைப் படித்தவர்கள் எல்லோருமே , . "இது எனக்கு பொருத்தமாக இருக்கிறது" என்றனர். பலன் மாற்றப்பட்டிருப்பதை யாரும் அறியவில்லை.
" இப்போது என்ன சொல்கிறீர்கள் ?" என்று ஜோஸியர்களிடம் பார்னம் கேட்டபோது , அவர்கள் வாயடைத்துப் போனார்கள்.
ஜோஸியத்திற்கு பொருந்தும் இந்த விதி மருவத்திற்கும் பொருந்தும் .
ஒன்றுமில்லாத நோய்க்கெல்லாம் பயந்து பீதியோடு வருகிற அப்பாவிகளுக்கு பொத்தாம் பொதுவான சிகிக்சையைத்தான் சில டாக்டர்கள் தருவார்கள். மருத்துவ அறிவோடுப் பார்த்தால் நோய்க்கும் அந்த சிகிக்சைக்கும் எந்த சம்பந்தமும் இருக்காது.
நோய் இயற்கையாக தானாகவே சரியாகி விடும்போது , " துல்லியமான கணிப்பைச் சொன்ன ஜோஸியர் " மாதிரி நம்ம டாக்டரும் புகழ்பெற்று விடுகிறார் .

5675. ஆயிஷா(ரலி) கூறினார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'ஒரு நோயாளியிடம் (உடல் நலம் விசாரிக்கச்) சென்றால்' அல்லது 'நோயாளி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டால்' அவர்கள்,
'அத்ஹிபில் பாஸ் ரப்பந் நாஸ் இஷ்ஃபி, வ அன்த்தஷ் ஷாஃபி, லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக்க, ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்' என்று பிரார்த்திப்பார்கள்.
பொருள்: மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்கி அறவே நோயில்லாதவாறு குணமளிப்பாயாக. நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தை தவிர வேறு நிவாரணம் இல்லை.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 75. நோயாளிகள்
ர.ரா

ஜெப்பூர் கால்கள் !
(மருத்துவ டைரி குறிப்புகள் 15 )



ஊனங்களைச் சரிசெய்யும் விவகாரத்தில் இந்தியாவுக்கு உலகப் புகழ் தேடித் தந்தது ஜெய்ப்பூர் கால்கள்.
இவற்றை உருவாக்கியது ஒரு டாக்டர் கிடையாது என்பதுதான் ஆச்சரியம் தரும் விஷயம்! யார் அவர் ? அவர் ஒரு சாதாரண கோயில் சிற்பி.
விபத்துக்களிலோ, போரிலோ கால்களை இழந்தவர்களுக்கு அமெரிக்காவில் செய்த செயற்கைக் கால்களைப் பொருத்துவதுதான் வழக்கமாக இருந்தது. இதற்காக லட்சக்கணக்கில் செலவழிக்க வேண்டியிருந்தது ! தவிர, இந்தக் கால்களைப் பொருத்திக் கொண்ட பிறகு கூட, நடப்பது சிரமமாக இருந்தது.
ஜெய்ப்பூரைச் சேர்ந்த கோயில் சிற்பி ஸ்ரீராமச்சந்திராவுக்கு இது பெரும் உறுத்தலாக இருந்தது. செயற்கைக் கால்களை பொருத்தும் சவாய் மான்சிங் மருத்துவமனைக்குச் சென்ற அவர், அந்த மருத்துவமனை டாக்டர்களிடம் கால்களின் அமைப்பு, உட்புற எலும்புகள், மூட்டுகள் , இயக்கும் விதங்கள் குறித்து கேட்டறிந்தார் . டாக்டர்களும் அவருக்கு நிறைய தகவல்கள் , படங்கள் கொடுத்தனர் .
அதை மாடலாக வைத்து ரப்பரில் இவர் வடிவமைத்த செயற்கைக்கால் ஏக வரவேற்போடு க்ளிக் ஆகிவிட்டது.
இப்போது 75 வயதாகும் ஸ்ரீராமச்சந்திரா இன்னமும் 'பகவான் மஹாவீர் விக்லாங் சஹாயத் சமிதி ' என்ற அமைப்பின் மூலம் முடமான ஆயிரக்கணக்கானவர்களை மீண்டும் நடக்க வைத்துக் கொண்டிருக்கிறார் .
இந்தச் செயற்கைக் காலுக்கு ஆகும் செலவு வெறும் ஆயிரத்து நானூறு ரூபாய்தான் .

இதைப் பொருத்திக் கொண்டு சைக்கிள் ஓட்ட முடியும்.... மரம் ஏற முடியும் ... ஓட முடியும் !
இந்தியாவில் மட்டுமல்ல... உலகம் முழுக்க ஜெய்ப்பூர் கால்களால் உலகை வலம் சுற்றி வருகிறார்கள் .
உலகின் பல நாடுகளில் போரில் கண்ணிவெடிகளில் சிக்கிக் கால்களை இழந்த பலரையும் இந்த ஜெய்ப்பூர் கால்தான் நடக்க வைக்கின்றன.
ர.ரா

மரணமும், சீன ஜோதிடமும்
(மருத்துவ டைரி குறிப்பு 16)




" நம்பிக்கை " _ ஒருவர் நோயில் இருந்து குணமாக மட்டும்தான் உதவுகிறது என்றில்லை .... ஒருவரின் மரண தேதியைக் கூட தீர்மானிக்கிறது என்றால் அது உங்களுக்கு அதிர்ச்சியாக இருக்கிறதா ?
சீனர்களிடம் ஜோதிட நம்பிக்கை அதிகமாக இருக்கிறது . எடுக்கப்பட்ட ஒரு சர்வே ரிப்போர்ட் இதை உறுதி செய்கிறது.
சீன ஜோதிடப்படி , ஒருவரின் மரண தேதி , அவரது பிறந்த நாளுக்கு ஒரு மாதம் முன்போ, அல்லது ஒரு மாதம்
பின்போதான் அமையும் .... மற்ற பத்து மாதங்களில் கண்டிப்பாக அவர் மரணமடைய வாய்ப்பே இல்லை. இப்படி ஜோதிடத்தின் மீது அழுத்தமான நம்பிக்கை வைத்திருக்கும் சீனர்கள் , தங்கள் பிறந்த நாளுக்கு நெருக்கமான தேதிகளில்தான் இறந்து போகிறார்கள்.
அமெரிக்காவில் இது தொடர்பாக ஒரு சர்வே எடுக்கப்பட்டது .சீனாவிலிருந்து அமெரிக்காவுக்குக் குடிபெயர்ந்த முதல் தலைமுறையைச் சேர்ந்த சீனர்கள் ஒரு குழுவாகவும், இவர்கள் அமெரிக்காவில் செட்டிலான பிறகு , இவர்களுக்குப் பிறந்த வாரிசுகள் இன்னொரு குழுவாகவும் பிரிக்கப்பட்டனர் .

இரண்டு குழுக்களிலும் பத்தாயிரம் பேரின் பிறந்த, இறந்த தேதிகள் ஆராயப்பட்டன.
முதல் தலைமுறை சீனர்கள் ஜோதிட நம்பிக்கையை மனதில் தாங்கியபடி அமெரிக்கா வந்தவர்கள்.
அவர்களில் பெரும்பாலோனோர் பிறந்த தேதிக்கு ஒரு மாதம் முன்னாலோ, பிறந்த தேதிக்கு ஒரு மாதம் பின்னாலோ தான் செத்துப் போயிருந்தார்கள்.
இரண்டாம் தலைமுறை சீனர்கள் அமெரிக்காவில் பிறந்து, அமெரிக்க கலாச்சாரச் சாயலோடு வளர்த்தவர்கள் இவர்களுக்கு ஜோதிட நம்பிக்கை கிடையாது .இவர்களது மரணம் அப்படி அமையாமல் , வெவ்வேறு மாதங்களில்தான் நிகழ்ந்தது .
சீன ஜோதிடம் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள் ?

மனிதர்களின் மரணகாலம் குறித்து இறைவன் திருக்குர்ஆனில் ...
وَهُوَ الْقَاهِرُ فَوْقَ عِبَادِهٖ وَيُرْسِلُ عَلَيْكُمْ حَفَظَةً حَتّٰٓى اِذَا جَآءَ اَحَدَكُمُ الْمَوْتُ تَوَفَّتْهُ رُسُلُنَا وَهُمْ لَا يُفَرِّطُوْنَ
அவன் தன் அடியார்களை அடக்கியே ஆளுகின்றான்; அன்றி உங்களுக்குப் பாதுகாப்பாளர்களையும் ஏற்படுத்துகின்றான். அவர்கள் உங்களில் ஒவ்வொருவரையும் மரண காலம் வரும் வரையில் பாதுகாத்து, பின்னர் அவரை இறக்கச் செய்கின்றனர்.அவர்கள் குறித்த காலத்திற்கு முன்னரோ, பின்னரோ உயிரைக் கைப்பற்றி ஏதும் தவறிழைப்பதில்லை.
(அல்குர்ஆன் : 6:61)

ர.ரா

**Rahmath Rajakumaran**

"மருத்துவ டைரி குறிப்பு "இத்துடன் நிறைவு பெறுகிறது.
இக் கட்டுரைக்கு ஆதார நூல்கள் .
1) " போஸ்ட்மார்ட்டம் "
- டாக்டர் கே.ஆர் .சேதுராமன்
2) உச்சி முதல் உள்ளங்கால் வரை
- விகடன்
3) புகாரி
4) முஸ்லீம்

தண்ணீர்

(நீங்களும் நானும் சேர்ந்து எழுதும் கட்டுரை )



பூமியில் எழுபது சதவிகிதம் தண்ணீரால் சூழப்பட்டுள்ளதால் அது `நீல கிரகம்' என அழைக்கப்படுகிறது. பூமியில் இவ்வளவு தண்ணீர் இருந்தாலும் ஒரு சதவிகித அளவு தண்ணீர்தான் பயன்படுத்தக்கூடியதாக உள்ளது. மீதியுள்ள தண்ணீரெல்லாம் கடல் மற்றும் சமுத்திரங்களில் காணக்கூடிய உப்புத் தண்ணீராகவோ அல்லது உறைந்த பனிக்கட்டிகளாகவோ உள்ளன.

மேலும் உயிர்க் கோளமான பூமியின் உயிர்களை படைத்தது ப் பற்றி குர்ஆனில் ....

" மேலும், எல்லா உயிர்ப் பிராணிகளையும் அல்லாஹ் நீரிலிருந்து படைத்துள்ளான் (அல்குர்ஆன் : 24:45)

Shabeer Ahmed மண்களில் பல வகைகள் இருப்பது போல் தண்ணீரிலும் எத்தனை வகை.,சுவை..,, அனைத்து படைப்புகளுக்கும் உயிர் உள்ளது., உயிர் அல்லாத மரம். செடி கொடி அனைதிற்கும் நீர் அவசியமாக இருக்கிறது. நீரின்றி அமையாது உலகு. அதற்குத்தான் எத்தனை சக்தி.., மேக கருவில் பிரசவிக்கும் குழந்தை மழை நீர்..

கமால் பாட்ஷா ஷேக் தாவூத்

அந்த ஒரு சதவிகித நன்னீரையும் மக்களாகிய நாம் சேமிப்பில் கவனம் செலுத்தாமல் அசுத்தமாக்கிவிட்டு உப்பு நீரை எவ்வாறு நன்னீராக்குவது என யோசித்துக் கொண்டிருக்கின்றோம்

Shamsuyousuff Yousuff நீர்நிலை (body of water) என்பது எல்லா வகையான நீரின் தொகுப்புகளையும் குறிக்கும். இது பொதுவாக புவிப்பரப்பின் மீது காணப்படும். நீர்நிலை என்ற சொல் சமுத்திரங்கள், கடல்கள், ஆறுகள், நீரோடைகள், சுனைகள், மடுக்கள் போன்ற இயற்கையான நீர்நிலைகளையும், ஏரிகள், குளங்கள், அணைகள் போன்ற மனிதனால் செயற்கையாக உருவாக்கப்பட்ட நீர்நிலைகளையும் கூறலாம்.

அண்டார்டிகா ....மிக சுத்தமான

நீர் உள்ள இடம் என்று அறிஞர்கள் கருத்து சொல்கிறார்கள்.

புவியில் உள்ள நன்னீரில் கிட்டத்தட்ட 70 சத வீதமானது இங்கேயே உள்ளது. புவி வெப்பமாதலினால் இங்குள்ள பனி உருகிவருகின்றது. இதன் மூலம் கடல் நீர் மட்டம் உயர்ந்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது. புவி வெப்பமயமாதலால் உருகும் பனிப்பாறைகள், கடல் நீர்மட்டம் உயர்வதை மேலும் கூட்டுகின்றன என அறிவியலாளர்கள் கண்டறிந்துள்ளனர்

உலகில் சுத்தமான இயற்கையாக கிடைக்கும்

குடிநீர் நார்வே மற்றும் கிரீன்லாந்து.

இன்னும் தம்பாக்கு போட்டு காறிதுப்ப

இந்திகாரன் போகவில்லை.

பலரும் அறியாதவிடயம்..உப்புக்கடலின் உள்ளும் நன்னீர் ஏரிகள் உண்டு..

#இஸ்லாமியரோஜா இருகடலும் அருகருகே இருந்தும்,ஒன்று கலக்காத அறிவியல் உண்மை(அர்ரஹ்மான் சூராவில் வரும்)

இப்படி நீரில் உள்ள நீர் பற்றியும் ஆச்சரியங்கள் உண்டு.

ஸித்றத்துல் முன்தஹா (நபியே!) நீர் கூறும்: உங்களின் தண்ணீர் பூமியினுள் (உறிஞ்சப்பட்டுப்) போய்விட்டால், அப்பொழுது ஓடும் நீரை உங்களுக்குக் கொண்டு வருபவன் யார்? என்பதை கவனித்தீர்களா? என்று (எனக்கு அறிவியுங்கள்).

அல்குர்ஆன்: 67:30

#ShamsuYousuffyousuff வீட்டில் பின் பக்கம் துணிதுவைக்கும் நீர் மற்றும் பாத்திரங்கள் கழுவுதல் ஒழுச்செய்வது போன்ற நீர்களை ஒரு ஓடை அமைத்து ஒரு அடி விட்டம் நான்கடி ஆழம் உள்ள குழி தோண்டி அதில் விழும்படி செய்ய வேண்டும். மேலும் இந்த குழி ஜல்லி கற்கள் அல்லது கூழாங்கற்கள் போட்டு மூடி வைக்க வேண்டும். தண்ணீர் நல்ல முறையில் வடிகட்டி போகும். நான் என் வீட்டில் பின் பக்கம் இது போல் செய்துள்ளேன். அதனால் வருடம் முழுவதும் ஆழ்துளை கிணறு நீர் வற்றாமல் தருகிறது. மேலும் அல்லாஹ் கிருபையால் எனது பகுதியில் ஆறு ஆழ்துளை கிணறு ஒரு சில நண்பர்கள் உதவியுடன் போட்டு கொடுத்துள்ளேன். அல்ஹம்துலில்லாஹ்.

நான் சமூகத்திற்கு குடிநீர் வசதி செய்து கொடுக்க வல்லமை தந்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இதுபோல் வெளிநாட்டில் வேலை செய்யும் நண்பர்கள் நம் ஊரில் ஒரோர் அடி பம்பு போட்டு கொடுத்தால் மேலப்பாளையத்தில் குடிநீர் பிரச்சினை இருக்காது.

ஆதமுடைய மக்களே! தொழும்போதெல்லாம் (ஆடைகளினால்) உங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள். (இறைவன் உங்களுக்கு அனுமதித்தவற்றை) நீங்கள் (தாராளமாகப்) புசியுங்கள்; பருகுங்கள். எனினும் (அவற்றில்) அளவு கடந்து (வீண்) செலவு செய்யாதீர்கள். ஏனென்றால், வீண்செலவு செய்பவர்களை நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை.

(அல்குர்ஆன் : 7:31)

#ShabeerAhmed நீர் இவ்வுலகத்தில் மட்டும் சிறப்பில்லை. மறுமை நாளில் நமது நபி (ஸல்) அவர்கள் தம் கைகளால் நீர் புகட்டும் பாக்கியம் நம் அனைவருக்கும் கிடைக்க வேண்டும்.இன்னும்சுவர்க்கத்தில் பாலாறு.தேனாறு.மதுஆறு.நீறூற்றுகள்..பலவும் இருக்கும்.என்றுஅல்லாஹ் திருமறையில் கூறுகிறான்.. நரகத்தில் கலிமா கூறிய கடைசி மனிதனை வெளியேற்றி நீரூற்றில் குளிப்பாட்டி புதிய மனிதனாய் சுவனத்திற்குஅல்லாஹ் அனுப்பி வைப்பான்

மரணத்திற்குப் பின் ஆன்மாக்களின் நிலை
(இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகள்1)



ஒரு முறை ஸல்மான் பார்ஸி (ரலி) அவர்களும் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) ஆகிய இருவரும் சந்தித்து பேசிக் கொண்டனர் . "எனக்குமுன் நீர் இவ்வுலகை விட்டு மறைந்தால் அங்கே என்ன நடந்தது என்பதை நீர் எனக்கு வந்து சொல்ல வேண்டும் " .
" என்ன....உயிரோடு இருப்பவரும் மறைந்து போனவரும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ள முடியுமா ? "
" ஆன்மாக்கள் ஜும்ஆடைய இரவன்று விடுவிக்கப்படுகின்றன. இன்னும் அவைகள் பரவுகின்றன. முதலில் தனது கப்ருக்கு வருகின்றது .பின்பு தனது வீட்டுக்கு வருகின்றது .
- கிதாபு : கஸானதுர் ரிவாயாத்

ஹஜரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
" ஈத் பெருநாள் , ஜும்மா, ஆஷூராவுடைய நாள் மற்றும் ஷபே பராஅத்துடைய நாட்கள் வந்தால் இறந்தவர்களின் ஆன்மாக்கள் தங்கள் வீட்டு வாசல்படியில் நின்று " எங்களை நினைப்பவர்கள் யாராவது
இருக்கிறார்களா ? எங்கள் மீது இரக்கப்படுவர்கள் யாராவது இருக்கிறார்களா ? எங்களின் இயலாமையை எண்ணிப் பார்ப்பவர்கள் யாராவது இருக்கிறார்களா ? எனக் குரல் கொடுக்கின்றன.
கிதாபு : கஸானதுர் ரிவாயாத்
மேற்கூறியவாறே ஆன்மாக்கள் ஈனக் குரலில் , " எனது வீட்டாரே ! எனது பிள்ளைகளே ! எங்கள் மீது தர்மத்தைக் கொண்டு முத்திரை வையுங்கள் எங்களை நினைவில் வையுங்கள் மறந்து விடாதீர்கள் .எங்களின் இயலாமை மீது இரக்கம் காட்டுங்கள் "
திடனாக முஸ்லிம்களின் ஆன்மாக்கள் பூமியிலுள்ள **" பர்ஸக் "** என்னுமிடத்தில் இருக்கின்றன .அவைகள் எங்கே செல்ல விரும்புகின்றனவோ அங்கே செல்கின்றன. இவ்வாறே ஈமான் கொள்ளாத ஆன்மாக்கள் '**ஸிஜ்ஜீன்** ' என்னுமிடத்தில் முடக்கப்பட்டுள்ளன.
- அல்லாமா இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் எழுதிய கிதாபுஸ் ஸுஹ்த்
اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَيْسَ بِخَارِجٍ مِّنْهَا كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ
(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன.
(அல்குர்ஆன் : 6:122)
ர.ரா

**Rahmath Rajakumaran**

அண்டவெளியில் மரணித்த ஆத்மாக்களால் சலனத்தை ஏற்படுத்த முடியும் என்பது மட்டும் அல்லாமல் உயிருடன் இருக்கும் நம்முடைய ஆன்மாக்களும் அண்ட வெளியில் சலனத்தை ஏற்படுத்துகிறது .
உமர் (ரலி) அவர்கள், அலீ (ரலி) அவர்களிடம் " ஹஸனின் தந்தையே ! ஒருவர் கனவு கண்டால் சில உண்மையாகவும் , சில பொய்யாகவும் ஆகிவிடுகின்றனவே , இது பற்றி தங்கள் கருத்து என்ன ?
" ஆம் , இது பற்றி நபி (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றிருக்கின்றேன் . அதாவது தூங்கக் கூடிய ஆண் , பெண்களின் ஆன்மாக்கள் அல்லாஹ்வின் அர்ஷு வரை சென்று பின்பு விழிப்படைகிறதோ அந்த ஆன்மா கண்ட கனவு விஷயங்களனைத்தும் நிச்சயம் நடந்தேறும் . இன்னும் எவர் ஆன்மா அர்ஷு வரை செல்லாத நிலையில் விழிப்படைகிறதோ அந்த கனவு பொய்க் கனவாக ஆகிவிடுகிறது
ஆதாரம் - முஸ்தத்ரக் ஹாகிம் .
ர.ரா

ரூஹா..? உயிரா..? ஆன்மாவா..?
நஃப்ஸா..?
(இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகள் 2)



وَيَسْـــَٔلُوْنَكَ عَنِ الرُّوْحِ قُلِ الرُّوْحُ مِنْ اَمْرِ رَبِّىْ وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا

(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள்.
(அல்குர்ஆன் : 17:85)
......இப்படி ஒரு கேள்வியை யூதர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள் .இதற்குரிய பதிலை இறைவன் மேற்கண்ட வசனத்தை வஹியாக அருளப்பட்டது .
நீங்கள் இப்போது சொல்லுங்கள் .
உயிர் அல்லது ஆன்மா அல்லது ரூஹ் நஃப்ஸ் இதில் எது உடலை விட்டுப் பிரிந்து போகிறது ? யோசிக்கிறீங்களா ?
மேற்கண்டவற்றில் ஏதோ ஒன்று உடலை விட்டுப் பிரிந்து விட்டால் மனிதன் மரணித்துவிடுகிறான். அது மனிதனுடன் சேர்ந்திருக்கும் வரை உயிருடன் இருக்கிறான் என்பதைத் தவிர , ஆன்மா என்பது இன்னதுதான் - அதன் அந்தரங்கம் இப்படி இப்படிதான் என்று தக்க சரியான ஆதாரத்துடன் இதுவரை ஒருவரும் நிரூபிக்கவில்லை என்பதாக **"அல்கவாஷீ "** என்ற கிதாபில் கூறப்பட்டுள்ளது.

ஆன்மீகவாதிகள் உயிரைப் பற்றி ...
**"ஆன்மா என்பது ரூஹுல் சுல்தானி** என்றும் **ரூஹுல் ஹைவானி** என்னும் இரு வகைப்படும்.

ரூஹுல் சுல்தானி என்பது ஆலமுல் அம்ர் என்னும் கட்டளை உலகைச் சேர்ந்தது . இது உடலை விட்டுப் பிரியக் கூடியது. ஆதலால் இதற்கு
அல் முஃபாரிக் (பிரியக் கூடியது) என்று பெயர். இது பூத உடலுடன் அதிகாரம் செலுத்துதல் , உடலை நடத்தி வைத்தல் என்ற முறையில்தான் சம்பந்தப்படுகிறது. இது உடல் அழிந்தாலும் அழிய மாட்டாது. உடலிலுள்ள அவயவங்களில் அதற்குரிய அதிகாரம் மட்டும்தான் அழிகிறது. இது இருக்க வேண்டிய இடம் கல்பு என்னும் இருதயமாகும். கல்பு என்னும் இதயம் ஆலமுல் மலக்கூத்தைச் சேர்ந்தது. (ஆலம் என்றால் உலகம் )

**ரூஹுல் ஹைவானி என்பது ஆலமுல் கல்க்** என்னும் சிருஷ்டி உலகைச் சேர்ந்தது. இதற்கு கல்பு என்றும் நஃப்ஸு என்றும் , அக்லு என்றும் பெயர் கூறப்படுகிறது. இது உடலிலுள்ள அங்கங்களில் கலந்திருக்கிறது. என்றாலும், இதனது அதிகாரம் உதிரத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறது. இது இருக்க வேண்டிய இடம் மூளை . இது ரூஹுல் சுல்தானி உடலுடன் சம்பந்தப்பட்ட பிறகுதான் உண்டாகிறது. இது ரூஹுல் சுல்தானியின் பிரதிபிம்பம் எனலாம்.அதுதான் செய்கைகளுக்கும் , அசைவுகளுக்கும் ஆரம்ப இடம். ஏனெனில் ஜீவியம் என்பது மறைவான காரியம். உயிருடன் இருப்போரில் அது மறைக்கப்பட்டிருக்கிறது .உணர்வு , அசைதல் , அறிவு , நாட்டம் முதலிய அறிகுறிகளை அல்லாமல் அது அறியப்படுவதில்லை . இந்த ஆன்மா இல்லாதிருப்பின் மனிதனின் பற்பல விதமான தன்மைகள் வெளியாக மாட்டா.
தாத்துடன் ஸிஃபத்துகள் ஒன்று சேர்வதால் உண்டாவது போல ரூஹுல் சுல்தானி , ரூஹுல் ஹைவானியுடன் சேருவதால் மனித செய்கைகள் உண்டாகின்றன .

இறைவனது பரிபூரணமாக தெய்வீகத் தன்மைகள் , இந்தச் செய்கைகளும் ஆதாரங்களும் உண்டாவதற்கு முன்னர், அஹதிய்யத்தாகிய தாத்தின் மறைவினுள் இருந்தது போல , ரூஹுல் சுல்தானி இந்த பூத உடலுடன் சம்பந்தப்படுவதற்கு முன்னர் அதன் அகத்தினுள் ரூஹுல் ஹைவானி இருந்து கொண்டிருந்தது .இந்த விஷயத்தை நீங்கள் நன்கு விளங்கிக் கொண்டால், "அன்பியாக்கள் , அவுலியாக்கள் மரணிப்பதில்லை. என்றாலும் , ஒரு வீட்டிலிருந்து இன்னொரு வீட்டுக்கு மாறுகிறார்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறிய கருத்தை விளங்கிக் கொள்வீர்கள் .

.....இப்படி ஒரு உரத்த சிந்தனையைக் கொடுக்கிறார்கள் ஆன்மீகவாதிகள் .
அடுத்து , தத்துவஞானிகள் உயிரைப் பற்றிய கருத்துக்கள் வித்தியாசமாக இருக்கிறது.
ரூஹ் என்பது "உயிர்" (Life) ஆகும் ."நஃப்ஸ்" என்பது "உயிருள்ளது" அல்லது " உயிரி " (Life Fore) ஆகும் .

உயிர் மட்டும் தனியாக இருந்தால் அதை "ரூஹ்" என்போம் . உடலுடன் உயிர் காக்கும் போது அதை " நஃப்ஸ் " என்போம் .
நல்ல உயிர் , கெட்ட உயிர் என்பதெல்லாம் உடலுடன் இருக்கும் போது அது நடந்து கொள்ளக் கூடிய நடைமுறையைப் பொருத்ததாகும் .
அவ்வாறு உயிரியில் ஏற்படும் இன்பம் - துன்பம் , சுகம் - துக்கம் ,வலி - வலியின்மை ஆகியவையெயல்லாம் உடலுக்குள் ஊடுருவி இருக்கும் உயிரின் அனுபவங்களாகும் . உயிரற்ற உடலுக்கு இவை எதுவும் தெரியாது. இருப்பினும் உயிருக்கே "நஃப்ஸ்" என்றும் , உயிரினத்திற்கே "ரூஹ்" என்றும் சொல்லப்படுவதுண்டு.இது உரு வழக்கு ஆகும் .

اَللّٰهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِىْ لَمْ تَمُتْ فِىْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِىْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰٓى اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
"மனிதர்கள் இறக்கும்பொழுதும், இறக்காமல் நித்திரையில் இருக்கும்பொழுதும் அல்லாஹ்வே அவர்களுடைய உயிரைக் கைப்பற்றுகிறான். பின்னர், எவர்கள் மீது மரணம் விதிக்கப்பட்டதோ அவர்களுடைய உயிரை(த் தன்னிடமே) நிறுத்திக் கொள்கிறான். மற்றவர்க(ளின் உயிர்க)ளை, குறிப்பிடப்பட்ட காலம் வரையில் வாழ அவன் அவர்களிடமே அனுப்பி விடுகின்றான். சிந்திக்கக் கூடிய மக்களுக்கு, நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன" .
(அல்குர்ஆன் : 39:42)
இந்த வசனத்தை மேற்கோள் காட்டினர்கள் தத்துவஞானிகள் .
விஞ்ஞானிகள் உயிரைப் பற்றி செய்த ஆய்வு நம்மை வியப்படையச் செய்கிறது .

நாம் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது நம்முடைய ஆன்மாவானது ஊர் சுற்றிப்பார்ப்பதற்கான நம்முடைய உடலைவிட்டு வெளியே புறப்பட்டுச் செல்லுமாம். நாம் இப்போது இருக்கும் இந்த 21 ஆம் நூற்றாண்டு என்பது விஞ்ஞானங்களால் நிறைந்த உலகம். அதனால், அஞ்ஞானம் மறைந்து போயிற்று என்று அர்த்தமில்லை. நீங்கள் இந்த உலகத்தை உற்றுப் பார்த்தால் உங்களுக்கே நன்றாகப் புரியும்.ஆழ்ந்த உறக்கத்தில் நம்முடைய ஆன்மா ஊர் சுற்றிப்பார்க்க புறப்பட்டுச் செல்லுமாம்...!

ஒருகாலத்தில் கடவுள் மறுப்பாளர்கள் ஒரு பக்கம் தங்கள் கருத்துக்களை ஊர்கூட்டி, சொல்லிக் கொண்டிருந்தார்கள். இப்போது எந்த அளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்து கொண்டிருக்கிறதோ அதே அளவுக்கு கடவுள் நம்பிக்கையும் ஒருபக்கம் பரப்பப்பட்டுக் கொண்டிருக்கிறது.
கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதையும் தாண்டி, நம்மைச் சுற்றிலும் நம்மை மீறிய ஏதோ ஒரு சக்தி இருப்பதாக நாம் உணர்கிறோம். அதை எல்லோருமே பாரபட்சமின்றி ஏற்றுக்கொள்கிறோம். அப்படி ஒரு ஏதோவொரு அதீத திறன்கொண்ட சக்தியாகத் தான் நாம் கனவைப் பார்க்கிறோம்.

அதனால்தான் நாம் கனவில் நடப்பதைப் பற்றிய யோசனையில் மூழ்குகிறோம்.ஆராய்ச்சி நாம் ஆழ்மனதில் என்ன நினைக்கிறோமோ அதுவே கனவாக வருகிறது என்று சொல்லப்படுகிறது.அதையே நாமும் நம்பிக் கொண்டிருக்கிறோம். அதுபற்றி சிக்மண்ட் பிராய்டு தொடங்கி, ஏராளமானோர் ஆராய்ச்சியும் மேற்கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதைத்தாண்டி இன்னொரு விஷயமும் அதில் இருக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஆன்மா என்று சொல்லப்படுவதைத் தான் நாம் உயிர்,ஆவி, என்றெல்லாம் வேறுவேறு பெயர்களில் சொல்லுகிறோம். அந்த ஆன்மாவானது நாம் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்பொழுது நம்முடைய உடலைவிட்டு ஆன்மா வெளி உலகத்தைச் சுற்றி வருவதாகக் கூறப்படுகிறது.

இது மாயையா? உண்மையா?
ஒருவருடைய இறந்து போன தந்தை அவருடைய கனவில் வந்தார். அவருடன் பேசினார். அவருக்கு இருக்கும் பிரச்னைக்கு சில வழிகாட்டுதல்கள் தந்தார். அதன்படி நடந்து கொண்டதால் அவருக்கு அந்த பிரச்னைகளெல்லாம் தீர்ந்தது என்று யாராவது சொல்லக் கேட்டிருப்போம். அதெப்படி இவருடைய தந்தை இவருடைய கனவில் வரமுடியும். இருவரும் கலந்துரையாட முடியும். ஏனென்றால் இருவருடைய ஆன்மாவும் சந்தித்துக் கொண்டன. ஒன்றின் பிரச்னைக்கு மற்றொரு ஆன்மா வழிகாட்டியது என்றுதான் அர்த்தம். இப்போது தூங்கும்போது ஆன்மா வெளியே போகும் என்ற நம்பிக்கை கொஞ்சமாவது வந்துவிட்டதா?
இப்படி நாம் காணும் கனவுகளில் சில அப்படியே நடக்கும். இதற்கு முன்பாக நாம் செல்லாத சில இடங்களுக்குப் புதிதாகப் போகும்போது நாம் கனவில் பார்த்த அதே இடத்தை அச்சு அசலாக எந்த மாற்றமும் இல்லாமல் பார்க்க நேரிடும். இப்போது நம்புகிறீர்களா நம்முடைய ஆன்மா அந்த இடங்களில் எப்போதோ உலவியிருக்கிறது என்று. அது நாம் விழித்திருக்கும்போது சாத்தியமில்லை. அதனால் நிச்சயம் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது தான் அது நடந்திருக்கும்.

நாம் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது நம்முடைய ஆன்மாவானது ஊர் சுற்றிப்பார்ப்பதற்கான நம்முடைய உடலைவிட்டு வெளியே புறப்பட்டுச் செல்லுமாம். அதனால் தான் ஒருவர் தூங்கும்போது அவசரமாக அவரை எழுப்பக்கூடாது என்று சொல்கிறார்களாம்
அப்படி நல்ல ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பவர்களை தட்டி எழுப்பும்போது உடலைவிட்டு, வெளியுலகத்தில் சுற்றும் ஆன்மாவானது பல லட்சம் கிலோமீட்டர் வேகத்தில் மீண்டும் உடலுக்குள் புகுந்து கொள்ளும் என்று ஆத்ம சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது.
தூக்கத்தில் இருப்பவர்களை தட்டி எழுப்பக்கூடாது என்று மருத்துவர்களும் குறிப்பிடுவார்கள். அவ்வாறு அடிக்கடி தூக்கத்தில் இருப்பவர்களை அப்படி அடிக்கடி வேகமாகவோ திடீரெனவோ தட்டி எழுப்பினால், அவர்களுக்கு மனநிலை பாதிக்கப்படக்கூடும் என்று மருத்துவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

என்ன இப்போதாவது நம்புகிறீர்களா....? ஆன்மாவுக்கும் நம்மை மாதிரியே ஊர் சுத்துகின்ற பழக்கம் இருக்கின்றது என்பதை.....!
ஆக ரூஹ் , நஃப்ஸ், உயிர் இதுவெல்லாம் சொற்களுக்கான பொருள் விளக்கங்களே தவிர இதுவே இலக்கணங்கள் அல்ல . ஏனெனில் , உயிர் என்பதன் இலக்கணம் வரையறுக்கப்படவில்லை .அல்லது கண்டறியப்படவில்லை . உயிர் காற்றைப் போன்றது என்கிறோமே தவிர , காற்றை அல்ல .. இல்லையேல் , சடலத்தில் காற்றை (ஆக்ஸிஜனை) நிரப்பினால் உயிர் பிழைக்க வேண்டும் .ஆக அதைப் போன்றது உயிர் இதைப் போன்றது உயிர் என்று உவமை கூற முடிகிறதே தவிர , உயிர் என்றால் என்ன எனும் இலக்கணத்தைக் கூற இயலவில்லை .

மனித வாழ்வும் மரணமும் எதற்கு இறைவா ?

اَلَّذِىْ خَلَقَ الْمَوْتَ وَالْحَيٰوةَ لِيَبْلُوَكُمْ اَيُّكُمْ اَحْسَنُ عَمَلًا ‌ؕ وَهُوَ الْعَزِيْزُ الْغَفُوْرُۙ
உங்களில் மிகத்தூய்மையான உயர்ந்த செயல்களைச் செய்பவர்கள் யார் என்று சோதிப்பதற்காகவே, அவன் மரணத்தையும், வாழ்க்கை யையும் படைத்திருக்கின்றான். அவன் (அனைவரையும்) மிகைத்தவன்; மிக மன்னிப்புடையவன். (அல்குர்ஆன் : 67:2)
ரஹ்மத் ராஜகுமாரன் .
(இது மீள் பதிவு )

பேய் , பிசாசுகள்
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 3)


"ஆன்மீக சிகிச்சை "என்று சொல்லக் கூடிய தல்சுமாத் என்னும் அஸ்மா வேலையில் ரூஹானியத்தைப் பற்றி நிறைய சொல்லப்படுகிறது .இந்த ரூஹானியத் கெட்டவர்களின் ஆத்மாக்களினால் உண்டாகிறது .

உடல் அழிந்தாலும் , ஆத்மா அழியாதல்லவா ? அந்த ஆத்மா பூமியில் வாழ்ந்த காலத்தில் தான் செய்த கெட்ட வினையின் காரணமாக அதற்கேற்ற கெட்ட உருவத்தை எடுத்துக் கொண்டு கெட்ட ஆத்மாவாகவே வாழும். இந்த கெட்ட ஆத்மாக்கள் மனிதர்களின் வாழ்வில் குறுக்கிட்டு தன் கெட்ட வினையை செய்து அவர்களை நிம்மதி இழக்கச் செய்யும் .

கடவுளாகிய இயேசு கிறிஸ்த்துவை பிசாசு 40 நாள் சோதித்ததாக பைபிள் கூறுகிறது. (மத்தேயு-4:1) இயேசு கிறிஸ்து பேயோட்டிய சம்பவத்தையும் பைபிளில் காணலாம். (மத்தேயு-12:24)
இதுகளைப் பற்றி பரஞ்ஜோதி மஹான் என்னும் பெரியார் " பூதலோகம் " என்ற கிதாபு எழுதி உள்ளார் .
"பூதலோகம் " என்றதோர் உலகம் உண்டு .நம் பூமிக்குச் சிறிது அப்பால் உள்ளது. இந்த லோகத்தில் இறந்தவர்களின் என்றுமே அழிவே இல்லாத ஆத்மாக்கள் சுமார் ஒன்னரை பனை உயரத்திற்கு அதாவது 80 அடியில் இருந்து 90 அடி உயரத்திற்குள் உலாவுவார்கள் .
இது மனித சரீரங்கள் ஆகி வெகுகாலத்திற்குப் பின், அறிவின் அபிவிருத்திக்கிடையிலும், ஆசையின் பற்றுதலுக்குப் பின்னும் ஏற்பட்டது. மனித சரீரம் எடுத்து இறந்த பின்னர், கொடிய குணத்தின் சூக்கும சரீரம் இந்த பூதலோகத்தில் தங்குகிறது.
இவைகளுக்கு பேய், பிசாசு , முனி , சாத்தான் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது .இவைகளில் படிப்படியாய் தாழ்வு, உயர்வு உண்டு.
இவைகளின் கூட்டத்திற்கு தலைவர்கள் உண்டு. தலைவர்கள் சொற்படி கூட்டத்தினர் காரியங்களை முடிப்பர் .
மனித சரீரத்தில் இருக்கும்போது கொடிய நயவஞ்சக துரோகிகளாயிருத்தவர்களும் , அநேக பொருள்களை அநியாயமாக சம்பாதித்து அவைகளை அனுபவிக்காமல் புதைத்து மறைத்து வைத்திருந்தவர்களும் ,
தம் மனமார சரீரத்தில் , மனம் கேட்டப் படி இச்சையிருந்தும் , அதை அனுபவியாமல் இறந்தவர்களும் ,
தற்கொலை செய்து கொண்டவர்களும். அநேக பேருக்கு மன ஹிம்சை செய்தவர்களும் , வன்னெஞ்சத்தவர்களும், ஒரு வஸ்துவின் பேரில் அழுத்தமான மாறாத இச்சை வைத்திருக்கும் சிறு மனதுடையவர்களும் ,

பெரும் படிப்பாளிகளாகி அதில் நயவஞ்சகத்தவர்களும் , மக்களை ஏமாற்றி தின்பவர்களும் , உறுதியிலே நிலைத்து, அவ்வுறுதிக்கு மேல் உறுதியடையாமல் மாறிக் கொள்ளும் சலனப்புத்தியுடையவர்களும் .
ராஜ விசுவாசத்தில் பேதழித்த போர் வீரர்களும் , அசந்தர்ப்பமாய் வெட்டுப்பட்டு அபாயமாய் இறந்தவர்களும் , பேத குண சச்சரவு உள்ள பெண்களுமாகிய இவர்களே பேயாகவும் , பிசாசுகளாகின்றனர் .
பிசாசு என்பது சரீரம் உள்ளபோது செய்த சேட்டைகளை தன் அரூபா ரூப வாயிலாக சிறிது காலம் செய்து முடிப்பதேயாகும் .
இவைகளின் சரீரம் ஊதா , மயில் துத்தம் போன்ற நிறமுடையது. இதிலும் கொஞ்சம் நல்லவர்கள் சிறிது வெள்ளை நிறமாக இருப்பார்கள் .
இவர்களுடைய உடம்பில் கால் தெரிய வராது. பூமிக்குச் சுமார் 1 அடி முதல் 4 அடி உயரத்திற்கு மேல் உலாவுவார்கள் .
இவர்கள் உடையோடு இருப்பதாக தெரிந்தாலும் இவர்களுக்கு உடை கிடையாது . இவர்கள் தோன்றினால் மூன்று நிமிஷங்களிலிருந்து கால் மணிக்கு மேல் நிலைக்க மாட்டர்கள் .
நல்லடியார்கள் , கண்கள் இமையாமல் விழித்த பார்வையுடையவர்கள் , பக்தர்கள் , திட துணிவுள்ளவர்கள் , சக்கரங்கள் உள்ள ஓடும் வாகனங்களில் செல்பவர்கள் ... இப்படிப்பட்டவர்கள் முன்பு இவர்கள் பயந்து தோற்றமளிக்க மாட்டார்கள் . ஆனால் மற்றவர்களை பயப்படுத்துவார்கள்.
பூ , சாம்பிராணி , புகை , மாமிசத்தின் சுவைகள் , மற்றும் பதார்த்தங்களின் சுவைகள் , பெண்கள் மீது மோகம், முதலியவைகளில் இவைகளுக்குப் பிரியம் அதிகம்.
இவர்கள் எல்லா இடங்களிலும் உலாவுவார்கள் .இவர்களுடைய நேரம் ,நடு இரவிலிருந்து விடிவெள்ளி தெரியும் வரையிலும் , சூரியன் அஸ்தமனமாகி ஒன்னரை நாழிகை வரையிலும் , நடுப்பகலிலிருந்து இரண்டரை மணி வரைக்கும் இவர்கள் தோன்றி பயமுறுத்துவார்கள் .
இந்த ரூஹானியத்களையும் வைத்து சிலர் காரியங்களை செய்து முடிப்பர். இவைகளிடம் கொஞ்சம் ஏமாந்தால் அவர்களையும் கொன்று தங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்வார்கள் .
பிசாசு பயத்தில் அகப்பட்டவர்களின் கதி பலவாறு இருக்கின்றது. அதைச் சொன்னால் விரியும். (பேய் , பிசாசுகளின் குணங்களான மீதியை பின்னூட்டத்தில் சொல்றேன்)
பெரும் ஆசாபாசக்தில் இறந்தவர்களாக இருந்தால் , சரீரத்தை விட்டு ஒரு கெஜத்திற்கு மேல் ஊதா பளிங்கு நிறமாக இதுகளைப் பார்க்கலாம்.
பார்க்க விரும்புவோர் சிறிது தொலைவில் இருந்து இமையாதபடி கூர்ந்து கவனித்தால் தெரியவரும் .
அவைகளின் சரீரத்தைக் கொண்டு போகும் பெட்டி ,தேர் இவைகள் கூடவே சமீபத்தில் வருவதைக் காணலாம்.
புதைக்கும் போதும் அல்லது சுடும் போதும் விலகி நிற்கும்.
பின் மரணித்த இடத்தில் 40 நாட்கள் வரை இருக்கும் . ஆகையால் அவ்விடத்தில் விளக்கு இருப்பது நல்லது .
நல்ல ஆத்மாக்கள் அவ்விடத்தில் 3 நாளைக்கு மேல் இருக்காது.
மிக நல்ல ஆத்மாக்கள் அக்ஷணமே விலகி சூக்கும யோகம் போய் விடும்.
ஆதார நூல் : பரஞ்ஜோதி மஹான் எழுதிய " பூதலோகம் "
திடனாக முஸ்லிம்களின் ஆன்மாக்கள் பூமியிலுள்ள " பர்ஸக் " என்னுமிடத்தில் இருக்கின்றன .அவைகள் எங்கே செல்ல விரும்புகின்றனவோ அங்கே செல்கின்றன. இவ்வாறே ஈமான் கொள்ளாத ஆன்மாக்கள் 'ஸிஜ்ஜீன் ' என்னுமிடத்தில் முடக்கப்பட்டுள்ளன.
- அல்லாமா இப்னு முபாரக் (ரஹ்) அவர்கள் எழுதிய கிதாபுஸ் ஸுஹ்த்
ர.ரா

பெரியோர்களின் கை, கால்களை முத்தமிடல்
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 4)



புனித வியாழன்று இந்து மற்றும் இஸ்லாமியர்களின் பாதங்களை கழுவி போப் பிரான்சிஸ் முத்தமிட்டார்.
ஏசுபிரான் உயிர் துறக்கும் முன்பு, தனது 12 சீடர்களுக்கு சேவை புரியும் விதமாக அவர்களது பாதங்களை கழுவி முத்தமிடும் நிகழ்வு புனித வியாழனாக கடைபிடிக்கப்படுகிறது. இந்நாளில் 12 கிறிஸ்தவர்களின் பாதங்களை கழுவி போப் பிரான்சிஸ் முத்தமிடுவது வழக்கம். ஆனால் இந்த முறை அகதிகள் முகாமிற்குச் சென்ற போப், அங்கிருந்த இஸ்லாமியர், இந்து உள்ளிட்ட மதங்களைச் சேர்ந்த 12 பேரின் பாதங்களை கழுவி முத்தமிட்டார். அப்போது பேசிய அவர், மக்கள் பல்வேறு மதங்கள், கலாச்சாரங்களை பின்பற்றினாலும் அனைவரும் சகோதரர்கள்தான் என்று கூறினார். பிரஸ்சல்ஸ் வெடிகுண்டு தாக்குதலுக்கும் போப் பிரான்சிஸ் கண்டனம் தெரிவித்தார்.

பெரியோர்களின் கை , கால்களை முத்தமிடுவது குறித்து இஸ்லாம் சொல்வது என்ன ?
"திடனாக ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து , ' அல்லாஹ் தங்களுக்கு மக்காவை வெற்றியாக்கி தந்தால் , நான் பைத்துல்லாஹ்வுக்கு சென்று அதன் வாசல்படியை முத்தமிடுவதாக நேர்ச்சை செய்துள்ளேன் ' என்று கூற ,
அது கேட்ட நபியவர்கள் , " நீர் உமது தாயுடைய இரண்டு பாதத்தையும் முத்தமிட்டுக் கொள்ளும் .உமது நேர்ச்சை நிறைவேறும் '' என்று கூறினார்கள்
(நூல் : உம்தத்துல் காரி ,பாகம் - 2, பக் - 82 )

அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தன்னைவிட வயதில் முதிர்ந்தவர் என்ற ஒரு நோக்கத்துக்காக அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கையையும் இரு காலையும் முத்தமிட்டார்கள்.
(நூல்: இமாம் புஹாரியின் அதபுல் முப்ரத் பக்கம் 976)

இரு யஹூதிகள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சில கேள்விகள் கேட்டு பதில் கிடைத்தவுடன் திடுக்கிட்டு நாயகத்தை நபியாக ஏற்று நபிகளாரின் கையையும் கால்களையும் முத்தமிட்டனர்.
(நூல் : திர்மிதீ, பாடம்: சூரத் இஸ்ரா விளக்கவுரை)
முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் மகளாகிய அன்னை பாதிமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வீட்டுக்கு சென்றால் அவர்கள் தன் தந்தை முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கையை முத்தமிடுபவளாக இருந்தார்கள
கஃப் இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு என்ற ஸஹாபி அல்லாஹ் மன்னித்து விட்டதாக நாயகம் ஸல்லலாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்த போது அந்த ஸஹாபியவர்கள் உடனே வந்து நாயகம் ஸல்லலாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் கையை முத்தமிட்டார்கள்.
(நூல்: துர்ருல் மன்தூர் பாகம் 4, பக்கம் 314)
அப்துல் கைஸ் தூது குழுவினர் கூறினார்கள் : நாம் மதீனாவுக்கு வந்த போது நபிகள் நாயகம் ஸல்லலாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்களின் கை மற்றும் கால் பாதத்தை எங்களில் யார் முதலில் முத்தமிடுவது என்பதற்காக ஓடுவோம்.

(நூல்கள்: அபூதாவூத் 5206, ஸூனன் பைஹகீ, முஸ்னத் பஸ்ஸார்)
சில யூதர்கள் நபிகள் நாயகம் ஸல்லலாஹூ அலைஹி வஸல்லம் அன்னவர்களின் கைகள், கால் பாதத்தை முத்தமிட்டார்கள்.
(நூல் : இப்னு மாஜா 3705 )
அப்துல்லாஹ் பின் ஸஃதில் அப்தீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
"நாங்கள் நாயகம் (ஸல்) அவர்களின் திருச்சபைக்கு வந்தோம். அப்போது நான் நபியவர்களை நெருங்கி அவர்களின் திருக்கரத்தை முத்தமிட்டேன் "
(நூல் : தாரீகுல் கபீர் , பாகம் 8 , பக் 31 )
இமாம் புகாரி (ரஹ்) அவர்களைக் குறித்து கூறும் போது , " இமாம் முஸ்லிம் பின் ஹஜ்ஜாஜ் (ரஹ் ) - (ஸஹீஹ் முஸ்லிமின் ஆசிரியர்) அவர்கள் இமாம் புகாரி (ரஹ்) அவர்களை வந்து சந்தித்த போது அவர்களை நோக்கி, " என்னை விட்டு விடுங்கள் .அதாவது தங்களின் முபாரக்கான பாதத்தை முத்தமிடுவதற்கு அனுமதியுங்கள் " என்று கேட்டனர்
- (அப்துல்ஹக் முஹத்தில் தெஹ்லவி (ரஹ்) அவர்கள் எழுதிய அஷ்அத்துல்லம் ஆத் பக் 9)
ர.ரா

மறைவான ஞானம் _(இல்முல் கைப்)
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 5)



" கைப் "என்பது மறைவு எனப்படும். எந்தப் பொருளை மனிதன் தனது ஐம்புலன்களான மெய் , வாய், கண் , மூக்கு , செவி.. போன்ற இந்த ஐம்புலன்களால் அறிந்து கொள்ள முடியாதோ அல்லது எந்தவொரு ஆதாரமும் இன்றி தெரிந்து கொள்ள முடியாதோ அதற்கு 'கைப்' என்று சொல்லப்படும் .
மறைவு இரு வகைப்படும் .
1) எந்தப் பொருளைக் குறித்து ஆதாரத்தைக் கொண்டு உறுதிப்படுத்தப்பட்டு மறைவானதை அறியப்படுமோ அது .
(உ-ம்) சொர்க்கம் , நரகம் , இறைவனுடைய தாத் மற்றும் ஸிபாத்துக்கள் மற்றும் அகிலத்திலுள்ள இதரவகைப் பொருட்கள் போன்றவைகளாகும். இவைகளை குர்ஆனுடைய வசனங்களை பார்வையிடுவதைக் கொண்டு தெரிந்து கொள்கிறோம்.
2) எந்தவொரு ஆதாரத்தைக் கொண்டும் மறைவானதை அறியப்பட முடியாதோ அது .
(உ-ம்) உலகம் எப்போது அழியும் ? மனிதன் எப்போது இறப்பான் ? ஒரு பெண்ணின் வயிற்றிலிருப்பது ஆணா அல்லது பெண்ணா ? பிறக்கும் குழந்தை ஸாலிஹானதா ? சத்ருவா ? தற்குரியா ? என்பை போன்ற ஆதாரங்களைக் கொண்டும் அறிந்து கொள்ள முடியாது இப்படிப்பட்ட மறைவுகளை குர்ஆன் "மஃபாதீஹுல் கைப் " என்று கூறுகிறது .

நபிகள் நாயகம் ﷺ அன்னவர்களின் மறைவான ஞானம்

"மண்ணறையின் வேதனைக் குரலை நான் என் செவிகளால் கேட்பதே போன்று நீங்களும் கேட்பீர்களாயின், இனிமேல் எந்த ஜனாசாவையும் நல்லடக்கம் செய்யாதிருந்து விடுவீர்களோ என நான் அஞ்சுகிறேன். அத்தகைய அச்சம் எனக்கு இல்லையாயின் உங்களுக்கும்

புதைகுழிகளில் இருப்பவர்களின் அவலக்குரலைச் செவியேற்க வைக்குமாறு பிரார்த்தனை செய்திருப்பேன்" என உத்தம நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அன்னவர்கள் உரைத்தார்கள்.
ஹழ்ரத் ஸைத் பின் ஸாபித் (ரலியல்லாஹு அன்ஹு)
முஸ்லிம், மிஷ்காத் – 25

ஒரு சமயம் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அன்னவர்கள் எங்களுக்கு அறிவுரை பகர்ந்துகொண்டிருக்கும்போது சிருஷ்டிகளின் உற்பத்தியிலிருந்து சுவர்க்கவாதிகள் சுவர்க்கத்திலும், நரகவாதிகள் நரகத்திலும் நுழைவது வரையிலான சகல விடயங்களையும் கூறிக்காட்டினர்கள். அவற்றைப் பாடமிட்டவர்கள் பாடமிட்டுக் கொண்டனர். ஏனையோர் மறந்துவிட்டனர்.
ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு)
புகாரி, மிஷ்காத் - 506

நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் (ஒருமுறை) எங்களிடையே மிம்பரில் எழுந்து நின்று, படைப்பின் ஆரம்பத்தைக் குறித்து எங்களுக்குச் செய்தி அறிவித்தார்கள். (எதுவரை என்றால் படைப்பின் தொடக்கம் முதல் மறுமை வாழ்வு வரை) சொர்க்கவாசிகள் (சொர்க்கத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் நரகவாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் நரகவாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் அறிவித்தார்கள். அதை நினைவில் வைத்தவர் நினைவில் வைத்துக் கொண்டார். அதை மறந்தவர் மறந்துவிட்டார்.
ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு)புகாரி 3192

நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒரு கோட்டையின் மீதிருந்து நோட்டமிட்டார்கள். பிறகு, 'நான் பார்ப்பதை நீங்கள் பார்க்கிறீர்களா? நான் உங்கள் வீடுகள் நெடுகிலும் (வருங்காலத்தில்) குழப்பங்கள் விளையக் கூடிய இடங்களை மழைத்துளிகள் விழும் இடங்களைப் (பார்ப்பதைப்) போன்று பார்க்கிறேன்!" என்று கூறினார்கள்.
ஹழ்ரத் உஸாமா (ரலியல்லாஹு அன்ஹு) புகாரி 1878

வலிமார்களின் மறைவான ஞானம்
மரணத்தருவாயிலிருந்த அபூபக்கர் ஸித்தீக் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் என்னிடம் கூறினார்கள்: "ஆயிஷாவே! நான் விட்டு செல்கின்ற வராஃதத் சொத்துகளை நீயும் உனது இரு சகோதரர்களும் மற்றும் இரு சகோதரிகளும் இறைவன் குர்ஆனில் கூறியபடி பங்கு பிரித்துக் கொள்ளுங்கள்.
நான் கேட்டேன்: "எனது அருமை தந்தையார் அவர்களே! இரு சகோதரிகள் என்றீர்களே! அஸ்மா என்ற ஒரு சகோதரி தானே எனக்கு உள்ளார். இன்னொரு சகோதரி யார்? (ஆயிஷாவே!) எனது மனைவியார் பின்து காரிஜா கர்ப்பமாக உள்ளார். அவர் பெண் குழந்தையை ஈன்றெடுப்பார். (எனவே தான் உனக்கு இரு சகோதரிகள் என்றேன்).
அவர்கள் கூறியது போன்று பின்து காரிஜா அவர்கள் உம்மு குல்தூம் என்ற பெண் குழந்தையை ஈன்றெடுத்தார்கள்.
அன்னை ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) முஅத்தா எண் 1242, பைஹகீ எண் 12267

திண்ணமாக உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஒரு படையை மதீனாவிலிருந்து நிஹாவந்த் என்னும் இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள். ஸாரியா (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களை அப்படைக்கு தளபதியாக நியமித்தார்கள். (மதீனாவில்) சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் 'யா ஸாரியா! அல் ஜபல்!' (ஸாரியாவே! மலையை கவனித்து சண்டையிடுங்கள்) என சப்தமிட்டார்கள்.
பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார். அமீருல் முஃமினீன் அவர்களே! எங்கள் எதிரிகளோடு நாங்கள் போர் புரிந்தபோது அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள். அப்போது 'யா சாரியா அல் ஜபல்' என்று சத்தம் கேட்டது. பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கி கொண்டு போர் செய்தோம். அல்லாஹ் அவர்களை விரட்டி விட்டான்.
ஹழ்ரத் இப்னு உமர் (ரழியல்லாஹு அன்ஹு)
நூல் – பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா) – 2655
ர.ரா

**Rahmath Rajakumaran**

நபிகள் நாயகம் ﷺ அன்னவர்களுக்கு மறைவான ஞானம் இல்லை என்பதற்கு ஆதாரமாக குர் ஆனின் நிறைய வசனங்களை சுட்டிக் காட்டுகிறார்கள் .
குறிப்பாக நபி (ஸல்) அவர்களுக்கும் மறைவானவற்றை சுயமாக அறிகின்ற ஆற்றல் இல்லை.
(நபியே! நீங்கள் அவர்களை நோக்கி) "அல்லாஹ்வுடைய பொக்கிஷங்கள் என்னிடம் இருக்கிறதென்று நான் உங்களுக்குக் கூறவில்லை. மறைவானவற்றை நான் அறியவும் மாட்டேன். உண்மையாகவே நான் ஒரு மலக்கு என்றும் நான் உங்களிடம் கூறவில்லை. எனினும், எனக்கு வஹீயின் மூலம் அறிவிக்கப் பட்டவைகளை அன்றி (வேறொன்றையும்) நான் பின்பற்றுவது இல்லை" என்று கூறி, "குருடனும், பார்வையுடையவனும் சமம் ஆவார்களா? (இவ்வளவு கூட) நீங்கள் சிந்திக்க வேண்டாமா?" என்றும் கேளுங்கள்.
(அல்குர்ஆன் : 6:50)
இதில் நன்கு கவனிக்க வேண்டிய விஷயம் " அல்லாஹ் அறிவித்தால் " மறைவான ஞானத்தைப் பெறுவேன் என்றுதானே அர்த்தம்.
" வஹி " என்னும் இறை செய்தி அன்னவர்களுக்கு வந்து கொண்டே இருக்கிறது . வஹி என்பதே மிகப் பெரிய "மறைவான ஞானம்தானே ?
நபியவர்கள் பிறந்தது புனித இறை இல்லத்தின் எல்லைக்குள் , அவர்கள் மறைந்த இடத்தை புனித நகரமாகவே ஆக்கினான் .
நபியவர்களின் வீட்டிற்கும். மிம்பருக்கு இடையே உள்ள பூமியை சுவனப் பூமியின் ஒரு துண்டாக்கினான் .
ஏறக்குறைய நபியவர்கள் அடங்கியிருக்கும் பூமியே சுவனம்தான். நமக்கு சுவனம் மறைவாக இருக்கும் போது , சுவனத்திலேயே இருக்கும் நபியவர்களுக்கு மறைவான ஞானத்திற்கு என்ன குறைவு வந்து விடப்போகிறது ?

"ஷபாஅத்" என்னும் பரிந்துரை ( சிபாரிசு )
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 6)



322. அல்லாஹ்வின் தூதர் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள்:
அல்லாஹ் மறுமை நாளில் மக்களை ஒன்று கூட்டுவான். அப்போது அவர்கள் "(அமளிகள் நிறைந்த) அந்த நாளைப் பற்றி (அதிலிருந்து விடுபடும் வழிவகை குறித்து) கவலையோடு யோசிப்பார்கள்"

அல்லது "அது குறித்த எண்ணம் அவர்களது உள்ளத்தில் ஏற்படுத்தப்படும்". ஆகவே, அவர்கள் "(அதி பயங்கரமான) இந்த நிலையிலிருந்து நம்மை விடுவிக்க நம் இறைவனிடம் பரிந்துரைக்கும்படி (யாரையாவது) நாம் கேட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமே!" என்று கூறியவாறு (ஆதி மனிதரும் ஆதித் தூதருமான) ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள்.
அவரிடம் "நீங்கள்தாம் மனித குலத்தின் தந்தை ஆவீர்கள்; அல்லாஹ் தனது கையால் உங்களைப் படைத்தான். தன்(னால் படைக்கப்பட்ட) உயிரை உங்களுக்குள் அவன் ஊதினான். மேலும், தன் வானவர்களுக்கு அவன் கட்டளையிட, அவர்கள் உங்களுக்குச் சிரம்பணிந்தனர். ஆகவே, இந்த(ச் சோதனையான) கட்டத்திலிருந்து எங்களை விடுவிப்பதற்காக உங்கள் இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்துரை (ஷஃபாஅத்) செய்யுங்கள்" என்று கூறுவார்கள்.

அதற்கு ஆதம் (அலை) அவர்கள், "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறியவாறு, (உலகில்) தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்துப் பார்த்து தம் இறைவனுக்கு முன் அதற்காக வெட்கப்படுவார்கள். பிறகு, "நீங்கள் (எனக்குப் பின் முக்கிய) முதல் தூதராக இறைவன் அனுப்பிவைத்த நூஹ் (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள்.
உடனே மக்கள், நூஹ் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அன்னாரும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, (உலகில்) தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து

அதற்காகத் தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். மேலும், "அல்லாஹ் தன்னுடைய உற்ற நண்பராக்கிக் கொண்ட (நபி) இப்ராஹீம் (அலை) அவர்களிடம் நீங்கள் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.
உடனே மக்கள், இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்ல, அவர்களும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து அதற்காகத் தம் இறைவன் முன் வெட்கப்படுவார்கள். மேலும், "நீங்கள் அல்லாஹ் உரையாடிய, தவ்ராத் (வேதத்)தையும் வழங்கிய (நபி) மூசா (அலை) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.

உடனே மக்கள், மூசா (அலை) அவர் களிடம் செல்வார்கள். அன்னாரும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, தாம் புரிந்துவிட்ட தவறை நினைத்து அதற்காகத் தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். மேலும், "நீங்கள் அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையுமான (நபி) ஈசாவிடம் செல்லுங்கள்" என்று கூறி விடுவார்கள்.
உடனே மக்கள், அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையுமான (நபி) ஈசாவிடம் செல்ல, அவர்களும் "(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறிவிடுவார்கள். "எனவே, நீங்கள் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அடியாரான (நபி) முஹம்மத் (ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.

உடனே மக்கள், என்னிடம் வருவார்கள். அப்போது நான் என் இறைவனிடத்தில் அனுமதி கேட்பேன். எனக்கு அனுமதி அளிக்கப்படும். இறைவனை நான் கண்டதும் சிரம் பணிந்தவனாக (சஜ்தாவில்) விழுந்துவிடுவேன். அவன் நாடிய நேரம்வரை (அப்படியே) என்னை விட்டுவிடுவான். பிறகு (இறைவனின் தரப்பிலிருந்து) "முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; செவியேற்கப்படும். கேளுங்கள்; உங்களுக்குக் கொடுக்கப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று கூறப்படும்.
உடனே நான் எனது தலையை உயர்த்தி என் இறைவன் எனக்குக் கற்றுத்தரும் புகழ்மொழிகளைக் கூறி அவனைப் புகழ்வேன். பிறகு, நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன் (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பின்னர் அவர்களை நான் நரகத்திலிருந்து வெளியேற்றி சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன்.

பின்னர் மீண்டும் நான் (இறைவனிடம்) சென்று சிரம்பணிந்து விழுவேன். இறைவன் தான் நாடும் நேரம்வரை (அப்படியே) என்னை விட்டுவிடுவான். பிறகு "முஹம்மதே, உங்கள் தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள்; செவியேற்கப்படும். கேளுங்கள்; அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று சொல்லப்படும்.
நானும் அவ்வாறே என் தலையை உயர்த்தி, என் இறைவன் எனக்கு அப்போது கற்றுத்தருகின்ற புகழ்மொழிகளைக் கூறி அவனை நான் புகழ்வேன். பிறகு நான் பரிந்துரைப்பேன். (நான் யார் யாருக்குப் பரிந்துரைக்கலாம் என்பதை வரையறுத்து) எனக்கு அவன் வரம்பு விதிப்பான். பிறகு அவர்களை நான் நரகத்திலிருந்து வெளியேற்றி, சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன்.
(இதைப் போன்றே மூன்று அல்லது நான்கு முறை நடக்கும்.)

அறிவிப்பாளர் கூறுகிறார்: மூன்றாவது முறையிலா, அல்லது நான்காவது முறையிலா என்று தெரியவில்லை; நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: "என் இறைவா! குர்ஆன் தடுத்துவிட்டவர்கள் -அதாவது நிரந்தர நரகம் கட்டாயமாகிவிட்டவர்(களான இறைமறுப்பாளர்கள் மற்றும் நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் எஞ்சியிருக்கவில்லை" என்று கூறுவேன்.

இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. அவற்றில், இப்னு உபைத் (ரஹ்) அவர்களது அறிவிப்பில் (பின்வருமாறு) கூறப்பட்டுள்ளது: கத்தாதா பின் திஆமா (ரஹ்) அவர்கள், "குர்ஆன் தடுத்துவிட்டவர்களைத் தவிர" என்பதற்கு விளக்கமாக "நிரந்தர நரகம் கட்டாயமாகிவிட்டவர்களைத் தவிர" என்று கூறினார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் அத்தியாயம் : 1. இறைநம்பிக்கை
அனைத்து நபிமார்களுக்குமே நபிகள் நாயகம் ﷺ அவர்களின் ஷபாஅத் தேவைப்படும் போது ...
நாம் எம்மாத்திரம் ..?
ர.ரா

**Rahmath Rajakumaran**

எவராவது புனித மதீனாவில் மரணிப்பதற்கான பாக்கியத்தைப் பெற்றிருப்பாராகில் அவர் அங்கேயே மரணிக்கட்டும். ஏனென்றால் அங்கு மரணிப்பவர்களுக்கு நிச்சயமாக நான் பரிந்துரைப்பேன்.
(திர்மிதி, அஹ்மத், மிஷ்காத் 240, இப்னு மாஜா 3112)

**Rahmath Rajakumaran**

அல்லாஹ்வுடனும் அவனது நேசர்களுடனுமான தம் தொடர்பைத் துண்டிக்காதவர்களுக்கே ஷபாஅத் பெறும் பாக்கியம் உண்டு. இதனடிப்படையில், ஷபாஅத் செய்யப்படுவதற்கான தகுதி பெறுவதற்கும் சில நிபந்தனைகள் இருக்கின்றன. அவை, மனிதர்களது செயற்பாடுகளுடனும் எண்ணங்களுடனும் தொடர்புடை யவையாகும்.'அவன் பொருந்திக் கொண்டவரைத் தவிர, (வேறெவருக்கும்) இவர்கள் பரிந்துரை செய்ய மாட்டார்கள்." (குர்ஆன் - 21:28)

**Rahmath Rajakumaran**

இந்த ஹதீஸ் ஷபாஅத் செய்வதன் தத்துவத்தை மிக அழகாகவும் தெளிவாகவும் உணர்த்துகின்றது.
நபிமார்கள் அனைவரும் குறிப்பாக பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி அவர்கள், மறுமை நாளில் பாவிகளில் சிலருக்காக அல்லாஹ்விடம் பரிந்துரை செய்யும் அந்தஸ்தைப் பெற்றுள்ளார்கள் என்று நாங்கள் நம்புகின்றோம். ஆனால், இதுவும் அல்லாஹ்வின் அனுமதியுடன் தான் நடைபெறும் என்பது கவனிக்கத் தக்கது.
அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது:''அல்லாஹ்வின் அனுமதியைப் பெற்ற பின்பே தவிர எந்தவொரு சிபாரிசு செய்பவருமில்லை.'
(குர்ஆன் - 10:03)

வஸீலா - உதவி தேடுதல்
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 7 )



வஸீலா என்பதன் பொருள் சாதனம். கடலில் பயணம் செய்ய கப்பல் வஸீலாவாக – சாதனமாக உள்ளது என்பர். அதைப் போல் அல்லாஹ்வின் பால் நெருங்குவதற்கான சாதனமாக பொறுமை தொழுகை

(" நீங்கள் பொறுமையைக் கைக்கொண்டு, தொழுது இறைவனிடத்தில் உதவி தேடுங்கள். (அல்குர்ஆன் : 2:45)
இன்ன பிற வணக்கங்கள் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளன தவிர ஒரு நபர் மூலம் அல்லாஹ்வை நெருங்கலாம் என்று எந்த இடத்திலும் கூறப்படவில்லை என்பதாக இஸ்லாமிய அடிப்படை சித்தாந்தாங்கள் தெரியாதவர்கள் வஸீலாவிற்கு தன் மனம் போக்கில் உளறி வருகின்றனர் . ஆனால் வஸீலாவைக் குறித்து நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள்
628. தொழுகை அறிவிப்பாளரின் அறிவிப்பை நீங்கள் செவியுற்றால் அவர் கூறுவதைப் போன்றே நீங்களும் கூறுங்கள். பின்பு என்மீது ஸலவாத் சொல்லுங்கள். ஏனெனில், என்மீது யார் ஒருமுறை ஸலவாத் சொல்கிறாரோ அதன் காரணத்தால் அவருக்குப் பத்து முறை அல்லாஹ் அருள்புரிகின்றான்.

பின்பு எனக்காக அல்லாஹ்விடம் வஸீலாவைக் கேளுங்கள். வஸீலா என்பது சொர்க்கத்திலுள்ள (உயர்) பதவியாகும்; அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவருக்குத்தான் அது கிடைக்கும். அந்த ஒருவர் நானாகவே இருக்க விரும்புகிறேன். எனவே, எனக்காக அந்தப் பதவியை (அல்லாஹ்விடம்) கேட்பவருக்கு (மறுமை நாளில்) எனது பரிந்துரை அவசியம் கிடைக்கும். இதை அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
ஸஹீஹ் முஸ்லிம் அத்தியாயம் : 4. தொழுகை

ياايها الذين آمنوا اتقو الله وابتغوا اليه الوسيله
எனதடியார்களே! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். மேலும் அல்லாஹ்வளவில் ஓர் வஸீலாவை (உதவியாளரைத்) தேடிக் கொள்ளுங்கள். (மாயிதா 6:35)

என்று நேரடியாகவே நீங்கள் வஸீலா தேடிக் கொள்ளுங்கள் என்று அல்லாஹ்வே சொன்னபிறகு, அதை ஷிர்க் என்று சொல்வது திருக்குர்ஆனை மறுப்பது ஆகுமல்லவா?
அப்தால்கள் ஷாம் நாட்டில் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். அவர்கள் நாற்பது பேர்களாகும். அவர்களில் ஒருவர் மரணிப்பார்களேயானால் மற்றொருவர் அவர் இடத்தில் நியமனம் செய்யப்படுகிறார். அவர்களின் பொருட்டினாலேயே மழை பொழிகிறது என்றும், அவர்களின் வஸீலாவைக் கொண்டே விரோதிகளிடமிருந்து வெற்றி கிடைக்கிறது என்றும் அவர்களினால்தான் ஷாம் தேசத்திற்கு வேதனை இறங்காமலிருக்கிறது என்றும் கூறினார்கள்.
அறிவிப்பாளர்: ஹழ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு
(மிஷ்காத் 582-3)

மதீனாவில் மழைப் பஞ்சம் ஏற்பட்டால் உமருப்னுல் கத்தாப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் பொருட்டைக் கொண்டு மழை இறக்கித் தர இறைவனிடம் வேண்டுவார்கள். அவர்கள் சொல்வார்கள், இறைவா! நாங்கள் நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வஸீலாவாக்கி-பொருட்டாக்கி மழையைத் தேடினோம். மழை இறக்கினாய். இப்பொழுது அண்ணலின் பெரிய தந்தை அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை பொருட்டாக்கி மழை கேட்கிறோம். மழை அருள்வாய் எனக் கூறுவாhகள். இப்படி துஆக் கேட்டால் உடனே மழை பொழியும்.
அறிவிப்பாளர்: அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு நூல்: புகாரி பாகம் 1 பக்கம் 138.

இறைவா! உனது நபியின் பொருட்டாலும் எனக்கு முன்னாள் உள்ள நபிமார்களின் பொருட்டாலும் என் தாயார் பாத்திமா பின்த் அஸத் அவர்களின் பாவங்களை மன்னித்து அவர்களின் மண்ணறையை விசாலப்படுத்துவாயாக என்று நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் துஆச் செய்தார்கள்.
நூல்: தப்ரானி 2 – 22

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தான் செய்த ஒன்றை ஏற்றுக்கொண்ட பின் யா அல்லாஹ்! முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பொருட்டால் என்னை மன்னித்திடுவாயாக! எனப் பிரார்த்தித்தார்கள்.
அல்லாஹ் நபியவர்களை நோக்கி, ஆதமே! நீ எப்படி நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அறிந்தாய்? இன்னும் நான் அவர்களை படைக்கவும் இல்லை எனக் கூற,
நபியவர்கள், எனது இரட்சகா! நீ உனது கரத்தால் என்னைப் படைத்து எனக்குள் ரூஹை அனுப்பிய சமயத்தில் நான் என் சிரசை உயர்த்தி அர்ஷைப் பார்த்தேன். அங்கே " லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மத் ரஸூலுல்லாஹ்" என உன் பெயருடன் மற்றுமோர் பெயரையும் இணைத்திருந்தாயல்லவா? இதனால் நான், நீயே உன் பெயருடன் மற்றொருவரின் பெயரைச்

சேர்த்திருக்கிறாய் என்றால், நிச்சயமாக அவர் உன்னிடத்தில் சகல சிருஷ்டிகளையும் விட மிகப் பிரியத்திற்குரியவராக இருக்கும் என்று நினைத்தேன் என்றார்கள்.

அதற்கு அல்லாஹ் ஆதமே! நீர் கூறியது உண்மைதான். அவர் சகல படைப்புகளை விடவும் என்னிடத்தில் மிக மிக நெருக்கமானவரே! எனவே அவரின் பொருட்டால் நீர் என்னிடம் பிழை பொறுக்கக் கேட்டதால் நான் உம்மை மன்னித்து விட்டேன் எனக் கூறிய அல்லாஹ் அவரை நான் படைத்திடாவிட்டால் உம்மையும் படைத்திருக்க மாட்டேன் என்றான். இதன் சனத் ஸஹீஹானதாகும். (அல் முஸ்ததர்க், கிதாபுத் தாரீக் 2:615)
இன்னும், நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநீதமிழைத்துக் கொண்டு உம்மிடம் வந்து, பின்னர் அல்லாஹ்விடம் அவர்கள் மன்னிப்புக்கோரி, அவர்களுக்காக அல்லாஹ்வுடைய தூதரும் பாவமன்னிப்புக் கோரியிருந்தால், தவ்பாவை ஏற்பவனாகவும் மிகக் கிருபையுடையவனாகவும் அல்லாஹ்வை அவர்கள் கண்டிருப்பார்கள். (அல்குர்ஆன் 04:64)
ர.ரா
**Rahmath Rajakumaran**
ياايها النبيّ اناارسلنك شاهدا ومبشرا ونذيرا وداعياالى الله باذنه
நபியே! நாம் உங்களை சாட்சி சொல்வோராகவும், சுபச் செய்தி கூறுபவராகவும், எச்சரிக்கை செய்வதற்காகவும், அல்லாஹ்வின் உத்திரவு கொண்டு அவன்பால் அழைப்பதற்காகவும் அனுப்பினோம். (அல்குர்ஆன் அஹ்ஸாப் 45,46)

சில நண்பர்கள் இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாட்டைப் பற்றிய என் பதிவுகளைப் பார்த்து நிறையவே அட்வைஸ் எனக்கு செய்றாங்க . போனில் தங்கள் பேர் சொல்லியே பேசுறாங்க . நீங்களா இப்படி ?



முதல்ல நீங்கள் ஒன்றை புரிந்து கொள்ள வேண்டும் . ரூஹானியத்தைப் பற்றி ஆய்வு செய்த பரஞ்ஜோதி மஹானைப் பற்றியும் அவரது ஈமானைப் பற்றியெல்லாம் நிறைய கேள்வி என்னிடம் கேட்கிறீர்கள் . அது அவருக்கும் அவரைப் படைத்த ரப்புக்கும் உள்ள விஷயம் . முதல்ல நம்ம ஈமான் என்ன நிலையில் என்ன நிறத்தில் என்ன உருவத்தில் இருக்கிறது என்பதை பரிசோதித்தோமா ? உள்நோக்கிப் பார்த்தால் உண்மை விளங்கும் .

அறிவியல் கட்டுரை எழுதும் போது குர்ஆன் வசனத்திற்கு விளக்கமாக விஞ்ஞானத்தையும் அதன் கோட்பாட்டாளரான யூத விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீனைப் பற்றி நான் எழுதிய போது நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லை .

ஆல்பர்ட் சிறுநீர் கழித்து சுத்தம் செய்வாரா ...? அவரின் விஞ்.விளக்கம் குர்ஆனுக்கு அத்தனை அவசியமா.... என்றெல்லாம் நீங்கள் என்னிடம் எந்த கேள்வியும் கேட்கவே இல்லை . அவரின் சொந்த வாழ்க்கையைப் பற்றியும் நீங்கள் என்னிடம் விமர்சிக்கவே இல்லை. ஆனால் பரஞ்சோதியை சொன்னதும் பாய வருகிறீர்கள் . பரஞ்சோதி ரூஹானியத்தின் ஒரு நல்ல ஆய்வாளராகத்தான் எனக்குத் தெரிகிறார். அவ்வளவே.

வஹ்ஹாபிய கொள்கையை நேரடியாகவோ , அல்லது மறைமுகமாக அல்லது அய்க்கி நக்கியாகவோ ஏற்றுக் கொண்ட பலஹீனமான

ஈமான்தாரிகள் என்னுடைய இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாட்டு சித்தாந்த பதிவுகளை தவிர்த்துவிடுங்கள் , அல்லது கடந்து விடுங்கள் . அல்லது மௌனித்து விடுங்கள் .நீங்கள் ஒன்றும் ஞான அறிவுரை சொல்லி நான் கேட்க வேண்டிய அவசியம் எனக்கில்லை . என் சற்குரு அஹ்லே பைத் சுபைர் தங்ஙள் ஜலாலில் புகாரி (ரஹ் ) எனக்கு சற்று அதிகவே ஞானப்பாலை ஊட்டியுள்ளார்கள் இன்னும் ஊட்டிக் கொண்டே இருக்கிறார்கள் .எனவே ஞான அறிவுரை எனக்கு சொல்வதை விட்டு, உங்களது ஈமானை அதோ அடிக்கிற ஆடிக் காற்று சேலை நழுவி விலகலோடு பறக்க விட்டு விடாதீர்கள் . இன்று போய் நாளை வாருங்கள் .
ர.ரா

கபுறு (மண்ணறை வாழ்க்கை ) 01
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 8 )



கபுறு என்பது பிரேதக்குழி , அது இறந்து போனவருடைய சடலம் பிறருடைய பார்வைக்கு மறைவாய்த் தங்கும் இடம் .
இது தரையிலோ , மலையிலோ , கடலிலோ அல்லது மீன், கழுகு ,புலி போன்ற காட்டு விலங்குகளின் இரப்பையிலோ அமையலாம்.
மனிதனுடைய சடலம் எதில் தங்குகின்றதோ அதிலிருந்துதான் மறுமைக்கு அவன் எழுப்பப்படுவான் அதுவரை அங்கிருந்து அவன் மீளமாட்டான்.

ஒருவன் இறந்து அவன் சடலம் கபுறில் அடக்கிய பின் அவன் நல்லவனாக (ஸாலிஹ்) இருந்தால் அவன் ரூஹு
" இல்லீனில் " போய்ச் சேரும். கெட்டவனாக (பாஸிக் ) இருந்தால் , அவன் ரூஹு சிஜ்ஜீனில் " போய்ச் சேரும்.
கியாமத் நாள் வரை சடலம் கபுறில் தரிப்பட்டிருக்கும் . இருந்தாலும் நல்லவனான ஸாலிஹுடைய ரூஹு மற்ற எல்லா இடங்களுக்கும் போய் வரும் . கெட்டவனாக பாஸிக் ரூஹு அங்கிருந்து சற்று இடம் பெயரக்கூட முடியாமல் கைதியாக அங்கே அடைபட்டு கிடக்கும் .

மண்ணறை என்பது ஒருவன் சுவர்க்கத்திற்கோ , நரகத்திற்கோ போகிற வழியில் கடக்க வேண்டிய இடம் கபுறு என்கிற இந்த மண்ணறை . இந்த மண்ணறை உலகத்தை "பர்ஸக் உலகம்" எனப்படும் . ஏதோ பார்ப்பதற்கு 6 அடிக்கு 3 அடி , 4 அடி ஆழம் கொண்டதாக இருந்தாலும் ஆன்மா என்கிற ரூஹ் வாழும் பர்ஸக் உலகிற்கு இந்த மண்ணறை தலைவாசலாகிறது .

பர்ஸக் உலகம் ஏழு பூமிகளுக்கும் கீழாக உள்ளது.
பர்ஸக் உலகம் இந்த துன்யாவைப் பார்க்கிலும் மிகப் பெரியது. ஒருவன் தாய் வயிற்றிலிருந்து துன்யாவில் பிறந்தவுடன் அந்த கர்ப்பப்பையும் வயிறும் அவனுக்கு எவ்வளவு சிறியதாகக் காணப்படுகிறதோ , அதைப் போல் மரணித்து பர்ஸக் உலகத்திற்கு போனதும் அவன் வாழ்ந்த இந்த துன்யா வாழ்க்கை மிக மிகச் சிறியதாய்க் காணப்படும் .
இந்த பர்ஸக் உலகத்தில் ரூஹுகள் ஒன்றையொன்று சந்தித்துச் பேசிக் கொள்ளும் .முன்னாள் மரணித்த ரூஹு அடுத்து மரணித்த ரூஹுவிடம் துன்யாவைப் பற்றியும் விசாரிப்பதும் உண்டு.

ஒருவன் மரணித்து அவனது சடலம் உருக்குலைந்து , இல்லாமல் போனாலும் அவனது புத்தியும் , அறிவும் அவனது ரூஹைப் போல் அழியாது. ரூஹைப்போல் அந்த உடலும் இன்ப துன்பங்களை அனுபவிக்கும் .
மரணித்தவனுக்கு உயிரோடு இருப்பவனுடைய எல்லாக் காரியங்களும் தெரிவிக்கப்படும் . மண்ணறைக்கு அருகில் நடக்கும் எல்லா காரியத்தையும் அவன் கண்டறிவான். உயிரோடு இருக்கிற பிரியமுள்ள ஒருவன் தன் மண்ணறைக்கு வந்தால் அவனை மண்ணறையில் இருப்பவன் கண்டு மகிழ்வான் .
1374. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஓர் அடியான் கப்ரில் அடக்கம் செய்யப்பட்டு அவனுடைய தோழர்கள் திரும்பிச் செல்லும்போது, அவன் அவர்களின் செருப்பின் ஓசையைச் செவியேற்பான்.
மண்ணறை வாழ்க்கை என்பது மண்ணோடு மண்ணாக உடல் மக்கிப் போனாலும் ரூஹ் வாழ்ந்து கொண்டே இருக்கும் இடம் அது .

**Rahmath Rajakumaran**

1379. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் தங்குமிடம் அவருக்குக் காலையிலும் மாலையிலும் எடுத்துக் காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால் சொர்க்கத்திலிருப்பதாகவும் நரகவாசியாக இருந்தால் நரகத்திலிருப்பதாகவும் (எடுத்துக் காட்டப்படும்.) மேலும், அல்லாஹ் மறுமை நாளில் உன்னை எழுப்புகிற வரை இதுவே (கப்ரே) உன்னுடைய தங்குமிடம் என்றும் கூறப்படும்.'
அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

**அப்துல் ஹக்கீம் சிந்தாமணி**

மவ்த்தை ஞாபகப்படுத்தும் பதிவு.நம் அனைவருக்கும் வல்ல அல்லாஹ் நல்ல மவ்த்தைத் தந்து "பர்சக்" உலகில் சிறந்து வாழ தவ்ஃபீக் செய்வானாக.அர்த்தமுள்ள பதிவுகள் பல தங்களிடம் இருந்து வர வல்ல இறைவன் ஆயுளை நீட்டித்துத் தருவானாக.

கபுறு (மண்ணறை வாழ்க்கை ) 02
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 9 )

ஒருவன் இறந்தவுடன் அங்கு நடக்கும் காரியங்கள் அனைத்தும் சடலமாய் இருப்பவனுக்கு நன்றாகத் தெரியும். யாரெல்லாம் அவனை குளிப்பாட்டுகிறார்கள். யார் யார் அவனைப் பற்றி என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பது உட்பட அவனுக்கு நன்றாகத் தெரியும்.
அவனை குளிப்பாட்டி கபன் செய்யப்பட்டு கபறில் அடக்கப்பட்டவுடன் , மரணித்த போது பிரிக்கப்பட்ட ரூஹு அந்த சடலத்தில் மீண்டும் சேர்க்கப்பட்டு உயிர்ப்பிக்கப்படும் .
முதன்முதலாக அவனின் கபுறு அவனிடம் பேசும். நல்லவனாக இருந்தால் வந்தனம் சொல்லும். கெட்டவனாக இருந்தால் அது அவனை சபிக்கும் . பின் " ரூமான் " என்னும் வானவர் மலக்கு அவனிடம் வருவார் வந்து அவனிடம் ....,

" நீ உலகத்தில் செய்த நன்மை , தீமைகளை பட்டியலிட்டு எழுது " என்பார்
" இங்கு மையும் , எழுதுகோலும் , காகிதமும் இல்லையே .. எப்படி நான் எழுத முடியும் ? "
" உன் வாயிலுள்ள உமிழ்நீரே மை , உன் கை விரலே எழுதுகோல், உன் கபன் துணியே காகிதம் " என்று கூறி கபன் துணியில் ஒரு துண்டைக் கிழித்து எழுதக் கொடுப்பார்.

எழுதப் படிக்கத் தெரியாதவனாக இருந்தாலும் ,தான் செய்த நன்மை ,தீமைகளை ஒன்று விடாமல் எழுத வரும். அதில் கூட்டியோ , குறைத்தோ அவன் ஆத்மா எழுதாது. ஏனெனில் அவன் ஆத்மா மேல் உலகத்தைச் சேர்ந்தது. அது என்ன நடந்ததோ அந்த உண்மையை அப்படியே அப்படியே ஒன்று விடாமல் எழுதும் .

அப்படி எழுதப்பட்ட அந்த கபன் துணியின் துண்டை ,மடக்கிச்சுருட்டி அவன் கழுத்தில் மாலை மாதிரி கட்டிவிட்டு ,ரூமான் என்கிற இந்த மலக்கு அவனின் கபறை விட்டு போய்விடுவார்.
அவன் சடலத்தை கபறில் அடக்கப்பட்டு மண்ணை மூடியதும், பள்ளிவாசல் இமாம் "தல்கீன் " ஓதுவார் . (இப்போது நவீனத்துவவாதிகளால் தல்கீன் ஓதுவதை தடை செய்திருக்கிறார்களாம்)
துனியாவில் மார்க்கத்தைப் பற்றி அறியாமல் வாழ்ந்தவனுக்கு , தல்கீனில் சொல்லப்படும் சேதியை மிக வேகமாக கேட்டறிந்து கொள்ள நினைப்பான் . பள்ளிவாசல் இமாம் தல்கீன் ஓதி முடித்ததும் , அதுவரை கபறில் காத்திருந்த " முன்கர் - நகீர் " என்னும் இரண்டு வானவர் மலக்குகள் அவனிடம் வருவார்கள் . இவ்விரு வானவர்களுக்கும் தல்கீன் ஓதப்படுவதையும் , கபறில் உள்ளவன் பதறி பதறி அதை மனப்பாடம் செய்வதையும் கவனித்துக் கொண்டே இருப்பார்கள் .

'
நாமே கேட்கப் போகிற கேள்விகளுக்கு பதில் இந்த கப்றாளிக்கு சொல்லிக் கொடுக்கப்படுகிறது ' - என்று இரண்டு மலக்குகளும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வார்கள் .
ர.ரா

**Rahmath Rajakumaran**
பரீட்சை எழுத ஹாலுக்குள் போகும் மாணவனுக்கு பரீட்சை எத்தனை பயமாக இருக்குமோ அதை விட பல மடங்கு பயம்
கபுறாளிக்கு கபறில் இருக்கும் . இதற்கு தல்கீன் ஓதுவது சற்று ஆறுதலாக இருக்கும் .
சடலத்தின் மீது மண் அள்ளி போடுவதுமாதிரி , தல்கீன் ஓதுவதை நிறுத்த சொல்லி மண் அள்ளி வைத்து விடாதீர்கள்

**Rahmath Rajakumaran**
" மரணத்திற்கு பின் ஆன்மாக்களின் நிலை " என்று இத்தொடரின் முதல் கட்டுரை ஆரம்பித்து , தொடர்ந்து இ.அல்லாஹ் எழுத உள்ளேன் .
தல்கீன் மாதிரி விடுபட்ட சமச்சாரங்களுக்காக முழுமையாக பதிவுகள் எழுத உள்ளேன் .
உயிர் , ஆன்மா , ரூஹ் .... என்று இப்படியே மறைவானதையேப் பற்றி எழுதி ஆங்காங்கே கிதாபுகளின் ஆதாரங்களையும் கொடுத்து வருகிறேன்.
இத்தொடர் பதிவுகளில் கபுறில் சடலம் வைத்ததும் என்னென்ன நிகழும் என்பது பற்றி விஞ்ஞானம் கலக்காமல் சீரியஸ்ஸாக எழுதுகிறேன் .
விஞ்ஞானம் பிற்பாடு சொல்றேன் .

கபுறு (மண்ணறை வாழ்க்கை ) 03
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 10 )



" முன்கர் - நகீர் " என்னும் இரண்டு வானவர் மலக்குகள் நல்லடியாளரான கபுறாளிடம் ,
" மன் றப்புக்க " - (உன் இறைவன் யார் ?)
" அல்லாஹுு றப்பீ ( அல்லாஹ் என் இறைவன் )
" வமா தீனுக்க " (உன் மார்க்கம் எது ? )
"வல் இஸ்லாமுதீனி " (என் மார்க்கம் இஸ்லாம் )
" வமன் னபிய்யுக்க " (உன்னுடைய நபி யார் ? )
" வ முஹம்மதுன்னபிய்யி " (என் நபி முஹம்மது (ஸல்) )
" வமா கிபுலத்துக்க " (உன்னுடைய கிபுலா எது ? )
" வல்கஃபத்து கிபுவத்தி " (என்னுடைய
கிபுலா கஃபா )
"வமா இமாமுக்க " (உன் இமாம் யார் ? )
" வல்குர்ஆனு இமாமி " ( என் இமாம் குர்ஆன்)
" வமா இருவானுக்க " (உன்னுடைய சகோதரர் யார் ? )
" வல் முஸ்லிமூன இகுவானீ" (என்னுடைய சகோதரர் முஸ்லிம்கள் )

இவ்விதமாக மலக்குகள் கேட்ட கேள்விக்கு நல்லடியார் பதில் சொன்னதும் , " நீ இப்படிச் சொல்வாயென்று எங்களுக்குத்
தெரியும் "
உடனே அவனுடைய கபுறு என்ற மண்ணறை நாலாயிரத்துத் தொளயிரம் சதுர முழம் விஸ்தீரணமுள்ளதாக விரிவாக்கம் செய்யப்படும் .அதில் எங்கும் பிரகாசிக்கும்படியான ஒளிவும் உண்டாக்கப்படும்.
அப்போது அந்த இரு மலக்குகளும் அவனைப் பார்த்து , " நீ சுகமாய் படுத்திரு ! " என்று சொல்லிவிட்டு போய் விடுவார்கள்.

பிறகு முகவசீகரமும், நற்மணமும், அழகுமுள்ள உடையும் உடைய ஒருவர் வந்து அவனுக்கு நன்மாராயஞ் சொல்வார் . அவனும் அவருக்கு பதில் நன்மாராயஞ் சொல்லி ,
" நீ யார் ? " என்று கேட்பான்.அப்போது அவர், " நீ செய்த நல்ல அமல்கள் " என்று சொல்லுவார் .
அப்போது....." சுவர்கத்து வாசல்களில் ஒன்றை அவனுடைய கபுறுக்கு நேரே திறந்து விடுங்கள் . சுவர்க்கத்து விரிப்புகளில் ஒன்றை இவன் கபுறில் விரியுங்கள் " என்று ஒரு சப்தம் உண்டாகும் .உடனே மலக்குமார்கள் அப்படியே செய்வார்கள் .
பாவியானவன் கபுறுக்கு , முன்கர் - நகீர் என்னும் இரு மலக்குகளும் , மிக்க கறுத்த மேனிகளையும் , நீல நிறமுள்ள பயங்கரமான கண்களையும், மின்னலைப் போலப் பளீரென்று கண்ணை பறிக்கும் பார்வைகளையும் உடையவர்களாய் , வளர்ந்து நீண்ட ரோமங்கள் தரையில் பட்டு இழுத்துக் கொண்டு வர , இடி இடிக்கும் பெரிய சத்தத்துடன் வந்து , பருத்து , நீண்ட தங்கள் பற்களால் பாவியின் கபுறைத் தோண்டி , மிக்க அமளியுடன் உள்ளே நுழைவார்கள் .

மிக்க பயந்துடன் நடுங்கிக் கொண்டிருக்கும் பாவியை அசைத்து , மேற்கண்ட அத்தனை கேள்விகளையும் கேட்பார்கள் .
எந்தக் கேள்விக்கும் சரியான பதில் சொல்லாமல், தாறுமாறாக பலவிதமாக உளறுவான். அப்போது அந்த இரு மலக்குகளும் அவனைப் பார்த்து , " நீ இப்படி உளறுவாய் என்று எங்களுக்குத் தெரியும் " என்பார்கள்.

உடனே அவனுடைய கபுறின் இருபுறங்களையும் நெருக்கும்படி உத்திரவு பிறக்கும்.
விலா எலும்பின் ஒரு புறம் மற்றொரு விலா எலும்புக்கிடையில் தைத்துக் கொள்ளும் .அந்த வேதனை கியாமத்து நாள் வரையிலும் கொஞ்சம் கூட குறையாமல் நீடித்து நிலைத்திருக்கும்.
பிறகு விகாரரூபமும் , துர்கந்தமும் அருவருப்புமுள்ள உடையையும் உடைய ஒருவர் அவனருகில் வந்து , துன்மாராயஞ் சொல்வார் .அவனும் அவருக்கு பதில் துன்மாராயஞ் சொல்லி,

" நீ யார் ? " என்று கேட்பான்
" நான்தான் நீ செய்த கெட்ட அமல்கள் " என்று சொல்வார் .
அப்போது குருடும் , செவிடுமுள்ள ஒரு மிருகம் அவன் மீது ஏவி விடப்பட்டு, அது தன் கையில் இருக்கும் இரும்பு தடியால் அடிக்கும் அதனால் அவன் நொறுங்கி மண்ணோடு மண்ணாவான் .அவனுக்கு மீண்டும் உயிர் உண்டாகும்.

பின்னும் அந்த மிருகம் இரண்டு கண்களுக்கு இடையில் அடிக்கும்.அந்த அடியின் சப்தம் மனிதர்கள் தவிர , மற்ற படைப்புகள் அனைத்திற்கும் கேட்கும் .
உடனே " நரகத்து வாசல்களில் ஒன்றை அவன் கபுறுக்கு நேரே திறந்து விடுங்கள் நரகத்து அக்கினிப் பலகைகளில் இரண்டு பலகைகளைக் கொண்டு வந்து போட்டு அவனைக் கிடத்தாட்டுங்கள் " என்று ஒரு சத்தம் கேட்கும். அப்படியே செய்யப்படும் .

பின் " சுஜா அல் அறகு " என்னும் தொண்ணூற்றொன்பது
சட்டித்தலை பாம்புகளை அவன் மேல் ஏவிவிட்டு கடித்துக் கொண்டும், பிடுங்கிக் கொண்டும் இருக்கும்படி வேதனை செய்யப்பட்டு கியாமத் நாள் வரையும் அந்த வேதனைகளை பாவி அனுபவித்துக் கொண்டேயிருப்பான்.
ர.ரா

" ஜியாரத் "என்கிற ஆத்மார்த்ம சந்திப்பு
(இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 11)



இறந்தவர்கள் அடக்கம் செய்யப்பட்ட மண்ணறைக்குச் சென்று ஜியாரத் என்கிற முறையில் அவர்களின் ஆன்மாவை சந்திப்பது அத்தனை அவசியமா ......?

"எவரொருவர் தமது தாய் தந்தையருடைய கபுறுகளை அல்லது அவ்விருவருள் ஒருவருடைய கப்றை
வெள்ளிக்கிழமைகளில் ஜியாரத்துச் செய்வாராயின் , அவர் ஹஜ்ஜு செய்தவரைப் போலாவார் "

"பெற்றோர்களின் கபுறுகளை ஜியாரத்து செய்வாராயின் அவருடைய பிழைகள் பொறுக்கப்படுவதுடன் அவர் நன்றியுடைய நல்லடியாராகவும் எழுதப்படுகிறார் " என்பதாக நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியுள்ளதாக மிஷ்காத் ஷரீபில் கூறப்பட்டுள்ளது .

" யா ரஸூல்லா ! சுவர்க்கத்து வாசற்படியையும் , ஹூருல்ஈன் பெண்ணையும் முத்தமிடுவதாக நான் சத்தியம் செய்து கொண்டேன் .இதற்குப் பரிகாரமென்ன ? "
" உனது தாயாருடைய காலையும், தகப்பனாருடைய முகத்தையும் முத்தமிட்டுக் கொள் ! "
" தாயும் , தந்தையும் இல்லாவிட்டால் என்ன செய்வது ? "
" உனது தாய் தந்தையார்களுடைய கபுறுகளை முத்தமிடுவாயாக ! "
"அவர்களுடைய கபுறுகளின் அடையாளங்கள் காணப்படாவிட்டால் என்ன செய்வது ? "
" இரண்டு கோடுகளை நிலத்தில் கீறி அவற்றில் ஒன்றை தாயின் கபுறாகவும், மற்றொன்றை தந்தையின் கபுறாகவும் எண்ணிக் கொண்டு நீ முத்தமிடு ! உமது சத்தியத்தை முறிக்காதீர் !
- நூல் : கன்ஜுல் - இபாது
(அப்போ .. கபுறை முத்தமிடலாம் )
நபி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: உங்களை (முதலில்) கப்ருகளை ஜியாரத் செய்ய தடை செய்திருந்தேன். (தடை நீக்கப்பட்டது இனிமேல்) அவைகளை ஜியாரத் செய்யுங்கள் " - ஹழ்ரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு
நூல்கள்: ஸஹிஹுல் முஸ்லிம் 3995, திர்மிதி, ஹாகிம், அபூதாவூத், இப்னு ஹிப்பான்
கப்றுகளை ஜியாரத் செய்யுங்கள். ஏனெனில், அவை மரணத்தை நினைவூட்டும்!' என்று கூறினார்கள்.
அறிவிப்பவர் : ஹழ்ரத் பூஹரைரா ரலியல்லாஹு அன்ஹு
நூல்: முஸ்லிம் 1777

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: கப்ருகளை ஜியாரத் செய்யுங்கள். ஏனெனில் நிச்சயமாக அது இவ்வுலகத்தில் பற்றற்ற நிலையை உண்டாக்கி மறுவுலக வாழ்வைப் பற்றிய நினைவையும் ஏற்படுத்த வல்லது.
நூல்: இப்னு மாஜா-1569, மிஷ்காத் – 154
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் ஒவ்வொரு ஆண்டின் ஆரம்பத்திலும் ஷுஹதாக்களின் கப்ருகளை ஜியாரத் செய்பவர்களாக இருந்தார்கள். மேலும்

அபூபக்கர், உமர், உஸ்மான் (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகியோரும் அப்படியே செய்பவர்களாக இருந்தார்கள்.
ஆதாரம்: தபரானி 3 – 241

நபிகள் நாயகம் ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: என் தாயின் கப்ரை ஜியாரத் செய்ய என் இறைவனிடம் அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதியளித்துள்ளான். எனவே, நீங்களும், கப்ருகளை ஜியாரத் செய்யுங்கள். ஏனெனில், அது மரணத்தை நினைவுபடுத்தும்.
- ஹழ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு
நூல்கள்: முஸ்லிம், திர்மிதி, அபூதாவூது

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் "தமது மனைவிமார்களில் ஆயிஷா நாயகி (ரலியல்லாஹு அன்ஹா) அவர்களின் முறை வரும் பொழுதெல்லாம் நள்ளிரவின் கடைசிப் பகுதியில் (தஹஜ்ஜது நேரத்தில்) ஜன்னத்துல் பகீஉக்குச் சென்று ஜியாரத் செய்து அங்கு அடங்கியிருக்கக் கூடியவர்களுக்கு பிழை பொறுக்கத் தேடிவிட்டு வரும் பழக்கத்தை கொண்டர்வர்களாக இருந்தார்கள்".
நூல்: முஸ்லிம் 1 - 313, மிஷ்காத் 154

கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: எவர் ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் தனது பெற்றோர்களில் இருவரையோ அல்லது ஒருவரையோ ஜியாரத் செய்து வந்தால் அவரின் பாவங்கள் பொறுக்கப்படுவதுடன் நல்லவர் என்றும் எழுதப்படும்.
நூல்: பைஹகி, மிஷ்காத் - 154

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் மதீனாவில் உள்ள கப்ருகளுக்கு அருகே சென்றார்கள். அப்பொழுது தங்களின் திரு முகத்தை கொண்டு கப்ருவாசிகளின் மீது முன்னோக்கி ஸலாம் கூறினார்கள்.
நூல்: மிஷ்காத் 2 – 407

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் தனது தாயாரின் கப்ரை ஜியாரத்து செய்தார்கள். மேலும் அவ்விடத்திலே அழுதார்கள். அவர்களின் அழுகையை பார்த்து சூழ இருந்த ஸஹாபாக்கள் கண்ணீர் சொரிந்தார்கள்.
நூல்: முஸ்லிம், மிஷ்காத் - 154

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: எவராவது கப்ருஸ்தானக்களுக்கு சென்று சூரா யாசீன் ஓதினால் கப்ராளிகளை தொட்டும் வேதனை லேசாக்கப்படுகிறது. மேலும் ஓதியவருக்கு அந்த கப்ராளிகளின் எண்ணிக்கையளவு நன்மைகள் கிடைக்கின்றன.
அறிவிப்பாளர்: ஹழ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு
நூல்: மிஷ்காத் 4 – 382

அப்துல்லாஹ் பின் அபீ மலீகா ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார் :ஒரு நாள் ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் கப்ருகளை ஜியாரத் செய்து விட்டு வந்து கொண்டிருந்தார்கள். அப்போது நான் அவர்களிடம் இறைநம்பிக்கையாளர்களின் தாயாரே நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் என் சகோதரர் அப்துர் ரஹ்மான் பின் அபீ பக்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மண்ணறையிலிருந்து வருகிறேன் என்று பதிலளித்தார்கள். மண்ணறைகளுக்குச் சென்றுவரக் கூடாது என அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தடைசெய்யவில்லையா? என்று அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் முதலில் தடைசெய்திருந்தார்கள். பிறகு அவற்றைச் சந்தித்துவருமாறு ஏவினார்கள் எனக் கூறினார்கள்.
நூல்: ஹாகிம் 1327
அன்னை பாத்திமா நாயகி ரலியல்லாஹுஅன்ஹா ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோறும் ஹம்ஸா ரலியல்லாஹு அன்ஹு அவர்களை ஜியாரத் செய்து வந்தார்கள்.
நூல்: முஸ்னத் அப்துர் ரஸ்ஸாக் 3-572, முஸ்தத்ரக் 1- 377
ஆயிஷா நாயகி ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் புனித ரவ்லா ஷரீஃப் சென்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களையும், அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் பர்தா அணியாமலேயே ஜியாரத் செய்பவர்களாக இருந்தார்கள்.

பின்னர் உமர் ரலியல்லாஹு அன்ஹு அதில் அடக்கம் செய்யப்பட்டபோது பர்தா அணிந்து ஜியாரத்து செய்பவர்களாக இருந்தார்கள்.
ஆதாரம்: மிஷ்காத் – 154
அல்லாமா , முல்லா அலிகாரீ (ரஹ்) அவர்கள் எழுதிய " ஷரஹுஷ் - ஷிபா என்கிற கிதாபில் , " பொதுவாக கபுரு ஜியாரத்தை வேண்டாம் என விலக்குவதானது குப்ரை உண்டாக்கும்" எனக் குறிப்பிட்டுள்ளார்கள் .
ர.ரா

**Rahmath Rajakumaran**
வர்த்தகக் கூட்டமொன்று வியாபாரத்தை முன்னிட்டுப் பிரயாணப்படுவதற்கு முன்பு சற்குரு ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்களிடம் சென்று ,
" நாங்கள் போகும் பாதை பயங்கரமான ஆபத்துக்கள் நிறைந்த இடம் .ஆகையால் பாத்திரமாகப் போய் வர துஆ செய்து அனுப்பும் படி சற்குருவிடம் பைஅத் வாங்கிய முரீது வேண்டினார் .
" உங்களுக்கு ஆபத்து நேரிடின் இந்த
அபுல்ஹஸனை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் " என்று கூறிப் பயணம் அனுப்பி வைத்தார்கள் .
சற்குருவின் இந்த வார்த்தை அவரது முரீது தவிர வர்த்தக கூட்டத்தின் மற்றையோருக்கு ஒரு மாதிரியாக , பெருத்தக் கேடாக நினைத்தனர் .
பல நாள் பிரயாணத்தில் ஒரு நாள் கொள்ளைக் கூட்டத்தினர் அவர்களை வழிமறித்துப் பொருள்களைச் சூறையாடினர் .
முரீது மட்டும் , ஷைகு அபுல்ஹஸன் கிர்கானி (ரஹ்) அவர்களை விளித்து உதவி தேடினார் . பொருளுடன் அவர் கொள்ளைக் கூட்டத்தாரின் பார்வையை விட்டும் தப்பினார் . மற்றவர்கள் இறைவனை விளித்து உதவி தேடினர் . அவர்களுடைய பொருள்கள் ஒன்று விடாமல் சூரையாடப்பட்டன .
எல்லோருடைய பொருளும் கொள்ளை போயிருக்க ஒரேவொருவருடைய பொருள் மாத்திரம் தப்பிப் பத்திரமாக இருப்பதையெண்ணி வர்த்தகர்கள் பேராச்சரியப்பட்டு , சற்குருவிடம் வந்தனர்.
" நாங்கள் அல்லாஹ்வைக் கூப்பிட்டு உதவி தேடினோம். பொருளை இழந்தோம் . ஒருவர் மட்டும் உங்களைக் கூப்பிட்டு உதவி தேடினார் . அவருடைய பொருள்கள் பாதுகாக்கப்பட்டது .இதன் காரணம் என்னவென்று நீங்கள் கூறுங்கள் " என்றனர்.
" உங்களை நீங்களே அறியாத போது , நீங்கள் அல்லாஹ்வையும் அறியாது ,
வாக்கு மனம் வேறுபட்டு வெறுமனே அவன் பால் உதவி தேடினீர்கள் . இந்த அபுல்ஹஸனோ தன்னை அறிந்து அதன் மூலம் தன் இறைவனை அறிந்து , வாக்கு மனம் ஒன்றுபட்டு அவன்பால் உதவி தேடினார் . அபுல்ஹஸனை ஞானப்படுத்தி உதவி தேடினால் உங்களுக்காக அபுல்ஹஸன் அல்லாஹ்வின் உதவி தேடுவார் .அவ்வமயம் உங்கள் காரியம் நிறைவேறும் . நீங்கள் அல்லாஹ்வை அறியாத புறத்தில் , என்றும் அவனைக் கூப்பிடும் வழக்கம் போல் ஆயிரம் முறை அழைத்தாலும் யாதொரு பயனுமில்லை"
என்பதாக சற்குரு ஷைகு அபுல்ஹஸன் கிர்கானீ (ரஹ்) அவர்கள் அறிவுறுத்தினார்கள் .
ஆதாரம் : மிர் அத்துல் கவுனைன்
பக்கம் 244
اَلَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَا فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ ۛ اَلرَّحْمٰنُ فَسْـــَٔـلْ بِهٖ خَبِيْرًا
அவனே வானங்களையும், பூமியையும், அவற்றிற்கிடையிலுள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்; (அவன் தான் அருள் மிக்க) அர்ரஹ்மான்; ஆகவே, அறிந்தவர்களிடம் அவனைப் பற்றிக் கேட்பீராக.
(அல்குர்ஆன் : 25:59)

கபுறை முத்தமிடலாமா ?
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 12 )



முத்தமிடலாம் . ஆதாரம் சொல்றேன்.
ஹஜ்ரத் அமீருல் முஃமினீன் உமர் பாரூக் (ரலி) அவர்கள் , ஹஜ்ருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டுக் கொண்டு , பிறகு , " "சந்தேகமின்றி நீ ஒரு கல் , உன்னை முத்தமிடுவதால் , நீ நன்மை செய்வதுமில்லை , முத்தமிடாவிட்டால் நீ தீமை செய்வதுமில்லை.நபிகள் நாயகம் ﷺ அவர்கள் உன்னை முத்தமிடாதிருந்தால் , நான் உன்னை முத்தமிட்டிருக்க மாட்டேன் " என்று கூறினார்கள்.
இதைக் கேட்
ட ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள் , " (மஹ்லன் ! யா உமர் ) உமர் அவர்களே ! சற்று நிதானியுங்கள் ! நாவைப் பேணுங்கள் ! முத்தமிடுவதால் இந்தக் கல் நிச்சயமாகப் பிரயோஜனத்தைக் கொடுக்கின்றது ; முத்தமிடாவிட்டால் அது நஷ்டத்தைக் கொடுக்கின்றது ". என்று கூறினார்கள் .
அவர்களது அந்தக் கூற்றுக்கு விளக்கம் தரும்படியாக உமர் (ரலி) அவர்கள் கேட்கவே, அலி(ரலி) அவர்கள் ,
" இல்லா மனித்தகத -இன்தர் ரஹ்மானி - அஹ்தா " _ " ரஹ்மானிடம் அறுதிமானம் எடுத்துள்ள வனைத் தவிர " என்று குர்ஆனில் ( 7: 172 ) இறைவன் கூறியுள்ளதன் கருத்து யாதெனில் , ஆன்மா உலகில் (ஆலம் அர்வாஹ்வில் ) நாம் அல்லாஹ்விடம் , அறுதிமானம் செய்த உறுதிப் பிரமாணம் இந்தக் கல்லின் வாயினுள் வைக்கப்பட்டிருக்கிறது .

அந்த அறுதிமான வார்த்தைப்பாடு , எழுதப்பட்டுள்ள சத்திய நாமாவையே நாம் முத்தமிடுகிறோமேயல்லாது கல்லை அல்ல , நாம் அங்கு காட்டுகின்ற மரியாதை ஒழுக்கம்யாவும் கல்லுக்காக அல்ல .
"ஹஜ்ருல் அஸ்வத் உலகில் அல்லாஹ்வின் கரம் (யமீனுல்லாஹி) என்பதாக நபிகள் நாயகம் ﷺ அவர்கள். திருவாய்மலர்ந்தருளியுள்ளார்கள் .

"உமர் அவர்களே ! இதற்குப் பிறகும் தாங்கள் இதை ஒரு சாதாரணக் கல்தானே என்றே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் போலும் ! " என்று அலி ( ரலி) விளக்கினார்கள் .
இவ்வகமியம் உமர் (ரலி) அவர்களுக்கு வெளிப்பட்டதும் , " அலி இல்லாவிட்டால் இந்த உமர் ஹலாக்காகி இருப்பார் " என்று உமர் (ரலி) அவர்கள் கூறினார்களாம் .
ஸஹீஹில் புகாரி பாகம் 4 பக் 608
அஷிஅத்துல் - லம் ஆத்- தர்ஜுமா மிஷ்காத் .

" கியாமத் நாளில் ஹஜ்ருல் அஸ்வத்துக்கு இரு கண்கள் இருக்கும் . அவற்றைக் கொண்டு பார்க்கும்.நாவும் இருக்கும் .தன்னை முத்தமிட்டவர்களைப் பற்றி அது சாட்சி சொல்லும் " என நபிகள் நாயகம் ﷺ கூறினார்கள் என்பதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களைக் கொண்டு - இபுனுமாஜா (ரலி) பைஹக்கீ (ரலி) இருவர்களும் ரிவாயத்துச் செய்துள்ளார்கள்.
மேலும் " அது தன்னை முத்தமிட்டவர்களைப் பற்றி சாட்சி கூறி அவர்களுக்காக ஷபாஅத்தும் செய்யும் . என்பதாக ஆயிஷா (ரலி) - துஹ்பத்துஸ் - ஸாயிரீன் .
ஆகவே மானிட வர்க்கத்தின் அஹ்து நாமா , சத்திய உறுதிப்பாட்டு ரிக்கார்டை

தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் ஹஜ்ருல் அஸ்வத்தை முத்தமிடுவதை ஆதாரமாகக் கொண்டே , அந்தக் கல்லையும் விட மேன்மையான இன்ஸான் காமிலைத் தன்னகத்துள்ளே அடக்கிப் பெற்றிருக்கக் கூடிய 'கபுறை ' பரக்கத்தை நாடி முத்தமிடுதல் ஆகுமான காரியமே என்பதுதான் ஆரிபீன்களுடைய சொல்லாகும்.

இக்கல்லைக் கொண்டு நன்மை, தீமை உண்டாக்க கூடியதாகயிருந்தால் , அவுலியாக்களின் கபுறுகளை நல்லெண்ணத்துடனும், தூய மனதுடனும் பரக்கத்தைக் கருதி முத்தமிடுவதில் பிரயோஜனம் இல்லாமல் இல்லை .
நபிகள் நாயகம் ﷺ அவர்கள் வீற்றிருந்து குத்பா ஓதிக் கொண்டிருந்த "மிம்பர்" படியை அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் தமது கையால் தொட்டு முத்தமிட்டுக் கொண்டிருந்தார்கள் "
என்பதாக ஷிரஹுஷிபா 153 பக் சொல்லப்பட்டிருக்கிறது.
ர-ரா

**Rahmath Rajakumaran**
அராபிய பழங்குடிகள் பலப்பல கோத்திரங்களாக பிரிந்து , அவர்களுக்குள் ஏற்பட்ட போட்டி , பொறாமையின் காரணமாக என்றென்றும் சண்டையிட்டு இரத்தத்தை சிந்தாத பொழுதுகளாக அவர்களுக்கு என்றுமே விடியவில்லை .இருப்பினும் இறை இல்லம் கட்ட ஒன்றிணைந்தனர் .
ஆலயம் கட்டியெழுப்பட்டது .ஆனால் "ஹஜ்ருல் அஸ்வத் " என்ற சொர்க்கத்து கல்லை கஃபாவின் கிழக்கு மூலையில் பதித்திட , தாங்கள்தான் தாங்கள்தான் என்று அதுவரை அமைதியாக இருந்த கோத்திர வெறி தலைதூக்கியது . இதனால் கஃபாவைச் சுற்றி இரத்த ஆறு ஓடும் என்ற நிலை உருவானது .
இந்நிலையில் ஒரு கோத்திரத்தைச் சேர்ந்த மிக வயது முதிர்ந்த ஒருவர் " "நாளை அதிகாலைப் பொழுதில் கஃபாவின் இறைவனை வழுத்தி வணங்க வரும் முதல் நபரிடம் நம் பிரச்சனையைக் கூறுவோம் , அவர் சொல்லும் தீர்ப்பை ஏற்போம் " . என்று கூற மொத்த கோத்திரத்தாரும் ஒப்புக் கொண்டனர் .
இரவெல்லாம் கோத்திரத் தலைவர்கள் கண்காணித்துக் கொண்டு இருக்க ,
மிக அதிகாலைப் பொழுதில் ஒரு உருவம் கஃபா ஆலயத்தில் நுழைந்து இறையை வணங்கி வழுத்தியது.
கோத்திரத் தலைவர்கள் நொறுங்கி உற்று நோக்கி , " முஹம்மது " "முஹம்மது " என்று கூவியது . அத்தனை கோத்திரங்களும் சேர்ந்து அவருக்கு "அல் அமீன் " என்ற பட்டம் கொடுத்து கௌரவித்த அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு அப்போதைய வயது 25 தான். தனது துண்டை கீழே விரித்து, ஹஜ்ருல் அஸ்வத் கல்லை கொண்டு வரச் சொல்லி ,அத் துண்டில் வைத்து அத்தனை கோத்திரங்களின் தலைவர்கள் தூக்கி தர நபிகளார் அதனை கஃபாவின் கிழக்கு மூலையில் பதிக்கிறார்கள் .
அன்றைக்கு அரபுலோகத்தில் உள்ள அத்தனை கோத்திரங்களும் ஒரே கூரையின் கீழ் அத் துண்டின் கீழ் ஒன்றிணைந்தனர் . முஹம்மது என்ற நபர் பிறக்கவில்லை என்றால் அரபிகள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு மாண்டு போயிருப்பார்கள் என வில்லியம் மூர் போன்ற வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்கிறார்கள்
யா ரசூல்லாஹ்....! நாங்களும் ஆரம்பத்தில் நீங்கள் கொண்டு வந்த ஒரே சுன்னத்தின் அடிப்படியான ஒரே ஜமாத்தாக இருந்தோம் .குர்ஆனையும் , ஹதீஸையும் மன இச்சைப்படி பிரித்து பிரித்து தனித்தனி கொள்கை வகுத்து சிலர் எங்களுக்குள் பிரிவினை ஏற்படுத்தி நாங்கள் அரபு கோத்திரங்களை விட மோசமானவர்களாக ஆகி விட்டோம் .
யா ரசூல்லா...! எங்களை ஒரே சுன்னத்துல் ஜமாத் கொள்கையின் கீழ் இணைப்பீர்களாக !
" ஹஜ்ருல் அஸ்வத் " தைப் பார்க்கும் பொழுதெல்லாம் , மேற்கண்ட துஆவை கேட்பதையே என் மனம் நாடுகிறது.
ர.ரா

கலிமா
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 13 )



கலிமா பற்றியும் எழுதுங்கள் என்று நண்பர் Ramees Deen பின்னூட்டத்தில் கேட்டுக் கொண்டதற்கு ,
#RameesDeen இன்ஷா அல்லாஹ் . கலிமா வெறும் ஈரடிகள் கொண்ட மாதிரி சின்ன விஷயம் அன்று . அது மிகப் பெரிய விஷயம் . அதனால் இறைவன் குர்ஆனில் ,
اَلَمْ تَرَ كَيْفَ ضَرَبَ اللّٰهُ مَثَلًا كَلِمَةً طَيِّبَةً كَشَجَرَةٍ طَيِّبَةٍ اَصْلُهَا ثَابِتٌ وَّفَرْعُهَا فِى السَّمَآءِۙ
(நபியே! "தவ்ஹீத் கலிமா" என்னும்) நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு (மிக்க மேலான) உதாரணத்தைக் கூறுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? (அவ்வாக்கியம்) வானளாவிய கிளைகளையும் (பூமியில்) ஆழப்பாய்ந்த வேரையும் உடைய ஒரு நல்ல மரத்திற்கு ஒப்பாக இருக்கிறது.
(அல்குர்ஆன் : 14:24)

பொதுவாக அரபிச்சொற்களில் புள்ளி (நுக்தா ) உள்ள எழுத்துக்கள் கலந்தே வரும் . ஆனால் இதயத்தின் கரும் புள்ளிகளைப் போக்கும் மாமருந்தாகிய மூவெட்டு எழுத்துக்களைக் கொண்ட கலிமாவில் புள்ளியுள்ள எழுத்துக்களே இடம் பெறவில்லை. இது நம்மை சற்று சிந்திக்க வைக்கிறது.

ஷரியத் , தரீக்கத் . அகீகத் , மஃஹ்ரிபத் ஆகிய 4 நிலைகளில் கலிமா பார்க்கப்படுகிறது .இது அசாதாரணமானது. சிந்திக்க ஏதுமில்லாத வெறும் நம்பிக்கை மட்டும் அடிப்படையாகக் கொண்டது . சிந்தனைகள் இல்லா சிந்தனை .இதை எப்படிச் சொல்வது ? இதனால்தான் இதை புரிய வைக்க முடியாது. புரிய வைக்க முற்பட்டால் தப்பர்த்தம் கொள்ள பல வழிகள் பிறக்கும் .
அதனால்தான் " பைஅத் " தில் மானசீகமாக சொல்லி தரப்பட்டு, 'ஆயுளில் 1 லட்சம் தடவையாவது ஓதிக் கொள் ' என்று அவரின் குருமார்கள் வழிகாட்டி , வழிவிட்டு ஒதுங்கிக் கொள்கிறார்கள் .

வெளிப்படையான இந்த கலிமாவை ஏன் மானசீகமாக ரகசியமாக செய்குமார்கள் போதிக்க வேண்டும் ?
அதனை சற்று மறைத்து ரகசியமாக போதிக்கும் போது அதன் பொருள் விரியும் . விரிந்த பொருளால் எல்லையில்லாத பெருவெளியில் ஆன்மா ஆனந்தம் பெறும்

இறக்கை முளைத்த பிறகு தாய்ப்பறவை இல்லாமல் ஏகாந்த வானத்தை குஞ்சு ஏறிட்டு பார்த்து பறந்து கொள்ள வேண்டியது அதனதன் ஆற்றலைப் பொறுத்து .
பொது தளத்தில் எழுதுவதற்கு சற்று யோசிக்க வேண்டும் . சில கேள்விகளுக்கு பதில் சொன்னாலும் பல கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாது .கூடாது .அது உணர வேண்டிய விஷயங்கள் .

கலிமாவின் கட்டமைப்புகள் வித்தியாசமானவை .
அதன் சொல் அமைப்பை ஒருமைப்பட்டோடு உச்சரித்ததும் உணரும் நிலை பரவசமானது.
ஏகாந்த நிலையில் காணும் காட்சிகளுக்கு மொழியில் வார்த்தைகள் இல்லை . காரணம் கண்ட காட்சி கண்களால் அல்ல ; ஆன்மாவால் . இதனால்தான் இதனை விவரிக்க முடியவில்லை .
பய பக்தியுடையோர்கள் மறைவானவற்றை உண்டென்று ஈமான் கொள்வார்கள் (குர்ஆன்)
இவங்களுக்குத்தான் உணர்த்த முடியும் . அதுவும் எழுதி சொல்ல முடியாது.
இக் கலிமாவினை நாவினால் உச்சரிக்கின்ற போது இதழ்களைக் குவிக்கவோ , மூடவோ தேவையில்லை.

இதழ்கள் கூட இயங்காத மரண வேளையில் கூட இதனை மொழிவதற்கு ஏற்ற முறையில் இறைவன் இக் கலிமாவின் சொற்றொடர்களை கட்டமைத்துக் கொடுத்துள்ளான் .
உடல் ஆரோக்கியமாக ஒருமித்த மனோ நிலையில் இறைவனின் ஒரு சில திக்ரியாத்துக்களை தியானித்துக் கொண்டிருக்கும் பரவச ஐக்கிய நிலையில் 'இப்போது மரணித்தால்தான் என்ன ' என்று ஆன்மா யோசிக்க வைக்கும் .
அந்த வகையில் " லாயிலாஹ இல்லல்லாஹ் " என்ற இந்த கலிமா விற்கு அந்த உணர்வு ஏற்படும் .
எனவேதான் மரணப்படுக்கையில் இருப்பவர்களுக்கு இதனை ஓதிக் காண்பிக்கப்படுகிறது.
ர.ரா

ஈஸால் ஸவாப் என்றால் என்ன?
இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 14 )



ஈஸால் ஸவாப் என்பது உயிரோடுள்ளவர்கள் மரணித்தவர்களுக்காச் செய்கின்ற நல்லமல்களின் நன்மை அவனைச் சென்றடைதல், நன்மையை சேர்த்து வைத்தல் தொடர்பாக தர்மம், நோன்பு, ஹஜ், உம்ரா, திருக்குர்ஆன், கத்தம், பாதிஹா, துஆ போன்றவற்றின் நன்மைகளை மரணித்து கப்ராளிகலாக வாழ்ந்து கொண்டிருப்பவர்களின் பக்கம் சேர்த்து வைப்பதாகும்.

"கத்தம்" என்ற சொல் "கத்ம் " அல்லது "கத்முன் " என்ற சொல்லின் மருவிய சொல்லாகும். இதைச் சரியாக சொல்வதென்றால் " கத்ம் கத்ம் " என்றால் "முடித்தல் முடித்தல் "என்று

பொருள். "கத்முல் குர்ஆன் " என்றால் குர்ஆனின் 30 பாகங்களையும் ஓதி முடித்து பின் அதன் நன்மையை மரணத்தவர்களுக்கு சேர்த்து வைப்பதாகும் .
இஸ்லாத்தின் பார்வையில் "ஈஸால் ஸவாப்" எனும் உயிரோடுள்ளவர்கள் இறந்தவர்களுக்காகச் செய்கின்ற நல்ல அமல்களின் நன்மைகள் அவர்களுக்குப் போய் சேருமா?
உயிரோடுள்ளவன் மரணித்தவனுக்காகச் செய்கின்ற நல்லமல்களின் நன்மை அவனைச் சென்றடைதல் தொடர்பாக தர்மம், நோன்பு, ஹஜ், துஆ, போன்றவற்றின் நன்மை அவனைச் சென்றடையும் என்பதை ஏற்றுக்கொள்ளும் வஹ்ஹாபிகள் திருக்குர்ஆன், கத்தம், பாதிஹா போன்றவற்றின் நன்மை மாத்திரம் அவனைச் சென்றடையாதென்று கத்தம் பாத்திஹா பித்அத் என்று கூறுவது விந்தையயானதாகும்.

உயிரோடுள்ளவர்கள் இறந்தவர்களுக்காகச் செய்கின்ற நல்லமல்களின் நன்மைகள் அவர்களுக்குப் போய் சேரும் என்பதற்காக ஆதாரங்கள்
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள் :
"ஒரு முஃமினான மனிதன் கற்பித்த கல்வியும், (எழுத்து மூலம் நூல்வடிவில் உலகெங்கும்) அவன் பரப்பிய கல்வியும், அவன் விட்டுச்சென்ற ஸாலிஹான பிள்ளைகளும், (பள்ளிவாசல்கள், மத்ரஸாக்களுக்கு) வாரிஸாக்கிய குர்ஆன் ஷரீபும், அவன் கட்டிக்கொடுத்த பள்ளியும், வழிப்போக்கர்களுக்கு அவன் அமைத்துக் கொடுத்த தங்கும் விடுதியும், அவன் வாய்க்கால் வெட்டி ஓடச்செய்த ஆறும், அவன் இப்பூவுலகில் வாழும்போது கொடுத்து உதவிய தானங்களும் கண்டிப்பாக அவனின் மௌத்துக்குப் பிறகும் அவனைப் போய்ச்சேரும் "
ஹழ்ரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு
நூல்கள்: இப்னுமாஜா 242, பைஹக்கி 3448, ஷுஅபுல் ஈமான், மிஷ்காத் 254

ஒரு மனிதர் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து யா ரஸூலல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பெற்றோர்கள் மரணித்த பின்பு அவர்களுக்காக பிள்ளைகளாகிய நாங்கள் செய்ய வேண்டிய நன்மைகள் ஏதேனும் இருக்கிறதா ? என்று கேட்டார்.
அப்போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆம் இருக்கிறது அவர்களுக்காக தொழுது, நன்மை சேர்த்தல், அவர்களுக்காக பிழைபொறுக்கத் தேடுதல், அவர்களின் வாக்குறுதிகளை நிறைவேற்றுதல், அவர்களின் சுற்றத்தினர்களுடன் சேர்ந்து நடந்து கொள்ளுதல், அவர்களின் தோழர்களுக்கு சங்கை செய்தல் என்று கூறினார்கள்.
நூல்கள்: ஆபூதாவூத் , இப்னு மாஜா , மிஷ்காத் பக்கம் - 420 , பாபுல் பிர்ரி வஸ்ஸிலா

நிச்சயமாக அல்லாஹு தஆலா ஒரு மனிதனுக்கு அவன் பிள்ளை செய்யும் இஸ்திஃபார் மூலம் அவரின் அந்தஸ்த்தை சுவனத்தில் உயர்த்துகிறான் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.
நூல்: இப்னுமாஜா ஹதீஸ் எண் 3660, மிஷ்காத் ஹதீஸ் எண் 2354

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு மனிதன் வந்து 'நாயகமே! எனது தாயார் (எது குறித்தும்) வஸிய்யத் செய்யாமல் திடீரென மரணம் அடைந்து விட்டார்கள். அவர்கள் பேசி இருந்தால் ஏதேனும் தானதர்மங்கள் செய்திருப்பார்கள். ஆகையால் அவர்களுக்காக நான் ஸதக்கா செய்தால் அவர்களுக்கு நன்மை உண்டா?' என்று கேட்டார்.
அப்போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'ஆம்' என்று பதில் கூறினார்கள் என்று ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
நூல்கள்: புகாரி ஹதீஸ் எண்: 1388, 2760, முஸ்லிம் ஹதீஸ் 1004 அபூதாவூத் ஹதீஸ் எண் 2881

ஸய்யிதுனா ஸஃது இப்னு உபாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயார் வபாத்தான நேரத்தில் ஸஃது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வெளியூர் சென்றிருந்தார்கள்.
எனவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து 'நாயகமே! நான் வெளியூர் சென்றிருந்த வேளையில் எனது தாயார் மரணமடைந்து விட்டார்கள். அவர்களைத் தொட்டும் நான் ஸதக்கா செய்தால் அது அவர்களுக்கு பயன் அளிக்குமா? என்று கேட்டார்கள்.
'ஆம். பயனளிக்கும்' என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அப்போது 'நிச்சயமாக எனது தோட்டம் அவர்களுக்காக ஸதக்காவாக இருக்கும் என்று தாங்களை சாட்சியாக்குகிறேன்' என்று ஸஃது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள் என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல்கள்: புகாரி ஹதீது எண்: 2756, 2762, 2770, 2761, நஸாயி பாகம் 6 பக்கம் 250 பாபு இதா மாத்த அல் புஜ்அத்த ஹல் யுஸ்த்தஹப்பு லி அஹ்லிஹி....கிதாபுல் வஸாயா

ஒரு பெண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது தாயார் ஹஜ் செய்யாத நிலையில் மரணமடைந்து விட்டார்கள். அவர்களைத் தொட்டும் நான் ஹஜ்ஜு செய்யலாமா? என்று கேட்டார்.
ஆம். செய்யலாம். அவர்களுக்காக நீர் ஹஜ்ஜு செய்வீராக!' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
ஹழ்ரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்
திர்மிதி ஹதீஸ் எண்: 667 பாபு மா ஜாஅ பில் முதஸத்திகி கிதாபுஸ்ஸகாத்

ஒரு மனிதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது சகோதரி ஹஜ் செய்வதற்கு நேர்ச்சை செய்திருந்தாள். ஆனால் அவள் மரணித்து விட்டாள் என்று கூறினார்.
அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்களின் மீது கடன் இருந்தால் நீர் அதை நிறைவேற்றுவீரா? என்று கேட்டார்கள். அதற்கு ஆம் என்று அவர் பதில் கூறினார். அப்படியானால் அல்லாஹ்வுக்கு (செலுத்த வேண்டிய கடனை) நிறைவேற்றிவிடுவாயாக. அவன் நிறைவேற்றப்படுவதற்கு மிகவும் தகுதியானவன் என்று கூறினார்கள்.
நூல்: புகாரி ஹதீஸ் எண்: 6699 பாபு மன் மாத்த வஅலைஹி நத்ருன் கிதாபுல் அய்மானி வந்நுதூரி

நிச்சயமாக ஒரு மனிதர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நாயகமே! எனது தாயார் இறந்து விட்டார்கள். அவர்கள் மீது ஒரு மாத நோன்பு (நிறைவேற்றப்பட வேண்டியது) இருக்கிறது. அவர்களைத் தொட்டும் நான் அதை நிறைவேற்றலாமா? என்று கேட்டார்.
அப்போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த மனிதரைப் பார்த்து 'உனது தாயார் மீது கடன் இருந்தால் நீர் அதை அவர்களைத் தொட்டும் நிறைவேற்றுவீரா? என்று கேட்டார்கள். அதற்கு 'ஆம்' என்று பதில் கூறினார். அப்படியானால் அல்லாஹ்வின் கடனாகிறது நிறைவேற்றப்படுவதற்கு மிக ஏற்றமாக இருக்கிறது என்று கூறினார்கள்.
ஹழ்ரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு
நூல்: முஸ்லிம் ஹதீஸ் எண்: 1148-155 பாபு கலாயிஸ் ஸியாமி அனில் மய்யித்தி கிதாபுஸ் ஸியாம்

ஒருவர் மீது கடமையான நோன்பு இருக்கும் நிலையில் அவர் மரணித்துவிடுவாராயின் அவரைத் தொட்டும் அவரின் பொறுப்பாளர் நோன்பு வைக்க வேண்டும் என்று நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறியதாக ஆயிஷா (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
நூல்: முஸ்லிம்,ஹதீஸ் இலக்கம்– 1147,பாடம் - கிதாபுஸ்ஸியாம்

ஸய்யிதினா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒருமுறை இரு ஆடுகளை குர்பானி கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.
அதைக் கண்ட ஸய்யிதினா ஹனஷ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்து ஏன் இரண்டு குர்பானி கொடுத்தீர்கள் என்று கேட்டார்கள்.
அதற்கு அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம் தமக்காக ஒரு குர்பானி கொடுக்குமாறு வஸிய்யத் செய்திருந்தார்கள். ஆகையால் இவ்விரண்டில் ஒன்று அவர்களுக்கும் எனக்கும் என்று கூறினார்கள்.
அபூதாவூத் ஹதீது எண்: 2790, திர்மிதி ஹதீது எண்: 1495 , மிஷ்காத் ஹதீது எண்: 1462

யாரேனும் வந்து காப்பாற்ற மாட்டார்களா? என்ற எண்ணத்தில் நீரில் மூழ்கியவன் தத்தளிப்பது போல கப்ரில் மரணித்த மய்யித்து தனது தந்தை அல்லது தனது தாய் அல்லது சகோதரன் அல்லது நண்பன் ஆகியோரிடமிருந்து துஆவை எதிர்பார்க்கிறது.
அப்படி ஏதேனும் ஒரு துஆ அந்த மய்யித்தை சென்றடையுமானால் அதை துன்யா மற்றும் அதில் உள்ளவற்றை விட மிகப் பிரியமாக கருதுகிறது.

நிச்சயமாக அல்லாஹு தஆலா பூலோகவாசிகளின் பிரார்த்தனை மூலம் கப்ருவாசிகளுக்கு மலைகளைப் போன்று ரஹ்மத்துகளை நுழைவிக்கிறான். இறந்தவர்களுக்காக பிழைபொறுக்கத் தேடுவது உயிரோடு இருப்போர் மரணித்தவர்களுக்காக வழங்குகின்ற சன்மானமாகும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக செய்யிதினா இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல்கள்: பைஹகி ஹதீது எண் 7904, மிஷ்காத் ஹதீது எண் 2355 பக்கம் 206 பாபுல் இஸ்திஃபார், அத்தத்கிரா பாகம் 1 பக்கம் 103 பாபு மா ஜாஅ பீ கிராஅத்தில் குர்ஆனி இந்தல் கப்ரி ஹாலத்தத் தபனி வ பஃதஹு

யாராவது ஒருவன் மையவாடிக்கு பக்கத்தால் சென்று 11 தரம் ஸூறதுல் இக்லாஸ் – குல்ஹவல்லாஹு அஹத் என்ற அத்தியாயத்தை ஓதி அதன் நன்மையை மரணித்தவர்களுக்கு அன்பளிப்பாக வழங்குவானாயின் அவனுக்கு மரணித்தோரின் எண்ணிக்கப்படி நற்கூலி வழங்கப்படும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னதாக ஸெய்யிதுனா அலீ (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
நூல்: கன்சுல்உம்மால்,பக்கம் 2059, ஹதீஸ் இலக்கம்-42596

கப்ருக்குச் சென்றால் பாத்திஹா சூராவையும் முஅவ்வித்தைனியையும் குல் ஹூவல்லாஹூ அஹதையும் ஓதி அதன் நன்மையை கப்ராளிகளுக்குக் சேர்த்து வையுங்கள் . கண்டிப்பாக அது அவர்களை சென்றடையும் என்று அஹமத் இப்னு ஹம்பலி ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் கூற நான் கேட்டேன் .
அறிவிப்பவர் : ஹழ்ரத் அஹ்மதுல் மரூஸி
நூல்: மிர்காத் - பாகம் - 2 , பக்கம் - 381 . இஆனா பாகம் 2 (பஸ்லுன் பிஸ் ஸலவாத்தி அல ல் மய்யித்தி)

கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: உங்களில் மௌத்தானவர்களுக்கு சூரத்துல் யாசீனை ஓதுங்கள்.
நூல்கள்: அபூதாவூத், இப்னு மாஜா, பைஹகி, மிஷ்காத் - 141

கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: உங்களில் யாரேனும் மரணம் ஆகிவிட்டால் அவரை அடக்குவதில் தாமதம் செய்யாதீர்கள். அவரது தலை மாட்டில் சூரத்துல் பகராவின் ஆரம்பத்தையும், அவரது கால்மாட்டில் பகராவின் கடைசி ஆயத்தையும் ஓதுங்கள்.
ஹழ்ரத் உமர் (ரலியல்லாஹு அன்ஹு)
நூல்கள்: மிஷ்காத் - 149, பைஹகி, ஷுஹ்புல் ஈமான்

கண்மணி நாயகம் ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் கூறினார்கள்: எவராவது கப்ர் ஸ்தானங்களுக்கு சென்று யாசீன் சூராவை ஓதினால் கப்ராளிகளை தொட்டும், வேதனை லேசாக்கப்படுகிறது. மேலும் அவருக்கு அந்த கப்ராளிகளின் எண்ணிக்கை அளவுக்கு நன்மைகள் கிடைக்கின்றன. (நூல் மிர்காத் 4 - 382)

ஆகவே இதுவரை கூறப்பட்ட ஆதாரங்கள் மூலம் இறந்துவிட்ட பெற்றோர்களுக்கு பிள்ளைகள் செய்கின்ற நற்காரியங்களும், இறந்து போன பிள்ளைகளுக்காக பெற்றோர்கள் செய்கின்ற நற்காரியங்களும், இறந்து விட்ட தனது உடன் பிறந்த சகோதரனுக்காக அவனுடைய உடன்பிறந்த சகோதரன் செய்யும்' நற்காரியமும், இறந்துவிட்ட ஒரு நண்பனுக்காக அவன் நண்பன் செய்யும் நற்காரியமும், ஓர் இறந்து விட்ட முஃமினான சகோதரருக்காக மற்றொரு முஃமினான சகோதரர் (அவ்விருவருக்கிடையே எவ்வித உறவு மற்றும் நட்புமின்றி) செய்யும் நற்காரியமும், ஒரு மரணித்துவிட்ட மார்க்க அறிஞருக்காக (அவரிடம் பயின்ற மாணவர்கள் மற்றும் அவருடைய நல்லுபதேசதைக் கேட்டு அதன்படி நடந்து வந்த பொதுமக்கள் மூலம்) அவர் கற்பித்த கல்வியின் பயனும் அவர்களைப் போய் சேரும் என்பதை தெளிவாக புரிந்து கொள்ள எல்லாம் வல்ல கிருபையாளன் நல்லுதவி புரிவானாக ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்.

" செத்தவனுக்கு கத்தம் எதற்கு ? "

ஈஸால் தவாப் பற்றி ஓர் ஆய்வு
- அல்ஹாஜ் A. அப்துர் றஊப் மிஸ்பாஹீ_ பஹ்ஜீ - இலங்கை
இறைநேசர்கள் இறைத்தூதர் ﷺ அவர்களின் வாரிசா ?
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 15 )



அல்லாஹ்வின் கட்டளைகளையும் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் போதனைகளையும் சிரமேற்கொண்டு "தீன்" எனும் சன்மார்க்க நெறியில் பிறழாமல் நடந்து , ஷரீஅத் - தரீகத் - ஹகீகத் எனும் படித்தரங்களைப் படிப்படியாக கடந்து, இறுதியில் மஅரிபத் எனும் சாசுவத பேரின்ப வீட்டையடைந்து , நித்திய ஜீவனைப் பெற்றவர்களே அல்லாஹ்வின் அவுலியாக்கள் என்கிற இறை நேசர்கள் ஆவார்கள்.

" நான் கல்வியின் பட்டணம், அலி அதன் தலைவாயில் " என்பதாக நபிகள் நாயகம் ﷺ தங்களது வாரிசாக செய்யிதுனா அலி (ரலி) அவர்களைச் சுட்டிக் காட்டியுள்ளார்கள் .
" அறிஞர்களே நபிமார்களின் வாரிசுகள்" என்பதாக நபிகள் நாயகம் ﷺ அவர்களின் வாக்கியம் .
" என்னுடைய சமூகத்தார்களிலுள்ள அறிஞர்கள் , பனீ இஸ்ராயீலுள்ள நபிமார்களைப் போன்றவர்களாவர் " என்பதாக நபிகள் நாயகம் ﷺ கூறியுள்ளார் .

"எனது ஸஹாபாத் தோழர்கள் நட்சத்திரங்களைப் போன்றுள்ளார்கள் அவர்களுள் எவரைக் கொண்டு பின்பற்றினாலும் நீங்கள் நேர்வழி பெற்றவர்களாவீர்கள் " என்பதாகவும்
நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள் .

நபிகள் நாயகம் ﷺ அவர்களின் வாரிசாகவும், மெஞ்ஞான அறிவின் தலை வாயிலாகவும் திகழக்கூடிய செய்யிதுனா ( அலி) அவர்கள் , மற்றும் ஸஹாபாக்கள் , இன்னும் வேறு பல பெரியார்களில் நின்றும் ஆரம்பமான ஆன்ம சந்ததியாகிய " ஸில்ஸிலாவின் ' என்னும் சங்கிலித் தொடர்பு கொண்டு ,அனுபவ வழிகளைப் பற்றிய மார்க்கங்களைத் தெரிந்தொழுகிய காரணத்தால், **" இல்முல்லத்துன்னீ "** எனும் இறை சார்பிலிருந்து அருளப்படும் மெஞ்ஞானபாக்கியம் பெற்றவர்கள்.
நபிமார்கள் ' **முஃஜிஸாத்து** ' எனும் பேற்புதங்களை காண்பித்ததைப் போல் இவர்கள் **'கறாமாத்து '** எனும் அற்புதங்களைச் செய்து காட்டினார்கள் .

நபிகள் நாயகம் ﷺ அவர்களின் தீனை உலகெங்கும் கொண்டு சென்றவர்கள் அவுலியா என்ற இவர்களே .இவர்களே
நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உண்மை வாரிசுகள் .பிரதிநிதிகள்
" உமது இறைவன் புவியில் நிழலை எவ்வாறு பரப்பியிருக்கின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா"
- குர்ஆன் (25 : 45) எனவும் ,
" பூமியை நாம் விரிப்பாக்கி அதில் மலைகளை முளைகளாய் ஆக்கவில்லையா ? - குர்ஆன் ( 78 : 6, 7 ) இதில் நிழல் (ளில்லு ) எனவும் மலை (ஜிபால் ) எனவும் குர்ஆனில் கூறுவது இந்த அவுலியாக்களைப் பற்றிய குறிப்பே ஆகும் .

(ரூஹுல் பயான் 4 வது பாகம் 199 பக், 10-வது பாகம் பக் 293 )
"எனது அடியான் நபிலான வணக்கங்களையும் , விருப்புடன் பேணிச் செய்பவனாக நீங்கா வண்ணமாகி எனது முடுகுதலைப் பெறும் வண்ணம் என்னை சதா நெருங்கி நெருங்கி நான் அவனே நேசிக்கும் அளவிற்கு ஆகிவிடுகிறான்.

நான் அவனை நேசித்து விட்டேனேயானால் , அவன் கேட்கும் காதாகவும் – பார்க்கும் கண்ணாகவும் – பிடிக்கும் கரமாகவும் – நடக்கும் பாதமாகவும் நானே ஆகிவிடுகிறேன் "
என்று அல்லாஹு தஆலா கூறுவதாக ஹதீது குத்ஸியில் வந்துள்ளது .
(ஸஹீஹுல் புகாரி)

பர்லான வணக்கங்களைச் செய்வதுடன், நபிலான வணக்கங்களைக் கொண்டும் , அவன் மீது பிரியம் வைத்து கலப்பற்ற வணக்கமாக அவனளவில் பனாவாகி இரண்டற்ற ஒன்றாகி விட்ட நிலையில் , அவருடைய செவி, கண், மூக்கு, நாக்கு, கை, கால் இன்னும் இதர உறுப்புகளோடு அவரது உடல் அனைத்தும் அவனுள்ளாகி விட்ட பின் அவரிடம் அவனது சொல் , செயல் வெளியாகும் தளங்களாகின்றன .
இந்த நிலையுடைய மனிதரின் இறப்புக்கு பின் கபறின் மண் அவரை அரித்து அவரை மண்ணோடு மண்ணாக்கி விடுமா என்னே ?
இப்பேர்பட்ட இறைநேசர்கள் இறைத்தூதர் ﷺ அவர்களின் வாரிசாக பரிணமிப்பதில் சந்தேகம்தான் உங்களுக்கு உண்டா ?

மரணத்திற்குப் பிறகும் உயிர் வாழ்வு
(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 16 )



وَلَا تَقُوْلُوْا لِمَنْ يُّقْتَلُ فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتٌ بَلْ اَحْيَآءٌ وَّلٰـكِنْ لَّا تَشْعُرُوْنَ
அன்றி, அல்லாஹ்வுடைய பாதையில் போர் புரிந்து (எதிரி களால்) வெட்டப்பட்டவர்களை இறந்தவர்கள் எனக் கூறாதீர்கள். மாறாக, (அவர்கள்) உயிரோடு இருக்கிறார்கள். ஆனால் (அதை) நீங்கள் உணர்ந்துகொள்ள மாட்டீர்கள்.
(அல்குர்ஆன் : 2:154)

ஹிஜ்ரி 1350 துல் ஹஜ் மாதம் 1932 ஏப்ரல் மாதம் ஈராக் நகரில் நபித்தோழர்களான ஹுதைபா (ரலி) , ஜாபிர் (ரலி) அவர்களின் புனித உடல்கள் தோண்டி எடுக்கப்படுகிறது .
காரணம் மண்ணறையில் தஜ்லா நதி வெள்ளம் உட்புகுவதாக முதலாம் பைசல் மன்னர் கனவிலும் தலைமை முஃப்தீ கனவிலும் நபித்தோழர்கள் சொன்னதாக இருவரும் கூற 1400 வருடத்திற்கு முந்தைய கபர்களை தோண்டிய பொழுது அவ்வுடல்கள் சற்று முன் அடக்கப்பட்டதாக இருந்தது அவ்விருவரையும் பாக்தாத்திலிருந்து 40 மைல் தொலைவில்

ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்களின் அடக்கஸ்தலத்திற்கு பக்கத்தில் மீண்டும் நல்லடக்கம் செய்யப்பட்டது .இந்த நிகழ்ச்சியை 5 லட்சம் பேர் பார்த்தாக மஆரிஃப் மாத இதழ் ஜன 79 . ஆஜம்கட் உ . பி
இப்போது யூதர்களின் கைக்கூலியாக சில நவீனத்துவக் கொள்கைக்காரர்களால் நபித் தோழர்களான ஸஹாபிகளின் கபறுகளை தரைமட்டமாக்க துணிந்தனர் . அப்படி நபித்தோழர்களின் மண்ணறை உடைத்தபோது , அந்த கபுறுகளில் துயில் கொண்டிருப்பதை காணமுடிந்தது

1) sahabi e Rasool a.s - Hajr bin Adi (R.a) grave and body distry by Yazzdi Fores
(ஹஜ்ரத் ஹஜ்ர் பின் அதீத் (ரலி) அவர்கள்
2) Hazarat Zubair bin Qais (RA) சுபைர் பின் கைஸ் (ரலி) அவர்கள்
1400. வருடங்களுக்கு முன்னால் புதைக்கப்பட்டவர்கள் .
இவ்விருவர்களின் மக்ஃபூ ராவை உடைத்து அவர்களின் உடலை சேதப்படுத்தியதை மேற்கண்ட வலைதளத்தில் பார்க்கவும்

இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ,
"அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என நீங்கள் ஒரு போதும் எண்ண வேண்டாம் .அவர்தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள் .அன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது. தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்"
திருக்குர்ஆன் ( 3:169, 170 )

அல்லாஹ்வுடைய பாதையில் வெட்டப்பட்டவர்கள் மட்டும் அல்ல, தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாக போர் செய்து அதை வீழ்த்தினாலும் சரி இரண்டுமே ஷஹீதுதான் (இறந்தவர்கள் அல்ல ) நபித் தோழர்கள் மட்டுமல்ல மிகச் சாதாரணமாக வாழ்ந்த அல்லாஹ்வின் நல்லடியார்களின் உடலை மண் தின்னாமல் பாதுகாக்கிறான் என்பதற்கு சாட்சியாக

வங்கதேசத்தில் ரங்க்பூர் மாவட்டம் கஷ்மார்கா என்ற கிராமத்தைச் சேர்ந்த பாட்டி ஆயிஷா காத்தூன் 1997 ஆம் ஆண்டில் 106 வயதில் இறந்தார் 6 வருடம் கழித்து தன் 3 மகன்களின் கனவில் தனித்தனியாக தோன்றி , " ஆற்றில் வெள்ளம் வரும் போது நான் இருக்கும் இடத்தில் தண்ணீர் புகுந்து ஓடுகிறது எனவே என்னை இடம் மாற்று " என்று சொல்ல , மகன்கள் தத்தம் கனவில் தாயார் சொல்ல , ஊர் ஜமாத்தார்கள் முன்னிலையில் தாயார் அவர்களின் புனித உடலை மேட்டுப்பாஙகான இடத்தில் மாற்றியமைக்கப்பட்டது .ஆதாரம் : தினமலர் 4.9. 2003.
" ( வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர் , இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா ? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய தீய செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன "
திருக்குர்ஆன் ( 6 : 122 )

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 17 )



நமது பூமி 14 கோடியே 89 லட்சத்து 40 ஆயிரம் சதுர கி.மீ நிலப்பரப்பும் ,
36 கோடியே 11 லட்சத்து 32 ஆயிரம் சதுர கி.மீ நீர்ப் பரப்பும் கொண்ட பெரிய பூமி என்று நாம் நினைத்துக் கொண்டாலும், பர்ஜக் என்ற கபுறுடைய உலகம் பூமியை விடவும் பெரிது !
பர்ஜக் என்கிற பெரிய உலகத்தின் வாயில் 'கபுறு ' என்ற சின்ன மண்ணறையில் இருந்துதான் துவங்குகிறது !
" நபிமார்கள் ஜீவனுள்ளவர்களாக இருக்கின்றார்கள். அவர்கள் கபுறுகளில் தொழுது கொண்டுயிருக்கிறார்கள் " என்று அனஸ் (ரலி) அவர்கள்
நூல் : பைஹகீ
"மூஸா (அலை) அவர்கள் செம்மை நிறமான மேட்டின் மீதுள்ள கபுறில் நின்று தொழுது கொண்டிருந்ததை மிஃராஜ் உடைய இரவில் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கண்டார்கள் .
நூல் : முஸ்லிம்
" நபிமார்கள் .ஷுஹதாக்கள் , அவுலியாக்கள் ஆகியோர்கள் ஹயாத்தானவர்கள் .அவர்களுடைய
கபுறுகளில் அவர்கள் தொழுது கொண்டும், ஹஜ்ஜு செய்து கொண்டும் இருக்கிறார்கள் !
- அல்புதூஹாத்துல் அஹ்மதிய்யா
90-வது பக்கம் .

மிஹ்ராஜின் போது இஸ்ரா என்கிற நிலத்திற்கு இணையான பயணத்தின் போது , நபி மூஸா (அலை) அவர்கள் காதில் கையை வைத்து தல்பியாச் சொல்லிக் கொண்டு அர்ஜுக் ஓடையை கடந்து கொண்டிருப்பதையும் ,
நபி யூனுஸ் (அலை) அவர்கள் சென்னிற ஒட்டகையில் ஷாஷாலுபத் என்னுமிடத்தில் ஓடையைக் கடந்து சென்று கொண்டிருப்பதைக் கண்டதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் .
ஆதாரப்பூர்வமான ஹதீஸ் நூலான தாரிமியில், இமாம் அபூ முஹம்மத் அப்துல்லாஹ் தாரிமீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்வருமாறு எழுதுகிறார்கள்:

'ஹர்ரா யுத்த வேளையில் மூன்று தினங்கள் தொடர்ந்து மதீனா பள்ளியில் பாங்கு ஒலிக்கவில்லை. அப்போது ஸஈத் இப்னு முஸைய்யப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பள்ளியில் தங்கி இருந்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கப்ரிலிருந்து கேட்ட சப்தத்தை வைத்து தொழுகையின் நேரங்களை அவர்கள் அறிந்து கொண்டார்கள்.
தாரிமியில், இமாம் அபூ முஹம்மத் அப்துல்லாஹ் தாரிமீ ரலியல்லாஹு அன்ஹு
இப்றாஹீம் இப்னு ஷைபான் ரலியல்லாஹு அன்ஹு சொல்கிறார்கள்: ஹஜ்ஜை முடித்துக் கொண்டு, மதீனா சென்று திருநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கப்ருக்கருகில் நின்று சலாம் சொன்ன போது, கப்ரிலிருந்து 'வஅலைக்குமுஸ்ஸலாம்' என பதில் வந்ததை செவியுற்றேன்.

ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்: 'தாபிதுல் பன்னான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களை கப்ரில் வைத்தேன். என்னுடன் ஹுமைது தவீலாவும் உடனிருந்தார். நாங்கள் அடக்கம் செய்துவிட்டு திரும்பும் போது கப்ரின் பலகை இடிந்து விழுந்தது. அதனைச் சரி செய்வதற்காக நான் சென்ற போது தாபித் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கப்ருக்குள்ளிருந்து தொழுவதைப் பார்க்க முடிந்தது.
அறிவிப்பாளர்: அபூ நுஜம் (ரஹ்)
அபூநுஜம் மற்றும் இப்னு கரீத் ஆகியோர் இப்றாஹீம் அல்முஹல்லப் அவர்களிடமிருந்து அறிவிக்கின்றனர். 'நள்ளிரவில் தாபித் ரலியல்லாஹு அன்ஹு அவர்களது கப்ரு வழியாக சுண்ணாம்பு கொண்டு சென்றவர்கள் கப்ரிலிருந்து குர்ஆன் ஓதுவதைக் கேட்டதாக என்னிடம் தெரிவித்தனர்.'
இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து இமாம் திர்மிதி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் அறிவிக்கின்றார்கள்: ஸஹாபி ஒருவர் கப்ரு என்று அறியாமல் தனது மேலங்கியைக் கழற்றி அதன் மீது வைத்தார்கள். அப்போது கப்ருக்குள்ளிருந்து ஸூரத்துல் முல்க் முழுவதும் ஓதப்படுவதை செவியேற்றார்.
இதனைத் திருநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தெரிவித்த போது சொன்னார்கள்: 'ஸூரத்துல் முல்க் எல்லாத் தீங்குகளையும் தடுக்கும். கப்ர் தண்டனையிலிருந்து காப்பாற்றும்.' இந்த ஹதீதை திர்மிதி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஹஸன் என்கிறார்கள்.
நஸஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், ஹாகிம் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஆகியோர் அறிவிக்கின்றனர்:
பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னதாக அன்னை ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள்:
'நான் சுவனத்தில் இருப்பதாக கனவு கண்டேன். அங்கே ஒருவர் குர்ஆன் ஓதுவதைக் கேட்டு, 'யார் இவர்?' என வினவினேன்.
சுவனவாசிகள், அவர் ஹாரிஸ் இப்னு நுஃமான்' என்றனர். அதுதான் நற்செயலின் பயன். ஹாரிஸ் தனது தாயாருக்காக அதிக பணிவிடைகள் செய்திருந்தார்கள்.' என நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்.

ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து இப்னு அபீதுன்யா அறிவிக்கிறார்கள்:
'திருக்குர்ஆன் மனனமில்லாத நல்லவர் ஒருவர் மவ்த்தாகிவிட்டால் அவருக்குக் குர்ஆனை கற்பிக்க மலக்குகளிடம் ஏவப்படும். கியாமத் நாள் வரை அவர் குர்ஆன் ஓதிக் கொண்டிருப்பார்.' யஸீத் தகாஷியிடமிருந்தும் இதேபோல் அறிவிப்பு செய்யப்பட்டுள்ளது.

இப்னு ஸீரீன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடமிருந்து அப்னு அபீ ஷைபா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்:
'இப்னு ஸீரீன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், மய்யித்திற்கு நல்ல கஃபன் துணி அணிவிக்க வேண்டுமென விரும்புவார்கள். இறந்தவர்கள் தங்கள் கஃபன் ஆடைகளைக் குறித்து தங்களுக்குள் பேசிக் கொள்வர் எனவும் இப்னு ஸீரீன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் சொல்வார்கள்'. ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து நேரடியாக (மர்ஃபூஉ) இப்னு உஸாமா அவர்கள் தமது முஸ்னதில் பதிவு செய்துள்ளார்கள்.
'உங்களில் யாராவது மய்யித்தின் காரியங்களை நடத்துபவராக இருந்தால் நல்ல கஃபன் ஆடையை அணிவியுங்கள்' இந்த நபிமொழியை இமாம் முஸ்லிம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
திர்மிதி, இப்னு மாஜா, முஹம்மத் பின் யஹ்யல் ஹமதானி ஆகியோர் அபூகதாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து அறிவிக்கும் ஹதீது இப்படி வருகிறது: 'நீங்கள் மய்யித்தின் காரியங்களை நடத்துபவராக இருந்தால் நல்ல கஃபன் அணிவியுங்கள். ஏனெனில் இறந்தவர்கள் கஃபன்களைப் பற்றி கப்ருகளில் கருத்துச் சொல்வார்கள்.'

ராஷித் இப்னு ஸஃதிடமிருந்து இப்னு அபீதுன்யா அறிவிக்கிறார்கள்:
'ஒரு ஸஹாபியின் மனைவி மவ்த்தானார்கள். பின்னர் அவர் சில பெண்களை கனவு கண்டார்கள். அக்கூட்டத்தில் அவரது மனைவியைக் காணவில்லை. மனைவியைக் குறித்து அப்பெண்களிடம் கேட்க, நீங்கள் அவருடைய கஃபன் ஆடையை மோசமாக்கியதால் எங்களுடன் வர வெட்கப்பட்டார்கள்' என்றனர்.

ஸஹாபி அவர்கள் இதனை நபிமணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சொல்ல, திருநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தார்கள்: 'அந்த வழியாகச் செல்லும் நம்பிக்கைக்குரிய நபரைப் பற்றி விசாரியுங்கள்.'

மரணத்தறுவாயில் இருக்கும் ஒரு நபித் தோழரின் வீட்டிற்கு அந்த ஸஹாபி சென்ற போது, அன்ஸாரியான நபித் தோழர் 'இறந்தவர்களுக்கு ஏதேனும் கொடுத்தனுப்ப விரும்புவோர் என்னிடம் ஒப்படையுங்கள்' எனச்' சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்கிறார்.

அத்தோழர் மவ்த்தான போது அவரது கஃபன் ஆடையுடன் இன்னொரு கபனும் வைத்து அடக்கம் செய்தோம். பின்னர் அந்த கஃபன் ஆடையை அணிந்தவராக தனது மனைவியை பெண்களுக்கிடையில் அந்த ஸஹாபி கண்டார்கள்.
இப்னு அபீ துன்யா அபூ காலிபிடமிருந்து அறிவிக்கிறார்கள்: சிரியாவில் ஒரு இளைஞரை கப்ரில் அடக்கிய போது நானும் கப்ரில் இறங்கினேன். அடக்கம் முடிந்த போது கப்று மீதிருந்த பலகை கீழே விழுந்து விட்டது. அதனை மீண்டும் சரி செய்வதற்காக மீண்டும் கப்ரில் இறங்கிய அவரது சாச்சா பயந்து போய் வெளியேறினார். கப்ரு ஒளியால் நிறைந்திருந்தது. பார்வை எட்டா தொலைவுவரை அவ்வொளி பரவியிருந்தது.
'நஜ்ஜாஷி அரசர் மவ்த்தான போது அன்னாரது கப்ரில் ஒளி சூழும் எனச் சொல்லியிருந்தோம்' என்று அன்னை ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் சொன்னதாக அபூதாவூத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.
'நான் அஹ்னஃப் இப்னு கைஸ் அவர்களின் கப்ர் அடக்கத்தில் பங்கெடுத்தேன். கப்ருக்குள் இறங்கியவர்களுள் நானும் ஒருவன். அடக்கம் முடிந்த பின்னர் கப்ர் மிக விசாலமாக இருப்பதைக் கண்டேன். இச்செய்தியை மக்களிடம் தெரிவித்த போது அவர்களும் பார்த்தார்கள். ஆனால் அவர்களால் அதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.
அறிவிப்பவர்: அப்துற் றஹ்மான் இப்னு உமாரா நூல்: இப்னு அஸாகிரின் தாரீக்.
பர்ஜக் உலகம் இந்த பூமியைக் காட்டிலும் மிகப் பெரிய உலகம்.
ர.ரா

## இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்

...... என்கிற இந்த ஆய்வு மிக நீளமானது
" மரணத்திற்குப் பின் ஆன்மாக்களின் நிலை " என்று ஆரம்பித்து
"கபறுக்குள்ளே ...." என்கிற 17 வது பதிவு வரை வந்துள்ளது.
இவ்வாய்வு இனிமேல்.......
அலாமத்துல் கியாமா (இறுதி நாளின் அடையாளங்கள் ),
கியாமா (இறுதி நாள்)
ஹஷ்று (எல்லா படைப்புகளையும் ஒன்றிணைத்தல் )
மௌகிபு ( விசாரணை )
கிஸாஸு (குற்றத்தை உறுதிப்படுத்தல் )
ஹிஸாபு ( நன்மை தீமை கணக்கு வழக்கு விசாரணை )
மீஸான் ( நன்மை ,தீமை நிறுக்கும் தராசு )
ஸ்ிராத்துல் முஸ்தகீம் என்கிற கடக்கிற பாலம்
ஹௌளு - தண்ணீர்த் தடாகம்
சுவர்க்கம்
ஜஹன்னம் - நரகம்
ஷபாஅத் - மன்றாட்டம்
உரூஸ் - திருக்கல்யாணம்
லியாபத்து - விருந்து
லிகா - தரிசனம் .....

இத்தனை பதிவுகள் இன்ஷா அல்லாஹ் இன்னும் இத்தொடரில் பதிக்கப்பட உள்ளது . இப்பதிவுகள் சற்று ஏறக்குறைய 40 லிருந்து 50 பதிவுகள் வரை வரலாம் என எதிர்ப்பார்கிறேன் . ஆலிம் பெருமக்கள் இப் பதிவுகள் குறித்து தங்களுக்குத் தெரிந்ததையும் இப் பதிவுகளின் பின்னூட்டமாக சொன்னால் நண்பர்களுக்கும் , மற்ற ஆலிம் பெருமக்களுக்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என நினைக்கிறேன் . எனவேதான் இனி எழுதப் போகிற பதிவுகளின் தலைப்புக் குறித்து முன்னமே சொன்னால் நீங்களும் தக்க ஏற்பாடுகளோடு இருப்பீர்கள் என நினைக்கிறேன் .
ர.ரா



கியாமத் நாளின் அடையாளங்கள் .
(இஸ்லாத்தின் அடிப்படைக்
கோட்பாடுகள் 18 )



தஜ்ஜால் இனிமேல் பிறப்பவன் அல்ல. ஏற்கனவே பிறந்தவன் ஆவான். அவன் தற்போதும் இருந்து வருகிறான். ஸஹாபாக்களில் ஒருவரான தமீமத்தார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நேரில் ஏதேச்சையாக கண்டுள்ளார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் (தொழுகைக்கான) அழைப்பாளர் 'அஸ்ஸலாத்து ஜாமிஆ' (தொழுகைக்கான நேரம் வந்துவிட்டது) என்ற அறிவித்தார். இதைக் கேட்ட நான் பள்ளிவாசலுக்குச் சென்றேன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்களுடன் தொழுதேன். தொழுது முடிந்ததும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் சிரித்துக் கொண்டே மிம்பரில் அமர்ந்தார்கள். 'அனைவரும் தொழுத இடத்திலேயே அமருங்கள்' என்று கூறிவிட்டு 'நான் உங்களை ஏன் கூட்டினேன் என்பதை அறிவீர்களா? என்று கேட்டார்கள், 'அல்லாஹ்வும் அவனின் தூதருமே நன்கறிந்தவர்கள்' என்று நாங்கள் கூறினோம்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உங்களை அச்சுறுத்தவோ ஆர்வமூட்டவோ உங்களை நான் ஒன்று கூட்டவில்லை. தமீமுத்தாரி முன்பு கிருத்தவராக இருந்தார். அவர் வந்து இஸ்லாத்தில் இணைந்து விட்டார். தஜ்ஜால் பற்றி உங்களுக்குச் கூற வந்ததுக்கேற்ப அவர் ஒரு செய்தியை என்னிடம் கூறினார். (அவர் என்னிடம் கூறியதை நீங்களும் கேளுங்கள்).

**லக்ம், ஜுகாம்** ஆகிய சமூகத்தில் முப்பது நபர்களுடன் கப்பலில் நான் பயணம் செய்தேன் (புயல் காரணமாக) ஒரு மாதகாலம் அலைகளால் அலைகழிக்கப்பட்டோம். சூரியன் மறையும் சமயம் ஒரு தீவில் ஒதுங்கினோம். கப்பலில் வைத்திருந்த சிறு தோணிகள் மூலம் அந்த தீவில் நுழைந்தோம். அப்போது உடல் முழுவதும் மயிர்கள் நிறைந்த ஒரு பிராணி எதிர் கொண்டது. அதிகமான மயிர்கள் காரணமாக அதன் மலஜலம் பாதைகளை (உறுப்புக்களைக்) கூட அவர்களால் அறிய இயலவில்லை.

அந்தப் பிராணியிடம் அவர்கள், 'உனக்கு ஏற்பட்ட கேடே நீ என்ன பிராணி?' என்று கேட்டனர். **'ஜஸ்ஸாஸா'** என்று அது கூறிவிட்டு, 'நீங்கள் இதோ இந்த மடத்தில் உள்ள மனிதனிடம் செல்லுங்கள், அவர் உங்களைக் காண்பதில் ஆர்வம் காட்டுவார்' என்றும் அப்பிராணி கூறியது. அந்த மனிதனின் பெயரையும் கூறியது. அந்தப் பிராணி ஒரு பெண் ஷைத்தானாக இருக்குமோ என்று பயந்தோம்.

நாங்கள் அந்த மடத்தை நோக்கி விரைந்தோம். அங்கு சென்றதும் ஒரு மனிதனைக் கண்டோம். அவனைப் போன்ற ஒரு படைப்பை இதுவரை நாங்கள் பார்த்ததே இல்லை. இரண்டு கரண்டை கால்களுக்கும் முட்டுக்கால்களுக்கும் இடையே தலையைச் சேர்த்து கழுத்தில் இரும்பால் கட்டப்பட்டிருந்தான், 'உனக்கு ஏற்பட்ட கேடே! ஏனிந்த நிலை' என்று கேட்டோம்.
அதற்கு அந்த மனிதன் '(எப்படியோ) என்னைப் பற்றி அறிந்து விட்டீர்களே! நீங்கள் யார்? எனக் கூறுங்கள்' என்றான். 'நாங்கள் அரபியர்கள். ஒரு கப்பலில் நாங்கள் பயணம் செய்தபோது, ஒரு மாதம் கடல் அலையால் அலைகழிக்கப்பட்டோம். இப்போது தான் இந்த தீவிற்கு வந்தோம். அடர்ந்த மயிர்கள் நிறைந்த ஒரு பிராணியைக் கண்டோம். அது, நான் ஜஸ்ஸாஸா, இந்த மடத்தில் உள்ள மனிதரைப் பாருங்கள்' என்று கூறியது. எனவே உம்மிடம் விரைந்து வந்தோம்' என்று கூறினோம்.

**'பைஸான்** என்ற இடத்தில் உள்ள பேரீத்தம் மரங்கள் பயனளக்கிறதா? என்று கூறுங்கள்' என அந்த மனிதன் கேட்டான். நாங்கள் ஆம் என்று கூறினோம். அதற்கு அம்மனிதன் 'விரைவில் அங்குள்ள மரங்கள் பயனளிக்காமல் போகலாம்' என்றான். 'சூகர் எனும் நீரூற்றில் தண்ணீர் உள்ளதா? அங்குள்ளவர்கள் அத்தண்ணீரை விவசாயத்திற்கு பயன் படுத்துகிறார்களா? என்று கேட்டான். அதற்கு நாங்கள் ' ஆம், தண்ணீர் அதிகமாகவே உள்ளது. அங்குள்ளோர் அத்தண்ணீர் மூலம் விவசாயம் செய்கின்றனர்' என்று கூறினோம்.

'உம்மி சமுதாயத்தில் தோன்றக்கூடிய நபியின் நிலை என்ன? என்பதை எனக்குக்கூறுங்கள்' என அம்மனிதன் கேட்டான். 'அவர் மக்காவிலிருந்து புறப்பட்டு, தற்போது மதீனாவில் உள்ளார்' என்று கூறினோம். 'அரபியர்கள் அவருடன் போர் புரிந்தார்களா?' என்று அம்மனிதன் கேட்டான். ஆம் என்றோம். 'போரின் முடிவு எப்படி இருந்தது?' என்று கேட்டான். 'அவர் தன் அருகில் வசித்த அரபியரையெல்லாம் வெற்றி கொண்டு விட்டார்' என்று கூறினோம். 'அவருக்கு அவர்கள் கட்டுப்படுவதே சிறந்தது' என்று அவன் கூறினான்.

நான் இப்போது என்னைப் பற்றிக் கூறுகிறேன். நான்தான் தஜ்ஜால். நான் (இங்கிருந்து) வெளிறே வெகு சீக்கிரம் எனக்கு அனுமதி தரப்படலாம். அப்பேது நான் வெளியே வருவேன். பூமி முழுதும் பயணம் செய்வேன். நாற்பது நாட்களில் எந்த ஊரையும் நான் அடையாமல் விட மாட்டேன். மக்கா, மதீனா இரு ஊர்களைத் தவிர. அந்த இரு ஊர்களும் எனக்கு தடுக்கப்பட்டுள்ளன. அந்த இரண்டு ஊர்களுக்குள் நான் நுழைய முயற்சிக்கும் போதெல்லாம் தன் கையில் வாளுடன் ஒரு வானவர் என்னை எதிர் கொண்டு தடுப்பார். அதன் வழிகள் அனைத்திலும் அதைக் காண்கானிக்கின்ற வானவர்கள் இருப்பர்' என்று அம்மனிதன் கூறினான்.
இவ்வாறு தமீமுத்தாரீ ரழியல்லாஹு அன்ஹுதன்னிடம் கூறியதாகக் கூறிய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் கைத்தடியை மிம்பரில் தட்டிவிட்டு, 'இது (மதீனா) தூய்மையான நகரம், தூய்மையான நகரம்' என்று கூறினார்கள். 'இதே செய்தியை நான் உங்களிடம் கூறி இருக்கிறேன் தானே' என்று மக்களிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் கேட்டதும், மக்கள் 'ஆம்' என்று பதில் கூறினர்.

அறிந்து கொள்க! நிச்சயம் அவன் ***சிரியா*** நாட்டின் கடல் பகுதியில் உள்ளான். அல்லது ***யமன்*** நாட்டின் கடல் பகுதியில் உள்ளான். இல்லை, இல்லை! அவன் கிழக்குத் திசையில் இருக்கிறான் என்று மூன்று முறை கூறினார்கள்.
அறிவிப்பாளர் : பாத்திமா பின்த் கைஸ் ரழியல்லாஹு அன்ஹு நூல் – முஸ்லிம்.

தஜ்ஜால் ஓர் அரபிச்சொல். பொய் என்பது அதன் பொருள் . எல்லா சக்திகளும் கொடுக்கப்பட்ட யூதன் .
யூத பெண்ணுக்கும் , ஜின்னுக்கும் பிறந்தவன் தஜ்ஜால் என்கிறது ஒரு வரலாறு .
நபி (ஸல்) அவர்களிடம் , "தஜ்ஜால் ஆதமின் மைந்தனா ? அல்லது இப்லீஸின் மகனா ? "
" அவன் ஆதமின் மகன்தான் ஆனால் அவனது தாய் இப்லீஸின் பிள்ளைகளில் ஒருவர் . நவாஸ் இப்னு ஸம்ஆன் رَضِيَ اللهُ عَنْهُஅறிவிக்கின்றார்கள்:

வழி கெடுக்கக் கூடிய தஜ்ஜால் என்னும் ஒற்றைக்கண்ணன், மக்கள் அனைவரும் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கும் காலத்தில் கீழ்த்திசையில் தோன்றுவான். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரழியல்லாஹு அன்ஹு) நூல்: அஹ்மத்
மேற்கில் உள்ள குராஸான் என்ற பகுதியிலிருந்து தஜ்ஜால் வெளிப்படுவான் என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். நூல் : திர்மிதீ 2163

இஸ்பஹான் தேசத்தில் **'யஹூதிய்யஹ்'** என்ற கிராமத்தில் மல்ஊன் தஜ்ஜால் தோன்றுவான். பிறிதொரு ஹதீஸியின் படி கிழக்கில் குறாஸான் என்ற ஊரில் தோன்றுவான் என்றும் சொல்லப்படுகின்றது.
'நிச்சயமாக அல்லாஹ்வைப் பற்றி உங்களுக்குத் தெரியும், அல்லாஹ் ஒரு கண் ஊனமானவன் அல்லன், ஆனால் தஜ்ஜாலின் வலது கண் திராட்சை போன்று சுருங்கி இருக்கும்' என்ற நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இன்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு நூல்கள் – புகாரீ, முஸ்லிம்.

ஊனமடைந்த கண், மூக்கை ஒட்டிய ஓரத்தில் கடினமாக சதைக் கட்டி ஒன்று தொன்படும் என்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்கூறி உள்ளனர் : நூல்கள் – முஸ்லிம், அஹ்மத்.
'ஊனமடையாத கண், பச்சை நிறக் கண்ணாடிக் கற்கள் போல் அமைந்திருக்கம்' ( அஹ்மத்).
'அவன் வெள்ளை நிறத்தவனாக இருப்பான், அவனின் உடலமைப்பு கவர்ச்சியாக அமைந்திருக்கும்' (அஹ்மத்).
'சற்று குண்டான உடலுடையவனாக இருப்பான்' (முஸ்லிம்).
'பின்புறத்திலிருந்து பார்த்தால் அவனின் தலைமுடி அலை அலையாய் இருப்பதாகத் தெரியும் (அஹ்மத்).
'பரந்த நெற்றியுடையவனாக இருப்பான்' (பஸ்ஸார்)
'குள்ளமாகவும் கால்கள் இடைவெளி அதிகம் உள்ளவனாகவும் இருப்பான்' (அபூதாவூத்).
'தஜ்ஜாலின் நெற்றிக்கிடையே 'காஃபிர்' என்று எழுதப்பட்டிருக்கும். எழுதத் தெரிந்த, எழுதத் தெரியாத அனைத்து மூஃமின்களும் அதைப் படிப்பார்கள்' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : ஹுதைபா ரழியல்லாஹு அன்ஹு நூல்

'அவன் நாற்பது நாட்கள் பூமியில் வாழ்வான். அனைத்து இடங்களுக்கும் அவன் செல்வான். ஆனால் மஸ்ஜிதுல் ஹராம், மதீனா பள்ளிவாசல், தூர் மஸ்ஜித், பைத்துல் முகத்தஸ் ஆகிய நான்கு பள்ளிவால்களையும் அவனால் நெருங்க இயலாது' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் (அஹ்மத்).
'மதீனா நகருக்கு தஜ்ஜால் பற்றிய பயம் தேவை இல்லை. அன்றைய நாளில் மதீனாவுக்கு ஏழு நுழைவு வாயில் (பாதைகள்) இருக்கும். ஓவ்வொரு பாதையின் நுழைவாயிலிலும் இரண்டு (வானவர்கள்) இருப்பார்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹுநூல் – புகாரீ.

தஜ்ஜால் கீழ் திசையிலிருந்து மதீனாவை குறிக்கோளாகக் கொண்டு புறப்பட்டு வருவான். அப்போது மலக்குகள் அவனது முகத்தை 'ஷாம்' பகுதியை நோக்கித் திருப்புவார்கள். அங்கேதான் அவன் அழிவான் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு நூல்கள் – புகாரீ, முஸ்லிம்.

'பமிரிகனாத் என்னும் இந்த உவர் நிலங்களுக்கு தஜ்ஜால் புறப்பட்டு வருவான். அப்போது அதிகமான பெண்கள் அவனைப் பின்பற்றிச் செல்வார்கள். எந்த அளவுக்கெனில், (அன்று) ஒவ்வொரு ஆணும் தனது மனைவி, தாய், மகள், சகோதரி, மாமி ஆகியோரிடம் சென்று அவர்கள் தஜ்ஜாலைப் பின்பற்றிச் சென்று விடக் கூடாது என அஞ்சி, அவர்களைக் கயிற்றினால் கட்டி வைப்பான்' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு நூல் – அஹ்மத்.

கஸ்பஹான் பகுதியல் வாழும் யூதர்களில் ஒருவனாக தஜ்ஜால் புறப்பட்டு வருவான். மதீனாவை நெருங்கி, அதன் எல்லையில் இறங்குவான். அன்றைய தினம் மதீனாவுக்கு ஏழு நுழைவுப் பாதைகள் இருக்கும். ஓவ்வொரு நுழைவு பாதையிலும் இரண்டு மலக்குகள் இருப்பார்கள். அவனை நோக்கி (மதீனாவில் உள்ள) தீய மக்கள் புறப்பட்டுச் செல்வார்கள். பாலஸ்தீன் நகரின் 'லுத்' எனும் வாசலுக்கு அவன் புறப்பட்டுச் செல்வான். அங்கே ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இறங்கி அவனைக் கொல்வார்கள். அதன்பின் நாற்பது ஆண்டுகள் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இந்த பூமியில் நேர்மையான தலைவராக, சிறந்த நீதிவானாகத் திகழ்வார்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர் : ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹு நூல்- அஹ்மத்.
மதீனா மூன்றுமுறை துளும்பும், அப்போது அதில் வாழ்ந்த முனாபிகீன்கள் அழிந்து விடுவர்.

பின் தஜ்ஜால் பாபில் என்ற நகரில் நுழைவான் அங்கு கழிர் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவனை எதிர் கொள்வார்கள். அவர்களிடம் நான்தான் "றப்புல் ஆலமீன்" என்று தஜ்ஜால் சொல்வான். அதற்கு கிளுறு அலைஹிஸ்ஸலாம் நீ பொய் சொன்னாய். நீதான் பொய்யனான தஜ்ஜால் றப்புல் ஆலமீன் என்பவனே வானங்களையும் பூமியையும் படைத்தவன். அவன் உன்னைப் போன்ற பொட்டைக் கண்ணன் அல்லன் என்பார்கள்
இது தஜ்ஜாலுக்கு கோபத்தை ஏற்படுத்தவே அவர்களை கொலை செய்து விடுவான். பின் மக்களைப் பார்த்து நான் கொன்று விட்டேன். இவர் சொல்வதுபோல் இரு இறைவன் இருப்பின் இவரை உயிர்ப்பிக்கட்டும் பார்ப்போம் என்பான்.
உடன் அல்லாஹ் தஆலா அவரை அதேவேளை உயிர்பிப்பான். உயிர்பிக்கப்பட்ட கிளுறு அலைஹிஸ்ஸலாம் எழுந்து நின்று தஜ்ஜாலே எனது இறைவன் என்னை உயிர்பித்து விட்டான் என்பார். அவரை அறுப்பதற்கு தஜ்ஜால் முனைந்தபோது கிளுறு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீது செம்பால் ஒரு கவசத்தை இறைவன் ஏற்படுத்துவான். அவனால் அவரை அறுக்க முடியாமல் போகவே தஜ்ஜால் தோல்வியடைவான்.
இதுபற்றி ஷெய்குல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அறபி (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் சொல்கையில் அறுக்கப்பட்டு உயிர் பெறுபவர் கிளுறு அலைஹிஸ்ஸலாம் அல்ல. அவர் ஈமான் நிரம்பப் பெற்ற ஒரு வாலிபராவார். அவரை கஷ்புடையவர்கள் கண்டு கொண்டுள்ளனர் என்றார்கள்.

பின் தஜ்ஜாலின் தாக்குதலால் பிரிந்துசென்ற முஸ்லீம்கள் பைத்துல் முகத்தஸில் ஒன்று சேர்வார்கள். தஜ்ஜாலின் படைகளுடன் போர் தொடுப்பதற்கு தம்மைத் தயார் செய்யுமாறு மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் வேண்டிக் கொள்வார்கள்.
உடன் மஹ்தி அலைஹிஸ்ஸலாம் படைகளைத் தயார் செய்து தாமும் சென்று தஜ்ஜாலுடன் கடும் சமர் புரிவார்கள்.

இச்சமயத்தில்ல் காபீர்களில் ஒரு இலட்சம் பேரும் முஸ்லீம்களில் முப்பதாயிரம் பேரும் கொல்லப்படுவார்கள் . மஹ்தீ அலைஹிஸ்ஸலாம்அவர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் தொடர்ந்து போராடுவது கஷ்டமாக இருக்கும், அதனால் பைத்துல் முகத்தஸில் நுழைந்து அதன் வாயில்களை மூடிக்கொள்வார்கள்.
தஜ்ஜாலும் அவனது படைகளும் பைத்துல் முகத்தஸை அடையும்போது அங்கு காவலில் நிற்கின்ற மலக்குகள் அவர்களைத் துரத்தியடிப்பார்கள் உடன் மஹ்தீ (அலைஹிஸ்ஸலாம்) அவர்களும் தோழர்களும் இறை பிரார்த்தனையில் ஈடுபடுவார்கள்
யா அல்லாஹ்! தஜ்ஜாலின் பித்னஹ்விலிருந்தும், அவனது சூழ்ச்சியிலிருந்தும் காப்பாற்றுவாயாக என்று.

அப்போது இறைவனிடமிருந்து பின்வரும் செய்தி வரும் " முஸ்லீம்களே! உங்களை இரட்சிப்பவரும், உதவி செய்பவரும் உங்கள் இறைவனிடமிருந்து வந்து விட்டார்" என்று இதைக் கேட்ட முஸ்லீம்கள் மகிழ்ச்சியடைவார்கள்.
இஸ்ரேலின் தலைநகரான டெல் அவிவ்வுக்கு அருகில் உள்ள லுத்து என்னும் இடத்தில் வைத்து மர்யம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் மகன் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவனைக் கொல்வார்கள்.
ர.ரா

**Rahmath Rajakumaran**
கிருத்துவம்
அந்தி கிருத்து என தச்சாலை கிருத்துவம் அழைக்கின்றது. ஆர்ப்பரிக்கும் அலையில் இருந்து இவன் தோன்றுவான் என விவிலியம் கூறுகின்றது. இவன் பாவத்தின் மகன் என்றும் இவனது வருகை உலக அழிவின் அடையாளங்களில் ஒன்று எனவும் இயேசு கூறியதாக பைபிள்
பதிவு செய்துள்ளது
இந்து மதம்
இந்து மதத்தில் தஜ்ஜாலை ஒன்றிய அந்தாக் ஆசர் என்பவனை பற்றிய குறிப்பு உள்ளது. அந்தாக் ஆசர் எனும் சமசுகிருத சொல்லுக்கு இறுதியில் வரும் ஒற்றைக்கண்ணன் என்பது பொருளாகும். இவன் வன்மம் மிகுந்தும் ஆயிரம் கைகள், ஆயிரம் தலைகள், இரண்டாயிரம் பாதங்கள் மற்றும் இரண்டாயிரம் கண்களை கொண்டவனாகவும் இருப்பான். இவன் மந்தார் பர்வதத்தில் நுழைய முற்படும்போது கொல்லப்படுவான் .

கியாமத் நாளின் அடையங்களில் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டங்கள்
( இஸ்லாத்தின் அடிப்படைக்
கோட்பாடுகள் 19 )




யஃஜூஜ், மஃஜூஜ் என்னும் கூட்டத்தார் நபி நூஹு (அலை) குமாரர்களில் ஒருவராகிய "யாபிது" என்பவரின் வமிசத்தில் உள்ளவர்கள்.
யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரில் ஒரு கூட்டம் ஒரு ஜாண் அளவு சதுரமான வகையினரும், ஒரு முழ அளவு சதுரமான வேறொரு வகையினரும் , நூற்றிருபது முழ உயரமான மற்றொரு வகையினரும் என 3 வகையினர் உண்டு

அவர்களின் தொகையை அல்லாஹ்வே அறிவான் . இத்தனை பெரிய கூட்டத்தாரில் மிகவும் பலஹீனமானவன்
தன்னை விட 60 மடங்கு பாறைக் கல்லைத் தூக்கி எறிவான்.
இக்கூட்டத்தார்கள் சூரியன் உதயமாகும் ஸ்தலத்தின் பக்கத்தில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள் . அவர்களுக்கு பாதையான இருமலைகளுக்கு இடையில் உள்ள கணவாயை சுல்தான் ஸிக்கந்தர் துல்கர்னைன் அவர்கள் இரும்பு பாளங்களை அடுக்கி , அதன் மீது செம்பையும் உருக்கி வார்த்து அவர்கள் அதன் வழியே வராமல் அடைத்து வைத்திருக்கிறார்கள். இது பற்றி குர்ஆனில்.....
اٰتُوْنِىْ زُبَرَ الْحَدِيْدِ حَتّٰۤى اِذَا سَاوٰى بَيْنَ الصَّدَفَيْنِ قَالَ انْفُخُوْا حَتّٰۤى اِذَا جَعَلَهٗ نَارًا ۙ قَالَ اٰتُوْنِىْۤ اُفْرِغْ عَلَيْهِ قِطْرًا
"நீங்கள் இரும்புப் பாளங்களை என்னிடம் கொண்டு வாருங்கள்" (அவைகளைக் கொண்டு இருமலைகளுக்கிடையிலுள்ள பள்ளத்தை நிரப்புங்கள்) முடிவாக இருமலைகளுக்கிடையில் (உச்சிக்கு) அவை சமமாகும்போது ஊதுங்கள்" என்றார், அதனை நெருப்பாக ஆக்கியதும் (உருக்கிய செம்பை) என்னிடம் கொண்டு வாருங்கள், (அந்த) உருக்கிய செம்பை நான் அதன்மேல் ஊற்றுவேன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 18:96)

கியாமத் நாளின் முன்பாக இச்சுவர் இடிந்து விழுந்து போகும். அதன் வழியே
யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினர் ஹோன்னு புறப்பட்டு வெள்ளம் போல் ஓடி வருவார்கள் .

***மக்கா , மதீனா , பைத்துல் முகத்திஸ் , தூர் ஸினா*** மலை இந் நான்கு இடங்கள் தவிர, பூமியெங்கும் போய் எல்லா ராஜ்யங்களையும் , தங்கள் வசமாக்கிக் கொண்டு, ' நாம் பூமியை கைப்பற்றிக் கொண்டோம் .இனி வானத்தையும் பிடித்துக் கொள்ளுவோம் ' என்று சொல்லிக் கொண்டு, ஆகாயத்தில் அம்புமாரி பொழிவார்கள். அந்த அம்புகளெல்லாம் அல்லாஹூ தஆலாவின் கட்டளைப்படி ரத்தக்கடலில் தோய்த்து அவர்களிடம் திருப்பி எறியப்படும் .அதைக் கண்டு அவர்கள் வானத்தையும் நாங்கள் கைப்பற்றிக் கொண்டோம் ' என்று சந்தோஷப்படுவார்கள் .
அவர்கள் பூமி முழுவதும் பரவியிருந்து நபி ஈஸா (அலை) அவர்களை தூர் ஸினா மலையில் வைத்து முற்றுகையிடுவார்கள். இவர்கள் பண்ணும் அமளியைப் பொறுக்க மாட்டாமல் நபி ஈஸா (அலை) அவர்கள் அல்லாஹ்தஆலாயிடம் அவர்களை நாசமாக்கும்படி துஆ கேட்பார்கள் .
உடனே அல்லாஹ்தஆலா ஒரு வித கிருமிகளை அந்தக் கூட்டத்தார் மீது அனுப்புவான்.

அந்த கிருமிகள் அக்கூட்டத்தார் ஒவ்வொருவர் பிடரியிலும் ஒவ்வொன்றாக மொய்த்துக் கொள்ளும் அதனால் அவர்கள் எல்லோரும் ஒரே காலத்தில் ஒருமித்து மடிந்து போவார்கள் .
பூமி முழுவதும் அவர்களின் பிணத்தால் மூடப்பட்டிருக்கும் . பிறகு அல்லாஹ்தஆலா ஒரு பெருமழையை பொழியச் செய்து , அந்த மழை வெள்ளம் பிணங்களையெல்லாம் வாரிக் கொண்டு கடலில் தள்ளும்.

அதன் பின் முஃமீன்கள் சந்தோஷப்படுவார்கள் . அதற்கு பிறகு நபி ஈஸா (அலை) அவர்கள் தூர் ஸினா மலையிலிருந்து பைத்துல் முஹத்திஸ்க்கு வருவார்கள் .
நபி ஈஸா (அலை) அவர்கள் பூமியில் இறங்கின நாற்பதாம் வருஷம் மக்காவில் ஹஜ்ஜு செய்து விட்டு , மதீனாவிற்கு வருவார்கள் . மஸ்ஜித் நபிவியில் , அல்லாஹ்தஆலாவின் கலாவான அஜல்முடுகி, தொழுகையில் ஸுஜூதில் இருக்கும் போது , வபாத்தாய், நபிகள் நாயகம் ﷺ அவர்களின் புனித ரவ்ளாவிற்குப் பக்கத்தில் அடங்கப்படுவார்கள் .
ர. ரா

**Rahmath Rajakumaran**
உலகம் அழியும் காலம் நெருங்கும்போது வெளிப்படும் கூட்டத்தினர் தான் யஃஜூஜ் மஃஜூஜ் ஆவர். உலகம் அழிவதற்கு முன்னர் நடக்கவுள்ளதாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்த பத்து அடையாளங்களில் யஃஜூஜ், மஃஜூஜ் எனும் கூட்டத்தினரின் வருகையும் ஒன்றாகும். இது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவாக விளக்கியுள்ளனர்.
இந்தக் கூட்டத்தினர் நீண்ட காலமாகவே அவர்கள் இருந்து வருகின்றனர். மலைகளால் சூழப்பட்ட பகுதியில் வசிக்கின்றனர். அம்மலைகளுக்கிடையே இரும்புப் பாளங்களை அடுக்கி செம்பு உருக்கி ஊற்றப்பட்டுள்ளது. அதைத் தாண்டி அவர்களால் வரவும் முடியாது. அதைக் குடைந்து வெளியே வரவும் முடியாது. யுகமுடிவு நாளின் நெருக்கத்தில் அந்தத் தடை உடைக்கப்பட்டு அவர்கள் வெளிப்பட்டு வருவார்கள். ஒருவருடன் ஒருவர் முட்டி மோதிக்கொள்ளும் அளவுக்கு அவர்களின் எண்ணிக்கை பெருமளவில் இருக்கும்
இறுதியில் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படுவார்கள். உடனே அவர்கள் (வெள்ளம் போல் ஒவ்வொரு மேட்டிலிருந்தும்) விரைந்து வருவார்கள் குர்ஆன் 21:96
அப்போது அல்லாஹ் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரை அனுப்புவான். அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் விரைந்து வருவார்கள். அவர்களில் முதலில் வருபவர்கள் தபரிய்யா என்ற ஏரியின் தண்ணீரைக் குடிப்பார்கள். பின்னால் வருபவர்களுக்குத் தண்ணீர் இருக்காது. அந்த நேரத்தில் ஈஸா நபியும், அவர்களின் தோழர்களும் இக்கூட்டத்தினால் முற்றுகையிடப்படுவார்கள். அன்று ஒரு மாட்டின் தலை இன்றைய நூறு தங்கக் காசுகளுக்குச் சமமாகத் தோன்றும் அளவுக்கு முற்றுகை நீடிக்கும். ஈஸா நபி அல்லாஹ்விடம் இறைஞ்சுவார்கள். ஒரேயடியாக யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் செத்து விழுவார்கள்.
பின்னர் ஈஸா நபியும், அவர்களின் தோழர்களும் தூர் மலையிலிருந்து கீழே இறங்குவார்கள். ஒரு ஜான் இடம் கூட மிச்சமில்லாமல் அவர்களின் உடல் பூமி முழுவதும் சிதறி நாற்றமெடுக்கும். அப்போது ஈஸா நபியவர்கள் மீண்டும் அல்லாஹ்விடம் இறைஞ்சுவார்கள்.
அப்போது அல்லாஹ் ஒட்டகத்தின் கழுத்தைப் போன்ற பறவைகளை அனுப்புவான். அவை உடல்களைத் தூக்கிச் சென்று வீசி எறியும். பின்னர் அல்லாஹ் மழையைப் பொழிவிப்பான். கூடாரமோ, மண் வீடுகளோ எதையும் விட்டு வைக்காமல் அவற்றின் மேல் மழை பொழியும். பூமியைக் கண்ணாடி போல் சுத்தமாக்கும்.
'பூமியே உனது பழங்களை முளைக்கச் செய்! உனது அபிவிருத்தியைத் திரும்பக் கொடு' என்று (இறைவனால்) பூமிக்குக் கட்டளை பிறப்பிக்கப்படும். அந்நாளில் ஒரு மாதுளையை ஒரு பெரும் கூட்டத்தினர் சாப்பிடுவார்கள். அதன் தோல்களில் ஒரு கூட்டமே நிழல் பெறும். பாலில் பரகத் செய்யப்படும். ஒரு ஒட்டகத்தில் கறக்கும் பால் ஒரு பெரும் கூட்டத்துக்குப் போதுமானதாக இருக்கும். ஒரு மாட்டில் கறக்கப்படும் பால் ஒரு கோத்திரத்துக்குப் போதுமானதாக ஆகும். ஒரு ஆட்டில் கறக்கப்படும் பால் ஒரு குடும்பத்துக்குப் போதுமானதாக அமையும். இவர்கள் இவ்வாறு இருக்கும்போது தூய்மையான காற்றை அல்லாஹ் அனுப்புவான். அனைத்து முஸ்லிம்களின் உயிர்களையும் அது கைப்பற்றும். மிகவும் கெட்டவர்கள் மட்டுமே மிஞ்சுவார்கள். அவர்கள் வாழும்போதுதான் உலகம் அழியும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நூல் : முஸ்லிம் 5629

**Rahmath Rajakumaran**

குள்ளர்கள் என்ற பிக்மி (Pygmy )

" பிக்மி " என்றால் நம்ம முழங்கையிலிருந்து விரல் மூட்டுகள் வரையுள்ள தூரம் அதாவது சுமார் 14 இன்ஞ் . இந்த 14 இன்ஞ் உயரமுள்ள ஒரு மனிதனை உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா ?

அமெரிக்கா வயோமிங் மாகாணத்தில் ஒரு 14 இன்ஞ் முழு மனிதனின் உடலைக் கண்டெடுத்தார்கள் . கை கால் எல்லாம் சரியான விகிதாசாரத்தில் , சர்க்கஸ் குள்ளர்கள் போல ஏறுக்கு மாறாக இல்லாமல் முழு மனிதனாகவே இருந்ததாக ஆய்வுக் கூட ரிப்போர்ட் சொல்கிறது.

...... ..இதுலே அசந்துட்டா எப்படி .. அடுத்து பாருங்கள் .

அமெரிக்க சான் பெட்ரோ (san pedro) மலை . இது யூயோமிங் (Wyoming ) பகுதியில் உள்ளது .இங்கு நிறைய தங்கப்புதையல் இருப்பதாக 1932 ல் ஒரு கூட்டம் தங்கம் எடுக்க கிளம்பியது. 4 க்கு 4 அடி நீள அகலத்தில் , ஆழம் 19 அடி ஒரு குகையின் உள்ளே ஆறரை இன்ச் உயரமுள்ள குள்ள மனிதனின் மம்மி ஒன்று இருந்தது . இதுவும் முழு மனிதனின் பரிமாணத்தில் இருந்ததாக மானுடவியலாளர்கள் (Anthropologist) கூறுகிறர்கள் .

சரி , இது இறந்து எத்தனை காலம் . கொஞ்சம் நில்லுங்க , சரியாக

7 ஜூலை 1979 கணக்கிட்டால் சரியாக 1700 வருஷம் முன் வாழ்ந்து இறந்துள்ளார் இந்த மாண்புமிகு குள்ளர், இந்த குள்ளரை ஒரு கண்ணாடி ஜாரில் வைத்து நியூயார்க் மியூஷியத்தில் 1950 வரை இருந்தது . இக் குள்ளர்கள் இனம் நிறைய அமானுஷ்ய வேலைகளை செய்யும் என்றும் வேற்று கிரக வாசிகளின் தொடர்பு உண்டு என்பதான தகவல்களை இம்மலையை ஒட்டி வாழ்ந்த செவ்விந்தியர்கள் கூறவும் மம்மி மியூஷியத்திலிருந்து மிஸ்ஸிங் !

தமிழ்நாட்டில் திண்டுக்கல் - கொடைக்கானல் ஊராட்சி வடக்கு ஊஞ்சி என்ற மலைக் கிராமத்தில் செம்பரக்குளம் அஞ்சி வீடு என்ற இடத்தில் இன்னும் குள்ளர்கள் நடமாட்டம் உள்ளதாம் . ஜாக்கிரதையாக போய் பார்க்கவும் . கொண்டு போற பேக்கில் நுழைந்து விடுவார்கள் .

நாமக்கல் மாவட்டம் ராசிபுரம் அருகே வடுகம் கிராமத்தில் 3 கிமீ போனீங்கனா போதைமலையில் சாமியார்கள் குள்ளர்களை வசிய மருந்துக்காக தேடுகிறார்கள் .மற்றவர்கள் குள்ளர்களின் தங்க புதையலை தேடுகிறார்கள் .

அதென்னமோ குள்ளர்கள் என்றாலே அமானுஷ்யம் மற்றும் தங்க புதையல் பற்றி பேச்சி அடிபடுகிறது .

இந்தோனேஷியாவின் கிழக்கு பகுதியில் உள்ள புளோரஸ் தீவு (Flores) எரிமலைகள் , காடுகள் கூடவே நிறைய மர்மங்களும் , நிறைய நிறைய அமானுஷ்யங்களும் நிறைந்த தீவு.

2003-ல் டாக்டர் ரிச்சர்ட் ராபர்ட் 19 அடி ஆழத்தில் உள்ள குகையில் 3 அடி உயரமுள்ள பெண் எலும்புக்கூடு .3 வயது குழந்தையாக இருக்குமோ என்று சோதித்ததில் 30 வயது பெண் எலும்பு கூடு . 18 ஆயிரம் வருஷத்திற்கு முன் இந்த 3 அடி உயரமுள்ள 30 வயது பெண்

" வாங்க மச்சான் வாங்க ,வந்த வழியே பார்த்து போங்க " என்று ஆடி பாடியிருக்கிறாள் .

இங்குள்ள குள்ளர்களை நெல்லிஸ் குயா குள்ளர்கள் என்றழைக்கின்றனர் .

இவர்கள் சதா தின்னுக் கொண்டே இருப்பதால் எபுகோகோ என்றும் அழைக்கின்றனர். கண்கள் . காதுகள் பெரிது , உடல் முழுவதும் ரோமம். புரியாத மொழி .

பக்கத்து கிராமங்களில் இரவில் புகுந்து பயிர்கள் . உணவு பொருட்கள் . பழங்களை திருடி எப்போதும் சாப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள் .

" தாப்பத்துல் அர்ளு " - விநோத மிருகம்
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 20 )



தஜ்ஜால் என்கிற விநோதமான மனிதன் , யஃஜூஜ், மஃஜூஜ் என்கிற விநோதமான கூட்டம் ,இந்த வரிசையில் கியாமத் நாளின் அடையாளமாக தாப்பத்துல் அர்ளு என்கிற விநோதமான மிருகம் பூமியிலிருந்து வெளிப்படும் !
" இறுதிநாள் அவர்களை நெருங்கிய சமயத்தில், அவர்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு கால்நடையை நாம் வெளிப் படுத்துவோம். அது எந்தெந்த மனிதர்கள் நம்முடைய வசனங்களை நம்பிக்கை கொள்ளவில்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிக் காண்பிக்கும் "
(அல்குர்ஆன் : 27:82)

இது வெளிவரும் முன்னே நபி ஈஸா (அலை) அவர்களும் , முஸ்லிம்களும் பைத்துல்லாஹ்வை தவாஃபு செய்து கொண்டிருக்கும் பொழுது , அவர்களுக்கு கீழே பூமி ஆடும். விளக்குகள் ஆடுவது போல ஆடும் .
ஸஃபா மலை ஸஈ செய்யும் இடத்தைச் சார்ந்த பகுதியில் பூமி பிளந்து அதிலிருந்து இந்த மிருகம் வெளியேறும்
இது முழுமையாக வெளியேற மூன்று நாட்களாகும் .

இதற்கு இரண்டு சிறகுகளும் , காளை மாட்டு தலையும் , மனித முகமும், பன்றிக் கண்ணும் , யானைக் காதும், மாட்டுக் கொம்பும், ஒட்டகக் கழுத்தும் , சிங்க நெஞ்சும், பூனை இடுப்பும் , தும்பை ஆட்டு வாலும் , ஒட்டகக் காலும் , வேங்கை நிறமும் கொண்டதாக இருக்கும் .
அதன் வலது கையில் நபி மூஸா (அலை) அவர்களின் ' அஸா 'என்ற தண்டமும் , இடது கையில் நபி சுலைமான் (அலை) அவர்களின் 'காத்தம்' என்னும் முத்திரையும் இருக்கும்.
மூமின்களை அவர்களது நெற்றியில்

அத்தண்டத்தால் அது அடிக்கும் அவ்வடியின் அடையாளத்தால் ஒரு புள்ளி போல் விழும். அது கொஞ்சம் கொஞ்சமாக பெரியதாகி முகம் பிரகாசிக்கும் . அந்த ததும்பும் பிரகாசத்தில் " இவர் மூமின் " என்று நெற்றியில் எழுதும் . "இவர் சுவனவாசி " என்றும் கூறும் .
இறை மறுப்பாளர்களுடைய மூக்கில் அந்த முத்திரையைக் கொண்டு முத்திரை இடும் . அது மச்சம் உண்டாகி , படர்ந்து பெரியதாகி முகத்தைக் கருப்பாக்கி விடும். " இவன் காஃபிர் " என்று அவனுடைய இரு கண்களுக்குமிடையில் எழுதும் . "இவன் நரகவாசி " என்றும் கூறும்
ஹயாத்துல் ஹைவான் என்ற கிதாபில் கூறப்பட்டுள்ளது.

இம் மிருகம் 40 வருஷம் வரை இருக்கும் .
ஒரே மாதத்தில் 3 சந்திர கிராணம் ஏற்படும். அதன் பின் ஒரு விதமான புகை உண்டாகும் . அந்த புகை பயங்கரமானதாயும் , திகிலடி தரத்திலும் இருக்கும் . பூமி முழுவதையும் சூழ வளைந்து நெளிந்து செல்லும் .இது தொடர்ச்சியாக 40 நாள் வரை மனிதர்களை பயமுறுத்தும் .

புகைக்கு பின் ஹபசி ராஜன் கஃபாவை இடிப்பதற்குப் பெரும் படை திரட்டிக் கொண்டு வருவான் . அவனை எதிர்த்து முஸ்லிம்கள் போர் செய்வார்கள். இருந்த போதிலும் ஹபசி ராஜனே ஜெயிப்பான்.
அவன் கஃபாவை இடித்துப் போடுவான். அந்த தருணத்தில் அல்லாஹ் தஆலா கஸ்தூரியை விட அதிக வாசனையுள்ள ஒரு விதமான காற்றை வீசச் செய்வான்.
அக்காற்றை சுவாசிக்கும் முஸ்லிம்கள் எல்லோரும் இறந்து விடுவார்கள் .

"அல்லாஹ்" என்று சொல்லக் கூடியவன் ஒருவனாது இப்பூமியில் இல்லாமல் எல்லோரும் நிராகரிப்பாளராக இருப்பார்கள் .இத் தருணத்தில் குர்ஆனின் எழுத்துக்கள் எல்லாம் அழிந்து வெறும் தாளாக மாறி , பின் வானளவில் உயர்த்தப்படும் .தவ்பாவின் வாசல் அடைப்பட்டுப் போகும். அதன் பின் யாரும் ஈமான் கொள்ள முடியாது.

அதன் பின் சூரியன் மேற்கில் உதயமாகும் .பின் சூரியன் உதயமாகாமல் மூன்று நாள் இரவாகவே இருக்கும் . மக்கள் பயத்திலும் ,பீதியிலும் பதறியடித்து அங்கும் இங்கும் ஓடி தட்டழிந்து இருட்டில் கீழே கீழே விழுவார்கள் . நான்காம் நாள் சூரியன் திரும்பவும் மேற்கிலேயே உதயமாகும் . அப்போது சூரியன் கிரகணம் பிடித்த மாதிரி மங்கலாக இருக்கும் . அப்படியே உச்சி வரையும் வந்து சிவப்பாகி, மீண்டும் மேற்கிலேயே அஸ்தமிக்கும் .

அடுத்த நாள் சூரியன் வழக்கம் போல் உதயமாகும் .இது நடந்து நூற்றிருபது வருஷம் வரை இப்பூமியில் மனிதர்கள் தரித்திருப்பார்கள் . ஆனாலும் அவர்களுக்கு ஒரு விதமான மனம் பாதிக்கப்பட்டவர்கள் மாதிரி இருப்பார்கள் . அந்த தருணத்தின் போது நெருப்பு வெளிப்படும் .
மகா கொடுமையான அந்த நெருப்பு , 'அதன்' என்னும் பட்டணத்தின் கீழிருந்து வெளிப்படும் .
வெளிப்பட்டு மனிதர்கள் கூடவே நீங்காது இருக்கும் .
இந்த நெருப்பு மனிதர்கள் , ஜின்கள் , ஷைத்தான்களையும் மிருக , பிராணிகளையும் எல்லோருரையும் சூழ வளைத்து திரட்டிக் கொண்டு போய் மஹஷர் வெளியாகும் தானத்திற்கு சேர்க்கும் . அப்போது கியாமத் நாள் மிக்க சமீபமாக இருக்கும் .
ர.ரா
கியாமத் நாளின் அடையாளங்கள் 20 வது பதிவோடு நிறைவு .அடுத்த பதிவு கியாமத் நாள்

**Rahmath Rajakumaran**
1. எனது மரணம்
2. பைத்துல் முகத்தஸ் வெற்றி
3. கொத்து கொத்தாக மரணம்
4. நூறு தங்கக் காசுகள் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டாலும் அதில் திருப்தியடையாத அளவுக்கு செல்வச் செழிப்பு
5. அரபுகளின் வீடுகள் முழுவதையும் ஆட்டிப் படைக்கும் குழப்பங்கள்
6. மஞ்சள் நிறத்தவர்(வெள்ளையர்)களுக்கும் உங்களுக்கும் நடக்கும் யுத்தம். அவர்கள் எண்பது அணிகளாக உங்களை நோக்கி வருவார்கள். ஒவ்வொரு அணிகளிலும் 12 ஆயிரம் பேர் இருப்பார்கள்.
• நூல் : புகாரி 3176
மதீனா தூய்மையடைதல்
துருத்தி எவ்வாறு இரும்பின் துருவை நீக்குமோ அது போல் மதீனா நகரம் தன்னிடம் உள்ள தீயவர்களை அப்புறப்படுத்தும் வரை யுக முடிவு நாள் வராது என்பது நபிமொழி.
• நூல் : முஸ்லிம் 2451
அன்றும் இன்றும் என்றும் நிகழ்ந்து கொண்டிருப்பவை
யுக முடிவு நாள் வரும் வரை முஸ்லிம்களில் ஒரு கூட்டம் இம்மார்க்கத்திற்காக போராடிக் கொண்டே இருக்கும் என்பது நபிமொழி.
• நூல் : முஸ்லிம் 3546
மாபெரும் பத்து அடையாளங்கள்
இவை தவிர மிக முக்கியமான அடையாளங்களாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பத்து விஷயங்களைக் குறிப்பிட்டார்கள்.
1 - புகை மூட்டம்
2 - தஜ்ஜால்
3 – (அதிசயப்) பிராணி
4 - சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது
5 - ஈஸா (அலை) இறங்கி வருவது
6 - யஃஜூஜ், மஃஜூஜ்
7 - கிழக்கே ஒரு பூகம்பம்

8 - மேற்கே ஒரு பூகம்பம்
9 - அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம்
10 - இறுதியாக ஏமனி'லிருந்து புறப்படும் தீப்பிளம்பு மக்களை விரட்டிச் சென்று ஒன்று சேர்த்தல்
ஆகிய பத்து அடையாளங்களை நீங்கள் காணும் வரை அந்த நாள் வராது என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளார்கள்.
• அறிவிப்பவர்: ஹுதைபா (ரலி), நூல்: முஸ்லிம் 5162.
புகை மூட்டம்
வானம் தெளிவான புகையை வெளிப்படுத்தக் கூடிய நாளை எதிர்பார்ப்பீராக! அப்புகை மனிதர்களைச் சூழ்ந்து கொள்ளும், இது கடுமையான வேதனையாக அமைந்திருக்கும்.
• (அல்குர்ஆன் 44:10,11)
உங்கள் இறைவன் உங்களுக்கு மூன்று விஷயங்களைப் பற்றி எச்சரிக்கிறான். அவற்றில் ஒன்று புகை மூட்டம். முஃமினை இப்புகை ஜலதோஷம் பிடிப்பது போல்
பிடிக்கும். காஃபிரைப் பிடிக்கும் போது அவன் ஊதிப்போவான். அவனது செவிப்பறை வழியாகப் புகை வெளிப்படும். இரண்டாவது (அதிசயப்)பிராணி. மூன்றாவது தஜ்ஜால் என்று நபி(ஸல்) கூறியுள்ளார்கள்.
• அறிவிப்பவர்: அபூமாலிக்(ரலி) நூல்: தப்ரானி
யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினரின் வருகை
இறுதியில் யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படுவார்கள். உடனே அவர்கள் (வெள்ளம் போல் ஒவ்வொரு மேட்டிலிருந்தும்) விரைந்து வருவார்கள்.
• (அல்குர்ஆன் 21:96)
ஈஸா(அலை) அவர்களின் வருகை
நிச்சயமாக அவர் (ஈஸா) இறுதிநாளின் அடையாளமாவார். இதில் அறவே சந்தேகம் கொள்ளாதீர்கள்! என்னைப் பின்பற்றுங்கள். இதுதான் நேரான வழியாகும்.
• (அல்குர்ஆன் 43:61)
மூன்று பூகம்பங்கள்
(மதீனாவின்) கிழக்கே ஒரு பூகம்பம். மேற்கே ஒரு பூகம்பம், அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம் ஆகிய மூன்று பூகம்பங்களை நீங்கள் காண்பது வரை யுகமுடிவு நாள் ஏற்படாது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
• அறிவிப்பவர்: ஹுதைபா(ரலி) நூல்: முஸ்லிம்
பெரு நெருப்பு
எமனிலிருந்து நெருப்பு தோன்றி மக்களை அவர்களது மஹ்ஷரின்பால் விரட்டிச் செல்லும், அதுவரை கியாமத் நாள் ஏற்படாது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
• அறிவிப்பவர்: ஹுதைபா(ரலி) நூல்: முஸ்லிம் .

**Rahmath Rajakumaran**
காலம் சுருங்குதல்
காலம் சுருங்கும் வரை அந்த நாள் ஏற்படாது. (இன்றைய) ஒரு வருடம் (அன்று) ஒரு வாரம் போலாகி விடும். (இன்றைய) ஒரு வாரம் (அன்று) ஒரு நாள் போலாகும். (இன்றைய) ஒரு நாள் (அன்று) ஒரு மணி நேரம் போல் ஆகும். ஒரு மணி என்பது ஒரு விநாடி போன்று ஆகும் என்பதும் நபிகள் நாயகம் அவர்கள் காட்டிய அடையாளம்.
நூல் : திர்மிதீ 2254)
கொலைகள் பெருகுதல்*
கொலைகள் அதிகரிப்பதும் யுக முடிவு நாளின் அடையாளம் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர்.
நூல் : புகாரி 85, 1036, 6037, 7061
நில அதிர்வுகளும், பூகம்பங்களும் அதிகரித்தல்*
பூகம்பங்கள் அதிகரிப்பதும் யுக முடிவு நாளின் அடையாளமாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) குறிப்பிட்டுள்ளனர்.
நூல்: புகாரி 1036, 7121
பள்ளிவாசல்களை வைத்து பெருமையடிப்பது*
மனிதர்கள் பள்ளிவாசல்களைக் காட்டி பெருமையடிப்பது யுக முடிவு நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்பது நபிமொழி.
நூல்கள் : நஸயி 682, அபூதாவூத் 379, இப்னுமாஜா 731, அஹ்மத் 11931, 12016,
நெருக்கமான கடை வீதிகள்*
கடைகள் பெருகி அருகருகே அமைவதும், நியாயத் தீர்ப்பு நாளின் அடையாளம் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர்.
நூல்: அஹ்மத் 10306

பெண்களின் எண்ணிக்கை அதிகரித்தல்*
பெண்களின் எண்ணிக்கை தாறுமாறாக அதிகரிப்பதும் யுக முடிவு நாளின் அடையாளமாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர்.
நூல்: புகாரி 81, 5231, 5577, 6808
*ஆடை அணிந்தும் நிர்வாணம்*
ஆடை அணிந்தும் நிர்வாணமாகத் தோற்றமளிக்கும் பெண்கள் இனி மேல் தோன்றுவார்கள் என்பதும் நபிமொழியாகும்.
நூல் : முஸ்லிம் 3971, 5098
உயிரற்ற பொருட்கள் பேசுவது
விலங்கினங்கள் மனிதனிடம் பேசும் வரையிலும் தோல் சாட்டையும் செருப்பு வாரும் மனிதனிடம் பேசும் வரையிலும் யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.
நூல்: அஹ்மத் 11365
பேச்சைத் தொழிலாக்கி பொருள் திரட்டுதல்
தங்கள் நாவுகளை (மூல தனமாகக்) கொண்டு சாப்பிடக் கூடியவர் கள் தோன்றும் வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.
• நூல்: அஹ்மத் 1511
தெரிந்தவருக்கு மட்டும் ஸலாம் கூறுதல்
தெரிந்தவருக்கு மட்டும் ஸலாம் கூறுவது யுக முடிவு நாளின் அடையாளம் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர்.
• நூல்: ஹாகிம் 4/493
பள்ளிவாசலை பாதைகளாகப் பயன்படுத்துதல்
பள்ளிவாசல்கள் பாதைகளாக ஆக்கப்படுவதும் யுக முடிவு நாளின் அடையாளம் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறியுள்ளனர்.
• நூல்: ஹாகிம் 4/493

**Rahmath Rajakumaran**
சாவதற்கு ஆசைப்படுதல்
இறந்தவர்களை அடக்கம் செய்த இடத்தைக் காணும் மனிதன் நானும் இவனைப் போல் செத்திருக்கக் கூடாதா என்று கூறாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.
• நூல்: புகாரி 7115, 7121
இறைத்தூதர் என வாதிடும் பொய்யர்கள்
ஏறத்தாழ முப்பது பொய்யர்கள் தம்மை இறைத்தூதர் என்று வாதிடும் வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.
• நூல்: புகாரி 3609, 7121
முந்தைய சமுதாயத்தைக் காப்பியடித்தல்
‘உங்களுக்கு முன் சென்றவர்களை ஜானுக்கு ஜான், முழத்துக்கு முழம் நீங்கள் பின்பற்றுவீர்கள். அவர்கள் உடும்புப் பொந்தில் நுழைந்தார்கள் என்றால் நீங்களும் நுழைவீர்கள்” என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே முன் சென்றவர்கள் என்று நீங்கள் குறிப்பிடுவது யூதர்களையும், கிறித்தவர்களையுமா?” என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ‘வேறு யாரை (நான் குறிப்பிடுகிறேன்)” என்று கூறினார்கள்.
• நூல்: புகாரி 3456, 7319
யூதர்களுடன் மாபெரும் யுத்தம்
யூதர்களுடன் நீங்கள் போர் செய்யும் வரை யுக முடிவு நாள் வராது. அந்த யுத்தத்தின் போது ‘முஸ்லிமே இதோ எனக்குப் பின் னால் யூதன் ஒருவன் ஒளிந்திருக்கிறான்” என்று பாறைகள் கூறும்.
• நூல்: புகாரி 2926
கஃபா ஆலயம் சேதப்படுத்தப்படுதல்
கஃபா ஆலயம் இறைவனால் பாதுகாக்கப்பட்ட ஆலயமாக இருந்தாலும் ‘கால்கள் சிறுத்த அபீஸீனியர்கள் அதைச் சேதப்படுத்துவார்கள்” என்பது நபிமொழி.
• நூல் : புகாரி 5179
யூப்ரடீஸ் நதியில் தங்கப் புதையல்
யூப்ரடீஸ் (ஃபுராத்) நதி தங்கப் புதையலை வெளியே தள்ளும். அதைக் காண்பவர்கள் அதிலிருந்து எதையும் எடுக்க வேண்டாம் என்பதும் நபிமொழி.
• நூல் : புகாரி 7119
கஹ்தான் இன மன்னரின் ஆட்சி
(யமன் நாட்டு) கஹ்தான் கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவர் தமது கைத்தடியால் மக்களை ஓட்டிச் செல்லும் வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பது நபிமொழி.

• நூல் : புகாரி 3517, 7117
அல்ஜஹ்ஜாஹ் மன்னர்
ஜஹ்ஜாஹ் என்ற பெயருடைய ஒரு மன்னர் ஆட்சிக்கு வராமல் உலகம் அழியாது என்பது நபிமொழி.
• நூல் : முஸ்லிம் 5183
எண்ணிப் பார்க்காது வாரி வழங்கும் மன்னர்
கடைசிக் காலத்தில் ஒரு கலீஃபா (ஆட்சியாளர்) தோன்றுவார். அவர் எண்ணிப் பார்க்காமல் செல்வத்தை வாரி வழங்குவார் என்பது நபிமொழி.
• நூல் : முஸ்லிம் 5191
செல்வம் பெருகும்
செல்வம் பெருகும் வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பது நபிமொழி.
• நூல் : புகாரி 1036, 1412, 7121
ஒருவர் தனது தர்மத்தை எடுத்துக் கொண்டு சென்று இன்னொருவருக்குக்
கொடுப்பார். 'நேற்று கொடுத்திருந்தால் நான் வாங்கியிருப்பேன்; இன்று எனக்குத் தேவையில்லை" என்று அந்த மனிதன் கூறிவிடுவான் என்பதும் நபிமொழி.
• நூல் : புகாரி 1424
மாபெரும் யுத்தம்
இரண்டு மகத்தான சக்திகளுக்கிடையே யுத்தம் நடக்கும் வரை யுக முடிவு நாள்
ஏற்படாது. அவர்களுக்கிடையே மகத்தான யுத்தம் நடக்கும். இருவரும் ஒரே வாதத்தையே எடுத்து வைப்பார்கள்.
• நூல் : புகாரி 3609, 7121, 6936
பைத்துல் முகத்தஸ் வெற்றி
யுக முடிவு நாளுக்கு முன் ஆறு காரியங்களை எண்ணிக் கொள்!

கியாமத் நாளின் பொழுதுகள் 01
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 21)



இன்றைய தினத்தில் இருந்து 1500 கோடி வருஷங்களுக்கு முன்னால் இந்தப் பிரபஞ்சம் ஒரே ஒரு பெரு வெடிப்பின் மூலம் படைக்கப்பட்டிருக்கலாம் என்கிறது விஞ்ஞானம் . 1500 கோடி வருஷமா அல்லாஹ்வே அறிவான்
(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் ஒன்றாக இருந்ததை நாமே பிரித்தமைத்தமைத்தோம் .
(அல்குர்ஆன் : 21:30)
'ஆரம்பம் ' என்றொன்றிருந்தால் , 'முடிவும ' இருக்கத்தானே செய்யும் , இது தானே உலக நியதி... படைக்கப்பட்ட இந்த உலகத்திற்கும் இது பொருந்தும் அல்லவா ?
" கியாமத் " என்ற உலக இறுதி நாட்கள். "கியாமா " என்றால் எழுந்திருத்தல் , அது துன்யா ஒழிந்து போய் ஆகிறா வெளியாய் , படைப்புகள் உட்பட எல்லாம் உயிர் பெற்று எழும்புதல் . இதைத்தான் கியாமத் நாள் எனப்படும். அந்த நாள் துனியாவின் வருஷத்தில் 50 ஆயிரம் வருடத்திற்கு சமமான ஒரு நாளாக இருக்கும் .

" அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.
(அல்குர்ஆன் : 70:4)
சூர் என்பது ஒருவித ஊது கொம்பு அதன் ஒரு தலை சிறுத்து ஒரு தலை பெருத்துமுள்ள காளைக் கொம்பு போல் இருக்கும். அதன் தலை சுற்றளவு இந்த பூமியின் சுற்றளவாக இருக்கும்.

அல்லாஹு தஆலா இஸ்றாபீல் (அலை) என்ற வானவர் மலக்கை சூது ஊதும்படி ஏவுவான். உடனே அவர்கள் ஊதுவார்கள் இது முதல் சூர் ஊதல் . மனிதர்கள் அவரவர்கள் தத்தம் பணியில் படுத்தோ, நின்றோ , நடந்தோ , பேசிக் கொண்டோ , இனப்பெருக்கம் செய்து கொண்டோ இருக்கும் போது , ஊ .... ......உடனே உயிரைக் கைப்பற்றும் இஸ்றாயீல் (அலை) என்ற வானவர் மலக்கு , இறைவன் நாடின சிலர் தவிர வானத்திலும் , பூமியிலுமுள்ள எல்லாப் படைப்புகளுடைய ரூஹை உயிரை ஒரே நேரத்தில் கைப்பற்றுவார்கள் .

சூர் வினுடைய சத்தத்தின் அமளி கொண்டே எல்லோருமே இறந்து விடுவார்கள் .
மலைகள் நொருங்கி பஞ்சு பஞ்சாய்ப் பறக்கும் . கடல்கள் எல்லாம் கொதித்து கொந்தளித்து வற்றி வறண்டு போகும்.

பூகம்பங்கள் தொடர்ந்து பூமியைத் தாக்க பூமி இடிந்து தகர்ந்து சம தரையாகி விடும். சூரியனும் , சந்திரனும் , நட்சத்திரங்களும் ஒளி மங்கி கருத்துப் போய் விடும் . ஏழு வானங்களும் அதிர்ந்து நிலை குலைந்து அலைந்து கொண்டு அதிரும் .
"வானங்களையும், பூமியையும் படைத்தவன் உண்மையாகவே அவன்தான். (அவன் யாதொன்றை படைக்கக் கருதும்போது) "ஆகுக!" என அவன் கூறுவதுதான் (தாமதம்.) உடனே (அது) ஆகிவிடும். அவனுடைய சொல்தான் உண்மை. சூர் (எக்காளம்) ஊதப்படும் நாளில், அதிகாரம் அவன் ஒருவனுடையதாகவே இருக்கும். மறைவானவற்றையும், வெளிப்படையானவற்றையும் அவன் நன்கறிவான். அவன் ஞானமுடையவனாகவும், (அனைத்தையும்) நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் : 6:73)

இது முதல் சூர் குழலின் முதல் ஊதல் .
படைப்புகள் எல்லாம் உயிரற்ற சடலங்களாக பூமியில் நிறைந்திருக்க , இப்லீஸ் என்கிற சைத்தான் எங்கே என்னவானான் ?
சொல்றேன் .
ர.ரா

கியாமத் நாளின் பொழுதுகள் 02
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 22 )



அல்லாஹு தஆலா மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களை அழைத்து , "நீர் உம்முடன் 70 ஆயிரம் ஜபானியாக்களைக் கூட்டிக் கொண்டு நரகத்திலுள்ள 70 ஆயிரம் நெருப்பு சங்கலியையும் , நரகத்திலுள்ள 70 ஆயிரம் கை கால் விலங்குகளையும் எடுத்துக்

கொண்டு நெருப்பால் படைக்கப்பட்ட இபுலீஸிடம் போய் அவனை மவ்த்தாக்கும் " - என்று உத்திரவு பிறப்பிப்பான் .
அல்லாஹு தஆலா சொன்ன மாதிரியே இஸ்றாயீல் (அலை) அவர்கள் ஜபானியாக்களையும் விலங்கு சங்கிலிகளுடன் , படைப்புகளெல்லாம் அஞ்சி நடுங்கும்படியான பயங்கரமான தன் சொரூபத்தையை மாற்றிக் கொண்டு பூமியில் இறங்கி இபுலீஸிடம் வருவார்கள்.

மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களின் இந்த பயங்கர சொரூபத்தைக் கண்டதும் இபுலீஸ் தட்டுக் கெட்டு தடுமாறி அஞ்சி நிலத்தில் விழுந்து புரண்டு எழுந்து ஓடுவான் .
மலக்குல் மவ்த்து அவனை விடாமல் விரட்டிக் கொண்டு பின் தொடர்ந்து போவார்கள் .

பின் அவன் நபி ஆதம் (அலை) அவர்கள் அடங்கி இருக்கும் ஸ்தலத்தில் போய் நின்று கொண்டு , " ஆதமே ! நான் எவ்வளவு பெரிய பக்தனாய் இருந்து, மலக்குகளுக்கு இறைப் பாடம் சொல்லிக் கொடுக்கும் உயர்ந்த ஸ்தானத்தில் இருந்தவன் . நான் சுஜூது செய்யாத இடம் இந்த பூமியில் உண்டா ? அப்பேர்பட்ட என்னை இறைக்
கோபத்திற்கும் , விலக்கி தள்ளப்பட்டதற்கும் , விரட்டி துரத்தப்பட்டதற்கும் காரணம் உம்மால் அல்லவா என்று கூறுவான் .

அதற்குள் மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவன் பின்னால் நிற்பதைப் பார்த்து அவரிடம் இபுலீஸ்,
" நீர் எனக்கு என்ன குடிப்பைக் கொடுத்து என் ரூஹை கைப்பற்றுவீர் ? "
" லலா " என்னும் நரகத்தின் குடிப்பை உனக்கு குடிக்கக் கொடுத்து , " ஸயீறு " என்னும் நரகத்து வேதனையைக் உன் உயிரை சிறுகச் சிறுக கைப்பற்றுவேன்"
இதைக் கேட்டு இபுலீஸ் இன்னும் அதிகமாக கலக்கமுற்று 'இது என்ன சோதனை ' என்று மருண்டு ஓடுவான் .
மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவனை விரட்டிக் கொண்டே போவார்கள் .இவ்விதம் ஓடும் இபுலீஸ், முன் ஆரம்பத்தில் எந்த இடத்தில் வைத்து லஃனத்து செய்யட்டான் அதே இடத்தில் போய்ச் சேருவான்.
உடனே ஜபானியாக்கள் 70 ஆயிரம் பேர்களும் அவனை சூழ வளைத்துக்கு கொண்டு , மறுபுறம் போக முடியாமல் , சூலங்களாலும் , வல்லயங்களாலும் குத்தி அவனைத் தடுப்பார்கள் .
அப்போது இபுலீஸ் நெடுமரம் சாய்வது போல தரையில் சாய்ந்து விழுவான்.
விழுந்ததும் அவனுக்கு ஸக்கறாத்து என்னும் மரண வேதனை உண்டாகும் .
அந்த ஸக்கறாத்தில் அவனுடைய தொண்டையில் இருந்து ஒரு விதச் சப்தம் கேட்கும். அந்தச் சப்தத்தை யாரும் கேட்டால் திகில் கொண்டு அந்த இடத்திலேயே இறந்தே விடுவார்கள் .
இபுலீஸ் அவ்விதமான சப்தத்துடன்
ஸக்கறாத்தில் இழுத்துக் கொண்டு அல்லாஹு தஆலா நாடின காலம் வரையும் கிடந்து சாவான்.
كُلُّ نَفْسٍ ذَآٮِٕقَةُ الْمَوْتِ ثُمَّ اِلَيْنَا تُرْجَعُوْنَ
(உங்களில் உள்ள) ஒவ்வொரு ஆத்மாவும் மரணத்தை அனுபவிக்க வேண்டியதுதான். பின்னர் நீங்கள் (விசாரணைக்காக) நம்மிடமே கொண்டு வரப்படுவீர்கள்.
(அல்குர்ஆன் : 29:57)

பிறகு அல்லாஹு தஆலா மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களிடம்
" என்னுடைய அடியார்களில் இறக்காமல் மீந்திருப்பவர்கள் யார் யார் ? என்று கேட்பான் .
அதற்கு அவர்கள் , " ஜிப்ரயீல் , மீக்காயீல் , இஸ்றாபீல் ,உன் அர்ஷ்யை சுமக்கும் எட்டு மலக்குமார்களும் இவர்களுடன் எல்லோரின் உயிரை வாங்கும் மலக்குல் மவ்த்து இஸ்றாயீலாகிய நானும் , உயிரோடு இருக்கிறோம் யா அல்லாஹ் !
அப்புறமாக சொல்றேன்.
ர.ரா

கியாமத் நாளின் பொழுதுகள் 03
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 23 )




அல்லாஹு தஆலா மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களிடம்
" என்னுடைய அடியார்களில் இறக்காமல் மீந்திருப்பவர்கள் யார் யார் ? என்று கேட்பான் .
அதற்கு அவர்கள் , " ஜிப்ரயீல் , மீக்காயீல் , இஸ்றாபீல் ,உன் அர்ஷ்யை சுமக்கும் எட்டு மலக்குமார்களும் இவர்களுடன் எல்லோரின் உயிரை வாங்கும் மலக்குல் மவ்த்து இஸ்றாயீலாகிய நானும் , உயிரோடு இருக்கிறோம் யா அல்லாஹ் ! "
அவர்கள் அனைவரையும் மவ்த்தாகும்படி அல்லாஹுதஆலா மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களிடம் கட்டளை இடுவான். அதன்படி அனைவரின் உயிரையும் கைப்பற்ற அவர்கள் இறந்து போவார்கள் .

அல்லாஹு தஆலா மலக்குல் மவ்த்து இஸ்றாயீல் (அலை) அவர்களிடம் , "இப்போது மீந்தவர் யார் ? " என்று கேட்பான் .
அதற்கு " உன் அடியானாகிய நான் மட்டுமே மீந்திருக்கிறேன் யா அல்லாஹ்"
" என்னுடைய படைப்புகளில் நீரும் ஒரு படைப்பு தான், ஆகையால் நீரும் மவ்த்தாகி விடும் " . என்று கட்டளை இடுவான்.

உடனே அவர்கள் சுவர்க்கத்திற்கும் , நரகத்திற்கும் இடையில் போய் விழுந்து நாற்பது வருஷம் வரையும் ஸக்ரத்து என்று மரண வேதனை வருத்தம் அனுபவித்துக் கொண்டு, " ஸக்ரத்து வருத்தத்தை அனுபவித்துக் கொண்டு , இப்படி ஒரு மரண வருத்த வேதனை இருக்குமென்று முன்னமே நான் அறிந்திருந்தால் , முஃமின்களுடைய
ரூஹை வாங்கும்போதாவது அவர்களுக்கு இலேசாக எளிதாக வாங்கி இருப்பேனே ...." என்று பெருஞ் சப்தமிட்டு அலறிக் கொண்டு , அல்லாஹு தஆலாவின் கட்டளைப்படி மவ்த்தாகி விடுவார்கள் .
இறக்கும்போது சூர் ஊது குழலை அருகில் வைத்துக் கொண்டு மவ்த்தாவார்கள் .
முதல் சூர் ஊதினபோதே இடிந்து தகர்ந்து சமதரையான பூமியும் , அதோடு அலைந்து குலைந்த வானமும், அர்ஷும் , குர்ஷும் , லௌஹும் , சுவர்க்கம் , நரகமும் தவிர மற்ற எல்லா படைப்புகளும் அழிந்துப் போகும் .
அப்போது அல்லாஹு தஆலா மட்டும் தனித்திருப்பான் . " உலகத்தை கட்டி ஆண்ட மன்னாதி மன்னர்களெல்லாம் இப்போது எங்கே ? மாட மாளிகைகளைக் கட்டிக் கொண்டு குடியிருந்த செல்வந்தர்கள் எங்கே ? என்னுடைய உணவைத் தின்று கொண்டு என்னை அல்லாத வேறு வஸ்துகளை வணங்கியவர்கள் எங்கே ? இப்போது ராஜாங்கம் யாருடையது ? அரசாட்சி யாருடையது ? என்று தன்னில் தானே கேட்பான் .
இக்கேள்விகளுக்கு மறுமொழி சொல்ல அங்கு ஒருவரும் இல்லை. ஆகையால் தான் கேள்விகளுக்கு மறுமொழியாக ராஜாங்கம் , அரசாட்சி ,அடக்கியாளும் ஒருவனாகிய அல்லாஹ்வுக்கே உடையாது என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்வான் .
وَّيَبْقٰى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلٰلِ وَالْاِكْرَامِ
மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்.

கியாமத் நாளின் பொழுதுகள் 04
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 24 )



முதல் சூர் ஊதப்பட்டதும் அழிந்து போன தன் படைப்புகளையெல்லாம் அல்லாஹு தஆலா எழுப்ப நாடுவான் . அதில் மலக்குகளில் எழுபதினாயிரம் காறூபீன்களையும் , இறை அர்ஷை சுமந்த மலக்குமார்களையும், முதலில் உயிர்ப்பிப்பான்.இந்த காறூபீன் மலக்குமார்களுடைய எண்ணிக்கை எழுபதினாயிரமா அதற்கும் மேலா என்பதையும் , அவர்களின் வலிமையையும் , மகிமையையும் அல்லாஹு தஆலாவைத் தவிர யாரும் அறிய முடியாது .

மலக்குகள் காறூபீன்கள் உயிர்ப்பித்து , அவர்களிடம் " லவ்ஹ் " எங்கே என்று கேட்பான் . அதற்கு அவர்கள் "அது அர்ஷில் வைக்கப்பட்டிருக்கிறது " என்பார்கள் .
அல்லாஹு தஆலா " லவ்ஹே ... ! " என்று சப்தமிட்டு அழைப்பான் . அந்த சப்தத்தில் அது அஞ்சி நடுங்கித் துடிக்கும் . லவ்ஹ் என்பது ஐந்நூறு வருஷத் தூரப் பிரயாணமுள்ள ஒரே ஆணி முத்திலான ஒரு பலகை அதற்கு " லவ்ஹுல் மஹ்பூல் (பேணப்பட்ட பலகை) என்று பெயர் . அதில் துவக்க முதல் கியாமத் வரையுள்ள எல்லா விஷயங்களும் எழுதப்பட்டிருக்கும்.
ஒரு சின்ன ஃபிளாஸ் பேக்.....நபிகள் நாயகம் ﷺ அவர்களுடன் , மலக்குமார்கள் , அர்ஷ் , குர்ஷ் , கலம் என்கிற எழுதுகோல் இவைகளுக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது . அதை நீங்கள் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.
ஹஜ்ரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் அன்சாரி ரழியல்லாஹு தஆலா அன்ஹு அறிவிக்கிறார்கள்,
.
நான் ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டேன்.
.
" அல்லாஹ் முதன் முதலின் எதைப் படைத்தான்? "
"முதலில் அல்லாஹ் தனது ஒளியிலிருந்து எனது ஒளியைப் படைத்தான் "
.
இந்த ஒளியானது அல்லாஹ்வின் கட்டளைக்கிணங்கி பயணித்தது, அந்நேரத்தில் சொர்க்கம், நரகம், எழுதுகோள், லவ்ஹு, வானம், பூமி, சூரியன், சந்திரன், ஜின், மனித இனம் என எதுவும் படைக்கப்படவில்லை.
.
அல்லாஹ் படைப்பினங்களை படைக்க நாடிய போது, அந்த ஒளியை நான்கு பாகங்களாக பிரித்து, முதல் பாகத்திலிருந்து எழுதுகோலையும், இரண்டாவதிலிருந்து லவ்ஹையும், மூன்றாவதிலிருந்து அர்ஷையும் படைத்தான்.
.

நான்காவது பாகத்தை மீண்டும் நான்கு பாகங்களாக ஆக்கி, முதலாவதிலிருந்து அர்ஷை சுமக்கும் மலக்குமார்களையும், இரண்டாவதிலிருந்து குர்ஸியையும், மூன்றாவதிலிருந்து மலக்குமார்களையும் படைத்தான்.

.

மீதமுள்ள ஒரு பாகத்தை மீண்டும் நான்காக பிரித்து, முதலாவதிலிருந்து வானங்களையும், இரண்டாவதிலிருந்து கோளங்களையும், மூன்றாவதிலிருந்து சுவனத்தையும், பூமியையும் படைத்தான்.

.

ரப்புல் ஆலமீன் அல்லாஹ் மீண்டும் நான்காவதை நான்கு பாகங்களாக பிரித்து, அவற்றில் முதலாவதிலிருந்து மூஃமின்கள் காணக்கூடிய ஒளியையும், இரண்டாவதிலிருந்து மூஃமின்களின் ஒளி பொருந்திய இதயங்களையும், மூன்றாவதிலிருந்து கலிமாவை மொழியக்கூடிய மூஃமின்களின் நாவுகளையும் படைத்தான்.
நூல் : தலாயினுன் நுபுவ்வத், இமாம் பைஹகீ ரலியல்லாஹு அன்ஹு

நபிகளாருடன் மேற்கண்ட படைப்புகள் எப்படி தொடர் கொண்டிருக்கின்றன என்பதை அறிந்து கொண்டீர்களா ?
லவ்ஹுல் மஹ்பூல் பலகையிடம் இறைவன் , " உன்னிடம் யான் தந்த வஸ்துக்கள் எங்கே ? "
" நான் அவைகளை வானவர் மலக்கு இஸ்றாயீலிடம் கொடுத்து விட்டேன் "
உடனே அல்லாஹு தஆலா இஸ்றாயீல் தன்னிடம் கொண்டு வரும்படி காறூபீன்களுக்கு கட்டளையிடுவான்.
இம் மலக்குமார்கள் இஸ்றாயீல் (அலை) அவர்களுடைய மகாமிற்குப் போய் " "இஸ்றாயீலே ... .! அல்லாஹ்வுடைய கூப்பிடுதலுக்கு ஜஸாபு (பதில்) சொல்ல வாரும் " என்று அழைப்பார்கள் .உடனே அல்லாஹுதஆலா இஸ்றாயீல் (அலை) அவர்களை உயிர்ப்பிப்பான். உடனே அவர்களை காறூபீன்கள் அழைத்துக் கொண்டு அல்லாஹுதஆலாவின் சமுகத்தில் விடுவார்கள் .
அல்லாஹுதஆலா இஸ்றாயீல் (அலை) அவர்களிடம் " லௌஹிடத்திலிருந்து நீ வாங்கின என்னுடைய அமானத்தை என்ன செய்தாய் ? "என்றுவிசாரிப்பான் அதற்கு அவர் " இஸ்றாபீலிடம் கொடுத்து விட்டேன்" என்று சொல்வார் .
இவரை அழைத்த மாதிரியே இஸ்றாபீலையும் அழைத்து , விசாரிக்க அவர் , " அதை மீக்காயீலிடம் கொடுத்து விட்டேன் " என்று சொல்வார் .
இவரை அழைத்த மாதிரியே மீக்காயீலையும் அழைத்து , விசாரிக்க அவர் , " அதை ஜிப்ரயீலிடம் கொடுத்து விட்டேன் " என்று சொல்வார் .
இவரை அழைத்த மாதிரியே ஜிப்ரயீலையும் அழைத்து , விசாரிக்க அவர் , " அதை முஹம்மதர் ரஸூல்லா (ஸல்) அவர்களிடம் கொடுத்து விட்டேன்" என்று சொல்வார்கள் .
ர ரா

கியாமத் நாளின் பொழுதுகள் 05
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 25 )



அல்லாஹு தஆலா மலக்குமார்கள் கர்றூபீன்களிடம் " என்னுடைய
ஹபீபாகிய முஹம்மதர் ரஸூல்லாஹ் ﷺஅவர்களின் இடத்திற்குப் போய் , அவர்களை மிக்க கண்ணியத்துடன் அழைத்து வாருங்கள் " கூறிவிட்டு ,

சுவனத்தின் அதிபதியாகிய ரில்வான் என்னும் மலக்கிடம் , " என்னுடைய ஹபீப் முஹம்மதர் ரஸூல்லாஹ் ﷺ அவர்களுக்காகவும், அவருடைய உம்மத்துக்காகவும் , சுவர்க்கங்களை எல்லாம் அலங்கரியும் " என்று கட்டளையிடுவான்.

பிறகு ஜிப்ரயீல் (அலை) அவர்களை அழைத்து , " இரண்டு பட்டாடைகளையும் , இஸ்றாபீல் (அலை) அவர்களை அழைத்து லிவாவுல் ஹம்து என்னும் புகழ் கொடியையும் கொண்டு போகும்படி அனுப்புவான்.

இந்த மலக்குகள் எல்லோரையும் , மிக்க பணிவுடனும் , மிகுந்த தாழ்மையுடனும் என் ஹபீபிடம் நடந்து கொள்ளுங்கள் என்று கட்டளையிடுவான்..
கியாமத் நாளின் போது வெடித்து சிதறிய பூமியில் தரைமட்டமாக எந்த அடையாளமும் எதுவும் தெரியாமல் இருக்க , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பூமியிடம் , " ஷபீஉல் முதுனபீன் முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்களுடைய மேன்மையான மக்புரா எங்கிருக்கிறது ? " என்று கேட்பார்கள் .
அதற்கு பூமி , " என்னை வெடித்து சிதறி என்னை தரை மட்டமாக ஒரே மாதிரி ஆக்கிய வேதனையில் நான் இருக்கிறேன் . அவர்களின் மக்புரா எனக்கு எப்படி தெரியும் ?"
மலக்குமார்கள் செய்வது அறியாமல் நிற்க , அப்போது நபிகள் நாயகம் ﷺ அவர்களின் மக்புராவிலிருந்து பெரிய பிரகாசமுள்ள ஒரு ஒளிவானது ஒரு ஸ்தம்பம் போல எழுந்து வானம் வரையில் உயர்ந்து இலங்கிக் கொண்டிருக்கும் .அந்த ஒளியைக் கண்டு இதுதான் முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்களின் மக்புரா இதுதான் என்று அவ்விடம் நெருங்குவார்கள் .

ஜிப்ரயீல் (அலை) அவர்கள் உட்பட நான்கு மலக்குமார்களும் முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்களை கூப்பிடுவதற்காக ' நான் கூப்பிடமாட்டேன் , நான் கூப்பிடமாட்டேன்' என்று தர்க்கம் பண்ணி பின் வாங்குவார்கள்.
முடிவில் மீக்காயில் (அலை) அவர்கள் "அஸ்ஸலாமு அலைக்கும் யா ரஸூல்லாஹ் " என்று சொல்வார்கள் அதற்கு அவர்களின் மண்ணறையில் இருந்து எந்த பதிலும் வராது.
பின் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் "தூய்மையான ரூஹே ! தூய்மையான உடலில் மீள நுழை " என்று சொல்வார்கள். அதற்கும் எந்த வித ஊசாட்டமும் இருக்காது.

அதன் பிறகு இஸ்றாயீல் (அலை) அவர்கள் " விண்ணப்பம் செய்வதற்காகவும், கணக்கு கொடுப்பதற்காகவும் , உங்கள் உம்மத்து தீர்ப்பு பெறுவதற்காகவும் எழுந்திருங்கள் யா ரஸூல்லாஹ் "
என்று சொன்னதும் , உடனே முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்களின் மக்புரா அதிர்ந்து துளும்பி பிளந்து விரியும் .
முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்கள் மண்ணறையில் இருந்து எழுதுவார்கள்
அப்போது அவர்களின் சிரசிலும், தாடியிலும் ஒட்டியிருக்கும் மண்ணை தங்கள் தட்டிக் கொண்டு, வலது புறமும் , இடதுபுறமும் திரும்பிப் பார்ப்பார்கள். பூமியானது தன் மேலிருந்த கட்டிடங்கள் முதலியவைகளில் ஒன்றும் இல்லாமல் நிலை குலைந்து சம தளமாக இருக்கக் கண்டு , கண்ணீர் சிந்துவார்கள்.
இப்போது ஜிப்ரயீல் (அலை) அவர்கள்

" யா ரஸூல்லாஹ் ! ஏன் அழுகிறீர்கள் ? தாங்கள் அல்லாஹ் தஆலா இடத்தில் மஹா மேலான அந்தஸ்தைப் பெற்றிருக்கிறீர்களே , வாருங்கள்"
" ஜிப்ரயீலே ...! இது எந்த நாள் என்று கேட்பார்கள் ." யா ரஸூல்லாஹ் ! இது கியாமத் நாள் , கைசேதப்படும் நாள் , விண்ணப்பஞ் செய்யும்நாள் , சந்திக்கும் நாள் , பிரியும் நாள் , வெருண்டோடும் நாள் ... என்று கூறுவார்கள் .
முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்கள் , "ஜிப்ரயீலே ! நீர் எனக்கு நன்மாராயம் சொல்லும் "
" தாங்களுக்கு நன்மாராயம் உண்டவதாக ! இதோ சுவர்க்கத்து வாகனமாகிய புராக்கைப் பாருங்கள் , இறைவன் கொடுத்தனுப்பிய பட்டாடைகளைப் பாருங்கள் , தலைப்பாகைப் பாருங்கள், லிவாவுல் ஹம்தைப் பாருங்கள் .இவையெல்லாம் தங்களுக்காக ரப்பு கொடுத்து விட்டான் !

" இதுகளைப் பற்றி நான் உம்மிடம் எதுவும் கேட்கவில்லை , என்னுடைய உம்மத்தைப் பற்றியே உம்மிடம் கேட்கிறேன் . என்னுடைய உம்மத் எங்கே? அவர்களுடைய காரியம் எப்படி ?
." யா ரஸூல்லாஹ் ! தாங்களின் மண்ணறைதான் முதலில் திறக்கப்பட்டுள்ளது "
இஸ்றாபீல் அவர்கள் ." யா ரஸூல்லாஹ் ! இன்னும் இரண்டாம் சூர் ஊதப்படவில்லை " என்பார்கள்
" இப்போதுதான் என் கண்கள் குளிர்ந்தது , கல்பும் மகிழ்ந்தது " என்று சொல்லி ,பட்டாடைகளை வாங்கி உடுத்திக் கொண்டு , தலைப்பாகையை தங்கள் தலையில் அணிந்து

கொண்டு , " இன்றைய தினம் நான் என் இடுப்பை வரித்துக்கட்டிக் கொண்டு என் உம்மத்திற்காக மன்றாடுவேன் "
பின் ஜிப்ரயீல் (அலை) புராக்கை நபியவர்கள் முன்பாக கண்ணியமாக நிறுத்துவார்கள் .
" யா ரஸூல்லாஹ் ! தாங்கள் ஏறுங்கள் "
புராக் வாகனம் நபியவர்களை சுமந்து கொண்டு அல்லாஹ் தஆலாவின் சமூகத்திற்கு வந்து சேரும்.

கியாமத் நாளின் பொழுதுகள் 06
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 26 )



புராக் வாகனம் நபியவர்களை சுமந்து கொண்டு அல்லாஹ் தஆலாவின் சமூகத்திற்கு வந்து சேரும்.
உடனே முஹம்மத ரஸூல்லாஹ் ﷺ அவர்கள் இறைவன் முன்பு ஸுஜூதில் விழுவார்கள் .அப்போது அல்லாஹு தஆலா என் ஹபீபே ! முஹம்மதே ! இது ருக்கூ , ஸுஜூது செய்யும் ஸ்தலம் அல்ல . விசாரணைகள் நடத்தும் ஸ்தலம். தலையை உயர்த்தும் .நீர் விரும்பினதை என்னிடம் கேளும் நான் தருகிறேன் . தாங்கள் ஷபாஅத் செய்ய உத்தரவு தருகிறேன் . அப்போது நபியவர்கள் தலை நிமிர்ந்து எழுவார்கள் .
பிறகு அல்லாஹ் தஆலா நபி நாயகமவர்களைப் பார்த்து ,
"முஹம்மதே ! ...ஜிப்ரயீல் என் அமானத்தை உம்மிடம் தந்தாரா ? "

"ஆம் "
" அதை என்ன செய்தீர் ? "
" என் உம்மத்திடம் கொடுத்திருக்கிறேன்"
அதன் பின் " முஹம்மதே ! நீர் பைத்துல் முகத்தீஸில் இருக்கும் பாறைக்கல்லில் போய் உட்கார்ந்திருங்கள் " என்று கட்டளை இடுவான்.

முதல் சூர் ஊதிய முதல் இதுவரை நாற்பது வருஷங்கள் ஆகிவிடும்.
இரண்டாம் சூரை ஊத இஸ்றாபீல் (அலை) அவர்களுக்கு கட்டளை இட , அந்த சூரைஅர்ஷிலிருந்து எடுத்துக் கொள்வார்கள்.
பின் அல்லாஹ் தஆலா வானத்தில் இருந்து சுக்கிலத் தன்மையான மழையொன்று நாற்பது நாள் வரையும் தொடர்ந்து பொழிந்து கொண்டே இருக்கும் .இந்த மழை வெள்ளம் பூமிக்கு மேல் பன்னிரண்டு முழம் உயர்ந்து வழிந்து வெளியேறாமல் பூமியிலே கெட்டி நிற்கும்.
இந்த கெட்டி நிற்கும் நீரால் இறந்து உக்கின எலும்பு, நாம்பு , சதை , தோல் , நகம் , ரோமம் , இவற்றோடு வற்றி வதங்கிய இரத்தம் இவையெல்லாம் பழையபடி ஒன்று சேர்ந்து முன்பு இருந்தபடி , இறந்துபோன ஜீவஜோடிகளுடன் சடலம் உருப்பெற்று தயாராகும். இப்போது இரண்டாம் சூர் ஊத கட்டளை விடுவான்.
படைப்புகளின் தொகை எவ்வளவோ அவ்வளவு துவாரங்கள் சூர் ஊதுகுழலில்

இருக்கும். அந்த ஒவ்வொரு துவாரத்திலும் ஒவ்வொரு படைப்பின் ரூஹையும் அல்லாஹ் தஆலா சேர்ப்பான்.
இஸ்றாபீல் (அலை) அவர்கள் , வாயில் சூரை வைத்துக் கொண்டு " இறந்து மடிந்த சடலங்களே ! மக்கிப் போன எலும்புகளே ! கிழிந்து அழிந்த தோல்களே ! அறுந்து தொலைந்த நரம்புகளே ! உதிர்ந்து பிரிந்த ரோமங்களே ! நீங்கள் விண்ணப்பம் செய்யவும் , கணக்குக் கொடுக்கவும், அதற்குரிய தீர்ப்புப் பெறவும் உங்கள்
கபுறுகளிலிருந்து எழுந்திருங்கள் " என்று சொல்லிக் கொண்டே ஊதுவார்கள் .
அப்போது அல்லாஹு தஆலா "இஸ்றாபீலே ! இன்னும் ஊதும் இன்னும் ஊதும் , நான் உயிர்ப்பிக்கிறேன் .

உடனே இஸ்றாபீல் (அலை) அவர்கள் "நீங்கள் விண்ணப்பம் செய்யவும் , கணக்குக் கொடுக்கவும், அதற்குரிய தீர்ப்புப் பெறவும் உங்கள்
கபுறுகளிலிருந்து எழுந்திருங்கள்

وَالَّذِىْ نَزَّلَ مِنَ السَّمَآءِ مَآءً بِقَدَرٍ فَاَنْشَرْنَا بِهٖ بَلْدَةً مَّيْتًا كَذٰلِكَ تُخْرَجُوْنَ
அவன் தான் மேகத்திலிருந்து மழையைத் தனது திட்டப்படி இறக்கி வைக்கின்றான். (இவ்வாறு செய்கின்ற அல்லாஹ்வாகிய) நாம்தாம், பின்னர் அதனைக் கொண்டு (மழையை பொழியச் செய்து) வறண்டுபோன பூமியை உயிர்ப்பிக்கின்றோம். இவ்வாறே நீங்களும் (இறந்த பின்னர் சமாதிகளிலிருந்து உயிர் கொடுத்து) வெளியேற்றப்படுவீர்கள்.
(அல்குர்ஆன் : 43:11)

"ஒவ்வொரு ரூஹும் அந்தந்த சடலத்தில் மீண்டும் நுழை " என்று அல்லாஹு தஆலா சொல்வான். அந்த கணமே ஒவ்வொரு ரூஹும் அந்தந்த சடலத்தில் நுழைந்து கொள்ளும் .
وَاِذَا الْقُبُوْرُ بُعْثِرَتْ
சமாதிகளும் திறக்கப்பட்டால் மரணித்தவர்கள் உயிர் பெற்றெழுந்து,
(அல்குர்ஆன் : 82:4)

கபுறுகள் எல்லாம் திறக்கும் . மடிந்துபோன மனிதர்களும், மலக்குகளும் , ஜின்களும் , ஷைத்தான்களும் உயிர்த்து எழுந்திருப்பார்கள் . மிருக ஜாதி , ஊர்வனமும், பறப்பனவுமாகிய எல்லாப் பிராணிகளும் உயிர் பெற்று எழுந்திருக்கும் .
அவர்கள் எழுந்திருக்கும் போது நிர்வாணமாகவும் , கத்னா செய்யப்படாதவர்களாகவும் , பதட்டமான மனநிலையுடையவர்களாகவும் , யாதொரு பேச்சு மூச்சின்றி மேல் நோக்கியவர்களாய், நாற்பது வருஷம் வரையும் ஒரே நிலையாய் நிற்பார்கள் .

6527. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
'நீங்கள் மறுமைநாளில் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்த சேதனம் செய்யப்படாதவர்களாக ஒன்று திரட்டப்படுவீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உடனே நான் 'இறைத்தூதர் அவர்களே! (நிர்வாணமான) ஆண்களும் பெண்களும் சிலரை சிலர் பார்ப்பார்களே?' என்று கேட்டேன்.
அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'அந்த எண்ணம் அவர்களுக்கு ஏற்படாத அளவுக்கு (அங்குள்ள) நிலைமை மிகக் கடுமையானதாக இருக்கும்' என்று கூறினார்கள்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 83. சத்தியங்களும் நேர்த்திக்கடன்களும்
அவர்கள் அகன்ற மஹஸர் மைதானத்தில் வெட்டுக் கிளி கும்பல் போல் திரண்டு மொய்த்திருப்பது போல இருக்கும்.
இவ்வாறு நிற்கும் மனிதர்களில் 24 வகையினர் இருப்பார்கள் . அவர்களின் மனித கோலம் ரூபம் மாறி நிற்பார்கள் .
ர ரா

கியாமத் நாளின் பொழுதுகள் 07
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 27 )



மனிதர்கள் யாவரும் அகன்ற மஹஸர் மைதானத்தில் வெட்டுக் கிளி கும்பல் போல் திரண்டு மொய்த்திருப்பது போல இருக்கும்.
இவ்வாறு நிற்கும் மனிதர்களில் 24 வகையினர் இருப்பார்கள் . அவர்களின் மனித கோலம் ரூபம் மாறி நிற்பார்கள் .
குழப்பவாதிகள் குரங்கு ரூபமும், லஞ்சம் வாங்கியவன் கரடி ரூபமும் , தொழுகையை இலகுவாய் விட்டவர்கள் பன்றி ரூபமும் ,
இறை போதனை புறக்கணிப்பவன் குருடனாகவும் எழுப்பப்படும் .
" எவன் என்னுடைய நல்லுபதேசங்களைப் புறக்கணிக் கின்றானோ அவனுடைய வாழ்க்கை நிச்சயமாக நெருக்கடி யானதாகவே இருக்கும். மறுமை நாளிலோ நாம் அவனைக் குருடனாகவே எழுப்புவோம்.
(அச்சமயம்) அவன் "என் இறைவனே! நீ ஏன் என்னைக் குருடனாக எழுப்பினாய்? நான் பார்வையுடையவனாக இருந்தேனே!" என்று கேட்பான்.

அதற்கு (இறைவன்) "இவ்வாறே (குருடனைப் போன்ற உன் காரியங்கள் இருந்தன) நம் வசனங்கள் உன்னிடம் வந்தன. நீ அவைகளை(க் கவனத்தில் வைக்காது) மறந்துவிட்டாய். அவ்வாறே இன்றைய தினம் நீயும் கவனிக்கப்படாது மறக்கப்பட்டுவிட்டாய்" என்று கூறுவான்.
(அல்குர்ஆன் : 20:124 -126)

செய்த அமலில் பெருமை அடித்தோர் செவிடும் , குருடுமைகளாய் , விதிவிலக்குகளைப் பிறருக்கும் சொல்லி , தான் செய்யாதோர் ஊனீர் வாடிய நாவைத் தின்கிறவர்களாய் ,
ஆகாதாரின்பத்தை அனுபவித்தோர் காலையும் , தலையையும் வளையக் கட்டப்பட்டுத் துர்க் கந்தம் நாறுகிறவர்களாய் ,
வேத நிபந்தனை மீறினோர் குடியர் போலவும் , புறம்பேசிகள் ,கோள் சொல்லிகள் பிடரியில் நாக்குத் தொங்கியவர்களாய் , பள்ளியிலிருந்து வீண்மொழி பேசினோர் மிருக ரூபமாய் வாயால் அக்கினி கக்கினவர்களாய் , வட்டி வாங்கிகள் , பாம்பும் தேளும் நிறைந்த பெருவயிற்றுகாரர்களாய் ,
அயல் வீட்டாரை நோவித்தவர்கள்,
கை ,கால் அற்றவர்களாய் , பொருளை இறைவழியில் செலவிடாமல் சேகரித்து வைத்திருந்தோர் நெற்றியிலும், முதுகிலும் , விலாவிலும் சூடு போடப்படும்

"(தங்கம், வெள்ளியாகிய) அவற்றை நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அவற்றைக் கொண்டு அவர்களுடைய நெற்றிகளிலும், அவர்களுடைய விலாக்களிலும், அவர்களுடைய முதுகுகளிலும் சூடிட்டு "உங்களுக்காக நீங்கள் சேகரித்து வைத்திருந்தவை இவைகள்தான். ஆகவே, நீங்கள் சேகரித்து வைத்திருந்த இவற்றை சுவைத்துப் பாருங்கள்" என்று கூறப்படும் நாளை நபியே! நீங்கள் அவர்களுக்கு ஞாபகமூட்டுங்கள் (அல்குர்ஆன் : 9:35)

வர்த்தகத்தில் பொய் சொன்னவர்கள் வாயால் ரத்தம் வடியக் குடல் வெளியே தள்ளினவர்களாய், அல்லாஹ்வுக்கு அஞ்சாமல் மனிதர்களின் வெட்கத்திற்கு அஞ்சி மறைவாக கருமஞ் செய்தவர்கள் சரீரத்தில் ஊனம் வடிகிறவர்களாய், பத்தினிகளைப் பழுது பேசினவர்கள் பிடரியில் நாக்குப் புறப்பட்டவர்களாய் ,
சாட்சி சொல்ல மறுத்தவன் வாயில் நாவில்லாமல் ரத்தமும் சீழும் வடிந்தவர்களாய், விபச்சாரம் செய்தவர்கள் பறுஜிலிருந்து ஊனமும் , சீழும் வடிந்தவர்களாய், அனாதைகள் சொத்தை தின்றவர்கள் முகங் கருத்துக் கண்கள் நீல நிறமாய் வயிற்றில் நெருப்பு நிறைந்தவர்களாய் ,
மாதா பிதாக்களை நோவினை செய்தவர்கள் குஷ்டரோகம் பிடித்தவர்களாய் , மது போதை குடித்தவன் நாவு கொம்பு போலத் தள்ளி நீண்டு உதடுகள் முழங்கால் வரை தொங்கியவர்களாய் , வயிற்றிலிருந்து மலம் . வெளிப்படும் குருடர்களுமாய் , உருமாற்றம் செய்யப்படுவர்கள்.
ர.ரா

**Rahmath Rajakumaran**

உருமாற்றம்—கண்ணால் காண்பதெல்லாம் மெய்யா?
அந்தப் பில்லிசூனிய மருத்துவர் இறந்து விட்டார். அவருடைய வீட்டிற்கு வெளியே கூடியிருந்தவர்களில் அநேகர், அவர் வேறு ஒரு ஜீவியாக உருமாறிவிட்டதாகவே நம்பினர். இதற்குக் காரணம் என்னவென்றால் அவருடைய மரணத்தின் சமயத்தில் ஒரு பெரிய மலைப்பாம்பு அவருடைய வீட்டைவிட்டு வெளியேறியதை சிலர் கண்டனர்! சிலருக்கு இது ஒரு தற்செயல் நிகழ்ச்சிபோல் தோன்றும். ஆனால், மற்றவர்களுக்கோ பில்லிசூனிய மருத்துவர் மலைப்பாம்பாக மாறிவிட்டதற்கு இது ஒரு அசைக்க முடியாத அத்தாட்சி—உருமாற்றம்!
ஆப்பிரிக்காவின் பல பகுதிகளில் மனிதர்கள் விலங்குகளாக மாறமுடியும் அல்லது மாற்றப்பட முடியும் என்ற நம்பிக்கை மிக பரவலாகக் காணப்படுகிறது. சிறுத்தைகள் மற்றும் மலைப்பாம்புகளின் தோற்றத்தை பெறும் வல்லமை, சூனியக்காரர்களிடம் இருப்பதாக பெரும்பாலும் நம்பப்படுகிறது. அதேபோல ஒரு சூனியக்காரனால் மற்றவர்களை விலங்குகளாக மாற்றிவிட முடியும் என்ற பயமும் பரவலாகக் காணப்படுகிறது. மற்றவர்களை துன்புறுத்துவதற்கு சூனியக்காரிகள் மரித்தவர்களின் ஆவிகளை பறவைகள் அல்லது விலங்குகளில் ஏவிவிடுவர் என்ற நம்பிக்கை மேற்கு ஆப்பிரிக்காவில் இன்றும் இருந்து வருகிறது. மத்திய ஆப்பிரிக்காவில், மரித்த உறவினர்தான் பாம்பு அல்லது யானையாக மாறியிருக்கிறாரோ என்ற பயத்தில் சிலர் அவற்றைக் கொல்ல மாட்டார்கள்.
இப்படிப்பட்ட நம்பிக்கைகள் சில வாசகர்களுக்கு மடத்தனமாகத் தோன்றினாலும், கண் கண்ட சாட்சிகளால் அது உண்மையாக நிரூபிக்கப்பட்டதாக, உருமாற்றத்தைப் பற்றி அநேக ஆப்பிரிக்கர்கள் நம்புகின்றனர். நியாயத்தன்மை உடைய எத்தனையோ ஆட்களால் சொல்லப்பட்ட நிகழ்ச்சிகள் வெறுமனே தற்செயல் நிகழ்ச்சிகளாக இருக்க முடியாது என்று அவர்கள் தர்க்கமும் செய்கின்றனர்.
இதே விதமான நம்பிக்கை உலகமெங்கும் காணப்படுவது உண்மைதான். மனிதர்களை நரிகள், நாய்கள், வளைக்கரடிகள் போன்றவை பிடித்தாட்டக்கூடும் என்று ஜப்பானில் நம்புகின்றனர். இரவு நேரங்களில் மனிதர்கள் ஓநாய்களாக மாறிவிடுவதாக, ஐரோப்பாவின் நாடோடிப் பாடல்களில் வரும் கதைகள் கூறுகின்றன. புலிகள், காட்டுப்பன்றிகள், முதலைகள், பூனைகள் போன்றவை மனிதராகவும் விலங்கினமாகவும் மாறிமாறி வருவதைப்போன்ற கதைகள் உலகத்தின் மற்ற பாகங்களிலும் இருக்கின்றன.
தமிழ்நாட்டில் இறந்தவர்கள் காகத்தின் ரூபத்தில் வந்து போவதாக நம்புகிறர்கள்

**Rahmath Rajakumaran**

நான் (ஒரு முறை) ஒரு பாம்பைக் கொல்வதற்காக விரட்டிச் சென்று கொண்டிருந்த போது அபூ லுபாபா ரலியல்லாஹு அன்ஹுஅவர்கள் என்னைக் கூப்பிட்டு, “அதைக் கொல்லாதீர்கள்” என்று சொன்னார்கள். நான், “அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் பாம்புகளைக் கொல்லும்படி உத்திரவிட்டுள்ளார்கள்” என்று சொன்னேன். அதற்கு அவர்கள், “(ஆமாம், உண்மை தான்.) ஆனால், அதன் பிறகு வீடுகளில் வசிக்கும் பாம்புகளை (பார்த்த உடனே) கொல்லவேண்டாமென்று அவர்கள் தடுத்தார்கள். அவை வீட்டில் வசிக்கும் ஜின்களாகும்” என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலியல்லாஹு அன்ஹு)
நூல் : புகாரி (3298)

**Rahmath Rajakumaran**

5723. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தில் ஒரு குழுவினர் (மர்மமான முறையில்) காணாமற்போய் விட்டார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்பது தெரியவில்லை.

அவர்கள் எலிகளாக (உருமாற்றப்பட்டுவிட்டதாக)வே நான் கருதுகிறேன். எலிகளுக்கு (முன்னால்) ஒட்டகத்தின் பால் வைக்கப்பட்டால், அவை அந்தப் பாலைக்குடிப்பதில்லை. அவற்றுக்கு (முன்பாக) ஆடுகளின் பால் வைக்கப்பட்டால், அந்தப் பாலை அவை குடித்துவிடுகின்றனவே?
இதன் அறிவிப்பாளரான அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
இந்த ஹதீஸை நான் கஅபுல் அஹ்பார் (ரஹ்) அவர்களுக்கு அறிவித்தபோது அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?" என்று வினவினார்கள். நான், "ஆம்" என்றேன். அவ்வாறே அவர்கள் பலமுறை கேட்டார்கள். "நான் "தவ்ராத்"தையா ஓதுகிறேன் (அதிலிருந்து சொல்வதற்கு)?" என்று நான் கேட்டேன்.
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.
அவற்றில் இஸ்ஹாக் பின் இப்ராஹீம் (ரஹ்) அவர்களது அறிவிப்பில், "அவர்கள் என்ன ஆனார்கள் என்று நாம் அறியவில்லை" எனக் காணப்படுகிறது.
5724. முஹம்மத் பின் சீரீன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அபூஹுரைரா (ரலி) அவர்கள், "எலிகள் உருமாற்றம் பெற்ற உயிரினமாகும். அதற்கு அடையாளம் என்னவென்றால்,அவற்றுக்கு முன்பாக ஆடுகளின் பால் வைக்கப்பட்டால், அவை அதைக் குடிக்கின்றன. (ஆனால்,) அவற்றுக்கு (முன்பாக) ஒட்டகங்களின் பால் வைக்கப்பட்டால் அவை அதைச் சுவைப்பதில்லை" என்று சொன்னார்கள்.
அப்போது கஅப் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?" என்று அபூஹுரைரா (ரலி) அவர்களிடம் வினவினார்கள். அபூஹுரைரா (ரலி) அவர்கள், "பிறகு "தவ்ராத்" வேதமா எனக்கு அருளப்பட்டது?" என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

கியாமத் நாளின் பொழுதுகள் 08
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 28 )



மஹஸர் மைதானத்தில் நபிமார்கள் , உலமாக்கள் , ஷஹீதானவர்கள் , குர்ஆனை மனப்பாடஞ் செய்து அதன் முறைப்படி நடந்தவர்கள் , பலவித வியாதி முதலான பலாய்களில் அகப்பட்டுப் பொறுமையோடு சகித்தவர்கள் ,

வழமையாய் பாங்கு சொன்னவர்கள் , நீதமுள்ள அரசர்கள் , அந்தரங்கமாக தான தர்மங்கள் கொடுத்த தயாளர்கள் , சொல், செயல் , நிய்யத்துக்களின் உண்மையுள்ளவர்கள் , விதி விலக்கல்களை உபதேசித்த ஸாலிஹானவர்கள் ,
அநியாயமாகக் கொல்லப்பட்டவர்கள் , நோன்பு நோற்றவர்கள் , வெள்ளிக்கிழமை இறந்தவர்கள் , புருஷனுக்கு வழிப்பட்ட ஸாலிஹான பெண்கள் , தங்கள் மானத்தைக் காப்பாற்றிய பெண்கள் , நிபாஸுடைய காலத்தில் இறந்த பெண்கள் , திக்ரை அதிகம் அதிகம் செய்தவர்கள் ......
...... இவர்களைப் போன்ற இன்னும் பலரது முகங்கள் பூரணச் சந்திரனைப் போல் பிரகாசிக்கும்படியாக , தங்கள் வாய்களைத் திறந்து ஷஹாதத்துக் கலிமாவையும் , முர்சிலான நபிமார்கள் உண்மை சொன்னார்கள், என்று ஆயத்தையும் ஓதுகிறவர்களுமாக எழுந்து நிற்பார்கள் .

இவ்வித 24 வது வகையினர் கூட்டத்தாரிடத்தில், அல்லாஹு தஆலாவுடைய உத்திரவு கொண்டு மலக்குகள் வந்து கைகொடுத்து நன்மாராயம் சொல்லி , அவர்களின் சரீரத்தில் உள்ள மண்ணைத் துடைப்பார்கள்.
துடைக்கும் போது நெற்றி மண் தவிர மற்ற மண்ணெல்லாம் துடைக்கப்படுகிறது . " நெற்றி மண் மட்டும் கபுறுடைய மண் அல்ல ; அது அவர்கள் தொழும்போது சுஜூது செய்ததனால் ஒட்டிய மண், ஆகையால் அதை துடைக்காதீர்கள் . அந்த நெற்றி மண் சுவர்க்கம் புகும் வரையும் துடைக்கப் படாமல் அப்படியே விட்டு விடுங்கள் " என்ற சப்தம் ஆணையிடும் .

பிறகு அல்லாஹு தஆலா சுவனத்து அதிபதியாகிய ரில்வான் என்னும் மலக்கிடம்,
" என்னுடைய ஸாலிஹான அடியார்களை அவர்கள் கபுறுகளிலிருந்து எழுப்பி இருக்கிறேன் . அவர்கள் பசித்தவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களுக்காக நீர் வேண்டிய நல்ல ருசியான பதார்த்தங்களையும் , குடிப்புகள் முதலியானவற்றையும் அவர்களுக்கு எதிரே கொண்டு போய் கொடுப்பீராக !

ஏனென்றால் அவர்கள் மனிதர்களெல்லாரும் தூங்கும் போது விழித்திருந்து தொழுதவர்கள் , எல்லோரும் உண்டு தின்று கொண்டிருக்கும் போது நோன்பாயிருந்தவர்கள். எனவே அவர்களுக்கு பணிவிடைச் செய்யுங்கள்
மலக்குமார்கள் அப்படியே செய்து கொடுப்பார்கள் , பிறகு அந்த மலக்குமார்கள் சுவனத்து வாகனங்களைக் கொண்டு வந்து சுவனவாசிகளை ஏற்றிக் கொண்டு பறப்பார்கள் .
அந்த உடனே கஸ்தூரி மணமுள்ள மேகம் ஒன்று வந்து , அந்த கூட்டத்தாருக்கு மாத்திரம் குடையிட்டு கூடவே வரும் .
ர.ரா

" ஹஷ்று " _ ஒன்று சேர்த்தல்
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 29 )



அல்லாஹு தஆலா படைப்புகளின் நன்மை, தீமைகளைப் பற்றி விசாரிக்க நாடின போது , ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் , " படைப்புகளை எல்லாம் ஒன்று கூட்டி விசாரணைக்கு அழைத்து வாருங்கள் " என்று கட்டளை இடுவான் .

" படைப்புகளே ! அடக்கி ஆளும் சர்வ வல்லமையுள்ள அல்லாஹ் தஆலாவின் சமூகத்தில் விசாரணைக்காக விரைந்து வாருங்கள், விரைந்து வாருங்கள் " என்று சப்தமிட்டு அழைப்பார்கள் .

அப்போது ஒவ்வொருவருக்கும் கூடவே இருந்து நன்மை தீமைகளை எழுதி பதிவு செய்த இரு மலக்குகளான 'கிராமன் , காத்திபீன் ' அவர்களையும் அழைத்துக் கொண்டு வரவும் அவரவர்களுக்கு இரு சாட்சியாளர்களாகவும் அவ்விரு மலக்குகளை நியமிப்பான்.
இறைவனின் உத்திரவுப்படி பெருநெருப்பு வெளிப்பட்டு பூமி முழுவதையும் சூழ வளைத்து கொண்டு , மூஃமினானவர்களை ஒன்றும் செய்யாமல் , இறை மறுப்பாளர்களின் முகங்களைப் பற்றி எரிக்கவும் செய்யும் .

வெருண்டோடும் இடங்களிளெல்லாம் நெருப்பு மயமாக இருக்கும் .
மிருகங்கள் , பறவைகள் , ஜீவராசிகள் இவைகளுடன் அனைத்தும் வெருண்டோடாமல் விசாரணை தளத்தில் வந்து நிற்கும் .
ஜின்களும் , ஷைத்தான்களும் , அதன் துஷ்டத் தனங்களையனைத்தையும் விட்டுத் தாழ்மையுடன் வந்து நிறகும்.

மஹ்ஷருடைய மைதானம் படைப்புகளின் படையெடுப்பால் நிறைந்து வழிந்து கொண்டிருக்கும் வேளையில் . ...
முன்பதிவில் சொன்ன மாதிரி பைத்துல் முகத்தீஸ் பக்கம் உள்ள பாறையில் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் உட்கார்ந்து, ஒவ்வொரு கூட்டமும் வரும்போதெல்லாம் , எம் உம்மத்து எங்கே ? எம் உம்மத்து எங்கே ? என்று ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்டுக் கொண்டே இருப்பார்கள் .
" தங்களுடைய உம்மத்து ஆகிர் உம்மத் ஆகையால் அவர்கள் எல்லோருக்கும் கடைசியில்தான் வருவார்கள்
யா ரஸூல்லாஹ் ...! "
ஒவ்வொரு நபியின் உம்மத்துக்களும் தன்னை கடக்கும் பொழுதெல்லாம் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் " யா உம்மத்தி ,யா உம்மத்தி என்று குரல் எழுப்பிக் கொண்டே இருப்பார்கள் .
நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உம்மத்து கடைசியாய் வருவதைக் கண்டு , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அழுவார்கள் .அவர்கள் அழுவதைப் பார்த்து நபிகள் நாயகம் ﷺ " ஜிப்ரயீலே! ஏன் அழுகிறீர்கள் என்று கேட்பார்கள் .
யா ரஸூல்லாஹ் ...! " தங்களுடைய உம்மத்தை நினைத்துதான் நானும் அழுகிறேன் .
நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் , " என் உம்மத்து காரியம் எப்படி ? அவர்கள் எப்போது வருவார்கள் ? அவர்கள் எப்போது வருவார்கள் ? என்று கேட்டுக் கொண்டே இருக்க ,
"யா ரஸூல்லாஹ் ...! அதோ தங்களுடைய உம்மத்து வருகிறார்கள் பாருங்கள் அவர்கள் சுஜூது செய்யும் உறுப்புகள் வெளுத்தவர்களாய் வருகிறர்களே அவர்கள்தான் தங்களின் உம்மத் "
உடனே நபியவர்கள் கன்றை பிரிந்த தாய்ப் பசு போல் ஓடோடி சென்று ஆவலுடன் பார்ப்பார்கள் .அப்போது கூட அவர்களின் வாய் ....." யா உம்மத் ! யா உம்மத் ! என்றே முணுமுணுத்துக் கொண்டே ஆவலுடன் பார்ப்பார்கள்.

அப்போது அந்த உம்மத்து அனைவரும் வாகனங்களில் ஏறியவர்களாகவும் ,
தங்கள் நபிக்கு ஸலாம் சொன்னவர்களாகவும், தங்களுடைய நபியைக் கண்டு கொண்டதைப் பற்றி சந்தோஷத்துடையவர்களாகவும் , நன்மாராயம் பெற்றவர்களாகவும் , ஸாலிஹானவர்களாயும் இருப்பதைப் பார்த்து அளவற்ற ஆனந்தமடைந்து , அல்லாஹு தஆலாவுக்கு ஷூக்குறு (நன்றி) செலுத்துவார் .
அதன் பிறகு தங்கள் உம்மத்தில் பாவியானவர்கள் பாவச்சுமையைச் சுமந்தவர்களாயும் கண்ணீர் சிந்த சிந்த அழுதவர்களாயும் , " முஹம்மதே !முஹம்மதே ! " என்று சப்தமிட்டு அலறியவர்களாயும் வருவார்கள் .
இந்தக் கோலத்தைப் பார்த்து நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் " யா உம்மத்தே .....,
யா உம்மத்தே.... என்று சொல்லி வாய் விட்டு அழுவார்கள் , அந்த பாவிகளின் கண்களுக்கு தெரியாமல் நபியவர்களை இறைவன் மறைத்து விடுவான் . இவர்களில் அதிகம் பேர் நபிகள் நாயகம் ﷺ அவர்களைக் காண மாட்டார்கள் .

அந்தோ ! அந்நிலையில் உள்ளவர்களையும் நபியவர்கள் தேடி தேடிக் கண்டு .. " யா உம்மத் ! யா உம்மத் !" என்று கூறி அழுதவர்களாகவே நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ காணப்படுவார்கள் .
ர.ரா

விசாரணைக்கு அழைத்தல் .
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 30 )



" ஜிப்ரயீலே...! முஹம்மதுடைய உம்மத்து எங்கே ? "
" யா ரப்பு...! அவர்கள் தங்களுடைய நபி முஹம்மது (ஸல்) அவர்களிடத்தில் இருக்கிறார்கள் "
" அவர்களை விசாரணைக்கு கொண்டு வரும் படி முஹம்மதிடம் சொல்லும் "
அப்போது ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சஞ்சலப்பட்டவர்களாயும், அழுகிறவர்களாயும் நபிகள் நாயகம் ﷺ அவர்களிடத்தில் வந்து ,
" யா ரஸூல்லாஹ் ! தங்களுடைய உம்மத்தை அல்லாஹு தஆலா விசாரணைக்கு அழைத்து வரச் சொன்னான் "
நபியவர்கள் அழுதவர்களாய் , அல்லாஹு தஆலா சமூகம் வந்து . ...
" யா ரப்பு ...! என்னுடைய உம்மத்து மானபங்கப்பட்டவர்களாகவும் , பலஹீனமானவர்களாகவும் இருக்கிறார்கள் "

"முஹம்மதே ! அவர்களைக் கட்டாயம் விசாரிக்கத்தான் வேண்டும் .அதற்காக அவர்கள் விசாரணைக்கு வந்துதான் ஆக வேண்டும் " .
நபியவர்கள் மீண்டும் அப்படியே கேட்பார்கள். அதற்கு அல்லாஹு தஆலா முன் சொன்னது போலவே சொல்லுவான் . நபியவர்கள் பின்னும் அப்படியே கேட்பார்கள் .அப்போதும் அல்லாஹு தஆலா முன் சொன்னது போலவே சொல்லுவான்.
நபியவர்கள் , அல்லாஹு தஆலாவிடம் , "நான் நபி ஆதம் (அலை) அவர்களை சந்திக்க நீ உத்தரவு தருவாயாக ! "
அப்படியே உத்தரவு தரப்படுகிறது .

உடனே நபியவர்கள் அழுது கொண்டு நபி ஆதம் (அலை ) அவர்களிடம் , " என் பிதாவே ! என்னுடைய உம்மத்துக்கு நான் நபி . தாங்களோ தகப்பனாக இருக்கிறீர்கள் .அவர்களுக்கு ஒரு கஷ்டம் நேரிட்டால் துக்கமும் , கைசேதமும் நமக்குத் தானே ! ஆகையால் அவர்கள் செய்த பாவங்களையெல்லாம் நாமிருவரும் பங்கிட்டு எடுத்துக் கொள்ளலாம். அப்போது அவர்கள் ஸலாமத்துப் பெறுவார்கள் "

"மகனே ! அல்லாஹு தஆலா குர்ஆனில், 'ஆதம் தன் இறைவனுக்கு மாறு செய்து, வழி தவறினார் ' என்று சொன்னானே அதை நீர் அறியவில்லையா ? அப்படியிருக்க பின்னும் நான் அவர்கள் செய்த பாவங்களையும் எப்படிச் சுமப்பேன் "
இதைக் கேட்டதும் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தலையில் கையை வைத்துக் கொண்டு , " உம்மத்தீ , யா உம்மத்தீ " என்று அழுதவர்களாய் , " என் மகள் பாத்திமாவை நினைக்கவில்லை , என் கண்மணியான ஹஸன் , ஹுசைன் இவர்களை நினைக்கவில்லை. பின் என் நபுஸையும் நினைக்கவில்லை, என் உம்மத்தைத்தான் நினைத்துதான் கவலை கொள்கிறேன் " .
அப்போது , " முஹம்மதே ! உம்முடைய உம்மத்தை விசாரணைக்கு கொண்டு வாரும் " . என்று ஒரு சப்தம் கேட்கும் .

நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கண்ணீர் தாரை தாரையாய் ஓட , அழுது கொண்டே , " என் உம்மத்தே ! நீங்கள் அல்லாஹு தஆலாவின் சமூகத்தில் விசாரணைக்கு அழைக்கப்படுகிறீர்கள் " என்று சொன்னதும் ,

பாவிகள் எல்லோரும் தாங்கள் செய்த பாவங்களை நினைத்து திகில் பிடித்து அழுவார்கள் .
இதனைப் பார்த்த நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ....
" இன்றைய தினம் நான் என் இடுப்பை இறுக வரிந்து கட்டிக் கொண்டு , என்னுடைய உம்மத்துக்காக மன்றாடுவேன் " என்று கூறி , தங்கள் உம்மத்தை மெதுவாக நடத்திக் கொண்டு மலக்குகள் புடை சூழ்ந்து வர , மஹ்ஷர் பெருவெளியில் வந்து சேர்வார்கள் .
ர.ரா
**Rahmath Rajakumaran**

"இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகள் " என்கிற இப் பதிவுகள் **#இன்னும்70** பதிவுகளுக்கும் அதிகமாகவே வரலாம் என நினைக்கிறேன் .இன்ஷா அல்லாஹ் !

இதுவரை வெளிவந்த 30 பதிவுகள் கூட நிறைய விஷயங்களை தவிர்த்து ,சுருக்கி உங்களுக்கு மென்மையாக்கி சொல்ல, பதிவின் விசாலத்தையும் ஏகமாக குறைத்து சொல்லி இருக்கிறேன் .

அதற்குள் சிலர் நீங்கள் அறிவியல் பதிவுகள் எப்போது போடுவீர்கள் என்று நமட்டுச் சிரிப்போடு விசாரிக்கிறார்கள்.

என்னமோ இந்த தொடர் ஏதோ கட்டுக்கதையாக யார் யாரோ ஜோடித்து எழுதிய கிதாபுகளையெல்லாம் ஒன்று திரட்டி இந்த ர.ரா பதிவு போடுவதாக எண்ணுகிறார்கள் போலும்.

எண்ணிக் கொள்ளட்டும் .

என் ஆன்மா திருப்திக்காக , எனக்காக நானே எழுதிக் கொள்வதாக வைத்துக் கொள்ளுங்கள் .

இப் பதிவுகளின் உண்மைகளை உளமாற நம்பி படிப்போரின் ஆன்மா நிச்சயமாக உயர்வான இடத்தில் உன்னதமாக தன்னை அலங்கரித்துக் கொள்ளும் என்பதில் எனக்கு சந்தேகம் இல்லை.

இப் பதிவுகள் உங்களுக்காக அல்ல : உங்கள் ஆன்மாக்களுக்காக எழுதப்படுகிறது !

மௌகிபு - விசாரணைக் களம்
(மஹஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 31)



' மௌகிபு ' என்பது விசாரணைக் களம் . அது அனைத்து படைப்புகளையும் கொண்டு வந்து நிறுத்துமிடம் . அதுதான் மஹஷர் மைதானம் . இது பைத்துல் முகத்தீஸ் அருகில் வெண்மையும், அதிக விசாலமும் உள்ள சமதள பூமி. (கியாமத் நாளில் எல்லாம் உடைபட்டு தரைமட்டமான பின் பூமியெங்கும் ஒரே சமதளமாகத்தான் இருக்கும் )
எல்லா நபிமார்கள், அவர்களின் உம்மத்து , ஜின்கள், ஷைத்தான்கள் , கூட்டங் கூட்டமாய் வந்து சேர்வார்கள் .

அதன் பின் மிருகங்கள் , பறப்பினம் , ஊர்வன மற்றும் சகல ஜீவகோடிகளும் திரளாய் வந்து சேரும்.

மனிதர்களும் , ஜின்களும் , ஷைத்தான்களும் , நூற்றிருபது அணியாக வகுக்கப்படுவார்கள் அவர்களில் மூஃமின்கள் மூன்று அணியாய் நிற்பார்கள். ஒவ்வொரு அணியிலும் எத்தனை எத்தனை பேர்கள் என்பது அல்லாஹுக்குத்தான் தெரியும்.
அதன் பிறகு என்னுடைய ஹபீபு முஹம்மதுக்காக ஒரு மேடை போடுங்கள் என அல்லாஹு தஆலா மலக்குமார்களுக்கு கட்டளையிடுவான் .

உடனே அர்ஷுக்குப் பக்கத்திலே ஒளியினால் ஒரு மேடை போடப்படும். அதனருகில 'லிவாவுல் ஹம்து ' என்னும் கொடி நாட்டப்படும்.
பின் அங்கே எழுபதினாயிரம் கொடிகளை நாட்டி 70 ஆயிரம் அணிகளாய் மலக்குகள் நிலை பிரியாமல் நிற்பார்கள் . அணி ஒன்றுக்கு ஐந்து லட்சம் மலக்குகள் நிற்பார்கள்.
நபிமார்கள் அனைவருக்கும் அவரவர் தகுதிப்படி மேடைகள் போடப்பட்டிருக்கும் அவர்களுக்கும் கொடிகள் நாட்டப்படும்.
அபூபக்கர் (ரலி) , உமர் (ரலி) , உஸ்மான் ( ரலி) , அலி (ரலி) ஆகிய நால்வருக்கும் 4 மேடைகள் போடப்பட்டு , 4 கொடிகள் நாட்டப்படும்.

ஷஹீதானவர்களுக்கும் மேடைகள் போடப்படும் . மஆதிபுனு ஜபல் (ரலி) , அபூதர் (ரலி) , உபையிபுனு கஃபு (ரலி) இமாம் ஹஸன் (ரலி) , இமாம் ஹுசைன் (ரலி) ஆகியோருக்கும் தனித்தனியாக ஒவ்வொரு கொடி நாட்டப்படும் .
அல்லாஹு தஆலா : " ஆதமே ! தவ்பா செய்தவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , நூஹே ! ஷுக்ரு செய்தவர்களை எல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , இப்றாஹீமே ! தயாள குணமுள்ளவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , இஸ்மாயிலே ! உண்மையுள்ளவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் .

யூசுபே ! பரதேசிகளைகளையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , ஐயூபே ! பிணியாளிகளையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , தாவூதே ! ஓதுவார்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும், சுலைமானே ! நியாயமுள்ள ராஜாக்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,

மூஸாவே ! சுத்தமான வணக்கக் கார்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , ஹாரூனே ! ஆலிம்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , ஷுஐபே ! முதியோர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,

ஜகரிய்யாவே ! பேரின்பப் பிரியமுள்ளவகளையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , யஹ்யாவே ! நிராசைக்காரர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , ஈஸாவே ! பேரின்ப உவப்புள்ளவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,

முஹம்மதே ! ரஸூல்மார்களையும் , நபிமார்களையும் , ஆரிபீன்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் " என்று உத்தரவு பிறப்பிக்கும் .

பிறகு அபூபக்கரே ! விசுவாசக்காரர் களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , உமரே ! நீதவான்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,
உதுமானே ! கொடையாளிகளையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , அலியே ! பீஸபீல்காரர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,

ஹஸனே ! ஷஹீதானவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,
ஹுஸைனே ! அநியாயமாகக் கொல்லப்பட்டவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் ,

மஆதிபுனு ஜபலே ! மார்க்க விதியறிந்தவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , உபையிபுனு கஃபே ! கறா அத்தை அறிந்தவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் , அபூதர்ரே ! நிராசை பெற்றவர்களையெல்லாம் நீர் சேர்த்துக் கொள்ளும் " என்று உத்திரவு பிறக்கும்
ர.ரா

மௌகிபு - விசாரணைக் களம் 2
(மஹஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 32 )



சூரியனைப் பற்றி விஞ்ஞானம் கூறியதை உங்களுக்கு முதல்ல சொல்றேன் .
சூரியன் பூமியிலிருந்து **149, 96, 000** கி.மீ தூரத்தில் உள்ளது. சூரியன் புவியை விட 109 மடங்கு பெரியதாக உள்ள இதன் விட்டம் சுமார் 1.39 மில்லியன் கிலோமீட்டர்கள். இதன் வெப்பம் 1.5 X 10 **Power of 7- K**

சூரியனில் 13 லட்சம் பூமி உருண்டைகளை உள் அடைக்க முடியும் . சூரியன் பூமியைப் போல் **3,33,000** மடங்கு நிறை (எடை) உள்ளது
சூரிய குடும்பத்தின் மொத்த நிறையில் (எடையில்) 99.8 சதவிகிதம் சூரியனுடைய நிறை (எடை)தான் , அதாவது ஒரு அழகான பெண் அணிந்திருக்கும் நகையைப் போன்றது அதன் மற்ற கோள்கள் அனைத்தும் .

மஹஷரில் படைப்புகள் தராதரப்படி எங்கும் பரவி நெருங்கிச் சேர்ந்து நிற்பார்கள் .
" படைப்புகளே நீங்கள் எல்லோரும் உலகில் இருந்து கொண்டு செய்யாதவைகளையெல்லாம் செய்யும்போது நான் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தேன் அல்லவா ? இப்போது நீங்கள் சும்மா இருங்கள் " என்று அல்லாஹு தஆலா கட்டளையிடுவான்.
இன்றைய தினம் ஒவ்வொரு ஆத்மாவும் அது செய்தவைகளுக்குத் தக்க கூலி கொடுக்கப்படும் .
வெகு விரைவாய் அல்லாஹு தஆலா விசாரணையை முடிப்பான்.

" எனக்கு வழிப்பட்டவனை சங்கையாக்குவேன் , மாறு செய்தவனை வேதனை செய்வேன் .என் வார்த்தைப் பாட்டை மாற்ற மாட்டேன் " - அல்லாஹு தஆலா கூறுவான்.
சூரியனை கொண்டு வரும்படி மலக்குகளுக்கு உத்திரவு பிறக்கும். உடனே பூமியைக் காட்டிலும் 360 மடங்கு பெரிதாய் உள்ள நம்ம சூரியனை 360 இடங்களில் 360 சிறுவடங்கள் தொடுத்த 360 பெரும் வடங்கள் பூட்டின வண்டியில் வைத்து , ஒவ்வொரு சிறுவடத்திலும் 360 மலக்குகள் நின்று பிடித்திழுத்துக் கொண்டு வருவார்கள் .

அந்தச் சூரியன் அல்லாஹு தஆலாவின் சமுகத்தில் வந்தவுடனே ஸுஜூது செய்யும். அல்லாஹ் சூரியனைப் பார்த்து, " என் அடியார்களில் யாரையாவது உன்னை வணங்கும்படி நீ ஏவினது உண்டா ? "
" என் எஜமானாகிய யா அல்லாஹ் ! நீ தூய்மையானவன் . வணங்கப்பட தகுதியானவன் , உன்னையல்லாது வேறு நாயன் இல்லை. அப்படி இருக்க உன்னுடைய அடியார்களை என்னை வணங்கும்படி உன் அடிமையாகிய நான் எப்படி ஏவுவேன் ? "
" உலகத்தில் காட்டிய வெப்பத்தைக் காட்டிலும் இரட்டிப்பாக்கி படைப்புகளின் தலைக்கு மேல் நெருங்கு "
உடனே அந்தச் சூரியன் இரண்டு புருவத்திற்கும் இடையிலுள்ள இடைவெளி அளவு படைப்புகளின் தலைக்கு நெருங்கி நிற்கும். அப்போது அர்ஷுடைய நிழலைத் தவிர வேறு எந்த நிழலும் அங்கு இருக்காது. நல்லோர்கள் அனைவரும் அந்த நிழலில் ஒதுங்கி நிற்பார்கள்.
பாவிகள் சூரியனின் வெப்பத்தில் சிக்கி தவிப்பார்கள் .மூளையும் கொதித்து உருகி வியர்வையுடன் கலந்து ரோமக்கால் வழியாய்ப் பிரவாதித்து தரையில் கட்டி நிற்கும்.

அது படைப்புகளின் செய்த வினைக்கு தக்கபடி சிலருக்கு முழந்தாள் வரையும் , சிலருக்கு தலைக்கு மேலுமாக உயர்ந்து நிற்கும் .இவ்வாறு நூறு வருஷம் இந்த வேதனை இருக்கும்.
பிறகு அடுத்து நூறு வருஷம் வரையும் மிகவும் பயங்கரமான இருள் வந்து படைப்புகளை சூழ்ந்து கொள்ளும்.அதில்
திசைகள் தோறும் தத்தளித்துத் தடுமாறி நிற்பார்கள் .
அதன் பிறகு நூறு வருஷம் பயங்கரமான அச்சத்தால் ஒருவர் மீது ஒருவர் விழுந்து மோதிக் கொண்டு அலைவார்கள்.

ஆக இந்த 300 வருஷத்திலும் ஒவ்வொருவரும் தம்தம் நப்ஸ்யைப் பற்றி கவலையில் மூழ்கிக் கிடப்பார்களே அல்லாமல் ஆணை ஆணென்றும் , பெண்ணைப் பெண்ணென்றும் , ஒருவரை ஒருவர் அறிய மாட்டார்கள் இந்த 300 வருஷமும் துன்யாவுடைய வருஷமாகும்.
இந்த 300 வருஷ சங்கடத்தில் படைப்புகள் அகப்பட்டு , " யா அல்லாஹ் ! எங்களுக்கொரு தீர்மானத்தை செய்து எங்களை நரகத்திற்கு அனுப்புவதாக இருந்தாலும் அனுப்பு, அல்லது இந்த வேதனையிலிருந்து நீ கிருபை செய்து நீக்குவதாக இருந்தாலும் அதையும் செய்" என்று கூறுவார்கள்
அப்பொழுது ஒரு மேகம் வெளிப்பட்டு வந்து குடை போலக் குவியும். அந்த மேகத்தின் நிழல் மூன்று கிளைகளாக பிரியும். அந்த நிழல் பார்வைக்கு நிழலாகத் தோன்றினாலும் நிழலின் சுபாவம் இருக்காது.

اِنْطَلِقُوْٓا اِلٰى ظِلٍّ ذِىْ ثَلٰثِ شُعَبٍۙ
மூன்று கிளைகளையுடைய புகையின் நிழலின் பக்கம் நீங்கள் செல்லுங்கள்" (என்றும் கூறப்படும்).
(அல்குர்ஆன் : 77:30)
முதல் நிழல் கிளையில் மூஃமின்களும், இரண்டாவது நிழல் கிளையில் முனாபிக்குகளும் , மூன்றாவது நிழல் கிளையில் இறை நிராகரிப்பாளர்களும் போய் தங்குவார்கள்.
மூஃமின்கள் நிழல் ஒளிவாகவும் முனாபிக்குகள் நிழல் வெப்பமானதாகவும் , இறை நிராகரிப்பாளர்கள் நிழல் அச்சம் கலந்த பகையாகவும் இருக்கும் .
ர.ரா

மௌகிபு - விசாரணைக் களம் 3
(மஹஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 33 )



மஹஷர் பெருவெளியில் கூடியிருக்கும் மக்கள் நபி ஆதம் (அலை) அவர்களிடம் போய் " மனித குலத்தின் பிதாவே ! எங்களுக்காக அல்லாஹு தஆலாவிடம் மன்றாட வேண்டும் " என்பார்கள்
நபி ஆதம் (அலை) : "அல்லாஹு தஆலா தின்ன வேண்டாம் என்று தடுத்த மரத்தின் கனியை தின்று, அவனுக்கு மாறு செய்திருக்கிறேன் . அவனிடம் போய் எப்படி உங்களுக்காக நான் மன்றாட முடியும் ? எனவே நூஹ்விடம் போய் செல்லுங்கள் "
மக்கள் நபி நூஹ் (அலை) அவர்களிடம் போய் அல்லாஹு தஆலாவிடம் தங்களுக்காக மன்றாட கேட்பார்கள் .

நூஹ் (அலை) : " நான் உலகத்தின் மக்களை நாசஞ் செய்யும்படி அல்லாஹு தஆலாவிடம் கேட்டேன் .அவன்"தூபான் " வெள்ளத்தால் மக்களையெல்லாம் அழித்தான் . எனவே அவன் சமுகம் செல்ல வெட்கமாக இருக்கிறது நீங்கள் இப்ராஹீமிடம் செல்லுங்கள் "
மக்கள் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் போய் அல்லாஹு தஆலாவிடம் தங்களுக்காக மன்றாட கேட்பார்கள்

நபி இப்ராஹீம் (அலை) : " நான் என் மனைவி சாராவைச் சகோதரி என்றும் , ஊர் ஜனங்கள் திருவிழா கொண்டாட என்னை அழைத்தபோது நோயாளியாக இருக்கிறேன் என்றும் கோவிலுள்ள சிலைகளை உடைத்து விட்டு பெரிய சிலைதான் இவைகளை உடைத்தது என்று மூன்று பொய்களை சொல்லி
இருக்கிறேன் . எனவே அவன் சமுகம் செல்ல எனக்கு வெட்கமாக இருக்கிறது, நீங்கள் மூஸாவிடம் செல்லுங்கள் "

மக்கள் மூஸா (அலை) அவர்களிடம் போய் அல்லாஹு தஆலாவிடம் தங்களுக்காக மன்றாட கேட்பார்கள் .
நபி மூஸா (அலை) : " நான் கிப்த்தியாக்களில் ஒருவன் ஷிப்தியாவிடம் சண்டையிட்ட போது நான் இருவரையும் பிரித்தேன் .இதனால் காயமில்லாமல் தவறுதலாக அடித்தால் அவன் இறந்து விட்டான் .எனவே ஒரு மனிதனைக் கொன்று விட்டேன் எனவே அவன் சமுகம் செல்ல எனக்கு வெட்கமாக இருக்கிறது நீங்கள் ஈஸாவிடம் செல்லுங்கள் "

மக்கள் ஈஸா (அலை) அவர்களிடம் போய் அல்லாஹு தஆலாவிடம் தங்களுக்காக மன்றாட கேட்பார்கள் .
நபி ஈஸா (அலை) : " நஸாராக்கள் என்னை ' இறைவன் ' என்று வணங்கினார்கள் எனவே அவன் சமுகம் செல்ல வெட்கமாக இருக்கிறது நீங்கள் முஹம்மது நபியிடம் செல்லுங்கள் "
மக்கள் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்களை தேடியலைவர்கள் . நபி ஆதம் (அலை) அவர்கள் : " முஹம்மதே ! உங்களுடைய உம்மத்து உங்களை தேடி அலைகிறார்கள் "

நபிகள் நாயகம் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்கள் சப்தமிட்டு " என்னுடைய உம்மத்தே ! நீங்கள் எல்லோரும் எங்கே தேடி அலைந்து கொண்டிருக்கிறீர்கள் ? இதோ உங்களுக்காக அல்லாஹு தஆலாவிடத்தில் நான் கேட்கிறேன் . எல்லோரும் என்னருகே வாருங்கள் "
இந்த சப்தத்தைக் கேட்டதும் ஜனங்கள் அலை அலையாய் நபிகளாருக்கு பின்னாடி அணிவகுப்பார்கள்
" யா ரஸூல்லாஹ் ! எங்களை விசாரணை செய்து தீர்த்து விடும்படி அல்லாஹு தஆலாவிடம் நீங்கள் மன்றாடுங்கள் "
மக்களை அழைத்துக் கொண்டு அர்ஷ்க்கு கீழே அல்லாஹு தஆலாவிற்கு ஸுஜூது செய்வார்கள் .
அப்போது அல்லாஹு தஆலாவின் உத்திரவுப்படி ஒரு மலக்கு வந்து நாயகவர்களின் வலது புஜத்தைப் பிடித்துக் கொண்டு " முஹம்மதா ?" என்று மெள்ளக் கேட்பார்கள் .
" ஆம் - முஹம்மது "
" நீங்கள் உங்கள் தலையை உயர்த்துங்கள் நீங்கள் விரும்பினதைக் கேளுங்கள் கொடுக்கப்படுவதாக இறைவன் ஏற்றுக் கொண்டான் "
" யா ரப்பீ ! எனக்கு நீ வார்த்தைப்பாடு செய்திருக்கிறபடி "ஷபாஅத்து " செய்ய எனக்கு உத்திரவு வழங்கு "
"நீர் ஷபாஅத்து செய்யும் உரிமையை உமக்கு அளித்தோம் " என்பான் இறைவன் .
ர.ரா
**Rahmath Rajakumaran**
இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள்
...... என்கிற இந்த ஆய்வு மிக நீளமானது
" மரணத்திற்குப் பின் ஆன்மாக்களின் நிலை " என்று ஆரம்பித்து " மஹஷர் மைதானம் " என்கிற 33 வது பதிவு வரை வந்துள்ளது.
இவ்வாய்வு இனிமேல்.......
,
கிஸாஸு (குற்றத்தை உறுதிப்படுத்தல் )
ஹிஸாபு ( நன்மை தீமை கணக்கு வழக்கு விசாரணை )
மீஸான் ( நன்மை ,தீமை நிறுக்கும் தராசு )
ஸ்திராத்துல் முஸ்தகீம் என்கிற கடக்கிற பாலம்
ஹௌளு - தண்ணீர்த் தடாகம்
சுவர்க்கம்

ஜஹன்னம் - நரகம்
ஷபாஅத் - மன்றாட்டம்
உரூஸ் - திருக்கல்யாணம்
லியாபத்து - விருந்து
லிகா - தரிசனம் .....
இத்தனை பதிவுகள் இன்ஷா அல்லாஹ் இன்னும் இத்தொடரில் பதிக்கப்பட உள்ளது . இப்பதிவுகள் சற்று ஏறக்குறைய 100 பதிவுகள் வரை வரலாம் என எதிர்ப்பார்கிறேன் .
ஆலிம் பெருமக்கள் இப் பதிவுகள் குறித்து தங்களுக்குத் தெரிந்ததையும் இப் பதிவுகளின் பின்னூட்டமாக சொன்னால் நண்பர்களுக்கும் , மற்ற ஆலிம் பெருமக்களுக்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என நினைக்கிறேன் . எனவேதான் இனி எழுதப் போகிற பதிவுகளின் தலைப்புக் குறித்து முன்னமே சொன்னால் நீங்களும் தக்க ஏற்பாடுகளோடு இருப்பீர்கள் என நினைக்கிறேன் .
ர.ரா

மௌகிபு - விசாரணைக் களம் 34
(மஹ்ஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 34 )




நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஷபாஅத் என்னும் மன்றாட்டம் செய்யும் போது, வானம் காற்றாடி போல சுழல ஆரம்பிக்கும் . ஏழு வானத்தின் மொத்த கனத்தை விடவும் மேலான கனத்தில் " கமாம்" என்கிற மேகம் ஏழு வானத்திற்கும் மேலே உருவாகி, திடீரென ஏழாவது வானத்தில் விழும்.

உடனே அந்த 7- வது வானம் வெடித்து பிளத்து தெறித்து , அது ஆறாவது வானத்தில் விழும். அந்த 6-வது வானமும் பிளந்து தெறித்து அது ஐந்தாவது வானத்தில் விழும் .
இவ்விதமாக ஒவ்வொரு வானமும் கீழேயுள்ள அடுத்தடுத்துள்ள வானங்களில் விழும் . இப்படியாக எல்லா வானங்களும் வெடித்து சிதறி முதல் வானத்தில் விழும் . இதனால் முதல் வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் , சூரியன்கள் , கோள்களெல்லாம் உதிர்ந்து விடும்.
இதனால் பூமி இருள் மயமாகி விடும் . வானம் வெடித்து சிதறியதை கண்ணாலும் , அதனால் உண்டான சப்தத்தையும் படைப்புகள் கேட்டு சுரணையற்று கலங்கி நிற்பார்கள் .

اَلَمْ تَرَوْا كَيْفَ خَلَقَ اللّٰهُ سَبْعَ سَمٰوٰتٍ طِبَاقًا ۙ
"ஏழு வானங்களையும், அடுக்கடுக்காக எவ்வாறு அல்லாஹ் படைத்திருக்கின்றான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? "
(அல்குர்ஆன் : 71:15)
மேற்கண்ட வசனத்தில் சொல்லப்பட்டுள்ள ஏழு வானங்களின் அடுக்கடுக்கை அப்போதுதான் படைப்புகள் காணுமோ என்னமோ ?
ஏழு வானத்து மலக்குகளும் ஒவ்வொரு கூட்டமாகப் பூமியில் இறங்குவார்கள். அப்போதும் கூட அவர்கள் இறங்கும் போது தஸ்பீஹு தஹ்லீலு செய்து கொண்டே இறங்கி , படைப்புகளையெல்லாம் வளைந்து சூழ்ந்து கொள்வார்கள் .

பிறகு அதாபுடைய மலக்குகள் பெருங் கூட்டமாக இறங்குவார்கள். அவர்கள் உருவத்தில் மஹா பெரிதானவர்களும் , மிக்க வலிமையுடையவர்களும் , மிகக் குரூர உருவத்திலும் இருப்பார்கள். இம் மலக்குகளின் இரண்டு புருவத்தின் இடைவெளி ஐநூறு வருஷத் தூரமுள்ளதாக இருக்கும். குற்றவாளிகளுடைய தலையையும் , காலையையும் வளைத்து சேர்த்துக் கட்டி விசாரணைக்கு இழுத்துக் கொண்டு போகும்படி உத்தரவு அவர்களுக்கு வரும்.

يُعْرَفُ الْمُجْرِمُوْنَ بِسِيْمٰهُمْ فَيُؤْخَذُ بِالنَّوَاصِىْ وَ الْاَقْدَامِ

குற்றவாளிகள், அவர்கள் முகக் குறியைக் கொண்டே அறிந்து கொள்ளப்படுவார்கள். அவர்களுடைய உச்சி மயிரையும், கால்களையும் பிடித்திழுத்து (நரகத்தில்) எறியப்படும். (அல்குர்ஆன் : 55:41)

அவர்களைக் கண்ட நபிமார்கள் முதலானவர்களும் அஞ்சிப் பயந்து குப்புற விழுவார்கள். படைப்புகள் அந்த மலக்குகள் கூட்டம் இறங்கும் ஆரவாரத்தின் அமளி துமளியால் அஞ்சிக் கலங்கி நம்மைத்தான் பிடிப்பார்கள், நம்மைத்தான் பிடிப்பார்கள் என்று ஒவ்வொருவரும் எண்ணி குப்புற விழுந்து கிடப்பார்கள்.
ஒவ்வொரு வானத்தின் படைப்புகளை அந்தந்த வானத்து மலக்குகள் சூழ்ந்து கொள்ள , இறுதியில் படைப்புகளையெல்லாம் நடுவில் வைத்து மலக்குமார்கள் மதில் சுவர் போல் சூழ்ந்து நிற்பார்கள் .
முன்னர் சொன்ன அந்த கமாம் என்னும் மேகக் குடையின் கீழ் மலக்குகளுக்கு போடப்பட்டிருக்கும் குர்ஷியில் உட்கார்ந்து கொண்டு ,
" மனிதர்களே ! ஜின்களே ! இனி உங்கள் பட்டோலைகள் படிக்கப்படும் .அதில் நன்மையைக் கண்டவன் அல்லாஹுதஆலாவைப் புகழ வேண்டும்
தீமையைக் கண்டவன் தன்னைத்தானே நிந்திக் கொள்ள வேண்டும் " எல்லோரும் கேட்கச் சொல்வார்கள் .
ர.ரா

மௌகிபு - விசாரணைக் களம் 5
(மஹஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 35 )



நரகத்தைக் கண் முன் இழுத்துக் கொண்டு வரக் கட்டளை பிறக்கும்.
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நரகத்து அதிபதியாகிய மாலிக் (அலை) அவர்களிடம் போய் , "அல்லாஹு தஆலா நரகத்தைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டதாக " சொல்லப்படும் .
இதைக் கேட்ட மாலிக் (அலை) அவர்கள்
" இது எந்த நாள் ? " என்று கேட்பார்கள்.
" இது கியாமத் நாள் " என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கூறுவார்கள்.
" படைப்புகளையெல்லாம் அல்லாஹு தஆலா ஹாஜராக்கி விட்டானா ? " முஹம்மது நபியும் , அவர்கள் உம்மத்தும் எங்கே ? அந்த உம்மத்து நரகத்துக் கொடுமையை எப்படி சகிப்பார்கள் ? " என்று மாலிக் (அலை) கேட்பார்கள் .
முஹம்மது நபியும் , அவர்கள் உம்மத்தும் அல்லாஹு தஆலாவின் சமுகத்தில் ஹாஜராகி இருக்கிறார்கள். இந்த உம்மத் நரகத்துக் கொடுமையைச் சகிக்கும் விதம் இப்படியென்று நான் அறியேன். அது அல்லாஹு தஆலா நாடியபடி " என்று பதில் சொல்வார்கள் .

பின்பு , மாலிக் (அலை) அவர்கள் நரகத்தைப் பார்த்து , " நரகமே எழுந்திரு" என்று உரத்த சப்தத்தில் சொல்வார்கள் உடனே அது எழுந்திருக்கும் .

நரகம் ஆயிரம் வருஷத் தூரப் பிரயாண இடையுள்ள ஒட்டகக் கால் போன்ற நான்கு கால்களும் , முப்பதினாயிரம் தலைகளும், தலை ஒன்றிற்கு ஆயிரம் வாய்களும் , வாய் ஒன்றிற்கு உஹது மலையினும் பெரிதாக முப்பதினாயிரம் கடைவாய்ப் பற்களும் இருக்கும்.
உதடுகள் ஒவ்வொன்றும் பூமியின் பரப்பை போலிருக்கும் , மேல் உதடுகளில் உதடு ஒன்றிற்கு முப்பதினாயிரம் சங்கிலிகள் போடப்பட்டிருக்கும் .அதைப் போல் கீழ் உதடுகளிலும் உதடு ஒன்றிற்கு முப்பதினாயிரம் சங்கிலிகள் போடப்பட்டிருக்கும் .சங்கிலி ஒவ்வொன்றிற்கும் ஆயிரம் கரனைகள் இருக்கும் .

நரகத்திற்கு எழுபது மூவாயிரம் வடங்கள் பூட்டப்பட்டிருக்கும் . மாலிக்கு (அலை) அவர்கள் நரகத்தை அல்லாஹு தஆலாவின் சமுகத்தில் இழுத்துக் கொண்டு போகும்படி ஜபானியாக்களுக்கு உத்தரவு செய்வார்கள் .மனிதர்களிலும், ஜின்களிலும் நாற்பதினாயிரம் பங்குக்கு அதிகமான வலிமையுள்ள ஜபானியாக்கள் ஒவ்வொரு அணியாக ஏழாயிரம் அணிகள் நின்று நரகத்தை இழுப்பார்கள் .

அவ்வளவு பேர் இழுத்தும் என்ன பிரயோஜனம் அது கொஞ்சமும் நகராமல் , ஒரு வருஷத் தூரப் பிரயாணம் கீழே பதிந்து போகும். அதனக் கண்டு மாலிக் (அலை) அவர்கள்
" நரகமே ! நீ அல்லாஹு தஆலா கட்டளைக்கு மாறு செய்கிறாயோ ? என்று கேட்பார்கள் .
" நான் அப்படி செய்யவில்லை "
" அப்படியானால் நட "
மலக்குகள் இழுக்க இழக்க அது நடக்கும்.
நரகம் நடக்கையில் புலி சீறிப் பாய்வது போல உறுமும். அப்பொழுது மஞ்சள் நிறமுள்ள அக்கினிக் கங்குகள் அதிலிருந்து தெறிக்கும் . அது படைப்புகளை சூழவளைந்து கொள்ளும்படி பெரியபுகையும் இருளும் அதிலிருந்து புறப்படும் . நரகம் வரும் போது படைப்புகளை ஒரே விழுங்கில் விழுங்கி விடத் தாவிப் பாயும் . ஜபானியர்கள் அதன் பாய்ச்சலை
தடுத்து இழுத்துக் கொள்வார்கள்.

நரகம் நெருப்பு கொதிக்கிற அமளி துமளியான சத்தத்தை எல்லா படைப்புகளுமே கேட்கும் .
மனிதர்கள் அதனைப் பார்த்து அஞ்சி கலங்கி கண்ணீர் விற்று கதறுவார்கள் .
பாவிகள் " கட்டாயம் நாம் மோசம் போய் விட்டோம் .நமக்கு அபாயம் வந்து விட்டது என்று தீர்மானித்து அழுவார்கள் .

وَّعَرَضْنَا جَهَنَّمَ يَوْمَٮِٕذٍ لِّلْكٰفِرِيْنَ عَرْضَا ۙ
நிராகரிப்பவர்களுக்கு அந்நாளில் நரகத்தையே நாம் நிச்சயமாக அவர்கள் முன்பாக்குவோம்.
(அல்குர்ஆன் : 18:100)

நம்பிக்கைக்காரர்கள் " நப்ஸி ! நப்ஸி ! என்று சப்தமிடுவார்கள் .மறுபடியும் நரகம் உறுமும் .
பாவிகள் முழந்தாட்டபடி அநேகர்
முகங்கள் கவிழ்ந்தும் விழுவார்கள் அநியாயக்காரர்கள் , " நாங்கள் கெட்டோழிந்திருக்கும் காலத்தில் இது பற்றி எங்களுக்குத் தெரிந்திருக்கக் கூடாதா ? "என்று அலறுவார்கள் .
நரகத்தின் அருகில் நின்று ஜபானியாக்களில் மிகப் பெரிய பயங்கரமான ஜபானியா ஒருவர் தம் கையில் மிகப் பெரிய இரும்புத் தடியொன்றை பிடித்துக் கொண்டு ,
." உலகில் பேராசையும் , கொடும்பாவத்தையும் செய்து காலங் கழித்த , இன்னான் மகன் இன்னான் எங்கே ?" என்று பெரும் சப்தமிட்டு கூப்பிடுவார் .இப்படி ஒவ்வொரு பாவியின் பெயர் சொல்லி சப்தமிடுவார் .மற்ற ஜபானியர்கள் ஒவ்வொரு பாவியையும் பிடித்து இழுத்து வருவார்கள் .
நரகத்தை இழுத்துக் கொண்டு ஜபானியர்கள் அல்லாஹு தஆலாவின் சமுகத்தில் வந்து நிறுத்துவார்கள்.
நரகம் அல்லாஹு தஆலாவிற்கு ஸுஜூது செய்யும். அப்போது அல்லாஹு தஆலா நரகத்திடம் ,
" நரகமே நீ பேசுவாயாக ! உடனே அது வாய் திறந்து , " வணக்கத்திற்குரிய தக்க நாயன் அல்லாஹு தஆலா வைத் தவிர வேறில்லை . நாயனே ! உன்னுடைய இரணத்தைத் தின்று நீ அல்லாத வஸ்துக்களை வணங்கியவர்களையும் , இரவிலும் பகலிலும் உனக்கு மாறு செய்தவர்களையும் , உன் மீது சத்தியமாக வேதனை செய்வேன் .
" அல்லாஹு தஆலா , " இன்றைய தினம் உன் வயிற்றை மனிதர்களைக் கொண்டும் , ஜின்களைக் கொண்டும் நான் நிறப்புவேன் .

إِلَّا مَنْ رَّحِمَ رَبُّكَ وَلِذٰلِكَ خَلَقَهُمْ وَتَمَّتْ كَلِمَةُ رَبِّكَ لَاَمْلَـَٔنَّ جَهَنَّمَ مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ اَجْمَعِيْنَ
அவர்களில் உங்கள் இறைவன் அருள் புரிந்தவர்களைத் தவிர. இதற்காகவே (மாறுபடும்) அவர்களை படைத்தும் இருக்கிறான். (பாவம் செய்த) "ஜின்களைக் கொண்டும் மனிதர்களைக் கொண்டும் நிச்சயமாக நான் நரகத்தை நிரப்புவேன்" என்ற உங்கள் இறைவனின் வாக்கு நிறைவேறியே தீரும்.
(அல்குர்ஆன் : 11:119)

உடனே ஜபானியாக்கள் நரகத்தை அங்கு இருந்து இழுத்துக் கொண்டு போய் அர்ஷ்க்கு இடது புறத்தில் நிறுத்தாட்டுவார்கள் .
ர.ரா
**Rahmath Rajakumaran**
ஜின்கள் 3 ( ஜின் =நெருப்பு = நரகம் )
ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் நரகமும் நெருப்பில் படைக்கப்பட்டிருப்பதால் ஜின்களை நரகத்தின் நெருப்பு தீண்டாதா ? என்ற கேள்வி நண்பர் ஒருவர் கேட்டார்
மனிதனை மண்ணில் படைக்கப்பட்டதால் அவன் இறந்த உடம்பை மண் தீண்டாமலா இருந்தது மண்ணோடு மண்ணாக மக்க வைக்கவில்லை ?
ஒளிவீச்சி, நெருப்பு ,கதிர் வீச்சி, அலைகள் இவையெல்லாம் சூரியனின் வெள்ளோளியில் இருக்கிறது இது பற்றிய விபரம் மலக்குமார்கள் தொடரில் சொல்லி இருக்கிறேன் இப்போதும் சொல்கிறேன்
சூரியனின் ஒளியில் நாம் பார்க்கக் கூடிய வைலட் v ,இன்டிகோ I , புளு B , கிரீன் G , எல்லோ Y , ஆரஞ்சு O , ரெட் R இவைகள் நாம் பார்க்கும் 0.00004 cm இருந்து 0.00007 cm வரை நம்மால் பார்க்க முடியும்
வைலட் நிறத்திற்கு மேலே அல்ட்ரா வைவட் , எக்ஸ்ரே கதிர், காமா கதிர், காஸ்மிக் கதிர் , இன்னும் அறியப்படாத கதிர்களும் உள்ளன
அதைப்போலவே ரெட் நிறத்திற்கு கீழே இன்ஃபரா ரெட் , மின் பொறி , ராடார் கதிர்கள், டெலிவிஷன் , குட்டையான ரேடியோ அலை , ரேடியோ அலை , நீளமான ரேடியோ அலை , இன்னும் அறியப்படாத கதிர் . . . . . . இவைகளில் ஏதோ நெருப்புக்கதிரில் ஜின்கள் படைக்கப்பட்டிருக்கலாம்
" ஜின்களையும் மனிதர்களையும் கொண்டு நிச்சயமாக நரகத்தை நிரப்புவேன்
திருக்குர்ஆன் 11 : 119
"ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம் "
திருக்குர்ஆன் 15 : 27
நரகின் எரிபொருளாக குர்ஆனில் இன்னொரு இடத்தில்
" மனிதர்களும் கற்களும் இரையாகின்ற நரக நெருப்புக்குப் பயந்து கொள்ளுங்கள் "
திருக்குர்ஆன் 2 : 24
இந்த வசனத்தில் குறிப்பிடப்படும் கற்கள் கந்தகக் கற்கள் என்று அக்கால விஞ்ஞானத்தின்படி சொல்லப்பட்டிருந்தாலும் கந்தக கற்கள் சொற்ப காலமே வெப்பத்தை தரக்கூடியது ஆனால் யூரேனிய கற்கள் யுக யுகங்களாக நெருப்பைக் கொட்டக்கூடியது அட, அதன் சாம்பலிருந்து வெளிப்படும் கதிர் வீச்சு லட்சக்கணக்கான வருடங்களுக்கு இருந்து கொண்டே இருக்கும் நரக வாசிகள் என்றென்றும் யுக யுகங்களாக அதில் இருப்பதாக இறைவன் குறிப்பிடுகிறான்
சில நரகங்களின் நெருப்பு விநோத தன்மையைக் கொண்டது
" நபியே ! ஹுதமா என்றால் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? அதுதான் அல்லாஹ் உடைய கட்டளையால் எரிக்கப்பட்ட நெருப்பு
அது உடல்களில் பட்டவுடன் உள்ளங்களில் பாய்ந்து விடும் நெருப்பு
திருக்குர்ஆன் 104 : 5_9
அநேகமாக இந்த நரகத்தின் நெருப்பு அணுகதிர் வீச்சியின் நெருப்பாக இருக்கலாம்
யுரேனியத்தின் கதிர் வீச்சு இழக்க 704 மில்லியன் வருடங்கள் ஆகும்
எனவே ஜின்கள் நெருப்பில் படைக்கப்பட்டிருந்தாலும் யுரேனியம் போன்ற அணுசக்தி வெளிப்படுத்தும் கதிர் வீச்சு கொண்ட நெருப்பு நரகத்தில் இருக்கலாம் எனவே ஜின்களுக்கும கொடிய வேதனை தரக்கூடடியே நெருப்பு அதைப் படைக்கப்பட்ட நெருப்பைக் காட்டிலும் கொடிய நெருப்பு நரகத்தில் உண்டு ர.ரா

மௌகிபு - விசாரணைக் களம் 6
(மஹஷர் மைதானம் )
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 36 )



அர்ஷ் யைப் பற்றியும் சொல்ல வேண்டும் .அது அவனது அரியணை .
படைக்கப்பட்ட எல்லா உலகங்களையும் , அவ்வுலகங்களிலுள்ள எல்லாவற்றையும் தூக்கி அர்ஷின் நடுவில் வைத்தால் , மிகப் பெரிய்ய மைதானத்தின் நடுவே ஒரு சிறிய மோதிரத்தை வைத்த மாதிரி இருக்கும் .

அத்தனை பெரிய அர்ஷை எட்டு மலக்குமார்கள் மட்டும் சுமந்து நிற்பார்கள் . அந்த மலக்குகள் ஒவ்வொருவருக்கும் நான்கு முகங்கள் இருக்கும். அந்த நான்கு முகங்களில் ஒரு முகம் மனித முகம், மற்றது புலி, காளை ,கழுகு ஆகிய நான்கு முகங்கள் ஒரே ஒரு மலக்குக்கு இருக்கும் . (இந்து புராணங்களில் இம்மாதிரி படைப்புகள் குறித்து வர்ணனைகளை நீங்கள் அறிவீர்கள் )
மேலும் நன் நான்கு சிறகுகளும் இவர்களுக்கு இருக்கும். இதில் இரண்டு இரண்டு சிறகுகள் அவரவர் முகங்களுக்கு மேல் மறைத்துக் கொண்டிருப்பதால் , இந்த எட்டு மலக்குகளும் அல்லாஹ்வின் அர்ஷ்யைப் பார்த்ததே இல்லை. எத்தனை வியப்பான படைப்பினங்கள் இந்த 8 மலக்குமார்கள் !

மஹஷர் மைதானத்திற்கு சுவர்க்கத்தையும் கொண்டு வர கட்டளையிடுவான். சுவர்க்கத்தை அர்ஷின் வலது புறம் நிறுத்தி அதன் வாசல்களைத் திறந்து வைப்பார்கள் .
அதன் பின் 'மீஸான் ' என்கிற நன்மை, தீமைகளை எடை போடும் தராசும் அவனது கட்டளைக்கிணங்க கொண்டு வரப்படும் .
பின்பு 'ஸிராத் ' என்கிற கடந்து போகும் பாலத்தையும் கொண்டு வந்து , அதை நரகத்தின் முதுகின் மேல் வைக்கப்படும் .
ஆக மஹஷர் மைதானத்தில் நரகம் முதல் சுவர்க்கம் வரை எல்லாவற்றையும் கொண்டு வந்து படைப்புகளின் முன் நிறுத்தப்படும் .

இந்நிகழ்வு ஏறக்குறைய சுதந்திர தினத்தன்று ஜனாதிபதி மற்றும் பொதுமக்கள் பார்வைக்கு இந்திய அரசு நாட்டின் கலாச்சாரம் மற்றும் பண்பாட்டை வெளிப்படுத்தும் ரத ஊர்வலங்களும் , தன் போர் தளவாட டேங்கள் போன்ற படைப்புகளின் அணிவகுப்பையும் , வானத்தில் ஜெட் போர் விமானங்கள் சீறிப் பறந்து சாகஸங்கள் செய்யும் நிகழ்வுகளையும் உங்கள் கண் முன் வந்து போகிறதா ? இதன் மூலம் இந்திய திருநாட்டின் வல்லமையை பக்கத்து பக்கத்து நாடுகள் புரிந்து கொள்ள வேண்டும் என்கிற சூசகமான ஓர் அச்சுறுத்தல்தானே .
ஒரு நாடு தன் வல்லமையை இப்படியெல்லாம் பறைசாற்றும் போது , சர்வத்தையும் படைத்த அந்த ரப்பு தன் வல்லமையை எவ்வாறெல்லாம் காட்டுவான் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும் .
ர.ரா

கிஸாஸு - குற்றத்திற்குரிய பரிகாரம் .
(இஸ்லாத்தின் அடிப்படைக்
கோட்பாடுகள் 37)



மனிதர்கள் முதல் ஜின்கள் , ஷைத்தான்கள் , மிருகங்கள் மற்றும் சகல உயிரினங்கள் வரை ஒருவருக்கொருவர் அல்லது ஒன்றுக்கொன்று பிரதிக்கு செய்த குற்றத்திற்கு உத்தரவாதம் பண்ணுதலுக்கு "கிஸாஸு " எனப்படும்.

கொம்பு இல்லாத மாட்டை கொம்புள்ள மாடு முட்டியிருந்தால் , குற்றம் இழைக்கப்பட்ட கொம்பு இல்லாத மாட்டிற்கு அந்த உடனேயே கொம்பைக் கொடுத்து, கொம்புள்ள மாட்டை முட்டச் செய்து தீர்ப்பு செய்வான்.
இதுபோல சகல ஜீவராசிகளின் குற்றத்திற்கு நேர் செய்யப்பட்டு , பின் அத்தனை ஜீவராசிகளையும் பார்த்து , "மண்ணோடு மண்ணாகுக " என்று அல்லாஹு தஆலா கட்டளையிடுவான்.
உடனே அவை அனைத்தும் மடிந்து மண்ணோடு மண்ணாகி விடும். இனி அவைகளுக்கு மீட்சியே இல்லை .
இதைப் பார்த்துக் கொண்டு நிற்கும் இறை மறுப்பாளர்கள் , " நாங்களும் இப்படி மண்ணோடு மண்ணாக மடிந்திடக் கூடாதா ? அப்படியாய் எங்களை விட்டு விட்டால் எந்த வேதனையும் இருக்காதே ! " என்று சொல்வார்கள் .

அடுத்து " சொர்க்கத்திற்குப் போகிறவன் ஒரே ஒரு பிழை செய்திருந்தாலும், அதற்குப் பகரம் செய்யாமல் சொர்க்கத்திற்கு போக முடியாது .

அதே மாதிரி சொர்க்கத்திற்கு போக வேண்டியவனுக்கு பாவி ஒருவன் ஒரே ஒரு பிழை செய்ந்திருந்தாலும் அதற்குப் பகரம் செய்யாமல் அவன் நரகத்திற்குப் போக முடியாது . அந்த பிழை ஒரே ஒரு அடி அடித்திருந்தால் கூட , அதற்குரிய பகரம் செய்தே ஆக வேண்டும் " - என்று கட்டளை பிறக்கும் .

இக்கட்டளைப் பிரகாரம் , "ஒருவருக்கொருவர் அநியாயம் செய்து கொண்ட இரு வழக்காளிகள் எங்கே ? " என்று அழைக்கப்படும்.
உடனே இரண்டு வழக்காளிகள் கொண்டு வரப்படுவார்கள் . இதில் ஒருவன் குற்றம் செய்தவன் மற்றொருவன் அவனால் குற்றம் இழைக்கப்பட்டவன் . குற்றத்திற்கு தக்கபடி குற்றம் செய்தவனின் நன்மையைப் பிடுங்கி , குற்றம் இழைக்கப்பட்டவனுக்கு வழங்கப்படும்.
குற்றம் செய்தவன் யாதொரு நன்மையும் செய்யவில்லையென்றால் , குற்றம் இழைக்கப்பட்டவனின் பாவத்தை எடுத்து குற்றம் செய்தவன் மேல் சுமத்தப்படும் .
அடுத்து , குற்றம் செய்தவன் யாதொரு நன்மையும் செய்யாமலும் , குற்றம் இழைக்கப்பட்டவன் யாதொரு பாவமும் செய்யாதவனாக இருந்தால் , குற்றம் இழைக்கப்பட்டவனை அல்லாஹு தஆலா மேலே அண்ணாந்து பார்க்கச் சொல்வான் . அவன்

பார்த்த போது , மிக்க அழகான , அலங்காரமான ஒரு பூங்காவனமும், அதற்குள் விசித்திரமான ஒரு தங்க மாளிகையும் தோன்றும்.
அப்பூங்காவும் , தங்க மாளிகை கண்டு "யா ரப்பே ! இது யாருடையது " என்று கேட்பான் .
அதற்கு அல்லாஹுு தஆலா "இவைகளுக்கு கிரயம் கொடுப்பவன் எவனோ அவனுக்குரியது " .
"யா ரப்பே இவற்றிற்கு கிரயம் கொடுப்பவன் யார் ? என்று கேட்பான் .
" கிரயம் கொடுப்பவன் நீ தான் " என்பவன் அல்லாஹுு தஆலா .
அதற்கு அவன் , " நான் எதைக் கொண்டு இவற்றிற்கு கிரயம் கொடுப்பேன் ? "
அல்லாஹுு தஆலா , "குற்றம் செய்தவனைச் சுட்டிக்காட்டி "அதோ அங்கு நிற்கிறானே , அவன் உனக்குச் செய்த குற்றத்தை நீ பொறுத்துக் கொள்வதுதான் அவற்றிற்குரிய விலை "
குற்றம் செய்தவனை குற்றம் இழைக்கப்பட்டவன் உடனேயே பொறுத்துக் கொள்வான் .
உடனே இரண்டு பேரையும் சொர்க்கம் செல்லும்படி அல்லாஹுு தஆலா தீர்ப்பு சொல்வான்.
அல்லாஹுு தஆலா தன் அடியார்களுக்குள் ஒருவருக்கொருவர் செய்து கொண்ட குற்றங்களுக்கும் , கொடுக்க வேண்டிய கடன்களுக்கும், வேறு வகைப்பட்ட உத்திரவாதங்களுக்கும் விசாரித்து , இவ்விதமே தீர்ப்புச் செய்வான்.
ர.ரா

விசாரணை இன்றி சொர்க்கம்
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 38 )



மஹஷர் மைதானத்தில் அல்லாஹுு தஆலாவின் புறத்திலிருந்து " வரிசை பெற்றவர்கள் எங்கே ? " என்று ஒரு சப்தம் உண்டாகும் .
அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்.
" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்கள் சொர்க்கத்திற்குள் விரைந்து போவார்கள் . அவர்களை மலக்குகள் சந்தித்து , " முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "

" நாங்கள் வரிசை பெற்றவர்கள் என்று எங்களுக்குப் பெயர் . அதாவது மனிதர்கள் எங்களுக்கு அநியாயம் செய்தால் பொறுத்துக் கொள்வோம். குற்றம் இழைத்தால் மன்னிப்போம் "
"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
அதன் பின் " ஸபுறுடையவர்கள் எங்கே ? "
அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்.
" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்களையும் மலக்குகள் சந்தித்து , "முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "

" நாங்கள் ஸபுறுடையவர்கள்.அல்லாஹுு தஆலாவின் ஏவலை செய்வதிலும் , விலக்கலை விடுவதிலும் நேரிடும் வருத்தத்தைப் பொறுத்தோம் .
"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
அதன் பிறகு "அல்லாஹுு தஆலாவுக்கு உவப்பு வைத்தவர்கள் எங்கே ? "

அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்
" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்கள் சொர்க்கத்திற்குள் விரைந்து போவார்கள் . அவர்களை மலக்குகள் சந்தித்து , " முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "
"அல்லாஹு தஆலாவுக்கு உவப்பு வைத்தவர்கள் நாங்கள் . உவப்பு என்னவென்று மலக்குகள் கேட்பார்கள்.

" நாங்கள் அல்லாஹுக்காக ஒருவரை ஒருவர் உவந்து பழகிக் கொள்வோம் "
"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
அதன் பிறகு " இரவெல்லாம் விழித்திருந்து வணங்கியவர்கள் எங்கே? "
அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்.
" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்கள் சொர்க்கத்திற்குள் விரைந்து போவார்கள் . அவர்களை மலக்குகள் சந்தித்து , " முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "
"மனிதர்கள் படுத்து உறங்கும்பொழுதெல்லாம் நாங்கள் விழித்திருந்து வணங்குனோமே அதனால் "
"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
அதன் பிறகு " பீஸபீல்காரர்கள் எங்கே ?"
அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்.
" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்கள் சொர்க்கத்திற்குள் விரைந்து போவார்கள் . அவர்களை மலக்குகள் சந்தித்து , " முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "

" நாங்கள் அல்லாஹு தஆலாவின் பாதையில் யுத்தம் புரிந்தவர்கள் "
"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
அதன் பிறகு " பலாயை அனுபவித்தவர்கள் எங்கே ? "
அப்போது ஒரு கூட்டத்தார் வெளிப்படுவார்கள்.

" நீங்கள் என் கிருபையைக் கொண்டு யாதொரு கேள்வி கணக்கில்லாமல் சொர்க்கம் புகுதுங்கள் "
அவர்கள் சொர்க்கத்திற்குள் விரைந்து போவார்கள் . அவர்களை மலக்குகள் சந்தித்து , " முந்திக் கொண்டு சொர்க்கத்துக்குள் நுழைகிறீர்களே நீங்களெல்லாம் யார் ? "

" நாங்கள் மனிதர்கள் ஸுவதியாய் இருக்கையில் பலாயினுடைய வேதனையைச் சகித்துக் கொண்டிருந்தோம் "

"நீங்கள் சொர்க்கத்திற்குள் தாராளமாக போங்கள் "
இவ்விதமாக அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் முதலான நாற்பத்தொன்பது லட்சம் பேர்கள் யாதொரு கேள்வி கணக்கு இல்லாமல் நபி (ஸல்) அவர்களின் ஷபாஅத்தைக் கொண்டு கூட்டம் கூட்டமாக சொர்க்கம் புகுதுவார்கள் .
ர.ரா

ஹிஸாபு - கணக்கு விசாரணையும், பட்டோலையும் .
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 39 )



மனிதர்கள் , ஜின்கள் அவரவர் செய்த நன்மை , தீமைகளைப் பட்டோலைப்படி பரிசோதனை செய்வதற்கும் அவற்றைப் பற்றிக் கேள்வி கணக்கு கேட்பதற்கும் வேண்டி , ஒவ்வொரு ஆளாகப் பிடித்து தூக்கி கொண்டு வருவதற்கென்று இரண்டு மலக்குகள் முன்னமே நியமிக்கப்பட்டிருப்பார்கள் .
மனிதர்களை விசாரிப்பதற்காக "ஒவ்வொருவரும் அவரவர் காலின் பெருவிரல் நுனியத் தரையில் ஊன்றி நிற்கும் படி அணிவகுத்துவிடுங்கள் " என்று மலக்குகளுக்கு இறைவன் உத்திரவு செய்வான். படைப்புகளும்களும் அவ்வாறே பெருவிரல் நுனியத் தரையில் ஊன்றி நிற்பார்கள் .
(இது ஏன் என்று தெரியவில்லை)

பின் அவனவனுடைய கழுத்தில் மாட்டப்பட்டிருக்கும் பட்டோலைக்கட்டுகள் கழுத்திலிருந்து ஆகாயத்தில் பறந்து போய் . ....
" இன்னான் மகன் இன்னானே ! உன் பட்டோலையை வலது கையில் வாங்கிக் கொள் " என்றும் , இன்னான் மகன் இன்னானே ! உன் பட்டோலையை இடது கையில் வாங்கிக் கொள் " என்றும் கட்டளை பிறக்கும் .
வலது கையில் பெறுபவர்கள் நல்லவர்கள் ஸாலிஹ்களும் , இடது கையில் பெறுகிறவர்கள் கெட்டவர்களும் , பாவிகளுமாய் இருப்பார்கள்.
வலது கையில் பட்டோலை பெறுகிறவர்களில் முதன்மையானவர் உமர் இப்னு கத்தாபு (ரலி ) அவர்கள். அவருக்கு சூரியனது ஒளியைப் போல் சுடர் இருக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
" அபூபக்கர் எங்கே ? "

"நீண்ட தூரம் மலக்குகள் அவரை சுவர்க்கத்தின்பால் அழைத்துச் சென்று விட்டனர் என்பதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்
இடது கையில் பட்டோலை பெறுகிறவர்களில் முதன்மையானவர் அஸுவதிபுனு அப்துல்அஸ்து (இவன் யார் ? தெரியவில்லை )
" உன் பட்டோலையை நீ படித்துப் பார். இன்றைய தினம் உன்னைக் கேள்வி கேட்டுக் கொள்ள நீயே போதுமானவன்"
எழுதப் படிக்கத் தெரியாதவர்களும் படிப்பார்கள் . வலது கையில் வாங்கிய பட்டோயில் முன்புறம் நன்மையும் , பின்புறம் தீமையும் எழுதப்பட்டிருக்கும் .
அவரவர்கள் முதலில் பின்புறத்தைப் படித்துப் பார்ப்பார்கள். அப்போது அவர்களின் முகம் பயத்தால் மஞ்சளாய் நிற மாறிவிடும் . அதே பின் பக்கத்தின் கடைசியில் " இவையெல்லாம் நீ செய்த பாவங்கள் ; இருந்தாலும் அவற்றையெல்லாம் நான் மன்னித்து விட்டேன் " என்று எழுதியிருக்கும் இந்த வரியைப் படித்தவுடன் பயம் நீங்கி சந்தோஷப்படுவார்கள்.

அந்த பட்டோலையைப் புரட்டி முன்பக்கத்தைப் படித்துப் பார்ப்பார்கள். அதைப் படிக்கப் படிக்க சந்தோஷம் அதன் கடைசியில் " இவையெல்லாம் நீ செய்த நன்மைகள் , அவற்றை நான் அதிகப்படுத்திவிட்டேன் "
இடது கையில் பெற்ற ஒவ்வொரு பட்டோலையும் மிக கருப்பாக இருக்கும் அதன் முழுமையும் தீமையாகவே எழுதப்பட்டிருக்கும் . அதைப் படித்து பார்க்கும் போதே முகம் கருத்துக் கண்கள் நீல நிறமாய் அதிக பயத்தில் முழ்குவார்கள் . அதன் கடைசியில் "இவையெல்லாம் நீ செய்த பாவங்கள். இவைகள் உனக்கு நீயே சுமத்திக் கொண்டது " என்று எழுதப்பட்டிருக்கும் .
ர.ரா

பட்டோலை விவகாரங்கள் 01
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 40 )



வலது கையில் பட்டோலை பெற்றவர்கள் தனது பட்டோலையை வாசித்து முடித்தவுடன் , அவரை அறுபது முழம் உயரமாக்கி, அவருடைய முகத்தைப் பூரண சந்திரனைப் போல பிரகாசிக்கச் செய்து , பட்டாடை உடுத்தி,தங்கத்தாலும், வெள்ளியினாலும் , கடகங்கள் பூட்டி , அதில் முத்துக்களைப் பதித்து கரங்களில் அணிவித்து , தலையில் தங்க கீரிடமும் அணிவிக்கப்படும்.

அவர் தன்னையொத்த மனிதர்களிடம் , "உங்களுக்கு நன்மாராயம் உண்டாவதாக ! உங்களில் ஒவ்வொருவரும் எனக்குக் கிடைத்தது போலவே கிடைக்கப்பெறுவீர்கள்" என்று சொல்வார் .
இடது கையில் பட்டோலை பெற்றவன் தனது பட்டோலையை வாசித்து முடித்தவுடன் அறுபது முழம் உயரமாக்கி, அவனுடைய முகத்தைப் கருப்பாக்கி கீழ் சட்டை போட்டுவித்து , அக்கினியால் கீரிடம் செய்து அவன் தலையில் கவிழ்த்தப்படும்.

அவன் தன்னையொத்த மனிதர்களிடம் வரும் போது , அவர்கள் இவனைக் கண்டு அஞ்சி, "இவனை இங்கே வர விடாதீர்கள் " என்று அலறுவார்கள் .
அவர்களைப் பார்த்து " நீங்கள் என்னையா விரட்டுகின்றீர்கள் ? அல்லாஹ் உங்களையும் விரட்டுவான் "
பட்டோலைப் பெற்றவர்களில் சிலருடைய பட்டோலை முழுவதும் அங்கீகரிக்கப்படாமல் காணப்படும். சிலருடைய பட்டோலையில் சில விஷயங்கள் அங்கீகரிக்கப்பட்டு பல அங்கீகரிக்கப்படாமல் தள்ளப்படும்.
சிலருடைய பட்டோலை முழுவதுமே அங்கீகரிக்கப்படும் .சிலருடைய பட்டோலையில் உள்ள பாவங்கள் நீக்கப்பட்டு மன்னிக்கப்படும் .
சிலருடைய பட்டோலையில் நன்மைகள் மேலும் அதிகமாக்கப்படும் .சிலருடைய பட்டோலையில் உள்ள பாவங்கள் மேலும் அதிகமாக்கப்படும். சிலருடைய பட்டோலையில் உள்ள நன்மைகள் கூட தள்ளுபடி செய்யப்படும்.

ذٰلِكَ بِاَنَّهُمُ اتَّبَعُوْا مَاۤ اَسْخَطَ اللّٰهَ وَكَرِهُوْا رِضْوَانَهٗ فَاَحْبَطَ اَعْمَالَهُمْ
காரணமாவது: அல்லாஹ்வுக்குக் கோபமூட்டக் கூடியவை களையே இவர்கள் பின்பற்றி, அவனுக்குத் திருப்தித் தரக்கூடிய வைகளை வெறுத்து வந்தனர். ஆதலால், இவர்களுடைய நன்மைகள் அனைத்தையும் அல்லாஹ் அழித்துவிட்டான்.
(அல்குர்ஆன் : 47:28)

தத்தம் வழக்காளிகளுக்கு நன்மையைக் கொடுத்து தீமையைப் பெற்றுக் கொண்டவர்கள் அவரவர் பட்டோலைப் படித்துப் பார்த்து தாம் செய்த நன்மைகள் எழுதப்படாமல் இருப்பதைக் கண்டு ,
" இறைவா ! நான் செய்த நன்மைகள் இதில் ஏன் எழுதப்படவில்லையே "
" உன்னுடைய நன்மைகள் நீ கொடுக்க வேண்டிய வழக்காளிகளுக்குக் கொடுக்கப்பட்டு விட்டன என்று பதில் வரும் . தாம் செய்யாத தீமை எழுதப்பட்டிருப்பதைக் கண்டு ,
" இறைவா ! நான் செய்யாத தீமைகள் இதில் ஏன் எழுதப்பட்டிருக்கின்றன என்று கேட்பார்கள். அதற்கு ..
" நீ கொடுக்க வேண்டிய வழக்காளிகளின் தீமைகள் அந்தக் கடனுக்கு பதிலாக உன்மீது சுமத்தப்பட்டன " என்று பதில் வரும் .
ர ரா

பட்டோலை விவகாரங்கள் 02
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 41)



அல்லாஹுதஆலா ஒருவன் உண்டென்பதை நம்பாமல் இணை வைத்தும் , மார்க்க வரம்பை கடந்தும் , அக்கிரமங்கள் பல செய்த இறை மறுப்பாளனை மஹா பெரிய நரகத்தில் தள்ளும்படி மலக்குகளுக்கு கட்டளை பிறப்பிக்கும்போது , அந்த இறை மறுப்பாளன் ,
" இறைவா ! என் பட்டோலை சரிவர எழுதப்படவில்லை. நாங்கள் சொல்லாத சொற்களையும் , செய்யாத செயல்களையும், எண்ணாத எண்ணங்களையும் அந்த மலக்குகள் எழுதிவிட்டார்கள் "
" இல்லை இறைவா ! சொன்ன சொற்களையும் , செய்த செயல்களையும், எண்ணி எண்ணங்களையும்தான் எழுதினோம். இவர்கள் உண்மையை ஒப்புக் கொள்ளாத வழிகேடர்கள் " என்று மலக்குகள் சொல்லுவார்கள்
அல்லாஹுதஆலா இம் மலக்குகளை குறித்து குர்ஆனில் அல்லாஹ் ...

كِرَامًا كَاتِبِيْنَۙ
அவர்கள் (மலக்குகளில் உள்ள) கண்ணியமான எழுத்தாளர்கள்.
(அல்குர்ஆன் : 82:11)

அதென்ன கண்ணியமான எழுத்தாளர்கள் .... .?
இவ்வானவர்கள் நன்மையை எழுதினால் வானம் சென்று இறைவனிடத்தில் உடனுக்குடன் சமர்ப்பித்து, 'உன்னுடைய இன்ன அடியான் இன்ன நன்மையைச் செய்தான் ' என்று சாட்சியங் கூறுகின்றனர் .
தீமையைச் செய்தால் , அதனைக் குறித்து மௌனம் சாதிக்கிறார்கள் " "நாயனே , நீ மறைக்கிறவன், அவர்களோ உனது வேதத்தை தினந்தோறும் ஓதி உன்னைப் புகழ்ந்து வணக்க வழிபாடுகளில் ஈடுபடுகின்றனர் . எனவே அவர்களது மறைந்த குறையை வெளிப்படுத்த மாட்டோம்." என்று கூறுவார்கள்

மேலும் நன்மையை எழுதும் விஷயத்தில் அவர்கள் ரொம்பவும் தீவிரமானவர்கள் . தீமையை எழுதும் போது மனதின் மறதியாக தீமையைச் செய்து விட்டால் அதனை அவர்கள் எழுதிக் கொள்ள மாட்டார்கள் தீமையை பதிவும் விஷயத்தில் தவ்பா, இஸ்திஃபார் செய்யக் கூடும் என்ற எண்ணத்தால் சற்று தாமதிப்பவர்கள் .தவ்பா , இஸ்திபார் செய்தால் அதனையும் சேர்த்து எழுதி நன்மையின் தராசு தட்டை கனமாக்குவார்கள் . இதனால்தான் இறைவன் இவர்களை கண்ணியமான எழுத்தாளர்கள் என்ற அடைமொழியோடு குறிப்பிடுகின்றான் .

பிறகு அல்லாஹு தஆலா கேள்வி கணக்கு கேட்க ஆரம்பிப்பான். அப்போது அர்ஷுடைய ஒளி வெளியாய் மஹ்ஷர் மைதானம் முழுவதும் வெளிச்சமாகும் .
உடனே அல்லாஹு தஆலா தன் அடியார்களைக் கேள்வி கேட்கப் போகிறான் என்பதை ஒவ்வொருவரும் அறிந்து கொள்வார்கள் .இன்னும் ஒவ்வொருவரும் நம்மைத்தான் கூப்பிடப் போகிறார்கள் என்றே எண்ணுவான் .
ர.ரா

நபிமார்களிடம் விசாரணை
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 42 )



அல்லாஹு தஆலா மலக்கு இஸ்ராபீல் (அலை) அவர்களை அழைத்து ,
" நான் உம்மிடம் தந்த ரிஸாலத்தை என்ன செய்தீர் ? "
" ஜிப்ரயீலிடம் ஒப்படைத்தேன் "
ஜிப்ரயீலிடம் விசாரிக்க, அதை
ரசூல்மார்களிடம் ஒப்படைத்தேன் .
அல்லாஹு தஆலா நபி நூஹு (அலை) அவர்களிடம் , " நூஹே ! நீர் என் ரிஸாலத்தை உம்முடைய கூட்டத்தாரிடம் சேர்த்தீரா ? "
"ஆம் .சேர்த்தேன் ."
அல்லாஹு தஆலா நூஹு (அலை) கூட்டத்தாரிடம் , " நூஹு உங்களிடம் என் ரிஸாலத்தை சேர்த்தாரா ? "
" எங்கள் இறைவனே ! அப்படி அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும்படியான எந்த ஒரு ரசூலும் எங்களிடம் வரவில்லை "
( கப்பலைக் கட்டி , தூபான் வெள்ளத்தி லிருந்து உங்களை பாதுகாக்கிறேன் என்று சொன்ன நபி நூஹை எளிதாக மறுதலித்து விட்டார்கள் )
" என்ன நூஹே .. என் ரிஸாலத்தை உம்முடைய கூட்டத்தாரிடம் சேர்த்ததாக சொன்னீர் .இவர் இல்லை என்கிறார்களே "
யா அல்லாஹ் ! உன் ரிஸாலத்தை உண்மையாக என் கூட்டத்தாரிடம் சேர்த்து விட்டேன் . அதற்குச் சாட்சிக்காரர் முஹம்மது நபியும், அவர்களது உம்மத்தும் "
உடனே அல்லாஹு தஆலா நபி (ஸல்) அவர்களின் உம்மத்தைப் பார்த்து சாட்சி கேட்பான். அவர்கள் நூஹு (அலை) அவர்கள் தங்கள் கூட்டத்தாரிடம் ரிஸாலத்தை சேர்த்ததாக சாட்சி சொல்வார்கள் .
அப்போது நூஹு (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் உம்மத்தைப் பார்த்து,
" நீங்கள் எங்களைக் கண்டவர்கள் அல்லவே, அப்படியிருக்க , நீங்கள் எங்கள் பேரில் எவ்விதம் சாட்சி சொல்லுகிறீர்கள் ? " என்று கேட்பார்கள்,

அதற்கு நபி (ஸல்) அவர்களின் உம்மத்து "அல்லாஹு தஆலாவின் சமுகத்தை நோக்கி , யா அல்லாஹ் ! நீ எங்களுக்கு ஒரு ரசூலையும் , வேதத்தையும் அனுப்பியிருக்கிறாயே , அந்த வேதத்தில் இவர்களைப் பற்றி சொன்னதை ஈமான் கொண்டு நாங்கள் இவர்கள் பேரில் சாட்சி சொல்லுகிறோம். ஆனால் அவரின் கூட்டத்தார் மறுதலிக்கிறார்கள்" என்று சொல்வார்கள்.

அதற்கு அல்லாஹு தஆலா இவர்களைப் பார்த்து , " நீங்கள் உண்மை சொன்னீர்கள் " என்று ஒப்புக் கொள்வான்.
قُلْ اٰمَنَّا بِاللّٰهِ وَمَاۤ اُنْزِلَ عَلَيْنَا وَمَاۤ اُنْزِلَ عَلٰٓى اِبْرٰهِيْمَ وَ اِسْمٰعِيْلَ وَاِسْحٰقَ وَيَعْقُوْبَ وَالْاَسْبَاطِ وَمَاۤ اُوْتِىَ مُوْسٰى وَ عِيْسٰى وَالنَّبِيُّوْنَ مِنْ رَّبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ اَحَدٍ مِّنْهُمْ وَنَحْنُ لَهٗ مُسْلِمُوْنَ
(நபியே!) நீங்கள் கூறுங்கள்: "அல்லாஹ்வையும், நம்மீது அருளப்பட்டதையும்; இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஃகூப் ஆகியவர்கள் மீதும், அவர்கள் சந்ததிகள் மீது அருளப்பட்டவை களையும்; மூஸா, ஈஸா மற்றும் அனைத்து நபிமார்களுக்கு அவர்கள் இறைவனால் அளிக்கப்பட்டவைகளையும் நாங்கள் நம்பிக்கை கொள்கிறோம். இவர்களில் ஒருவரையும் (நபியல்ல என்று) நாம் பிரித்துவிட மாட்டோம். அல்லாஹ் ஒருவனுக்கே நாங்கள் (முற்றிலும்) கீழ்ப்படிந்து நடப்போம் (என்றும் கூறுங்கள்.)
(அல்குர்ஆன் : 3:84)
ர.ரா

நபிமார்களிடம் விசாரணை 2
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 43 )



அல்லாஹு தஆலா ஈஸா (அலை) அவர்களிடம் விசாரணை செய்வான் .
" ஈஸாவே ! நீர் உம்மையும் , உமது தாய் மரியமையும் " இறைவனாக " வணங்கும்படி உமது கூட்டத்தாரிடம் சொன்னது உண்டா ? "
இந்த பயங்கரமான கேள்வியை கேட்டதும் ஈஸா (அலை) அவர்கள் நிலை தடுமாறி சில வருஷங்கள் வரை பதில் சொல்லாமல் நாவெழாமல் தன்னை மறந்த நிலையில் நின்று , பின்பு ....
" யா அல்லாஹ் ! எனக்குப் பாத்தியம் அல்லாததை நான் அவர்களுக்குச் சொல்லவே இல்லை என்பதை நீ நன்கு அறிவாய் . எனக்கும் , உங்களுக்கும் இறைவனாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள் என்று உன் கட்டளைப் பிரகாரமே சொன்னேன் " என்று நடு நடுங்கிச் சொல்வார்கள்.

وَاِذْ قَالَ اللّٰهُ يٰعِيْسَى ابْنَ مَرْيَمَ ءَاَنْتَ قُلْتَ لِلنَّاسِ اتَّخِذُوْنِىْ وَاُمِّىَ اِلٰهَيْنِ مِنْ دُوْنِ اللّٰهِ قَالَ سُبْحٰنَكَ مَا يَكُوْنُ لِىْۤ اَنْ اَقُوْلَ مَا لَـيْسَ لِىْ بِحَقٍّ اِنْ كُنْتُ قُلْتُهٗ فَقَدْ عَلِمْتَهٗ تَعْلَمُ مَا فِىْ نَفْسِىْ وَلَاۤ اَعْلَمُ مَا فِىْ نَفْسِكَ اِنَّكَ اَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ
அன்றி, அல்லாஹ் (மறுமை நாளில் ஈஸாவை நோக்கி) "மர்யமுடைய மகன் ஈஸாவே! அல்லாஹ்வுடன் என்னையும், என்னுடைய தாயையும் இரு கடவுள்களாக எடுத்துக் கொள்ளுங்கள் என்று மனிதர்களை நோக்கி நீங்கள் கூறினீர்களா?" என்று கேட்பான் என்பதையும் ஞாபமூட்டுங்கள். அதற்கு அவர் கூறுவார்: "நீ மிகப் பரிசுத்தமானவன். எனக்கு ஒரு சிறிதும் தகாததை நான் ஒருபோதும் கூறமாட்டேன். அவ்வாறு நான் கூறியிருந்தால் நிச்சயமாக நீ அதனை அறிந்திருப்பாயே! என் உள்ளத்திலுள்ளதை நீ நன்கறிவாய். உன் உள்ளத்திலுள்ளதை நான் அறியமாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவானவை அனைத்தையும் நன்கறிபவன். (அல்குர்ஆன் : 5:116)
ர.ரா

குறுக்கு விசாரணையும் , அவயங்களின் சாட்சியும்
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 44 )



அல்லாஹு தஆலா வின் விசாரணை மூன்றாக பிரிக்கப்படும்.
1 ) இலகு விசாரணை , இது ஸாலிஹ்களிடம் விசாரிக்கப்படும் . இதற்கு தண்டனை இல்லை.
2 ) தீர்க்க விசாரணை , இது பாவிகளிடம் விசாரிக்கப்படும் . இதற்கு தண்டனை உண்டு ; மன்னிப்பும் உண்டு.
3 ) கடின விசாரணை , இது முனாபிக்களிடம் நடத்தப்படும் . இதற்கு தண்டனை உண்டு ; மன்னிப்பு இல்லை .

அல்லாஹு தஆலா ஒவ்வொருவரையும் , அவரவர்களுக்கு கொடுத்த நிஃமத்துகளைப் பற்றியும் , அவரவர் செய்த அமல்களைப் பற்றியும் , அவரவர்கள் செய்த குற்றங்களைப் பற்றியும் கேள்வி மேல் கேள்வி கேட்டு விசாரிப்பான்.

அப்போது அவர்கள் தாம் செய்த குற்றங்களை ஒப்புக் கொள்ளாமல் பாவிகள் மறுதலிப்பார்கள். அவனிடம் ஆட்சேஷபிப்பார்கள் . மேலும் இக்குற்றங்களை தாங்கள் செய்ததற்கு எந்த வித சாட்சியுமே இல்லை என்று அடித்து சொல்லி வாதாடுவார்கள் .
மேலும் இக் குற்றங்களை பதிவு செய்த மலக்குகள் , தங்களை வேண்டுமென்ற குற்றவாளியாக ஆக்க வேண்டும் என்ற உள்நோக்கத்தில் செய்யப்பட்டதாக கூட குற்றம் சாட்டுவார்கள் .
விசாரணை மும்முரமாக நடைபெற்றுகொண்டிருக்கும் போது , தங்கள் வாதத் திறமையை தாங்களே மெச்சிக் கொண்டும் இருக்கும் போது , பாவிகளிடம் அல்லாஹு தஆலா , "நீங்கள் செய்த குற்றங்களுக்கு சாட்சியாளர்கள் உங்களுக்கு எதிராக சாட்சி சொன்னால் ஏற்றுக் கொள்வீர்களா ?"
' அட, யாருமே பார்க்காத போதும் , யாருமே இல்லாத போதும் , இருட்டில் நாம் செய்த 'அந்த ' குற்றங்களுக்கு யாரை சாட்சியாளர்களாக இறைவன் கொண்டு வர முடியும் ? என்று பாவிகள் சுற்றுமுற்றும் பார்த்து , யார் நமக்கு எதிராக சாட்சி சொல்ல வர முடியும் ? என்று இறுமார்ப்போடு இருக்கும் தருணத்தில் ..

حَتّٰۤى اِذَا مَا جَآءُوْهَا شَهِدَ عَلَيْهِمْ سَمْعُهُمْ وَاَبْصَارُهُمْ وَجُلُوْدُهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
அச்சமயம் (பாவம் செய்த) அவர்களுக்கு விரோதமாக அவர்களுடைய செவிகளும், அவர்களுடைய கண்களும், அவர்களுடைய (உடல்) தோல்களும் அவைகள் செய்தவைகளைப் பற்றி சாட்சி கூறும். (அல்குர்ஆன் : 41:20)

وَقَالُوْا لِجُلُوْدِهِمْ لِمَ شَهِدْتُّمْ عَلَيْنَا قَالُوْۤا اَنْطَقَنَا اللّٰهُ الَّذِىْۤ اَنْطَقَ كُلَّ شَىْءٍ وَّهُوَ خَلَقَكُمْ اَوَّلَ مَرَّةٍ وَّاِلَيْهِ تُرْجَعُوْنَ

அதற்கவர்கள், தங்கள் தோல்களை நோக்கி, "எங்களுக்கு விரோதமாக நீங்கள் ஏன் சாட்சியம் கூறினீர்கள்?" என்று கேட்பார்கள்.
அதற்கு அவைகள், "எல்லா பொருள்களையும் பேசும்படி செய்கின்ற அல்லாஹ்வே எங்களையும் பேசும்படி செய்தான். அவன்தான் உங்களை முதல் முறையாகவும் படைத்தான். (இறந்த) பின்னரும் நீங்கள் அவனிடமே கொண்டு வரப்பட்டிருக் கின்றீர்கள்" என்றும் அவை கூறும். (அல்குர்ஆன் : 41:21)

وَمَا كُنْتُمْ تَسْتَتِرُوْنَ اَنْ يَّشْهَدَ عَلَيْكُمْ سَمْعُكُمْ وَلَاۤ اَبْصَارُكُمْ وَلَا جُلُوْدُكُمْ وَلٰكِنْ ظَنَنْتُمْ اَنَّ اللّٰهَ لَا يَعْلَمُ كَثِيْرًا مِّمَّا تَعْمَلُوْنَ
உங்களுடைய செவிகளும், உங்களுடைய கண்களும், உங்களுடைய தோல்களும் உங்களுக்கு எதிராக சாட்சியம் கூறாமல் இருக்க, நீங்கள் உங்களுடைய பாவங்களை அவைகளுக்கு மறைத்துக் கொள்ள முடியவில்லை. எனினும், நீங்கள் செய்பவைகளில் அதிகமானவற்றை அல்லாஹ் அறியவே மாட்டான் என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருந்தீர்கள்.
(அல்குர்ஆன் : 41:22)
ர.ரா

கேள்வியின் நாயகனே !
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 45 )



விவரம் தெரிந்த வயதிலிருந்தே நம்முடன் சில கேள்விகளும் கூடவே வளர்ந்து வருகின்றன.
ஒவ்வொரு நாளும் பதிலற்ற சில கேள்விகளுடன்தான் நாம் படுக்கைக்கு செல்கிறோம். நாம் உறங்கும் போது கூட கேள்விகள் விழித்திருக்கின்றன !
ஆக இப்படி கேள்விகளோடு பிறந்து , கேள்விகளோடு வளர்ந்து, வாழ்ந்து , மரித்த பின்னும் மண்ணறையிலும் கேள்விகள் கேட்கப்பட்டு , பின் தொடர கேள்விகள் விரட்டிக் கொண்டே வந்து மஹஷர் வரை மனிதர்கள் கேள்விக் கணைகளாலே சுற்றி
வளைக்கப்படுகிறார்கள் .

اَيَحْسَبُ الْاِنْسَانُ اَنْ يُّتْرَكَ سُدًى
(யாதொரு கேள்வியும் தம்மிடம்) கேட்காது விட்டுவிடப்படுவோம் என்று மனிதன் எண்ணிக்கொண்டானா?
(அல்குர்ஆன் : 75:36)
ஒவ்வொருவரையும் கேள்விகள் கேட்டு விசாரிக்கப்படும் போது , அவரவர்களுக்கு வலது புறமும் , இடது புறமும் , முன்புறமும் நரகம் காண்பிக்கப்பட்டுக் கொண்டே இருக்கும். நரகத்தைப் பார்த்தவர்களாய் கையில் பட்டோலையைப் பிடித்தவர்களாய் நிற்பார்கள் .

அல்லாஹு தஆலா ஒவ்வொருவராக விசாரிக்கும் போது , தனித்தனியாக "உனக்கு நான் சரீர சுகத்தைக் கொடுத்து , உன் ஆயுளையும் நீட்டி வைத்தேனே , அந்த ஆயுளை எந்தக் கருமத்தில் நீ போக்கினாய் ?
" உனக்கு பாலியத்தைத் தந்தனே அதை எதைக் கொண்டு பழுதுபடுத்தினாய் ? அந்த பாலியம் எப்படியெல்லாம் வீண் விரயம் செய்து பாவத்தை தேடிக் கொண்டாய் ?
இளமைக் கொடுத்தேனே, அதைக் கொண்டு என்ன நன்மை செய்தாய் ?
உனக்கு நிறைய செல்வத்தைத் தந்தேனே , அந்த செல்வத்தை நீ எப்படி தேடினாய் ? எந்த விஷயத்தில் எவ்விதம் செலவு செய்தாய் ? "

அவனுக்கு கொடுத்த நிஃமத்துகளைப் பற்றியும் , அதிகமாகவும், கொஞ்சமாகவும் , பகிரங்கமாகவும், அந்தரங்கமாகவும் செய்த அமல்கள் அனைத்தையும் பட்டோலையில் எழுதப்பட்டிருக்கும் ஒவ்வொரு அமலைக் குறித்தும் கேள்விகள் கேட்பான்.
அல்லாஹு தஆலா ஒவ்வொரு மூச்சுக்காற்றை உள்வாங்கும் போதும், அந்த மூச்சுக்காற்றை வெளியிடும் போதும் என்ன செய்தாய் என்று இரண்டிரண்டு கேள்விகளைக் கேட்டான்.
இன்னும் ஒருவன் செய்த ஒவ்வொரு கருமத்தைக் குறித்து , அதை நீ ஏன் செய்தாய் ? எப்படி செய்தாய் ? யாருக்காகச் செய்தாய் ? என்று மும்மூன்று கேள்விகள் தொடராகக் கேட்பான்

فَوَرَبِّكَ لَنَسْـَٔلَنَّهُمْ اَجْمَعِيْنَۙ
(ஆகவே) உங்கள் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் அனைவரையும் (நம்மிடம்) ஒன்று சேர்த்து,
(அல்குர்ஆன் : 15:92)

عَمَّا كَانُوْا يَعْمَلُوْنَ
அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள் என்பதைப் பற்றி நிச்சயமாக (அவர்களிடம்) கேள்வி கணக்குக் கேட்போம்.
(அல்குர்ஆன் : 15:93)

பிறகு அதிகாரிகள் செய்த அதிகாரங்களைப் பற்றிக் கேள்வி கேட்கப்படுவார்கள் .அவர்கள் செய்த அதிகாரம் நியாயமானதாக இருந்தால் நற்பேறும் , அநியாயமானதாக இருந்தால் , கஷ்டமும் பெறுவார்கள்.
இது மாதிரியே தர்மகர்த்தாக்கள் செய்த தர்ம காரியங்கள் குறித்தும் கேள்விகள் கேட்கப்படும் .

ஒவ்வொரு தம்பதியினர் தங்கள் துணைக்கு செய்த நன்மைகளைக் குறித்தும் , துரோகங்கள் குறித்தும் கேள்விகள் கேட்கப்படும் .
பின்பு மேய்ப்பாளர்கள் தங்கள் கால்நடை பிராணிகளை வைத்து மேய்த்ததைப் பற்றியும் கேள்விகள் கேட்கப்படும் .

இப்படி கேட்கப்படும் அனைவரும் குற்றவாளிகளாகவும் இருப்பார்கள் குற்றவாளிகள் அல்லாதவர்களும் இருப்பார்கள் . ஆனால் கேள்விகள் மட்டும் கேட்கப்பட்டுக் கொண்டே இருக்கும்.

நவீன காலத்து வலைதளத்தைப் பற்றியும் , அதைப் பயன்படுத்திய விதத்தைப் பற்றியும் கேள்விகள் கேட்கப்படலாம் .
ர.ரா

ரகசிய விசாரணை.
( இஸ்லாத்தின் அடிப்படைக்கோட்பாடுகள் 46 )




திருச்சி : நீதிமன்ற அறையின் கதவுகள் , ஜன்னல்கள் மூடப்பட்ட நிலையில் சுமார் 2 மணி நேரம் மாஜிஸ்திரேட் திருவேணி அவர்கள் முன்னிலையில் , தமிழ்நாடு சுற்றுச்சூழல் பாதுகாப்பு இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளரும் , சமூக ஆர்வலருமான முகிலன் ரகசிய வாக்குமூலம் அளித்துள்ளார் . அது ரகசியமாகவே பதிவு செய்யப்பட்டுள்ளது.

இந்த மாதிரியான ரகசிய விசாரணை அல்லாஹுதஆலா இறை நல்லடியாளர்களிடம் நடத்துகிறான் . கதவிற்கு பதிலாக திரைக்குள் வைத்து ரகசிய விசாரணை செய்யப்படுகிறது.
அல்லாஹுதஆலா தன் அடியார்களில் சிலரை ஒவ்வொருவராகத் தன் சமுகத்தில் அழைத்து , அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் இடையில் எதுவும் தெரியாமல் இருப்பதற்காக திரை போட்டு மறைவாக விசாரிக்கும் விதமும் , செய்த குற்றமும் , மற்றவர் அறியாமல் அதை மறைத்துக் கொண்டு , அவர்களை தனித்தனியாக அழைத்து கையிலிருக்கும் பட்டோலையைப் அவர்களே படிக்கும்படி சொல்வான் .
உடனே பட்டோலையில் அவர்கள் செய்த நன்மையைப் படிக்கும் போது முகம் மலர்ச்சியாய் வெளுத்த முகமுமாயும் , அவர்கள் செய்த தீமையைப் படிக்கும் அவர்களின் முகம் கறுத்தவர்களாயும் அதனைப் படிப்பார்கள்

அப்போது அல்லாஹுதஆலா அவர்களைப் பார்த்து
" இன்ன காலத்தில் இன்ன பாவத்தை நீ செய்ததுண்டோ அதை நீ அறிவாயா ? "
என்று ஒவ்வொருவரையும் கேட்பான் .

இக்கேள்விக்கு அவர்கள் " அதை நாங்கள் நன்றாகவே அறிவோம் " என்று ஒப்புக் கொள்ளுவார்கள் .இவ்விதம் அவர்கள் செய்த எல்லாப் பாவங்களையும் பற்றி ஒவ்வொன்றாக கேட்க , அவைகளை அவர்கள் ஒப்புக் கொள்வார்கள். பின் அவர்களிடம் நீங்கள் செய்த இந்த பாவங்களை உலகிலேயே பிறர் அறியாமல் நான் மறைத்து வைத்திருந்தேன் .இப்போது அந்த பாவங்களை மன்னித்துக் கொண்டேன் .

அவர்களின் பட்டோலையில் எழுதப்பட்டிருக்கும் பாவங்களைப் பார்த்து ,அல்லாஹுதஆலா "விசாரணை செய்யப்பட்டு விட்டது . நீங்கள் நன்மையாகுங்கள் " என்று கூறுவான்.
அப்படியோ எல்லா பாவங்களும் நன்மையாகிவிடும் !
உடனே அவர்கள் அல்லாஹுதஆலாவிற்கு ஸுஜூது செய்வார்கள். மலக்குகளுக்கும் , நபிமார்களுக்கும் கூடத் தெரியாமல் மறைத்து வைத்து விசாரித்த இந்த ரகசிய விசாரணையின் முடிவில் அவர்கள் செய்த அந்த ஸுஜூது மாத்திரம் எல்லோரும் பார்ப்பார்கள் .

பார்த்து "இந்த அடியார்கள் அல்லாஹுதஆலாவிற்கு ஒரு போதும் மாறு செய்யாதவர்கள் , அவர்களுக்கு இப்போது மங்களம் கிடைத்திருக்கிறது "
என்று ஒருவரோடொருவர் பேசிக் கொள்வார்கள்.

பிறகு அல்லாஹுதஆலா மேற்சொன்ன அடியார்களைப் பற்றி குர்ஆனில்
بَلٰى مَنْ اَسْلَمَ وَجْهَهٗ لِلّٰهِ وَهُوَ مُحْسِنٌ فَلَهٗۤ اَجْرُهٗ عِنْدَ رَبِّهٖ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ
(உண்மை) அவ்வாறன்று! எவர் (அல்லாஹ்வுக்காக) நன்மை செய்து தன்னை (முற்றிலும்) அல்லாஹ்வுக்கு அர்ப்பணம் செய்து விடுகிறாரோ அவருக்கே அவர் செய்யும் நன்மையின் கூலி அவருடைய இறைவனிடம் உண்டு. அன்றி, இத்தகையவர்களுக்கு எத்தகைய பயமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 2:112)

" இவர்கள் நரகத்தை விட்டு விலக்கப்பட்டு சுவர்க்கத்தில் பிரவேசிக்கப்படட்டும் " என்று எழுதின கடிதத்தை அவர்கள் வலது கையில் கொடுத்து , ரத்தினங்களாலான கிரீடத்தையும் , தங்க ஆபரணங்களையும் , பட்டாடைகளையும் அணியச் செய்து அனுப்புவான் .
அவர்கள் வரும் போது மனிதர்கள் பார்த்து " இவர்கள் யார் ? நபிமார்களா ?"
என்று ஆச்சரியப்பட்டு வழி விலகி நிற்பார்கள் .
சரி , உண்மையில் இவர்கள் யார் ?
وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ‌ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!
(அல்குர்ஆன் : 6:52)
நீங்கள்தான் சொல்ல வேண்டும். இவர்கள் யார் ?
ர.ரா

ஒப்பிட்டு விசாரணை.
( இஸ்லாத்தின் அடிப்படைக்
கோட்பாடுகள் 47 )



அடிமைப்பட்டவர்களை விசாரிக்கப்படும் போது , அல்லாஹு தஆலா அவர்களிடம்,
"எனக்கு செய்ய வேண்டிய இபாதத் எனும் வணக்க வழிப்பாட்டை விட்டு உங்களை எது விலக்கிற்று ? "
" நீ எங்கள் இரணத்தை குறைத்து எங்கள் எஜமான்களுக்கு அதிகமாக்கினாய் . அதனால் நாங்கள் எஜமானர்களை சார்ந்திருந்தோம் . அவர்கள் இட்ட கட்டளை செய்து முடிக்கவே எங்களுக்கு காலம் போதவில்லை .எனவே நாங்கள் எப்படி இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டை உனக்கு செய்ய முடியும் ? "

உடனே அல்லாஹு தஆலா நபி யூஸுப் (அலை) அவர்களை சுட்டிக் காட்டி , " நான் உங்களை அடிமையாக்கியது போல் , இதோ , இவரையும் அடிமையாக்கி , பின் சிறைக் கைதியாக்கினேன். ஆனால் உங்களைப் போல இவர் என் இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டில் குறையேதும் வைக்கவில்லையே " _ என்று சொல்லி, " அந்த அடிமைகளை நரகத்திற்குள் தள்ளுங்கள் " என்று கட்டளையிடுவான் .
அடுத்து நோயாளிகளை விசாரிக்கப்படும் போது அவர்களிடம் ,

"எனக்கு செய்ய வேண்டிய இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டை விட்டு உங்களை எது விலக்கிற்று ? "

" நீ எங்களுக்கு நோயை உண்டாக்கினாய் . அதனால் அடிக்கடி உடல் நலக்குறைவு ஏற்பட்டு , எங்களால் உனக்கு செய்ய வேண்டிய இபாதத்தை
வணக்க வழிப்பட்டை எங்களால் செய்ய முடியவில்லை " ,
உடனே அல்லாஹு தஆலா நபி ஐயூப் (அலை) அவர்களைச் சுட்டிக்காட்டி ,

"நான் உங்களை நோயாளியாக்கியது போல் , இதோ இவரையும் நோயாளியாக்கி , பின் அதிக முசிபத்தான புழுக்கள் தசை தின்னும்படியான சதா மனவேதனையும் வலியையும் கொண்ட பெரிய நோயைக் கொடுத்தேன் . ஆனால் இவர் உங்களைப் போல் என் இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டில் குறையேதும் வைக்கவில்லையே " _ என்று சொல்லி, " "அந்த நோயாளிகளை நரகத்திற்குள் தள்ளுங்கள் " என்று கட்டளையிடுவான் .

பிறகு நாட்டை ஆண்ட இராஜக்கள் விசாரிக்கப்படுவார்கள் . அவர்களிடம் ,
"எனக்கு செய்ய வேண்டிய இபாதத்தை
வணக்க வழிப்பட்டை விட்டு உங்களை எது விலக்கிற்று ? "

" நீ எங்களுக்கு ராஜாங்கத்தையும் , அதில் வாழும் குடிமக்களையும் கொடுத்தாய் . எங்கள் ராஜாங்கத்தின் பக்கத்து நாட்டு தொல்லையும் ,அதைக் கட்டி ஆள மிக சிரமத்தையும் தந்தாய் . அதனால் நாங்கள் எங்கள் ராஜாங்கத்தை ஆளவே நேரம் போதவில்லை .எனவே நாங்கள் எப்படி இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டை உனக்கு செய்ய முடியும் ?

அல்லாஹு தஆலா நபி ஸுலைமான் (அலை) அவர்களை காட்டி , " நான் உங்களுக்கு ராஜாங்கத்தை கொடுத்தது போல் , இதோ இவருக்கும் உங்களுக்கு கொடுத்தை விட பல மடங்கு பெரிய ராஜாங்கமான மொத்த உலகத்தையும் கட்டி ஆள வைத்தேன் . ஆனால் உங்களைப் போல இவர் என் இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டில் குறையேதும் வைக்கவில்லையே " _ என்று சொல்லி, அந்த ராஜாக்களை நரகத்திற்குள் தள்ளுங்கள் என்று கட்டளையிடுவான்.

இப்படி ஏழ்மை , கடன் தொல்லை , குடும்ப பாரம் , என்று எண்ணிடலங்கா பிரச்சனைகளை அவன் முன் வைத்து ,

"நாங்கள் எப்படி இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டை உனக்கு செய்ய முடியும் ? " என்று மக்கள் ஒவ்வோரும் சொல்லும் போது ,
அவன் அனுப்பிய 'ஒரு லட்சத்து
இருபத்தினாங்காயிரம் ' நபிமார்களில் ஒருவருக்கு மனிதர்கள் சொல்லும் அதே பிரச்சனையை விட , மிக அதிகமான பிரச்சனைகளை கொடுத்ததைச் சுட்டிக்காட்டி ,
" ஆனால் உங்களைப் போல இவர் என் இபாதத் என்னும் வணக்க வழிப்பட்டில் குறையேதும் வைக்கவில்லையே " _ என்று அவன் சொல்லிக் காட்டுவான்.
ர.ரா

மீஸான் என்னும் தராசு 01
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 48 )



நன்மை, தீமைகள் ஏன் எடை போட்டு நிறுக்கப்பட வேண்டும் ? எண்ணிக்கையால் 100 , 1000 , லட்சம் என்று பணத்தைப் போல் எண்ணிவிட முடியாதா ? முடியாது .

நன்மை, தீமைகள் எண்ணிக்கையில் இல்லை . அவைகள் முப்பரிமாணம் கொண்ட எடை கனம் நிறைகளான சீட்டுக்கட்டுகளால் ஆனது. அதனால்தான் எடை போடப்பட்டு நிறுக்கப்படுகிறது .

மீஸான் என்கிற தராசுக்கு வருவோம் .
மீஸான் என்பது தராசு . அதில்தான் அவரவர் நன்மை , தீமைகள் நிறுக்கப்படும்.
அந்த தராசு இரண்டு ஸ்தம்பங்களையும் , அதில் தொங்கும் இரண்டு தட்டுகளையும் , ஒரு முள் முனை கொண்டதாக இருக்கும் .

இரண்டு ஸ்தம்பங்களுக்கும் இடைவெளி மக்றிபு மஷ்றிகுகளின் இடைவெளியாம்.
( இது விபரம் எனக்கு புரியவில்லை தெரிந்தோர் பின்னூட்டத்தில் ஜமாய்க்கலாம்) .அதன் தட்டு ஒன்றில் ஏழு பூமிகளையும் , ஏழு வானங்களையும் ரொம்ப இலேகுவாக வைத்து நிறுக்க முடியும்.
ஒரு தட்டு ஒளியினாலும் , மறுதட்டு இருளினாலும் உண்டாகி இருக்கும். ஒளித் தட்டில் நன்மை , இருள் தட்டில் தீமை நிறுக்கப்படும். நன்மை தட்டு சுவர்க்கத்தின் முன்பாகவும் , தீமை தட்டு நரகத்திற்கும் முன்பாகவும் தொங்கும் .
அந்த ஒரே ஒரு தராசில்தான் எல்லோருடைய நன்மை , தீமைகள் நிறுக்கப்படும்.
அதை ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஸ்தம்பக்கால்களுடன் பிடித்துத் தூக்கிக் கொண்டு அர்ஷ்க்கு எதிர் முகமாய் முனைமுள்ளைப் பார்த்த வண்ணமாய் நிறுப்பார்கள்
.
நன்மை ,தீமைகள் நிறுக்கப்படும் போது நிறைகணக்குப் பார்த்துச் சொல்ல மலக்கு மீக்காயீல் (அலை) அவர்கள் நியமிக்கப்பட்டிருப்பார்கள் .

நிறுக்கும் போது நன்மை தட்டு கணக்குமானால் அது கீழே தாழ்ந்து முன் சொல்லப்பட்டிருக்கிற " இல்லீன் " என்னும் தானத்தில் உயரும் .தீமைதட்டு லேசானால் அது மேலே உயர்ந்து "ஸிஜ்ஜீன் " என்னும் தானத்தில் தாழும் .
அணு அளவு நன்மை செய்தவர் அதைக் காண்பார். அணு அளவு தீமை செய்தவர் அதைக் காண்பார். (அல்குர்ஆன் 99:7,8)
அவரவருடைய நன்மை, தீமைகளடங்கிய பட்டோலைகளை தராசில் வைத்து நிறுக்கப்படும். பட்டோலைக்காரர்கள் மூன்று வகையினர் .

1) தீமையே இல்லாத பட்டோலை உடையவர்கள் . இவர்களை சுவர்க்கம் போகவும்,
2) நன்மையே இல்லாத பட்டோலை உடையவர்கள் .இவர்கள் நரகத்திற்கு போகவும் ,
3) நன்மையும் தீமையும் கொண்ட பட்டோலை உடையவர்கள் . நன்மை தீமைகளை நிறுத்துப் பார்த்து , அவரவர்களின் எடை எதில் அதிகமாக இருக்கிறதோ அதைப் பொறுத்து சுவர்க்கமோ , நரகத்திற்கோ அனுப்பப்படும் .

وَنَضَعُ الْمَوَازِيْنَ الْقِسْطَ لِيَوْمِ الْقِيٰمَةِ فَلَا تُظْلَمُ نَـفْسٌ شَيْـــًٔا‌ وَاِنْ كَانَ مِثْقَالَ حَبَّةٍ مِّنْ خَرْدَلٍ اَتَيْنَا بِهَا‌ وَكَفٰى بِنَا حٰسِبِيْنَ
மறுமை நாளில் சரியான தராசையே நாம் நாட்டுவோம். யாதொரு ஆத்மாவுக்கும் (நன்மையைக் குறைத்தோ, தீமையைக் கூட்டியோ) அநியாயம் செய்யப்படமாட்டாது. (நன்மையோ தீமையோ) ஒரு கடுகின் அளவு இருந்தபோதிலும் (நிறுக்க) அதனையும் கொண்டு வருவோம். கணக்கெடுக்க நாமே போதும். (வேறெவரின் உதவியும் நமக்குத் தேவையில்லை.) (அல்குர்ஆன் : 21:47)
ர.ரா

மீஸான் என்னும் தராசு 02
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 49 )



அவரவர்களின் நன்மை , தீமைகளை நிறுக்கும்படி அல்லாஹுﷻ தஆலாவின் கட்டளை பிறந்த போது உடனே அவரவர்களின் பட்டோலைகள் தானாக உயரப் பறந்து தராசின் தட்டில் போய் விழும் !
பட்டோலை பறந்தபோது ஒவ்வொருவரும் தம் பட்டோலை தராசின் வலது தட்டில் விழுகிறதா , இடது தட்டில் விழுகிறதா என்றும் தராசின் முனைமுள்ளு வலது புறத்தில் முனைகிறதா இடது புறத்தில் முனைகிறதா என்றும் மனக்கலக்கத்துடன் பார்த்து நிற்பார்கள்.
அந்த வேளையில் அவர்களுக்கு உண்டாயிருக்கும் அச்சம் இவ்வளவென்று சொல்ல முடியாது
.
وَوُضِعَ الْكِتٰبُ فَتَرَى الْمُجْرِمِيْنَ مُشْفِقِيْنَ مِمَّا فِيْهِ وَ يَقُوْلُوْنَ يٰوَيْلَـتَـنَا مَالِ هٰذَا الْـكِتٰبِ لَا يُغَادِرُ صَغِيْرَةً وَّلَا كَبِيْرَةً اِلَّاۤ اَحْصٰىهَا‌ وَوَجَدُوْا مَا عَمِلُوْا حَاضِرًا‌ وَ لَا يَظْلِمُ رَبُّكَ اَحَدًا
(அவர்களுடைய தினசரிக் குறிப்புப் புத்தகம் அவர்கள் முன் வைக்கப்பட்டால் குற்றவாளிகள் (தாங்கள் செய்த பாவங்கள் அனைத்தும் அதில் இருப்பதைக் கண்டு) பயந்து ,
"எங்களுடைய கேடே! இதென்ன புத்தகம்! (எங்களுடைய பாவங்கள்) சிறிதோ பெரிதோ ஒன்றையும்விடாது இதில் வரையப்பட்டிருக்கின்றதே" என்று அவர்கள் (புலம்பிக்) கூறுவதை நீங்கள் காண்பீர்கள்.
(நன்மையோ தீமையோ) அவர்கள் செய்த அனைத்தும் (அதில்) இருக்கக் காண்பார்கள். உங்கள் இறைவன் எவனுக்கும் (அவனுடைய தண்டனையைக் கூட்டியோ, நன்மையைக் குறைத்தோ) அநியாயம் செய்ய மாட்டான். (அல்குர்ஆன் : 18:49)

நன்மையை ஒரு தட்டிலும் ,தீமையை ஒரு தட்டிலுமாக வைத்து நிறுப்பார்கள் .
ஒருவொருவரின் நன்மை, தீமைகளை
நிறுத்தும் போது தராசில் இரண்டு ஸ்தம்பக் கால்களுக்கும் நடுவில் கொண்டு போய் நிறுத்தி, ஒரு மலக்கின் வசம் காட்டுவார்கள்.

நிறுக்கும்போது யாருடைய நன்மைத் தட்டு கனத்ததோ , அவனுடைய பெயரைச் சொல்லி , இன்னான் சீதேவியாகிவிட்டான் .இனி ஒருக்காலும் அவன் மூதேவியாக மாட்டான் என்றும் , யாருடைய தீமை தட்டுக் கனத்ததோ,அவனுடைய பெயரைச் சொல்லி, இன்னான் மூதேவியாகிவிட்டான் . இனி ஒருக்காலும் அவன் சீதேவியாக
மாட்டான் என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் சப்தமிட்டு சொல்லிக் கொண்டிருப்பார்கள் .

அப்போதே நன்மை தட்டுக் கனத்தவர்கள் சுவர்க்கத்திற்குக் கொண்டு போவதற்காக ரஹ்மத்துடைய மலக்குகள் வசமும், தீமை தட்டு கனத்தவர்கள் நரகிற்குக் கொண்டு போவதற்காக ஜபானியாக்கள் வசமும் ஒப்படைக்கப்படுவார்கள் .

" (மனிதர்களே!) அந்நாளில் நீங்கள் (உங்கள் இறைவன் முன்) கொண்டு போகப்படுவீர்கள். மறைவான உங்களுடைய எந்த விஷயமும் அவனுக்கு மறைந்துவிடாது.
எவனுடைய செயல்கள் எழுதப்பட்ட ஏடு அவனுடைய வலது கையில் கொடுக்கப்படுகின்றானோ அவன் (மற்றவர்களை நோக்கி மகிழ்ச்சியுடன்) "இதோ! என்னுடைய ஏடு; இதனை நீங்கள் படித்துப் பாருங்கள்" என்றும்,
"நிச்சயமாக நான் என்னுடைய கேள்வி கணக்கைச் சந்திப்பேன் என்றே நம்பியிருந்தேன்" என்றும் கூறுவான்.

ஆகவே, அவன் திருப்தியடையும்படியான சுகபோகத்தில், மேலான சுவனபதியில் இருப்பான்.
அதன் கனிகள் (இவர்கள், படுத்திருந்தாலும் உட்கார்ந்திருந்தாலும், நின்று கொண்டிருந்தாலும், எந்நிலைமையிலும் கைக்கு எட்டக்கூடியதாக இவர்களை) நெருங்கி இருக்கும்.
(இவர்களை நோக்கி) "சென்ற நாள்களில் நீங்கள் சேகரித்து வைத்திருந்தவை (நன்மை)களின் காரணமாக, மிக்க தாராளமாக இவைகளைப் புசியுங்கள்! அருந்துங்கள்! (என்று கூறப்படும்).
எவனுடைய செயல்கள் எழுதப்பட்ட ஏடு அவனுடைய இடது கையில் கொடுக்கப்பெறுவானோ அவன், "என்னுடைய ஏடு எனக்குக் கொடுக்கப்படாதிருக்க வேண்டாமா?
என்னுடைய கணக்கையே இன்னதென்று நான் அறியாதிருக்க வேண்டாமா?
நான் இறந்தபொழுதே என்னுடைய காரியம் முடிவு பெற்றிருக்க வேண்டாமா?
என்னுடைய பொருள் எனக்கு ஒன்றும் பயனளிக்க வில்லையே!
என்னுடைய அரசாட்சியும் அழிந்துவிட்டதே!" என்று புலம்புவான்.
(பின்னர் நாம்) "அவனைப் பிடியுங்கள், அவனுக்கு விலங்கிடுங்கள்;
அவனை நரகத்தில் தள்ளுங்கள் என்றும்,
எழுபது முழ நீளமுள்ள சங்கிலியால் அவனைக் கட்டுங்கள்" என்றும் (கூறுவோம்).
நிச்சயமாக அவன் மகத்தான அல்லாஹ்வையே நம்பிக்கைக் கொள்ளவில்லை.
ஏழைகளுக்கு (உணவளிக்காததுடன், பிறரையும்) உணவளிக்கும்படி அவன் தூண்டவில்லை.
"ஆகவே, இன்றைய தினம் அவனுக்கு இங்கு யாதொரு நண்பனும் இல்லை.
(புண்களில் வடியும்) சீழ் சலங்களைத் தவிர, (அவனுக்கு வேறு) உணவில்லை" (என்றும் கூறப்படும்).
அதனைக் குற்றவாளிகளைத் தவிர (மற்றெவரும்) உண்ண மாட்டார்கள் "
அல்குர்ஆன் 69 : (18 - 37 )
ர.ரா

மீஸான் என்னும் தராசு 03
( இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 50 )

சிலரில் ஒவ்வொருவருக்குத் தொண்ணூற்றொன்பது பட்டோலை கட்டுகளைக் கொண்டு வந்து அவர்களுக்கு விரித்து காட்டுவார்கள் .
ஒவ்வொரு கட்டும் பார்வை எட்டுந்தூர நீளமுள்ளதாக இருக்கும் .அந்த கட்டுகள் முழுவதும் தீமைகள் எழுதப்பட்டிருக்கும்.
பிறகு ஒரே ஒரு துண்டு கடிதம் கொண்டு வருவார்கள் .அதில் ' ஷஹாதத்துக் கலிமா ' மாத்திரம் எழுதப்பட்டிருக்கும் .
மேற்சொன்ன தீமைகள் எழுதிய 99 பட்டோலைக் கட்டுகளை ஒரு தட்டிலும் , இந்த ஒரே ஒரு துண்டு கடிதத்தை மறு தட்டிலுமாக வைத்து நிறுப்பார்கள் .
துண்டு கடிதத் தட்டு கனக்கும் .
இன்னும் முஃமீனாவர்களில் சிலருடைய நன்மை தட்டும் லேசாவது உண்டு. அப்படி லேசானவுடன் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் ஒரு கடிதத் துண்டை அந்த தட்டில் வைப்பார்கள் அப்போது அந்தத் தட்டு கனத்து விடும்.
அப்போது ஒவ்வொரும் தமக்கு உதவி செய்த நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்களை இன்னாரென்று அறியாமல் , " நீங்கள் யார் ? உங்கள்

முக லக்ஷ்ணமும் , குண லக்ஷ்ணமும் எவ்வளவு மகிமையுள்ளதே ... உங்கள் பாதங்களுக்கு என் பிதா மாதாக்கள் குறுபனாயிருப்பார்கள் " என்று சொல்வார்கள் .
அப்போது நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் , அவ்வொவ்வொருவரையும் பார்த்து , " நான் உன்னுடைய நபி முஹம்மது . இப்போது நான் உன்னுடைய தட்டில் வைத்தது , நீ என் பேரில் ஓதின ஸலவாத்து, அதை இந்த தருணத்தில் உனக்கு பிரதி செய்து விட்டேன் "
ர.ரா



NOTES:

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | |
| | | | |

DATE THIS BOOK WAS MADE 01-06-2021